# சுவடிப்பதிப்பு நெறிமுறைகள்

( கருத்தரங்கக் கட்டுரைகள் )

பதிப்பாசிரியர்
முனைவர். த. கோ. பரமசிவம்,





தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.

# சுவடிப்பதிப்பு நெறிமுறைகள்

(கருத்தரங்கக் கட்டுரைகள்)






பதிப்பாசிரியர்

**முனைவர் த. கோ. பரமசிவம்**

தலைவர், ஓலைச்சுவடித்துறை






## தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

ISBN - 81 - 7090 - 128 - 6



தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு : 108

திருவள்ளுவர் ஆண்டு 2020 பங்குனி–மார்ச்சு 1989

நூல் : சுவடிப்பதிப்பு நெறிமுறைகள்

பதிப்பாசிரியர் : முனைவர் த. கோ. பரமசிவம்

பதிப்பு : முதற்பதிப்பு

விலை : உரூ. 38

அச்சு : சர்மாஸ் சானடோரியம் (கம்ப்யூடர் பிரிவு)
அச்சகம், புதுக்கோட்டை-622 001.

# பொருளடக்கம்

பதிப்புரை ௧

1. தமிழ்ச்சுவடிகளின் பயிற்சியும் பதிப்பும் 1
திரு. மு. கோ. இராமன்

2. எழுத்து வரிவடிவும் திரிபுகளும் 23
பேரா. ச. பாலசுந்தரம்

3. பாடவேறுபாடும் பாடத்தெரிவும் 29
முனைவர் த. கோ. பரமசிவம்

4. சுவடிப்பதிப்பில் யாப்பின் இன்றியமையாமை 48
புலவர் ப. வெ. நாகராசன்

5. பதிப்பாசிரியர்களும் அவர்தம் கடமைகளும் 71
முனைவர் சா. கிருட்டிணமூர்த்தி

6. நூலாக்கத்தில் தாள்சுவடிகளும் ஓலைச்சுவடிகளும் 87
முனைவர் ம. இராசேந்திரன்

7. செப்பேடுகளும் ஓலைச்சுவடிகளும் 98
புலவர் செ. இராசு

8. பழந்தமிழ்ப் பதிப்புகள் 103
முனைவர் இ. சுந்தரமூர்த்தி

9. மறைந்த நூல்களைப் பதிப்பித்தல் 114
புலவர் இரா. இளங்குமரன்

10. சங்க இலக்கியப் பதிப்புகள் 125
செல்வி ந. விசாலாட்சி

11. ஆறுமுகநாவலரின் பதிப்புமுறைகள் 150
திரு. சி. இலட்சுமணன்

12. பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையின் பதிப்பு முறைகள் 169
பேரா. மு. சண்முகம்பிள்ளை

13. சரசுவதிமகால் பதிப்புகள் 183
புலவர் வீ. சொக்கலிங்கம்

14. இலக்கணச்சுவடிகளின் ஆய்வுப்பதிப்பு 194
திரு. தி. வே. கோபாலய்யர்

15. கலை இலக்கணப் பதிப்புமுறைகள் 211
முனைவர் அ. நா. பெருமாள்

16. மருத்துவச்சுவடிகள் பதிப்பு நெறிமுறைகள் 218
முனைவர் வே. இரா. மாதவன்

17. சோதிடச்சுவடிகளின் பதிப்புகள் 239
முனைவர் சி. மூக்கரெட்டி

18. ஓலைச்சுவடியாய்வில் கணிப்பொறியின் பயன்பாடுகள் 249
பேரா. கா. செ. செல்லமுத்து

19. பல்கலைக்கழகப் பாடநூல்களும் பதிப்புமுறைகளும் 262
முனைவர் க. ப. அறவாணன்

20. Publication of Historical Palm-leaf Records 267
*Dr. P. Cinnian*

21. A Descriptive Catalogue of the Tamil Manuscripts 292
*Dr. V. Murugan*

அமர்வுச் சிந்தனைகள் 305
முனைவர் சா. கிருட்டிணமூர்த்தி

சொல்லடைவு 320

# பதிப்புரை

சுவடிப்பதிப்பு என்பது ஓலைச்சுவடிகள் மற்றும் தாள் சுவடிகளிலுள்ள செய்திகளை இன்றைய அச்சுவடிவில் வெளிப் படுத்துவதைக் குறிப்பதாகும். நெறிமுறைகள் என்பது அவ்வாறு பதிப்பித்து வெளியிடும்போது கடைப்பிடிக்க வேண்டிய வழிமுறைகளைச் சுட்டுவதாம். ஓலையிலுள்ளவற்றை எவ்வெவ் வாறு படித்துணர்வது; வெளிப்படுத்துவது; எவ்வாறு வெளிப்படுத்தினால் அது சிறப்புடையதாக இருக்கும்; அறமாகக் கருதப்பெறும்; நம்பிக்கைக்குரியதாக உணரப்பெறும் என்ப வற்றையெல்லாம் வகுத்தும் தொகுத்தும் விளக்குவதே சுவடிப்பதிப்பு நெறிமுறைகள். இதுவே இந்நூலின் கருப்பொருள் ஆகும்.

ஓலைச்சுவடிகளிலுள்ள செய்திகள் இலக்கியமாயினும், இலக்கணமாயினும் அல்லது மருத்துவம், சோதிடம், ஆவணம் போன்ற பிற பொருள்களாயினும வடிவில் ஒன்றுபோலவே எழுதப்பட்ட அமைப்பைக் காட்டுவன. செய்யுள்நூல் என்பதால் யாப்புவடிவுடன் அச்சுவடி காணப்படுவதில்லை. அல்லது ஆவணம் என்பதால் முறையான பத்தி வடிவைக் காட்டுவதுமில்லை. பாட்டாயினும், உரையாயினும் அல்லது குறிப்பாயினும் எல்லாம் ஒன்று போலவே தொடர்ந்து எழுதப்பட்டிருக்கும். இவற்றைப் பதிப்பித்து வெளியிடும்போது - சுவடிகளில் காணுமாறே அச்சிட்டால் அவை அழகாக இருக்குமா? கருத்தை உரிய வகையில் உரிய உணர்வுடன் ஊட்டுமா? என்பது ஐயத்திற்குரியதே. எனவே இலக்கணமரபு, மொழிமரபு, பொருளுணர்வு இவற்றை நுணுகிப் பார்த்த நம் முன்னோர், செய்யுளாயின் யாப்பு வடிவம் கெடாதவாறு பதிப்பித்து வெளிப்படுத்த வேண்டும்; உரை நடையாயின் இவ்வாறு பதிப்பிக்க வேண்டும்; மருத்துவ நூலாயின் இந்த அமைப்புடன் விளங்கவேண்டும்;

ஆவணமாயின் இப்படித்தான் இருக்கவேண்டும் - இப்படி இப்படி இருந்தால்தான் அது சிறந்திருக்கும் என்று பதிப்புப் பணியில் ஈடுபட்டிருந்தனர்.

இவ்வாறு வடிவம் பற்றிய சிந்தனைகளில் மூழ்கி யிருந்தமைபோலவே நூலின் மொழி, உட்கிடக்கை போன்ற செய்திகளிலும் அவர்கள் அக்கறை காட்டியவர்களாக இருந்தனர். சுவடிகளை வெளிப்படுத்திய அப்பதிப்பாசிரியர்களிடம் காணப் பட்ட மரபு போற்றுதற்குரியதாகவும் பயின்று பின்பற்று வதற்குரியதாகவும் அமைந்திருந்தது. ஒரு காலத்தில் தோன்றிய சுவடிகளை - நூல்களை வேறொரு காலத்தில் வெளியிடுவதாகவே சூழல் அமைந்திருக்கும். எனவே முற்பதிப்பாசிரியர்களே நூல் தோன்றிய காலத்திலிருந்து வெகு தொலைவில் இருந்தமையை நாம் உணரமுடியும். அப்படியெனில் முற்பதிப்பாசிரியர்க்குக் காலத்தால் பிற்பட்ட நாமும்-நம் சந்ததியினரும் இன்னும் தொலைவில்தான் இருப்போம். நூல்தோற்றத்துக்கும் வெளிப்பாட்டுக்குமுரிய காலவிடையீடு நாளுக்கு நாள் விரிந்து கொண்டுதான் போகும். இந்நிலையில் சுவடியை-சுவடியில் உள்ள செய்திகளை உணர்வதிலும் நாளுக்கு நாள் நம்மிடையே தெளிவின்மை மிகுந்துவருதல் இயல்பு.

இவ்வாறு மிகுந்துவரும் இடைவெளியின் வெறுமையை மாற்றி ஓரளவுக்காவது தொடர்புண்டாக்க முயல்வதே இந்நூலின் நோக்கமாகும். இவ்வரிய நோக்கத்தின்-தொடக்கவுணர்வின் வெளிப்பாடுதான் இன்று ஒரு நூலாக மலர்ந்துள்ளது. அழிந்துவரும் சுவடியியலை நிலைநிறுத்த முனைந்துவரும் அறிஞர் பலரின் அரிய கருத்துகளைக் கட்டுரை வடிவில் தாங்கியுள்ளது இந்நூல். 1988ஆம் ஆண்டு மார்ச்சு 22, 23, 24 ஆகிய மூன்று நாள்களில் நடைபெற்ற 'சுவடிப் பதிப்பு நெறிமுறைகள்' என்னும் கருத்தரங்கில் வழங்கப்பட்ட ஆய்வுரைகளே இந்நூலில் இடம்பெற்றுள்ளன. அன்று உருளச்சிட்டு வழங்கப்பெற்ற கட்டுரைகள் கலந்துரையாடிய அமர்வுச் சிந்தனைகளுடன் முழுமைபெற்று இன்று அச்சு வடிவில் வெளிவருகின்றது.

## தமிழ்ப் பல்கலைக்கழகம்-ஓலைச்சுவடித்துறை

பழமையைப் போற்றிப் பாதுகாக்கவேண்டும் என்னும் உயரிய நோக்கில் சுவடிப்புலத்தை உருவாக்கிய தமிழ்ப் பல்கலைக்கழகம் ஓலைச் சுவடிகளின் இன்றியமையாமையை உணர்ந்து, ஓலைச் சுவடிகளுக்கென ஒரு துறையைத் தனியே நிறுவி இயக்கி வருகிறது. உலகெங்கிலுமுள்ள தமிழ்ச் சுவடிகளைத் தேடித் தொகுத்து அறிவியல்முறைப்படி பாதுகாப்பதும், அவற்றை நன்கு பதிப்பித்து வெளியிடுவதுமே இத்துறையின் நோக்கமாகும். இந்த அடிப்படையில் அமைக்கப்பெற்ற ஓலைச்சுவடித்துறை இன்றுவரை 3500 ஓலைச் சுவடிகளைத் தொகுத்திருக்கிறது. அவற்றுள் பெரும்பாலன, மடங்கள், கோயில்கள் மற்றும் தனியாரிடமிருந்து நன்கொடையாகப் பெறப்பட்டனவாகத் திகழ்தல் குறிப்பிடத்தக்கதாம். அன்பளிப்புக்காகக் காத்திருந்தால் சுவடி திரட்டுதல் சிறக்காது என்பதையுணர்ந்த தமிழ்ப் பல்கலைக்கழகம் அழிந்துவரும் சுவடிகளை எவ்வாறேனும் தொகுத்துப் பாதுகாக்க வேண்டும் என்னும் உயரிய நோக்கில் விலைமதிப்பிட்டு வாங்கிப் பாதுகாக்கவும் திட்டமிட்டது. சுவடியின் இருப்பிடம் கூறவும் தயங்கியவர்களுக்கும், சுவடி உரிமையாளர்களுக்கும் இது ஓர் ஊக்கத்தைக் கொடுத்துள்ளது என்றால் அது மிகையாகாது. இந்த வகையிலும் இன்று பல சுவடிகள் தொகுக்கப்பட்டுள்ளன.

சுவடியை நேரே பெறமுடியாத சூழல்களில் அவற்றை மைப்படிகளாகவும், நுண்படச் சுருள்களாகவும் பெற்று வந்து பாதுகாக்க வேண்டும் என்பதிலும் இத்துறை ஈடுபட்டுள்ளது. பிற நூலகங்களில், நிறுவனங்களில் உள்ள சுவ்டிகளை இந்த வகையில் தொகுத்து வருகிறது. வெளிநாடுகளிலும் நம் தமிழ்ச் சுவடிகள் காணப்படுகின்றன. அவற்றையும் இந்த வகையிலேயே பெற்றுப் பாதுகாக்க முனைந்துள்ளது இத்துறை. இந்த வகைகளிலெல்லாம் பெற முடியாத சுவடிகளை அவற்றில் என்ன இருக்கிறது என்பதையாவது தெரிந்துகொள்ள வேண்டும் என்னும் வேட்கையில், அவை பற்றிய பெயர்ப் பட்டியலையாவது தொகுத்துப் பாதுகாக்கவும் முனைந்துள்ளது. தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் இம்முயற்சிக்குத் தமிழர் அனைவரும் துணை நிற்பார்களாக!

சுவடிப் பதிப்பு

இவ்வாறெல்லாம் சுவடிகளைத் தொகுத்துக் காப்பதன் நோக்கம், அவற்றை எல்லோர்க்கும் வெளிப்படுத்த வேண்டும் என்பதுதான். எல்லோர்க்கும் பயன்படும் வண்ணம் எவ்வாறு வெளிப்படுத்துவது? எவ்வாறு வெளிப்படுத்தினால் இவ்வுயரிய நோக்கம் முழு வெற்றி பெறும் என்பதையெல்லாம் நுணுகி ஆய்ந்து வெளிப்படுத்துவதுதான் சிறந்தமுறையாகும். அந்த வகையில் ஓலைச் சுவடித்துறை இதுவரை செழியதரையன் பிரபந்தங்கள், சீவேந்திரர் சரிதம், ஆத்திசூடியுரை ஆகிய சுவடிப் பதிப்புகளை முதன்முதலாக வெளியிட்டுள்ளது. அவற்றுடன் ஏற்கெனவே வெளிவந்த தொல்காப்பியம், குறுந்தொகை போன்ற நூல்களையும் மீண்டும் சுவடி ஆய்வு செய்து புதிய அகராதிகளுடன் செம்பதிப்பாக வெளியிட்டுள்ளது. இம் முயற்சிகளைத் தொடர்ந்து நற்றிணை, இலக்கண சூடாமணி, அகத்தியர் வைத்திய காவியம்-1500, சாந்தாதி அசுவமகம் போன்ற நூல்கள் விரைவில் வெளிவரவிருக்கின்றன. இம் முயற்சிகளினூடே சுவடிப் பதிப்பு நெறிமுறைகளை மீண்டும் மீள்பார்வை செய்யும் நோக்கிலே நடத்தப்பெற்றதுதான் 'சுவடிப் பதிப்பு நெறிமுறைகள்' என்னும் கருத்தரங்கம்.

சுவடிகளைப் பதிப்பித்து வெளியிடுவதென்பது எளிதான செயலன்று. மொழியறிவு பெற்ற எல்லோராலும் செய்யமுடிந்த பணியுமன்று. தமிழறிஞர் பெருமக்களில் கூட விரல்விட்டுச் சொல்லத்தக்க மிகச் சில அறிஞர்களே இம் முயற்சியில் ஈடுபட்டு முழுவெற்றி பெற்றனர். அவர்களுள் சீலத்திரு ஆறுமுக நாவலர், சி. வை. தாமோதரம்பிள்ளை, பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், இ. அனந்தராமையர், டாக்டர் உ.வே. சாமிநாதையர், பேராசிரியர் ச. வையாபுரிப்பிள்ளை ஆகியோர் குறிப்பிட்டுச் சொல்லும் சிறப்புடையர் ஆவர்.

சுவடிகளைத் தேடியலைந்து, தொகுத்து, அவற்றை அச்சுக்குக் கொண்டுவந்த அவர்களின் அரிய பெரிய பணி, உழைப்பு பாராட்டுதலுக்கும் போற்றுதலுக்குமுரியதாம். அப்பெரியார்களின் தொண்டு இல்லையேல் இன்று நம்மிடையே உலவிக் கொண்டிருக்கும் பல நல்ல நூல்களும் கூட மறைந்த நூல்களின் வரிசையில் இடம்பெற்றிருக்கும்நிலை ஏற்பட்டிருக்கும் என்றால் அது மிகையாகாது.

அப் பெருமக்கள், சுவடிகளை இவ்வாறு படிக்கவேண்டும், இவ்வாறு படி எடுக்க வேண்டும், இவ்வாறு பதிப்பிக்கவேண்டும், இவ்வாறு ஒப்புநோக்க வேண்டும், இவ்வாறு பதிப்பிப்பதுதான் அறமாகும், இவ்வாறு வெளிப்படுத்தினால்தான் சிறப் புடையதாகத் தோன்றும் என்றெல்லாம் வெளிப்படையாகக் கூறவில்லை. நம் போன்ற வருங்கால இளைஞர்களுக்குத் தெரிவிக்கும் வண்ணம் அம்மரபுகளை தனிப்பட்ட நூலாக எழுதி வெளிப்படுத்தவும் இல்லை. ஆயின், அவர்கள் பதிப்பித்து வெளியிட்ட நூல்களில் தம் பட்டறிவை ஆங்காங்கு நூல்களின் முன்னுரை, பதிப்புரைகளிலும், பிற கட்டுரைகளிலும் சுட்டியுள்ளனர். இங்கொன்றும் அங்கொன்றுமாகச் சிதறிக் கிடக்கும் அப்பட்டறிவு மாணிக்கங்கள் சிறந்த ஒளிவீசி நமக்கு வழிகாட்டுவனவாக உள்ளன. குறிப்பிட்ட நெறிமுறை ஏதும் வரையறுக்கப்படாத நிலையில் அவர்தம் இவ்வகைக் குறிப்புகளே நமக்குப் பாடமாக விளங்குகின்றன என்றால் அது மிகையாகாது.

தமக்கு முன் வாழ்ந்த நூலாசிரியரின் கருத்தை உள்ளவாறே உணர்த்துவதற்கு உரையாசிரியர்கள் மேற்கொண்ட முயற்சி போன்றதே சுவடிகளை இன்று நாம் வெளிப்படுத்துவதும். நூலில் காணப்படும் பாட்டு, பாடங்கள், நூற்பொதிசெய்தி, நூலாசிரியரின் ஒட்டுமொத்தப் பார்வை இவற்றையெல்லாம் நீடுநினைந்த உரையாசிரியர்கள் ‘இது நூலாசிரியர் கருத்தன்று, இது பொருந்தாமை உணரப்படும். இது நூலாசிரியர் கொள்கைக்கு முரண்பட்டது, இது பாடமன்மை தெளியப்படும்’ என்று பாடம் ஓதுவாரும் உளர், என்பார் பிறரும், இதனால் அவர் கருத்து பிழைபட்டமை தெளியப்படும்’ என்றெல்லாம் தம் உரைகளினூடே எழுதியுள்ள விளக்கங்களை உற்று நோக்கும் போது நூலை-நூற்பொருளை வெளிப்படுத்துவதில் அவர்கள் எத்துணை விழிப்பாக இருந்திருக்கின்றனர் என்பதை நாம் உணரலாம். எனவே பதிப்பு நெறிமுறைகள் உரையாசிரியர் காலத்திலேயே நன்கு உணரப்பட்டமை வெளிப்படையாம்.

நூலை வெளிப்படுத்த நினைக்கும் எவர்க்கும் உரையாசிரியர்களின் பயிற்சியும் தேர்ச்சியும் ஒப்பீடும் இன்றியமையாது தேவைப்படுவதாக இன்று உணரமுடிகிறது. எழுத்து முறையின் கால இடையீடும், சொற்பொருள்மாற்ற இடையீடும், வழக்கு, மொழிமரபு ஆகியவற்றின் மாற்றமும் உள்ளதை உள்ளவாறு படித்து உணர்வதும் நமக்கு

அரியசெயலாக்கிவிட்டன. இந்நிலையில் நாம் மேலும் ஆழ்ந்து பயிற்சி பெற வேண்டியுள்ளது என்றால் அது மிகையாகாது.

மேலை நாடுகளிலும் சுவடிப்பதிப்பு நெறிமுறைகள் பற்றிய விவாதங்கள் சில நூற்றாண்டுகளாகவே தொடர்ந்து வந்திருக்கின்றன. பைபிள், மில்டன் கவிதைகள், ஷேக்ஸ்பியரின் நாடகங்கள் மற்றும் கிரேக்க, உரோமானிய நூல்கள் போன்றவற்றை எவ்வாறு வெளிப்படுத்துவது, எவ்வாறு வெளிப்படுத்தினால் அது நூலாசிரியர் கருத்துக்கு மாறுபடாத வகையில் அமையும் என்றெல்லாம் சிந்தித்தனர். இந்திய நாட்டின் பிறபகுதிகளிலும் ஒருவர் கருத்தை மற்றவர் தடை விடைகளால் விவாதித்து எழுதியுள்ள விளக்கங்களைக் காணும் போது சுவடிப்பதிப்பு நெறிமுறைகளைப் பற்றிய சிந்தனை தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது என்பது புலனாகிறது. ஒருவகையில் இம்முயற்சிகள் பெருவகை தருவதாக அமைந்துள்ளன.

இவற்றை நன்கு சிந்தித்த ஓலைச்சுவடித்துறை பல்வேறு அறிஞர் பெருமக்களை - சுவடிப்பதிப்பில் ஈடுபாடும் பட்டறிவும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற பதிப்பாசிரியர்களை வரவழைத்து அவர்களின் பட்டறிவை விளங்கிக் கொள்ளத் திட்டமிட்டது. தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் மாண்புநிறை முனைவர். ச. அகத்தியலிங்கம் அவர்களின் ஐந்தாண்டுத் திட்டக் கருத்தரங்கக் கொள்கையைச் செயற்படுத்துவதற்கு இந் நிலையைப் பயன்படுத்திக் கொள்வதென்று முனைந்து, சுவடிகளைப் பதிப்பித்து வெளியிடுவது இத்துறையின் நோக்கங்களுள் ஒன்றாகும். அதனால், 'சுவடிப்பதிப்பு நெறிமுறைகள்' என்னும் பொதுத் தலைப்பிலேயே இத்துறையின் முதல் கருத்தரங்கைத் தொடங்குவது என முடிவு செய்யப்பெற்றது.

சுவடிப்பதிப்பு நெறிமுறைகள் என்பது மிக மிக விரிந்த ஒன்று. அதனை ஒரே ஒரு கருத்தரங்கில் சில தலைப்புகளில் மட்டுமே முடிக்க முடியுமா? என்று ஐயுற்றபோது, இது முதல்முயற்சியாதலின் ஒவ்வொரு வகையிலும் சில சில தலைப்புகளை மட்டும் இப்போது ஆய்வு செய்யலாம். பின்னாளில் பிறவற்றையும் தொடரலாம் என்னும் கருத்து ஏற்கப்பட்டு, அவ்வகையிலேயே செயலில் இறங்குவதானோம். சுவடியியலில் ஈடுபாடுகொண்ட அறிஞர் பலர் எங்கள் முயற்சியை வரவேற்று

ஊக்கப்படுத்தினர். எனினும் சிலர் கலந்து கொள்ள இயலா நிலையையும் சுட்டினர். எனவே, இக்கருத்தரங்கில் நாங்கள் உருவாக்கிய தலைப்புகளில் பல விடுபட வேண்டிய சூழல் ஏற்பட்டது என இங்கே சுட்ட விரும்புகிறேன்.

காசிமடத்துப் பதிப்புகளும் பதிப்புமுறைகளும், சைவ ஆதினப்பதிப்புகள், சைவ சமாஜப்பதிப்புகள், பழம்பெரும் பதிப்பகங்கள் கையாண்ட முறைகள், அகராதிகளும் சுவடிப் பதிப்புகளும், தமிழ் வளர்ச்சியில் சுவடிப்பதிப்புகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், கீழ்த்திசைச் சுவடி நூலக வெளியீடுகள், டாக்டர் உ. வே. சா. நூலக வெளியீடுகள், தத்துவம், காப்பியம், சிற்றிலக்கிய வெளியீடுகள், உரை நூல்களின் பதிப்புகள் போன்ற பல தலைப்புகள் இவ்விடுபாட்டில் குறிக்கத்தக்கன.

இவை காலம், சூழல், பொருளாதாரம் கருதி விடப்பட்டன என்பதையும் பின்னாளில் இப்பொருள்கள் பற்றிய கருத்தரங்குகளும் ஆய்வரங்குகளும் நடத்தப்பெற்று இப்பொருள் நிறைவேற்றப்படும். எனவே, இப்பெருந்தலைப்பின் சில துறைகளை மட்டும் ஒருபானைச் சோற்றுக்கு ஒருசோறு பதம் என்பது போல இந்நூலில் காணலாம்.

எள்ளினின்று எண்ணெய் எடுபடுவது போல இலக்கியங் கண்டதற்கு இலக்கணம் இயம்புதல் மரபு என்னும் கொள்கையே இந்நூலிலும் சுடர்விடுதல் காணலாம். முந்தைய பதிப்புகளை வைத்தே அவற்றின் பதிப்புமுறை யாது என்பதை இக்கட்டுரைகள் அறிய முற்பட்டிருக்கின்றன இச்சிறு அறிமுகத்துடன் இவ்வாய்வுரைகளில் கூறப்படும் செய்திகளுக்குச் செல்வோம்.

## ஆய்வுரைகள் அறிமுகம்

இத்தொகுப்பில் 21 ஆய்வுக்கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. சுவடியியலைச் சார்ந்த அடிப்படைக் கருத்துகளைப் பல கோணங்களில் இக்கட்டுரைகள் விளக்கி நிற்கின்றன. இவை ஓரளவு வகைப்படுத்தி நிரல்படுத்தப்பெற்றுள்ளன. சுவடியியலை அறிமுகப்படுத்தும் பொதுச் செய்திகள், ஏட்டுச் செய்தியின் வரிவடிவம், பாடவேறுபாடு, யாப்பு நிலை இவற்றையெல்லாம் உணர வேண்டிய பதிப்பாசிரியர் கடமை ஆகிய பொருள்களைத் தாங்கிய கட்டுரைகள் முதலாவதாக இடம் பெற்றுள்ளன.

இரண்டாவதாக ஓலைச் சுவடியோடு நெருங்கிய தொடர்புடைய தாள் சுவடிகள், செப்பேடுகள் ஆகிவற்றைப் பற்றிய அடிப்படைச் செய்திகளைக் கூறும் கட்டுரைகள் அமைக்கப்பட்டுள்ளன.

மூன்றாவதாக, பழந்தமிழ் தொடர்பான பதிப்புகளைப் பற்றிய செய்திகளைக் கூறும் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

நான்காவது பிரிவில், பதிப்பாசிரியர், பதிப்பு நிறுவனங்கள் ஆகியோரின் நெறிமுறைகளை இனம் காண முயலும் கட்டுரைகள் காட்சியளிக்கின்றன.

ஐந்தாவது பிரிவு, பொருளடிப்படையில் இலக்கணம், கலை, மருத்துவம், சோதிடம், போன்ற பொருள்களைப் பற்றிய பதிப்புமுறைகளைக் காட்டும் கட்டுரைகளைத் தாங்கியுள்ளது.

ஆறாம் பிரிவு, கணிப்பொறியுகத்தில் வாழும் நாம் சுவடிப் பதிப்புக்குக் கணிப்பொறியை எவ்வாறெல்லாம் பயன் படுத்தமுடியும் என விளக்கும் ஒரு கட்டுரையைக் கொண்டிருக்கிறது.

ஏழாம் பிரிவு, இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ள இரண்டு ஆங்கிலக் கட்டுரையைத் தாங்கி நிறைவு பெற்றுள்ளது.

இவ்வைப்புமுறை, சுவடியியலைப் படிப்படியாக அறிமுகம் செய்ய வேண்டும் என்னும் நோக்கைக் கொண்டதாகும். இனி இக்கட்டுரைகளின் சுருக்கத்தை முறையே காண்போம்.

1.. தமிழ்ச்சுவடிகளின் பயிற்சியும் பதிப்பும் -

திரு. மு.கோ. இராமன்

இக்கட்டுரை மொழி எழுத்து ஆகியவற்றின் தோற்றத்தைச் சுட்டிக்காட்டி ஓலைச்சுவடிகள், அவை பெருகிய விதம் முதலியவற்றைக் கூறுகிறது. பிறகு சுவடிகளில் நேரும் பிழைகளைப் பற்றி விரிவாகப் பேசுகிறது. சென்ற நூற்றாண்டில் தொடங்கிய சுவடிகளின் பதிப்பு முயற்சிகளையும் கூறுகிறது. இப்போது ஓலைச்சுவடிகள் தொகுக்கப்பெற்றுள்ள இடங்கள், பொருள் வாரியாக அவற்றின் உத்தேச அளவு, ஆகியன அடுத்து இடம் பெற்றுள்ளன. சில பதிப்புப் பிழைகள் எடுத்துக்

காட்டப்பெற்றுத் திருத்தமும் சுட்டப்பெற்றுள்ளது. ஓலைச் சுவடியைப் பதிப்பிக்கும்போது எவ்வாறு செயல் படவேண்டும் என்ற அறிவுரையுடன் நிறைவு பெறுகிறது. இவ்வாறாகச் சுவடியியலில் தோய்ந்த அனுபவம் பெற்ற ஆசிரியரால் எழுதப்பட்ட இக்கட்டுரை சுவடியியலுக்கு ஒரு நல்ல அறிமுகமாக அமைந்துள்ளது.

## 2. எழுத்து வரிவடிவும் திரிபுகளும் - பேரா. ச. பாலசுந்தரம்

மொழி, எழுத்து ஆகியவற்றின் தோற்றம், வரிவடிவங்களில் காலந்தோறும் ஏற்படும் மாற்றம், எழுதுபவர்களின் கையெழுத்து வேறுபாடுகள், எழுதப்படும் கருவிகளுக்கேற்ப எழுத்துமுறை மாறுபடுதல் ஆகியன இக்கட்டுரையில் விளக்கப்பெறுகின்றன. புணர்ச்சி விகாரங்கள் எவ்வாறு சில நேரங்களில் தவறாகப் பிரிக்கப்படுகின்றன என்பதும், மொழியறிவற்றவர்களால் ஏற்படும் பிழைகள் இத்தகையன என்பதும் எடுத்துக் காட்டப்படுகின்றன. இவ்வாறாக இக்கட்டுரை சுவடியியலின் சில கூறுகளை நன்கு விளக்கிச் செல்கிறது

## 3. பாடவேறுபாடும் பாடத்தெரிவும்

- முனைவர் த.கோ. பரமசிவம்

சுவடிகளில் பாடவேறுபாடுகள் தோன்றும் விதம், அவற்றின் வகைகள் ஆகியவற்றை வகைப்படுத்திக் கூறும் இக்கட்டுரை ஒரே நூல் இடத்திற்கு இடம் எப்படி வேறுபாடடைகிறது என்பதையும் எடுத்துக்காட்டுடன் தெளிவாக்குகிறது. பாட வேறுபாட்டிற்கும் சுவடி வேறுப்பாட்டிற்கும் உள்ள மாறுபாட்டை விளக்கியபிறகு மூலபாடத்தைத் தேர்ந்தெடுப்பதில் பின்பற்ற வேண்டிய நெறிமுறைகளைத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. சரியான பாடம் கிடைக்காதபோது பதிப்பாசிரியர் பழைய நூலிலுள்ள ஒரு சொல் அல்லது தொடரைத் திருத்தலாமா என்னும் கேள்விக்கும் இதில் விடை காணப்படுகிறது. பதிப்பாசிரியர் மேற்கொள்ளவேண்டிய அறத்தையும் வலியுறுத்திச் செல்லும் இக்கட்டுரை மூலபாட ஆய்வியலுக்கு ஒரு நல்ல முன்னுரையாக அமைந்துள்ளது.

4. சுவடிப்பதிப்பில் யாப்பின் இன்றியமையாமை

- புலவர் ப.வெ. நாகராசன்

தமிழ்ச்சுவடிகளுள் செய்யுள் நடையில் அமைந்த நூல்களே மிகுதியானவையாதலின் அதனைப் பதிப்பிக்க முனையும் பதிப்பாசிரியர் யாப்பிலக்கணத்தில் நல்ல புலமை உடையவராக இருக்க வேண்டும் என வலியுறுத்துகிறது இக்கட்டுரை. சுவடிப்பதிப்பில் ஏற்படும் தவறுகளில் சரிபாதிக்கு மேலானவற்றை யாப்பிலக்கண உணர்வுடன் பார்த்திருந்தால் எளிதில் திருத்தியிருக்கலாம் என்கிறது இது. சில சுவடிப் பதிப்புகளில் நேர்ந்துள்ள பிழைகளை எடுத்துக் காட்டி அவை எவ்வாறு திருத்தப்பெற வேண்டும் என்றும் கூறுகிறது. இப் பிழைதிருத்தத்தையும் யாப்பிலக்கண அடிப்படையிலேயே எழுத்து, அசை, சீர், அடி, தொடை என வகுத்துத்தரும் இதனுள் சில யாப்பிலக்கண நுட்பங்களும் இடம்பெற்றுள்ளன.

5. பதிப்பாசிரியர்களும் அவர்தம் கடமைகளும்

- முனைவர் சா. கிருட்டிணமூர்த்தி

பதிப்பித்தலாவது யாது என்ற வரையறையோடு தொடங்கும் இக்கட்டுரை பதிப்பு எனப் பொருள்படும் edit என்னும் ஆங்கிலச் சொல்லையும் ஆராய்கிறது. 'எடிடர்'கள் பலவகைப்படுவர் எனக்காட்டி அவர்களின் பணிகளை விளக்கிக் கூறுகிறது. இத்தகைய 'எடிடர்'களின் கடமைகளை ஒற்றுமை, வேற்றுமை நயங்களுடன் ஆராய்ந்து பின் சுவடிப்பதிப்பாசிரியரின் கடமைகளைத் தெளிவாக விளக்கிக் கூறுகிறது. சுவடி பெயர்த்து எழுதப்படுவதிலிருந்து அச்சு மெய்ப்புத் திருத்துதல் முடிய உள்ள பணிகள் இதில் இடம் பெற்றுள்ளன. ஒரு பதிப்பாசிரியர் பலதுறை அறிவும், பல்வகைத் திறனும் பெற்றவராக இருந்தால் அவருடைய பதிப்பு மிகச் செம்மையாக இருக்கும் என்பது இறுதியில் வலியுறுத்தப்படுகிறது.

6. நூலாக்கத்தில் தாள்சுவடிகளும் ஓலைச்சுவடிகளும் -

முனைவர் ம. இராசேந்திரன்

பண்டைக்காலத்தின் எழுதுபொருள்களின் அறிமுகத் துடன் தொடங்கும் இக்கட்டுரை தாளின் தோற்றம், தாள் ஆலை

வளர்ச்சி முதலியவற்றையும் சுட்டிக்காட்டுகிறது. தமிழில் இருக்கின்ற தாள் சுவடிகளைப் பற்றிய செய்திகளை விளக்கி அவற்றை வகைப்படுத்தியும் காட்டுகிறது. தாள் சுவடிகளின் எழுத்து முறையையும் கூறும் இக்கட்டுரை, அச்சுவடிகள் ஓலைச்சுவடிகளிலிருந்து எவ்வாறு மாறுபட்டுள்ளன என்பதையும் தெளிவாக்குகிறது. தாள்சுவடிப் பதிப்பாசிரியருக்கு இருக்க வேண்டிய தகுதிகளைச் சான்றுகளுடன் விளக்கி இதற்குக் களப்பணியும் மிக வேண்டப்படுகிறது என வலியுறுத்துகிறது. தாள் சுவடி நூலாக்கத்தில் கடைப்பிடிக்க வேண்டிய நெறி முறைகளைக் காட்டி இக்கட்டுரை நிறைவு பெறுகிறது.

7. செப்பேடுகளும் ஓலைச்சுவடிகளும் - புலவர் செ. இராசு

செப்பேடுகளுக்கும் ஓலைச்சுவடிகளுக்கும் இடையிலான ஒற்றுமை வேற்றுமைகளை இக்கட்டுரை குறித்துக் காட்டுகிறது. பழங்காலத்தில் ஓலை என்றாலேயே ஆணை எனப் பொருள்பட்டது என்றும், இவை முதலில் ஓலைகளில் எழுதப்பெற்று அடுத்துக் கல்லிலும் இறுதியாகத் தேவையானவை மட்டும் செம்பிலும் பொறிக்கப்பெற்றன என்றும் இது விளக்குகிறது. கல்வெட்டுகளின் செப்பேட்டுப்படிகளும், செப் பேடுகளின் ஓலைப்படிகளும் காணப்படும் நிலையும் சுட்டப்பெறுகிறது. இவ்வாறாக இக்கட்டுரை செப்பேடுகள் ஓலைச்சுவடிகள் ஆகிய இரண்டையும் ஒன்றாக இணைத்துப் பார்க்கிறது.

8. பழந்தமிழ்ப் பதிப்புகள் - முனைவர் இ. சுந்தரமூர்த்தி

தமிழ்ப் பதிப்புக்கலையின் முன்னோடிகளை அறிமுகப் படுத்திக் கொண்டு தொடங்கும் இக்கட்டுரை 1812 இல் வெளியிடப்பெற்ற திருக்குறள் பதிப்பைப் பற்றிய பல சுவையான செய்திகளைக் தருகிறது. அச்சான பின்னரும் சில திருத்தங்களுடன் இந்நூல் ஓலைச்சுவடியில் படியெடுத்து வைக்கப்பெற்றுள்ளதை எடுத்துக்காட்டி, 1881 இல் சி.வை. தாமோதரம்பிள்ளை அவர்களால் வெளியிடப்பெற்ற வீர சோழியப் பதிப்பின் சிறப்பையும் வெளியாக்குகிறது. சுவடியில் நேரும் பிழைகளையும் குறிப்பிட்டுச் செல்லும் இக்கட்டுரை முன்னையோரின் பதிப்புப் பட்டறிவு பின்னையோர் பணிக்கும் பயன்படத் தக்கதாகும் என நிறைவுறுகிறது.

9. மறைந்த நூல்களைப் பதிப்பித்தல்

- புலவர் இரா. இளங்குமரன்

பல பழைய நூல்களின் பெயரை மட்டும் கேள்விப்படுகின்றோம்; சில நூல்களின் சிற்சில பகுதிகள் மட்டும் வேறு நூல்களின் மேற்கோள்களாக அறியப்பெறுகின்றன. இவ்வாறு அமையும் பகுதிகளைத் தொகுத்து நூலாக்கும் முயற்சியை விவரிக்கிறது இக்கட்டுரை. காக்கைபாடினியம், களவியற்காரிகை ஆகிய இரண்டு நூல்களும் எவ்வாறு உருவாயின என்பது விளக்கப்படுகிறது. காக்கைபாடினியத்திற்கு உரை காணும்போது மேற்கொள்ளப்பட்ட நெறிமுறைகள் தெளிவாகக் காட்டப்படுகின்றன. உரையாசிரியர்கள் பாவன்மை மிக்கோ ராகவும் இருத்தல் சிறப்புடையதாம் என்று நிறுவப்படுகிறது. நூல் அச்சான பிற்கு கிடைத்த சில தெளிவுகள் கூட முன்னுரையில் குறிக்கப்படலாம் எனக் காட்டிப் பதிப்பாசிரியர்கள் விழிப்புடன் இருக்கவேண்டும் என அறிவுறுத்தி இக்கட்டுரை நிறைவேறுகிறது.

10. சங்க இலக்கியப் பதிப்புகள் - செல்வி ந. விசாலாட்சி

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்னும் சங்க இலக்கியங்களின் முதல் பதிப்புகளைப்பற்றி இக்கட்டுரை பல செய்திகளைத் தருகிறது. தனித்தனியாகவும், ஒரே தொகுப் பாகவும் வெளியான பல பதிப்புகள் இதில் எடுத்துக் காட்டப் பெற்றுள்ளன. 1887 இல் தொடங்கிய சங்க இலக்கியப் பதிப்பு வரலாற்றை விரிவாக விளக்கும் இக்கட்டுரை தன் பின் னிணைப்பாக இதுவரை வெளிவந்துள்ள சங்க இலக்கியப் பதிப்புகள் அனைத்தையும் ஒரு பட்டியலாகப் பெற்று விளங்குவது சிறப்புடையதாம். இக்கட்டுரையைச் சங்க நூற்பதிப்பு வரலாற்றின் சுருக்கம் என்னலாம்.

11. ஆறுமுக நாவலரின் பதிப்பு முறைகள்

- திரு. சி. இலட்சுமணன்

19 ஆம் நூற்றாண்டின் தமிழ்ப் பதிப்பாசிரியர்களில் குறிப்பிடத்தக்கவராகிய ஆறுமுக நாவலர் அவர்களின் பதிப்பு நெறிமுறைகளை இக்கட்டுரை எடுத்தியம்புகிறது. நாவலர் அவர்களின் நோக்கம், அவர் நூல்களின் முறை, அவர் கையாண்ட

அச்சுப்பணி, அடிக்குறிப்புகள், அருஞ்சொற்பொருள், சொற்களுக்கு விளக்கம் தருதல், மேற்கோள் இலக்கணக் குறிப்பு ஆகியன தருதல் போன்றவை இக்கட்டுரையில் இடம்பெற்றுள்ளன. ஆறுமுக நாவலரின் தனிச்சிறப்புகள் யாவை என்பதும் சிந்திக்கப்பெறுகிறது. ஆறுமுக நாவலர் அவர்களால் பதிப்பிக்கப்பெற்ற 60 நூல்களின் பட்டியல் அகர வரிசையில் பின்னிணைப்பாக இணைந்து இக்கட்டுரையை எழிலாக்குதல் காணத்தகும்.

12. பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையின் பதிப்பு முறைகள்-

பேரா மு. சண்முகம்பிள்ளை

சென்ற நூற்றாண்டில் தமிழ் நூற்பதிப்பின் நிலை எவ்வாறு இருந்தது எனத் தொடங்கும் இக்கட்டுரை வையாபுரிப்பிள்ளையவர்களின் பதிப்புக்கலையறிவையும், அவர் வகுத்துக்கொண்ட நெறிமுறைகளையும் விளக்குகிறது. நிகண்டுகள், சிற்றிலக்கியம், இலக்கண நூல்கள் ஆகியவற்றின் பதிப்புகள் எவ்வாறு அமைந்துள்ளன எனக் கூறப்படுகிறது. ஒருமுறை வந்த நூலையும் மறுபதிப்பாக வெளியிடும்போது இவர் கையாண்ட முறைகளும் காட்டப்பட்டுள்ளன. ஆராய்ச்சிப்பதிப்பு பற்றிய திரு. பிள்ளை அவர்களின் கருத்து நன்றாக எடுத்துக் காட்டப்பெற்றுள்ளது. சுவடிப்பதிப்பாசிரியர்களின் கடமையை அழுத்தந்திருத்தமாக வலியுறுத்தி இக்கட்டுரை நிறைவுறுகிறது.

13. சரசுவதிமகால் பதிப்புகள் - புலவர் வீ. சொக்கலிங்கம்

தஞ்சை சரசுவதிமகாலைப் பற்றிய அறிமுகத்துடன் தொடங்கும் இக்கட்டுரை அந்நிறுவனத்தால் வெளியிடப் பட்டுள்ள நூல்கள் அனைத்தையும் வரிசையாகக் கூறிச் செல்கிறது. சிறு சிறு நூல்களைப் பருவ இதழில் கொஞ்சம் கொஞ்சமாக வெளியிட்டு நூலாக்கம் செய்த செய்தியும் குறிக்கப்பட்டுள்ளது. நூற்பதிப்பாசிரியர்கள் தாமே சுவடி படிக்கத் தெரிந்தவராக இருந்தால்தான் அவர்களின் பதிப்பு செம்மையாக இருக்கும் என வலியுறுத்துகின்ற இக்கட்டுரை தஞ்சை சரசுவதிமகாலின் தமிழ்ப் பதிப்புகளைப் பற்றி அறிய விரும்புபவர்களுக்குத் துணை செய்கிறது.

## 14. இலக்கணச்சுவடிகளின் ஆய்வுப்பதிப்பு

- திரு. தி.வே. கோபாலையர்

இலக்கணச் சுவடிகளின் நிலைமை இத்தகையன எனத் தொடங்கும் இக் கட்டுரை ஆரம்ப காலத்தில் இலக்கண நூல்கள் எவ்வாறு பதிப்பிக்கப்பெற்றன எனக்காட்டுகிறது. இலக்கண நூற்பதிப்பிற்கு டாக்டர் உ.வே. சா. அவர்களின் நன்னூல் சங்கரநமச்சிவாயர் உரையின் இரண்டாம் பதிப்பு சிறந்த எடுத்துக்காட்டாகும் என்று விளக்குகிறது. பேரறிஞர் கணேசய்யர் அவர்களின் தொல்காப்பியம் பதிப்பிலேயே சில பிழைகள் நேர்ந்துள்ளன என்பது விரிவாக எடுத்துக்காட்டப் படுகிறது. இலக்கணநூற் பதிப்பாசிரியர்கள் இலக்கிய உரைகளையும் ஊன்றிப் பார்க்க வேண்டும் என்பது நன்கு வலியுறுத்தப்பெறுகிறது. தெளிவான நிறுத்தக் குறிகளின் பயன்பாட்டை விளக்கும் இக்கட்டுரை இறுதியில் வீரசோழிய நூற்பதிப்பைப் பற்றி பல அரிய செய்திகளைக் கூறிப் பதிப்பிற்கு இன்றியமையாது வேண்டடப்படும் 10 அம்சங்களைப் பட்டியலிட்டுக் காட்டுகிறது.

## 15. கலைஇலக்கணப் பதிப்புமுறைகள்

-முனைவர் அ.நா. பெருமாள்

இசை, ஓவியம், நாடகம் போன்ற கலைகளுக்குரிய இலக்கணத்தை விளக்கும் சுவடிகளை முறையாகப் பதிப்பிக்க முயலும்போது ஏற்படும் சிக்கல்களை இக்கட்டுரை சிந்திக்கிறது. வாத்திய மரபு என்னும் சுவடியைப் பற்றிய பல செய்திகளின்பின் இத்தகைய நூல்களின் பதிப்பில் மொழியறிவோடு குறிப்பிட்ட அந்தக் கலையிலும் பதிப்பாசிரியருக்குப் போதுமான அறிவு இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்துகிறது. தாள நூல்கள் தரும் கணக்கில் சில தாளங்களின் மாத்திரை அளவு மாற்றியுள்ளதைச் சுட்டிக்காட்டி இசைக் கலைஞர்கள் இதற்குத் தக்க முடிவு எடுக்க வேண்டும் என்கிறது. சுவடிப் பதிப்பில் நூல் மட்டுமேயன்றி அதன் முன்னும் பின்னும் அமைந்துள்ள குறிப்புகளும் நன்கு ஆராயப்படவேண்டும் என்ற கருத்துடன் இக்கட்டுரை நிறைவு பெறுகிறது.

16. மருத்துவச்சுவடிகள் பதிப்பு நெறிமுறைகள்

- முனைவர் வே.இரா. மாதவன்

தமிழில் கிடைக்கும் சுவடிகளுள் மருத்துவச் சுவடிகளே மிகுதி எனத் தொடங்கும் இக்கட்டுரை அவற்றைப் பதிப்பிப்பதில் எழும் சிக்கல்களை ஆராய்கிறது. சென்னையில் உள்ள அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் வெளியிட்டுள்ள ஒன்பது மருத்துவ நூல்களின் பதிப்புமுறைகளும், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனப் பதிப்புகள் சிலவும் இங்கு ஆராயப்பெறுகின்றன. மருத்துவ நூற்பதிப்பில் எழுத்து, சொற்பிழைகள் களையப்பட வேண்டும் என்பது வலியுறுத்தப்படுகிறது. மருத்துவ நூல்களின் தலைப்பிலேயே காணப்பெறும் தடுமாற்றங்கள், பரிபாஷைகளால் ஏற்படும் சிக்கல்கள், யோகம், ஞானம், ரசவாதம் போன்ற மருத்துவமல்லாத பிற துறைச்செய்திகளின் கலப்பு போன்றவை சுட்டிக்காட்டப் பெறுகின்றன. எதிர் காலத்தில் மருத்துவ நூல்கள் எவ்வாறு பதிப்பிக்கப்படவேண்டும் என்பதைப்பற்றிய கருத்துக ளுடன் இக்கட்டுரை நிறைவு பெறுகிறது.

17. சோதிடச்சுவடிகளின் பதிப்புகள்

- முனைவர் சி. மூக்கரெட்டி

சுவடிப்பதிப்பின் இன்றியமையாமையைச் சுட்டித் தொடங்கும் இக்கட்டுரை சில சோதிடக்கலைச் சொற்களை விளக்க முயல்கிறது. சோதிட நூற்பதிப்பாசிரியருக்கு இருக்க வேண்டிய தகுதிகளைப் பட்டியலிட்ட பிறகு இக்கட்டுரை தஞ்சை சரசுவதிமகால், சென்னைக் கீழ்த்திசைச் சுவடி நூலகம் ஆகிய நிறுவனங்களின் வெளியீடுகளைக் குறிப்பிட்டு நிறைவுபெறுகிறது.

18. ஓலைச்சுவடியாய்வில் கணிப்பொறியின் பயன்பாடுகள்-

பேரா. கா.செ. செல்லமுத்து

கணிப்பொறிகளின் பயன்பாட்டை விளக்கும் இக்கட்டுரை, நூல்களில் இடம் பெற்றுள்ள சொல், தொடர் முதலியவற்றைக் கணிப்பொறியின் வழி அட்டவணைப்படுத்தி நூலாசிரியர் மற்றும் அவர் காலம் பற்றி ஆய்வு செய்யலாம் என்றும், ஓலைச் சுவடிகளைப் பற்றிக் கிடைக்கின்ற செய்திகள் அனைத்தையும் கணிப்பொறி வழித் தொகுத்து அட்டவணைப் படுத்தலாம் என்றும், நூல்களுக்குச் சொல்லடைவு பொருளடைவுகள்

தயாரிக்கலாம் என்றும் விளக்குகிறது. தமிழ்ப் பல்கலைக்கழகம் உரோமன் எழுத்தில் தயாரித்துள்ள அனைத்துலகத் தமிழ்ச்சுவடிகளின் அட்டவணையின் அமைப்பை விளக்கி அதனைத் தமிழ் எழுத்தில் மாற்றிக் கொணரும் முயற்சியும் நிறைவேறும் தருவாயில் உள்ளது எனக் கூறுகிறது. கணிப்பொறி வழிச் செய்யப்பட்ட நூலடைவுப் பகுப்பாய்வில் அறியப்பட்ட செய்திகளில் சிலவற்றைச் சுட்டிக்காட்டி இக்கட்டுரை நிறைவு பெறுகிறது.

## 19. பல்கலைக்கழகப் பாடநூல்களும் பதிப்பு முறைகளும்

- முனைவர் க.ப. அறவாணன்

தமிழ் இலக்கியங்கள் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் பாடமாக வைக்கப்படும்போது அதற்குரிய மாணவர் பதிப்புகள் *(Student editions)* எவ்வாறு அமைதல் வேண்டும் என்பதனை இக்கட்டுரை விளக்குகிறது. ஆசிரியர்களுக்கும் மாணவர்கட்கும் பயன்தரத்தக்க நிலையில் அமைய வேண்டிய இப்பதிப்பில் அச்சுப் பிழைகளே இருக்கலாகாது என்பது அழுத்தமாக வலியுறுத்தப் பெறுகிறது.

## 20. Publication of Historical palm-leaf Records

- Dr. p. Cinnian

ஆங்கிலத்தில் எழுதப்பட்ட இக்கட்டுரையில் முதலில் ஓலைச்சுவடிகளைப் பற்றிய பொதுவான செய்திகள் இடம்பெற்றுள்ளன. அடுத்து, சுவடிகளின் நம்பகத்தன்மை, காலம், நூலாசிரியரின் நேர்மை முதலில் உறுதிசெய்து கொள்ளப்பெற வேண்டும் என்பது வலியுறுத்தப் பெறுகிறது. வரலாற்றுச் சுவடிப்பதிப்பு உண்மைகளை மட்டுமே கூறுவதாக அமையவேண்டும் என்கிறது. உண்மையை உறுதிப்படுத்த நேர்முறை, எதிர்முறை நெறிகள் விளக்கப்படுகின்றன. சுவடியியல் பற்றிய ஒரு நல்ல நூலடைவையும், வரலாற்றுத் தொடர்புடைய ஓலைச்சுவடிகளின் அடிப்படைத் தகவல்களின் பட்டியலையும் பின் இணைப்பாகப் பெற்று இக்கட்டுரை வரலாற்றுச் சுவடி ஆய்வாளர்க்குப் பெரும்பயன் தருவதாக அமைந்துள்ளது.

21. A Descriptive catalogue of the Tamil manuscripts - Dr. V. Murugan.

அறிஞர் மு.கோ. இராமன் அவர்களின் கட்டுரையைப் பெரும்பாலும் பின்பற்றி ஆங்கிலத்தில் எழுந்த இதனுள் சுவடிகளின் தொகுப்பு முறையான பராமரிப்பு, விளக்க அட்டவணைகளின் இன்றியமையாமை ஆகியன வலியுறுத்தப் பெறுகின்றன. தமிழ்ச்சுவடி அட்டவணைகளாகிய சரசுவதிமகால் சுவடி விளக்க அட்டவணை, டாக்டர். உ. வே. சா நூலக அட்டவணை, அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலக அட்டவணை ஆகியவற்றின் நிறைகுறைகள் சுட்டிக்காட்டப்பெறுகின்றன. இறுதியாக, சென்னை ஆசியவியல் ஆய்வுக் கழகத்தின் சுவடிவிளக்க அட்டவணை எம்முறையில் தயாரிக்கப்படுகிறது என்பதும் விளக்கப் பெற்றுள்ளது.

## ஆய்வாளர் அறிமுகம்

இக்கட்டுரை மலரை அணிசெய்த பெருமக்கள் இருபத்தொருவராவர். சுவடியியலில் ஆய்வும்தோய்வும் கொண்ட அவர்கள் சுவடிகளை வெளிப்படுத்தவேண்டும். என்னும் பெருவேட்கையில் பெரிதும் ஈடுபாடும் ஆர்வமும் கொண்ட வர்களாகத் திகழ்கின்றனர். அவர்களில் பலர் சுவடிகளைப் பதிப்பித்து வெளிப்படுத்திய பட்டறிவில் சிறந்தவர்களாக உள்ளனர் என்பது குறிப்பிடத்தக்க செய்தியாம். கருத்தரங்கைத் திட்டமிட்டு நடத்திய ஓலைச்சுவடித்துறையினர் அனைவரும் ஒவ்வொரு கட்டுரையால் இம்மலரை அணி செய்துள்ளனர். சுவடியியலில் ஈடுபாடுகொண்ட பல்கலைக் கழகத்தைச் சார்ந்த பிறதுறைப் பேராசிரியர் மூவரும் பல்கலைக்கழகப் பதிவாளரும் மலரை அணி செய்வதில் இத்துறையினருடன் இணைந்துள்ளனர்.

பிறபல்கலைக்கழகங்கள், நிறுவனங்களைச் சார்ந்த பேராளர் சிலர் எங்கள் அழைப்பை ஏற்றுத் தங்களுடைய அரிய ஆய்வுரைகளால் இம்மலரின் அணியை நிறைவு செய்துள்ளனர். அவர்களையெல்லாம் சுவடியியலைச் சார்ந்த அறிஞர்கள் என்று

கூறுவதோடு நில்லாமல் சுருங்கிய அளவிலாவது அறிமுகம் செய்துவைப்பது என் கடமையாகும். கட்டுரைகளில் காணப்பெறும் கருத்துகள் செய்திகள் ஆகிய அனைத்துக்கும் கட்டுரையாசிரியர்களே பொறுப்பாவர். அவர்கள் பலரும் அறிந்த நிலையினரே என்றாலும் முறையாக அறிமுகப்படுத்துவது நிறைவு தருவதாக அமையும் என்று கருதி இவ்வறிமுகத்தைக் காலமும், எல்லையும் கருதிச் சுருங்கவுரைக்கின்றேன்.

1. திரு. மு. கோ. இராமன் (தமிழ்ச்சுவடிகளின் பயிற்சியும் பதிப்பும்)

இவர் தஞ்சைமாவட்டம் அரங்கநாதபுரத்தில் 15-11-1927 இல் பிறந்தவர். தம் தந்தையார் முத்துசாமி ஐயர், கலைமகள் ஆசிரியர் கி.வா. ஜெகந்நாதன் ஆகியோரிடம் தமிழ் பயின்றவர். டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூலகம், உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் ஆகிய நிறுவனங்களின் சுவடித்துறைகளில் சிறக்கப் பணியாற்றிவிட்டு, 1986 முதல் திருவான்மியூர் ஆசியவியல் ஆய்வுக்கழகத்தின் சுவடித்துறையில் பணியாற்றி வருகிறார். சமஸ்கிருதம், மலையாளம், ஆங்கிலம், ஆகிய மொழிகளிலும் பயிற்சியுடையவர். சுவடியியலில் நீண்ட காலமாகப் பட்டறிவுகொண்ட இவர் அத்துறையில் வெளியிட்ட நூல்களும் கட்டுரைகளும் குறிப்பிடத்தக்கனவாம்

2. பேராசிரியர் ச. பாலசுந்தரம் (எழுத்து வரிவடிவும் திரிபுகளும்)

இவர் தஞ்சாவூர் கரந்தையில் 1924 இல் பிறந்தவர். கரந்தைப் புலவர் கல்லூரியில் பயின்று வித்துவான் வகுப்பில் முதலாவதாகத் தேர்ந்து 1950 முதல் அக் கல்லூரியிலேயே பேராசிரியராகவும் துணை முதல்வராகவும் பணியாற்றி 1982இல் ஒய்வுபெற்றார். இப்பொழுது தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் சங்க இலக்கிய அகராதித் திட்டத்தில் பணியாற்றி வருகிறார். தொல்காப்பியம் சங்க இலக்கியம் போன்ற பழந்தமிழ் நூல்களில் நிறைந்த பயிற்சியைக் கொண்டு விளங்கும் இவர் தாமே இசைப்பாடல்களை எழுதும் ஆற்றலும் பெற்றவராவர். மேற்கண்ட பொருள்களில் ஆய்வுக் கட்டுரைகளும் நூல்களும்

வெளியிட்டு, இப்பொழுது தமிழியற் கோட்பாடுகளை அறிவியல் நோக்கில் ஆராய்ந்து வருகிறார்.

3. முனைவர் த.சோ. பரமசிவம் (பாடவேறுபாடும் பாடத்தெரிவும்)

இவர் வடார்க்காடு மாவட்டம் களம்பூரில் 11-10-1949இல் பிறந்தவர். சென்னை பச்சையப்பன் கல்லூரியில் தமிழ் முதுகலை பயின்று, தில்லிப் பல்கலைக்கழகத்தில் முனைவர் (பிஎச்டி) பட்டம் பெற்றவர். மற்றும் தொல்லியல், கல்வெட்டியல், இந்திமொழி, சுவடியியல் ஆகியவற்றில் சான்றிதழ்களும் பட்டயங்களும் பெற்றவர். புதுதில்லி சவகர்லால் நேரு பல்கலைக்கழகத்திலும், தில்லிப் பல்கலைக்கழகத்திலும் 8 ஆண்டுகள் பணியாற்றிவிட்டு 7.11.83 முதல் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் ஓலைச்சுவடித்துறையில் இணைப் பேராசிரியராகவும் 7.11.87 முதல் துறைத்தலைவராகவும் பணியாற்றி வருகிறார். சங்க இலக்கியம், பக்தி இலக்கியம், கல்வெட்டியல், தொல்பொருளியல், ஓலைச் சுவடியியல் ஆகியவற்றில் சிறப்பு ஈடுபாடும் ஆய்வும் கொண்டவர். மேற்கண்ட பொருள்களில் இவர் எழுதிய ஆய்வுக்கட்டுரைகள் குறிப்பிடத்தக்கனவாம்.

4. புலவர் ப.வெ. நாகராசன் (சுவடிப்பதிப்பில் யாப்பின் இன்றியமையாமை)

இவர் சிதம்பரத்தையடுத்த கடவாச்சேரியில் 25.5.1937இல் பிறந்தவர். மின்னணுவியல் துறையில் பட்டயக்கல்வியும் பயிற்சியும் பெற்று அத்துறையில் பணியாற்றிக்கொண்டிருந்தபோதே தம் சொந்த முயற்சியால் தமிழ் கற்றுப் புலவர், பி.லிட் பட்டங்களைப்பெற்றவர் இந்தியில் விஷாரத் பட்டம் பெற்ற இவர் தெலுங்கு, கன்னடம், வடமொழி ஆகிய மொழிகளிலும் பயிற்சியுடையாராவர். தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் ஓலைச்சுவடித்துறை தொடங்கியது முதலாக இவர் அங்கே முத்ததொழில் நுட்ப உதவியாளராகப் பணிபுரிந்து வருகிறார். 25 ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழ்ச்சுவடிகளோடு தொடர்புடைய இவர் வெளியிட்ட நூல்களும் கட்டுரைகளும் குறிப்பிடத்தக்கனவாம். கவிதை இயற்றும் ஆற்றலையும் கைவரப்பெற்ற இவர் சிற்றிலக்கியம்,

மரபிலக்கணம், உரைநூல்கள், சித்திரக்கவிகள், சுவடியியல் ஆகியவற்றில் தோய்ந்த ஈடுபாடும் ஆய்வும் கொண்டவராகத் திகழ்கின்றார்.

## 5. முனைவர் சா. கிருட்டிணமூர்த்தி (பதிப்பாசிரியரும் அவர்தம் கடமைகளும்)

இவர் தென்னார்க்காடு மாவட்டம் வளையமாதேவியில் 16.7.1949இல் பிறந்தவர். விருத்தாசலம் கொளஞ்சியப்பர் அரசு கலைக்கல்லூரியில் தமிழ் இளங்கலை (பி.ஏ) பயின்று அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் முதுகலை(எம்.ஓ.எல்) பட்டம் பெற்றவர். இளம்பூரணர் உரையில் ஆய்வுசெய்து அங்கே முனைவர் பட்டமும் (பிஎச்.டி) பெற்றவர் மற்றும் ஆசிரியப்பயிற்சி (பி.எட்), மொழியியல் ஆகியவற்றில் பட்டமும் பட்டயமும் பெற்றவர். இவர் 27.4.84 முதல் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் ஓலைச்சுவடித்துறை, அகராதித்துறை ஆகியவற்றில் பணியாற்றிவிட்டு, 3.8.87 முதல் ஓலைச்சுவடித்துறையின் விரிவுரையாளராகப் பணியாற்றிவருகிறார். இலக்கணம், உரைகள், சங்க இலக்கியம், சுவடியியல் ஆகியவற்றில் ஈடுபாடும் ஆய்வுச் சீர்மையும் கொண்ட இவரின் ஆய்வுக்கட்டுரைகள், நூல்கள் குறிப்பிடத்தக்கனவாய் இலங்குகின்றன.

## 6. முனைவர் ம. இராசேந்திரன் (நூலாக்கத்தில் தாள்சுவடிகளும் ஓலைச்சுவடிகளும்)

இவர் தஞ்சைமாவட்டத்தில் குடவாயில் ஊரில் 3.3.1951 இல் பிறந்தவர். தமிழில் முதுகலைப்பட்டம், எம்.பில் ஆய்வுப்பட்டம், ஆகியவற்றைப்பெற்றவர். இவர் சென்னைப் பல்கலைக்கழகத்தில் 'மெக்கன்சியின் தமிழ்ச்சுவடிகள் ஓர் ஆய்வு' என்னும் ஆய்வை மேற்கொண்டு முனைவர் பட்டம் (பிஎச்டி.) பெற்றவர். சென்னை, அரசினர் கீழ்த்திசைச்சுவடிகள் நூலகத்தில் 12 ஆண்டுகளும், சென்னை பச்சையப்பன் கல்லூரியில் ஓராண்டும் பணிபுரிந்துவிட்டு, தமிழ்ப் பல்கலைக்கழக அரிய கையெழுத்துச் சுவடித்துறையில் சிறப்புத்தகைமையாளராகவும் 3.8.87முதல் விரிவுரையாளராகவும் பணியாற்றி வருகிறார். மெக்கன்சி சுவடிகள், தமிழக வரலாறு, நாட்டுப்புற இலக்கியங்கள்

போன்றவற்றில் ஈடுபாடும் ஆய்வும் கொண்ட இவருடைய ஆய்வுக் கட்டுரைகள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கனவாம்.

7. புலவர் செ. இராசு (செப்பேடுகளும் ஓலைச்சுவடிகளும்)

இவர் பெரியார் மாவட்டம் வெள்ளமுத்துக் கவுண்டன் வலசில் 2.1.1938 இல் பிறந்தவர். திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியில் புலவர் பட்டம் பெற்றவர். தமிழில் முதுகலைப்பட்டமும் பெற்றவர். தமிழாசிரியராக 22 ஆண்டுகள் பணிபுரிந்தவர். தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையில் 15 திங்கள் ஆய்வாளராகப் பணிபுரிந்துவிட்டு 1.2.82 முதல் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் கல்வெட்டுத்துறையில் இணைப்பேராசிரியராகப் பணிபுரிந்து வருகிறார். இலக்கியம், தொல்லியல், வரலாறு, கலைக்கூட அமைப்பு, கல்வெட்டு, செப்பேடு ஆகியவற்றில் இவர் துறைபோய பயிற்சியும் ஆய்வும் கொண்டவராவார். பழம்பொருள் பாதுகாப்பில் பெரிதும் ஆர்வம் கொண்ட இவர் மேற்கண்ட பொருள்களில் எழுதிய நூல்களும் ஆய்வுக்கட்டுரைகளும் சிறப்பாகக் கூறத்தக்கனவாம்.

8. முனைவர் இ. சுந்தரமூர்த்தி (பழந்தமிழ்ப் பதிப்புகள்)

தமிழில் புலவர், முதுகலை, முனைவர் பட்டங்களைப்பெற்ற இவர் மானிடவியலில் பட்டயமும் பெற்றவராவார். சென்னைப் பல்கலைக்கழகம் தமிழ் மொழித்துறையில் இணைப்பேராசிரியராக விளங்கும் இவர் 1969 ஆம் ஆண்டு முதலாக அங்கே பணிபுரிந்து வருகின்றார். சுவடியியல், பதிப்பியல், தொல்லியல், மானிடவியல், அகராதியியல் முதலிய துறைகளில் பயிற்சியும் ஈடுபாடும் உடையவர். நடையியல், இலக்கணம், பத்தி இலக்கியம் இவற்றில் தனிஆர்வம் கொண்டவர். மேற்கண்ட பொருள்களின் கூறுகளைப்பற்றி இவர் எழுதியுள்ள நூல்களும் ஆய்வுக்கட்டுரைகளும் சிறப்பாகக் கூறுதற்குரியன.

9. புலவர் இரா. இளங்குமரன் (மறைந்த நூல்களைப் பதிப்பித்தல்)

இவர் நெல்லை மாவட்ட வாழவந்தாள்புரத்தில் 30.1.1930 இல் பிறந்தவர். சென்னைப் பல்கலைக் கழகத்தில்

1951இல் புலவர் பட்டம் பெற்றவர். அந்நாள் முதல் உயர்பள்ளி, மேனிலைப்பள்ளித் தமிழாசிரியராகப் பணியாற்றி 1985 முதல் மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியற் புல ஆய்வாளராகப் பணியாற்றி 1989 சனவரி 10இல் ஓய்வு கொண்டவர். பாவாணர் ஆய்வு நூலகம் நிறுவி ஆய்வாளர்க்கு உதவி வருபவர். இலக்கியம், இலக்கணம், வரலாறு, சுவடியியல், பதிப்பியல் ஆகியவற்றில் துறைபோய அறிஞராக விளங்கும் இவர் பதிப்பித்தும், இயற்றியும் வெளியிட்ட நூல்களும் ஆய்வுக்கட்டுரைகளும் சிறந்த ஆய்வை வெளிப்படுத்துவனவாம்.

### 10. செல்வி ந. விசாலாட்சி ( சங்க இலக்கியப் பதிப்புகள்)

இவர் சென்னை இராணிமேரிக் கல்லூரியில் இளங்கலைப் பட்டப்படிப்பையும் சென்னைப் பல்கலைக்கழகத்தில் முதுகலைப் பட்டப்படிப்பையும் முடித்தவர். அங்கேயே 'எம்.பில்' ஆய்வை முடித்த இவர் முனைவர் பட்ட ஆய்வை, 'சங்க இலக்கியப் பதிப்புகள்' என்னும் தலைப்பில் மேற்கொண்டு வருகிறார். சங்க இலக்கியம், தற்கால இலக்கியம், பதிப்பியல் ஆகியவற்றில் ஈடுபாடும் ஆய்வும் கொண்ட இவர் அப்பொருள்களின் ஆய்வுக்கட்டுரைகளையும் வழங்கி வருகின்றார்.

### 11. திரு. சி. இலட்சுமணன் (ஆறுமுக நாவலரின் பதிப்புமுறைகள்)

இவர் கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள மதுசூதன புரத்தில் 24.8.1952இல் பிறந்தவர். நாகர்கோயில் தெ.தி. இந்துக் கல்லூரியில் தமிழ் முதுகலை பயின்றவர். மதுரை அரசரடி இறையியல் கல்லூரியில் 4 ஆண்டுகள் பணியாற்றிவிட்டு, 12.8.1983 முதல் தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறையில் தொழில் நுட்ப உதவியாளராகப் பணிபுரிந்து வருகிறார். பேரா. மு. சண்முகம்பிள்ளையின் பதிப்புப்பணி என்ற பொருளின் 'எம்.பில்' ஆய்வும் செய்துவருகின்ற இவர், தொல்காப்பியம், மரபுக்கவிதைகள், தத்துவம், உளவியல், சுவடியியல் ஆகியவற்றில் சிறப்பு ஈடுபாடு கொண்டவர். அப்பொருள்களில் ஆய்வுக்கட்டுரைகளையும் வழங்கிவருகின்றார்.

## 12. பேரா. மு. சண்முகம் பிள்ளை (பேரா. வையாபுரிப்பிள்ளையின் பதிப்புமுறைகள்)

இவர், கன்னியாகுமரி மாவட்டம் வீமநகரியில் 16.12.1919 இல் பிறந்தவர். திருவையாறு அரசர் கல்லூரியில் வித்துவான் பயின்றவர். தமிழ்ப்பண்டிதராகச் சைதை அரசு உயர்நிலைப்பள்ளியிலும் விரிவுரையாளராகக் கோவை அரசு கலைக்கல்லூரியிலும், -தொகுப்பாளராகத் தமிழ் வளர்ச்சித் துறையிலும், விரிவுரையாளராகத் திருக்குறள் துற்ற- சென்னைப் பல்கலைக்கழகத்திலும், ஆய்வாளராக- தமிழியல் துறை- மதுரை காமராசர் பல்கலைக்கழகத்திலும் பணியாற்றிவிட்டு, இறுதியாகச் சிறப்புநிலைப் பேராசிரியராக ஓலைச்சுவடித்துறை தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் பணியாற்றி ஒய்வு பெற்றுள்ளார். பேராசிரியர் ச. வையாபுரிப்பிள்ளையவர்களின் அணுக்க மாணவரான இவர் சங்க இலக்கியம், தொல்காப்பியம், பத்தி இலக்கியம், நிகண்டு, சிற்றிலக்கியங்கள், பாரதி பாடல்கள், அகரா்திக்கலை, சமணஇலக்கியங்கள் ஆகியவற்றில் தோய்ந்த ஈடுபாடும் ஆய்வும் கொண்டவராவார். இப்பொருள்களில் அமைந்த இவர் தம் நூல்களும் ஆய்வுக்கட்டுரைகளும் சிறந்து விளங்குவனவாம்.

## 13. புலவர் வீ. சொக்கலிங்கம் (சரசுவதிமகால் பதிப்புகள்)

இவர் தஞ்சையில் 11.12.1925 இல் பிறந்தவர். கரந்தைப் புலவர் கல்லூரியில் வித்துவான் பட்டம் பெற்றவர். பாண்டிச்சேரி விஜயன் வித்யாலய மெட்ரிக்குலேஷன் பள்ளியில் 3 ஆண்டுகள் தமிழாசிரியராகப் பணியாற்றிவிட்டுப் பின்னர் மன்னர் சரபோஜியின் சரசுவதிமகால் நூலகத்தில் 25 ஆண்டுகள் தமிழ்த் துறைத்தலைவராகப் பணியாற்றியுள்ளார் 30.3.87 முதல் தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறையில் திட்ட உதவியாளராகப் பணிபுரிந்து வருகிறார். சுவடிகள் சேகரிப்பதிலும் அவற்றைப் பாதுகாத்து வெளியிடுவதிலும் பேரார்வம் கொண்ட இவர் பலநூல்களைச் சுவடியினின்று வெளிப்படுத்தியுள்ளார். சமய நூல்கள், தொல்பொருளியல், கல்வெட்டியல் ஆகியவற்றிலும் சமயப்பணிகளிலும் இவர் ஈடுபாடுகொண்டவராவார்.

## 14. திரு. தி.வே. கோபாலையர் ( இலக்கணச்சுவடிகளின் ஆய்வுப்பதிப்பு)

இவர் தஞ்சைமாவட்டத்துத் துகிலி என்ற சிற்றூரில் 22.1.1925 இல் பிறந்தவர். திருவையாற்றில் கல்வி பயின்றவர். உயர்நிலைப்பள்ளியில் பயின்றகாலை தவறாது ஒவ்வொரு வகுப்பிலும் முதல் மதிப்பெண் பெற்று வந்தவர். கல்லூரிப் படிப்பிலும் அந்நிலை தொடரப்பெற்றவர். வித்துவான், பண்டிதம், பி.ஓ.எல்., பி.ஓ.எல் (ஆனர்சு) ஆகிய தேர்வுகளில் முதல் மதிப்பெண் பெற்றுப் பரிசும் பதக்கமும் பெற்றவர். பதினைந்து ஆண்டுகள் உயர்நிலைப்பள்ளியிலும் பதினைந்து ஆண்டுகள் தமிழ்க் கல்லூரிகளிலும் ஆசிரியராகப் பணியாற்றியவர். சில ஆண்டுகளாகப் புதுவை பிரஞ்சு இந்திய ஆய்வு நிறுவனத்தில் தமிழ்த்துறைத்தலைவராகப் பணியாற்றி வருபவர். சரசுவதிமகால் நூலகத்தின் வழியாகவும், புதுவையில் பணியாற்றும் இந்நாளிலும் இவர் வெளியிட்ட பதிப்புகளும் ஆய்வுரைகளும் அருமை வாய்ந்தன. இவரின் நினைவாற்றலைப் பலரும் சிறப்பித்துச் சொல்வர். தமிழ் இலக்கணம் பற்றிய அகராதி, வைணவத்தமிழ் அகராதி முதலியன தொகுத்து வருபவர். தமிழின் இன்றியமையாத எல்லாத் துறைகளிலும் நிரம்பிய புலைமையும் ஈடுபாடும் உடையவர்.

## 15. முனைவர் அ.நா. பெருமாள் (கலை இலக்கணப் பதிப்புமுறைகள்)

இவர் கன்னியாகுமரி மாவட்டம் உசரவளையில் 14-4-1930இல் பிறந்தவர். பம்மல் சம்பந்த முதலியாரின் நாடகம் பற்றிய திறனாய்விற்கு 1972 இல் முனைவர் பட்டம் பெற்றவர். உயர்நிலைப்பள்ளி ஆசிரியராகப் பத்து ஆண்டுகளும், கல்லூரிப் பேராசிரியராகப் பத்து ஆண்டுகளும், முதுகலைப்பட்ட வகுப்பு ஆசிரியர் பணியில் 1 1/2 ஆண்டுகளும், ஆராய்ச்சித்துறைப்பேராசிரியராகப் பத்துஆண்டுகளும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநராக 2 ஆண்டுகளும் பணியாற்றிவிட்டு 5.10.88 முதல் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் நாடகக் களஞ்சியத்துறையின் தலைவராகப் பணியாற்றிவருகிறார். நாடகம், நாட்டுப்புறக்கலைகள், தமிழிசை ஆகியவற்றில் சிறப்பு ஈடுபாடுகொண்ட இவர், பதிப்பித்தும்

இயற்றியும் வெளியிட்ட நூல்களும் ஆய்வுரைகளும் சிறப்புநிலையைக் காட்டுவனவாம். சுவடியியலில் இவர் தம் தோய்ந்த ஈடுபாடு எடுத்துச்சொல்லும் தரத்ததாம்.

## 16. முனைவர் வே.இரா.மாதவன் (மருத்துவச் சுவடிகள் பதிப்பு நெறிமுறைகள்)

இவர் வடார்க்காடுமாவட்டம் வேலூரில் 6.4.1952இல் பிறந்தவர். மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் தமிழ் முதுகலைப் பட்டமும், சென்னைப் பல்கலைக் கழகத்தில் இளங்கல்வியியல் (பி.எட்.) பட்டமும் பெற்றவர். தமிழ் மருத்துவச் சுவடிகளை முதன் முதலாக ஆய்வுசெய்து சென்னைப் பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்டமும் பெற்றவர். சித்த மருத்துவம், ஓவியம், சுவடியியல் ஆகியவற்றில் பட்டயங்களையும் பெற்றவர். சுவடியியலின் முதல் மாணவராகத் தேர்ச்சி பெற்றவர். பயின்ற நிறுவனமான உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் ஆறு ஆண்டுகள் பணியாற்றிய பின் 18.6.86 முதல் தமிழ்ப் பல்கலைக் கழக ஓலைச் சுவடித் துறையில் விரிவுரையாளராகப் பணியாற்றி வருகிறார். சுவடியியல் ஆய்விலும், இலக்கியம் மற்றும் மருத்துவச் சுவடிப் பதிப்பிலும் சிறப்புப்பயிற்சியும் ஈடுபாடும் கொண்ட இவரின் நூல்களும் ஆய்வுரைகளும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன.

## 17. முனைவர் சி.மூக்கரெட்டி (சோதிடச் சுவடிகளின் பதிப்புகள்)

இவர் திருச்சி மாவட்டம் மகாதேவி என்ற ஊரில் 12.5.1936இல் பிறந்தவர். வரலாற்றுத்துறையில் இளங்கலைப் பட்டத்தைச் சென்னைப் பல்கலைக் கழகத்திலும், முதுகலைப் பட்டத்தைத் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்திலும், முனைவர் பட்டத்தை மைசூர் பல்கலைக் கழகத்திலும் பெற்றவர். நூலகத்துறையில் இளங்கலைப் பட்டத்தைக் கேரளப்பல்கலைக் கழகத்திலும் பெற்றவர். 1957ஆம் ஆண்டுமுதல் திருச்சிராப் பள்ளிமாவட்டத்தில் ஆசிரியராகப் பணியாற்றிய பின் 1968 முதல் ஈரோடு வாசவி கல்லூரியில் நூலகராகப்பணியாற்றி வருகிறார். இவர் இலக்கியம், வரலாறு, பண்பாடு, தொல்லியல், கல்வெட்டியல் போன்ற துறைகளில் ஈடுபாடும் ஆய்வும்

கொண்டவர். இவர்தம் நூலும், ஆய்வுக் கட்டுரைகளும் மேற்கண்ட பொருள்களில் அமைந்து சிறக்கின்றன.

18. பேரா.கா.செ.செல்லமுத்து ( ஓலைச்சுவடியாய்வில் கணிப்பொறியின் பயன்பாடுகள்)

இவர் திருச்சி மாவட்டத்திலுள்ள காட்டுப்பாளையம் என்ற சிற்றூரில் 12.1.1956இல் பிறந்தவர். கோவை அரசு பொறியியல் கல்லூரியில் மின்னணுவியல் மற்றும் தொலை தொடர்புப் பொறியியலில் இளங்கலைப் படிப்பும் (பி.ஈ.ஆனர்சு), சென்னைப் பொறியியல் கல்லூரியில் (அண்ணா பல்கலைக் கழகம்) கணிப்பொறி அறிவியலில் முதுகலைப் பட்டமும் பெற்றவர். பங்களூரில் உள்ள இந்தியத் தொலைபேசி நிறுவனத்தில் ஓராண்டுத் திட்டப் பொறியாளராகவும் பின்னர் தனியார் கணிப்பொறி நிறுவனம் ஒன்றில் ஈராண்டுகள் ஆய்வுப் பொறியாளராகவும் பணியாற்றியவர். 1982 சூன் முதல் 1986 மே வரை தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் கணிப்பொறி அறிவியலில் இணைப்பேராசிரியராகவும் சூன் 1986 முதல் கணிப்பொறி அறிவியல் பேராசிரியராகவும் பணியாற்றி வருகிறார். கணிப்பொறியை மொழியாய்வுக்கும் மொழி வளத்துக்கும் எவ்வெவ்வாறு பயன்படுத்த முடியும் என்பதை நுணுகி ஆய்ந்து வரும் இவர் சுவடியியலுக்கும் அதைப் பயன்படுத்த முனைந்துள்ளார். கணிப்பொறிவழி வரிவடிவமாற்ற அமைப்பு, மொழிபெயர்ப்பு, இயற்கை மொழியாய்வு, மொழி கற்பித்தல் போன்ற துறைகளில் இவர் ஈடுபாடும் ஆய்வும் கொண்டவர். இவரது ஆய்வுநூல்களும் கட்டுரைகளும் இப்பொருளில் சிறப்பாகச் சொல்லத் தகுவன.

19. முனைவர் க.ப.அறவாணன் (பல்கலைக் கழகப் பாடநூல்களும் பதிப்பு முறைகளும்)

இவர் தஞ்சைமாவட்டம் கடலங்குடியில் 9.8.1941இல் பிறந்தவர். தமிழில் வித்துவான், பி.ஓ.எல் பட்டங்களை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும், முதுகலையைக் கேரளப் பல்கலைக் கழகத்திலும், எம்.லிட், மற்றும் முனைவர் பட்ட ஆய்வுகளைச் சென்னைப் பல்கலைக் கழகத்திலும் முடித்தவர். பிரஞ்சு, உருசிய மொழி, மொழியியல், கல்வெட்டியல்,

மானிடவியல் ஆகியவற்றில் பட்டயங்களும் சான்றிதழ்களும் பெற்றவர். சேவியர் கல்லூரி, பச்சையப்பன் கல்லூரி, இலயோலா கல்லூரி ஆகியவற்றில் பேராசிரியராகப் பணிபுரிந்த இவர், இன்று புதுவை மத்தியப் பல்கலைக் கழகத்தின் தமிழியல் துறைத் தலைவராகப் பணிபுரிந்து வருகிறார். தமிழியலின் பன்முகப்பட்ட பொருள்கள் அனைத்திலும் ஈடுபாடும் ஆய்வும் கொண்ட இவருடைய நூல்களும் ஆய்வுரைகளும் தரம் வாய்ந்த சிறப்புடையன என்றால் அது மிகையாகாது.

## 20. முனைவர் பெ.சின்னையன் (Publication of Historical Palm-leaf Records)

இவர் கோவையில் 12.1.1936இல் பிறந்தவர். வரலாற்றில் முதுகலைப் பட்டத்தையும், கல்வியியலில் முதுகலைப் பட்டத்தையும் சென்னைப் பல்கலைக் கழகத்தில் பெற்ற இவர், வேலூர் புரட்சியைச் சிறப்பாக ஆய்வு செய்து மைசூர்ப் பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்டத்தைப் பெற்றவர். ஈரோடு வாசவி கல்லூரியின் வரலாற்றுத் துறையில் பேராசிரியராகப் பணிபுரிந்த இவர் 1987 முதல் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் பதிவாளராகப் பணிபுரிந்து வருகிறார். கற்காலம், பிரிட்டிஷ் வரலாறு, தொல்லியல், அகழாய்வு, தமிழகத் தற்கால வரலாறு, பண்பாடு, சுவடியியல் ஆகியவற்றில் தோய்வும் ஆய்வும் கொண்டவர். இவரது தமிழ், ஆங்கில நூல்களும் ஆய்வுரைகளும் எடுத்துச் சொல்லும் சிறப்புடையன.

## 21. முனைவர் வி.முருகன் (A Descriptive Catalogue of the Tamil mss.)

ஆங்கில மொழியில் முதுகலையும் ஒப்பாய்வில் முனைவர் பட்டமும் பெற்ற இவர், திருவான்மியூர் ஆசியவியல்கல்விக் கழகத்தில் ஆங்கில இணைப் பேராசிரியராகப் பணிபுரிந்து வருகிறார். மொழியியல், ஒப்பாய்வு, சுவடியியல் போன்றவற்றில் ஆய்வும் ஈடுபாடும் கொண்ட இவர், சுவடி விளக்க அட்டவணையை உருவாக்குவதிலும், ஆய்வுக் கட்டுரைகள் வழங்குவதிலும் ஈடுபட்டுள்ளார் (இவரைப் பற்றிய பிற குறிப்புகள் இப்பகுதி, அச்சாகும் வரை கிடைக்கவில்லை).

## நன்றியுரை

இக்கருத்தரங்கக் கட்டுரைத்தொகுப்பிற்கும், இதை மலர்விப்பதற்கு அடிப்படையாய் அமைந்த கருத்தரங்குக்கும் மூலகாரணமாய் விளங்குபவர் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் மாண்புநிறை முனைவர் ச.அகத்தியலிங்கம் அவர்களேயாவர். இப்பொருளில் கருத்தரங்கை நடத்த வேண்டும்-இத்துறையில் ஈடுபாடு கொண்ட அறிஞர் பெருமக்களை அழைத்து, ஆய்வுரை பெறுதல் வேண்டும் என்று ஆணை வழங்கியதோடு அடிக்கடி உசாவியறிந்து ஊக்கப் படுத்தியமையை நன்றியோடு நான் நினைத்துப் பார்க்கிறேன். அவர்கள் துறைப்பணிகளில் கருத்தரங்கப் பணியையும் ஒன்றாக்கி உரமூட்டினார்கள். இக்கருத்தரங்கு வெற்றியுடன் நிறைவுபெறுவதற்குரிய அனைத்துப் பணிகளிலும் தம் கவனத்தைச் செலுத்தி ஒத்துழைத்தார்கள்.

'இவ்வாண்டு ஓலைச் சுவடித்துறை என்ன கருத்தரங்கை நடத்தப் போகிறது? சென்ற ஆண்டு நடந்த கருத்தரங்கின் கட்டுரைகளை என்ன செய்தீர்கள்? அதை நுண்ணாய்வு செய்து வெளிப்படுத்த வேண்டாமா? இத்துறையில் துறைபோய அறிஞர் பெருமக்களின் ஆய்வுரைகளை வெளிப்படுத்தினால்தானே கருத்தரங்கின் நோக்கம் முழுமைபெறும், கட்டுரைகளைக்கூட சென்ற கருத்தரங்கத்திலேயே தொகுத்து வெளியிட்டீர்களே, அதை அச்சிட்டு இந்தக் கருத்தரங்கில் வெளியிடலாமே' என்று ஊக்கப்படுத்தினார்கள். அதை நுண்ணாய்வு செய்து வெளிப்படுத்துவதற்குரிய காலம் போதாதே. இன்னும் இருவாரங்களில் இவ்வாண்டைய கருத்தரங்கின் தொடக்க விழா நடத்தத் திட்டமிட்டு விட்டோமே ... இது முடிகின்ற பணிதானா? என்று நான் ஐயுற்றுக் கவன்றபோது -' வெளியிடவேண்டும் என்றால் உடனே ஒரு வாரத்திலே கூட வெளியிடமுடியும் - பணத்தைப் பற்றிய கவலை வேண்டாம். நல்ல கட்டுரைகள் என்றால் உடனே வெளிப்படுத்திவிடுவோம். நுண்ணாய்வு செய்வதற்கு நேரே சென்று வாருங்கள், அச்சகத்தை உடனே ஏற்பாடு செய்யுங்கள் என்று நெறிப்படுத்தியதோடு, எல்லாவற்றுக்கும் உடனுக்குடன் இசைவாணைகள் வழங்கி, அச்சுப் பணியை விரைவுபடுத்தினார்கள்.

அவர்தம் ஊக்கவுரையாலும் ஆக்கவுரையாலுமே இம்மலர், இன்று அச்சு வடிவில் உலவுகிறது. எனவே, மாண்புநிறை துணை வேந்தர் அவர்களுக்கு நான் முதற்கண், பெரிதும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

கருத்தரங்கப் பொருள் மற்றும் அமைப்பைப் பதிவாளர் திருமிகு பேராசிரியர் பெ.சின்னையன் அவர்களிடம் விவாதித்து நெறிப்படுத்த வேண்டியபோது, வரலாற்றில் துறைபோய அவர்கள், தாமே ஒரு கட்டுரையளிப்பதாக உற்சாகப் படுத்தினார்கள். சொல்லியவண்ணம், ஆங்கிலத்தில், அழகிய கட்டுரையொன்றைப் பல்வேறு வகைப்பட்ட தம் அலுவல் பொறுப்புகளுக்கிடையேயும் உருளச்சு வடிவிலேயே வழங்கி ஊக்கப்படுத்தினார்கள். அன்று, கருத்தரங்க ஏற்பாடுகளில் பல்லாற்றானும் துணைநின்று சிறப்பித்ததுபோலவே, இன்றும், இக்கட்டுரைகள், நூல்வடிவில் வெளிவருவதற்குரிய அனைத்துப் பணிகளிலும் ஆக்கமும் ஊக்கமும் வழங்கித் துணை நின்றார்கள். அவர்களுக்கும் நன்றி பாராட்டுவது, என் கடமையும் பொறுப்புமாகும் என்று உணர்கின்றேன்.

தஞ்சைத் தொகுதி சட்டமன்ற உறுப்பினரும், தமிழ்ப் பல்கலைக்கழக ஆட்சிக்குழு உறுப்பினருமான திருமிகு எஸ்.என்.எம்.உபயதுல்லா அவர்கள், பழமையைப் போற்றிப் பாதுகாக்கவேண்டும் என்னும் வேட்கையில் சிறந்து விளங்குபவராவர். அவர்களை, இவ்வாண்டு நடைபெறும் கருத்தரங்கத்திற்கு வாழ்த்துரை வழங்க வருதல் வேண்டும் என்று வேண்டியபோது-கருத்தரங்க நடைமுறை-கட்டுரை வெளியீடுகள் ஆகியவற்றை ஆர்வமுடன் கேட்டறிந்து, சென்ற ஆண்டுக் கருத்தரங்கக் கட்டுரைகளை அச்சிட்டு வெளியிடலாமே என்று ஊக்கப்படுத்தினார்கள். அவர்தம் ஊக்கமே, மாண்புநிறை துணைவேந்தர் அவர்களிடம் விரைவில் செயல்வடிவம் கொண்டது. அவர்கள் அத்துடன் நில்லாமல், ஓலைச் சுவடித்துறையின் பணிகளை ஊக்கப்படுத்தும் வண்ணம் ரூ.12000/- அளவில் அறக்கட்டளை ஒன்றை நிறுவினார்கள். எனவே, தஞ்சைத் தொகுதி சட்டமன்ற உறுப்பினர் திருமிகு எஸ்.என்.எம்.உபயதுல்லா அவர்களுக்கு நன்றி பாராட்டுவதை என் உரிமையும் கடமையுமாகக் கருதி மகிழ்கின்றேன்.

அவ்வாறே அலுவலக நடைமுறைப் பணிகளில் துணைநின்ற துணைப் பதிவாளர், நிதி அலுவலர், கணக்கு அலுவலர் மற்றுமுள்ள அலுவலர் அனைவர்க்கும் தனிப்பட்டமுறையிலும், துறை சார்பாகவும் நன்றி பாராட்டுகின்றேன்.

ஓலைச்சுவடித்துறை கருத்தரங்கு நடத்துகின்றது என்பதையறிந்து உடனே, நெஞ்சார வரவேற்றுக் கடிதம் வழியாக, அவ்வப்போது கட்டுரைகள் குறித்து வினவி ஊக்கப்படுத்தியதுடன், தம் கட்டுரையை உடனே அனுப்பித் துணைபுரிந்தவர் முன்னாள் சுவடிப்புலத்தலைவரும், ஓலைச்சுவடித்துறையின் தலைவருமான பேராசிரியர் மு.சண்முகம்பிள்ளையாவார். சுவடியியலில் நெடுநாளைய பட்டறிவைக் கொண்ட அவர்தம் வழிகாட்டுதல் அனைத்துக்கும் நான் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

இக்கட்டுரை மலருக்கு இன்றியமையாத இதழ்களாக விளங்குபவர்கள் கட்டுரை வழங்கிய ஆய்வாளர்களாவர். அவர்களின் ஒத்துழைப்பு இல்லையேல் கட்டுரை ஏது?கட்டுரை மலர் ஏது? அவர்கள், தம் பல்வேறு பணிகளுக்கிடையில்-ஓலைச்சுவடித்துறையின்பால், சுவடியின்பால் கொண்ட ஈடுபாட்டினால் அரிதின் முயன்று ஆய்வுரைகளை வழங்கி, இம்மலரைப் பொருளுடையதாக ஆக்கியுள்ளார்கள். அவர்கள் அனைவருக்கும்-அறிஞர் மு.கோ.இராமன், அறிஞர் தி.வே.கோபாலையர், முனைவர் அ.நா.பெருமாள், புலவர் இரா. இளங்குமரன், முனைவர் ம்.இராசேந்திரன், பேரா.கா.செ.செல்லமுத்து, புலவர் செ.இராசு, முனைவர் சி.மூக்கரெட்டி, புலவர் வீ.சொக்கலிங்கம், பேரா.ச.பாலசுந்தரம், செல்வி.ந.விசாலாட்சி, முனைவர் வி.முருகன் ஆகிய அனைவர்க்கும் என் நன்றி உரியதாகும்.

சென்னைப் பல்கலைக்கழகப் பேராசிரியர் இ.சுந்தரமூர்த்தியவர்கள் அரிய ஆய்வுரை வழங்கித் துணை புரிந்தோடு-கால நெருக்கடியிலும், இம்மலரை முழுமையாக நுண்ணாய்வு செய்து வழங்கிச் சிறப்பித்தார்கள். அவர்களின் அரிய துணைக்கும் வாழ்த்துக்கும் என் நன்றி உரியது.

கருத்தரங்கில் அமர்வுத் தலைமையேற்று அரிய தலைமைப்பொழிவுகளை வழங்கிச் சிறப்பித்த சுவடிப் புலத்தலைவர் பேரா.எ.சுப்பராயலு, மொழிப் புலத் தலைவர் பேரா.சோ.ந.கந்தசாமி, அரிய கையெழுத்துச் சுவடித்துறை பேரா.ப.சுப்பிரமணியன் ஆகியோர்க்கும் என் நன்றி உரியது.

எல்லாப் பணிகளிலும் என்னுடன் துணைநின்று அரிய கட்டுரைகளை வழங்கியதுடன் காலநேரம் பாராமல் முகம் கோணாமல் உழைத்து நின்றவர்கள் ஓலைச்சுவடித்துறை அன்பர்களாவர். அவ்வப்போது கட்டுரைகளை உற்று நோக்கியும் தட்டச்சுப்படிகளை, உருளச்சுப்படிகளைத் திருத்தியும், இன்று, அச்சுப் படிகளை உற்றுநோக்கித் திருத்தியும் பெரிதும் துணைநின்ற முனைவர் வே.இரா.மாதவன், முனைவர் சா.கிருட்டிணமூர்த்தி, புலவர் ப.வெ.நாகராசன், திரு.சி.இலட்சுமணன், புலவர் வீ.சொக்கலிங்கம் ஆகிய அனைவர்க்கும் நான் பெரிதும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன். குறிப்பாக, முனைவர் சா.கிருட்டிணமூர்த்தி அவர்கள் கருத்தரங்க அமர்வுச் சிந்தனைகளைத் தொகுத்ததுடன், அச்சுப்பணிகளுக்காக இரவு பகலாகப் புதுக்கோட்டையிலேயே தங்கிப் பணிபுரிந்தார்கள். புலவர் ப. வெ. நாகராசன் அவர்கள் சொல்லடைவைத் தொகுத்து வழங்கினார்கள். இவர்கள் அனைவருடைய கடின உழைப்பின் காரணமாகவே, இந்நூல் இவ்வளவு விரைவில் வெளிவருகிறது.

கட்டுரைகளை உரிய காலத்தில் தட்டச்சு செய்துதவிய திருமதி கலைச்செல்வி, செல்வி நா.பாரதி, திருமதி கலாவதி ஆகியோர்க்கும் என் நன்றியுரியது.

இவ்வளவு முயற்சியும் துணையும் முழுவெற்றி பெறும்முகத்தான்-கால நெருக்கடியிலும் இம்மலரைச் சிறப்பாகக் கணிப்பொறி மூலம் அச்சடித்து வழங்கினர் புதுக்கோட்டை சர்மா சானடோரியம் அச்சகத்தினர். அவர்தம் ஒத்துழைப்பு பாராட்டுக்குரியது. அவர்களுக்கும் என் நன்றி உரியது.

ஆய்வுக்கு நெறிமுறைகளை வகுப்பது என்பது நிறைவுபெற்று விடமுடியாது. காலமும் மொழியறிவும் பெருகப்பெருக, நெறிமுறைகளும் புதிதுபுதிதாக வளருந் தன்மையுடையன. இந்த வகையில் சுவடிப்பதிப்பு நெறிமுறைகள் என்னும் இந்நூல், சுவடியியல் முழுவதையும் கூறிவிட்டதாகக் கூறமுடியாது; என்றாலும் சுவடியியலுக்கு ஓர் அறிமுகமாக, திறவுகோலாக விளங்கும் என்பதில் ஐயமில்லை. இத்திறவுகோலை

அடிப்படையாகக்கொண்டு சுவடியியல் பற்றிய நுணுக்கமான செய்திகள் பலவற்றை மேலும் இத்துறை அறிஞர்கள் வெளிப்படுத்தவேண்டும். அறிமுகநிலையில் உள்ள இந்நூல், மாணாக்கர், சுவடி ஆய்வோர், சுவடி ஆர்வலர், மொழி ஆர்வலர் போன்ற அனைவர்க்கும் பெரிதும் பயனுடையதாக விளங்கும் என்னும் நம்பிக்கை பெரிதுடையேன்.

இந்நூலில் காணப்படும் குறைகளையும் இனி மேற் கொள்ளப்படவேண்டிய திருத்தங்களையும், இணைத்து வளப்படுத்தவேண்டிய கருத்துகளையும் அறிஞர் உலகு சுட்டிக் காட்டி வாழ்த்துமேல், அவர்களுக்கெல்லாம் பெரிதும் நன்றி பாராட்டும் கடப்பாடுடையேன் ஆவேன்.

இக்கருத்தரங்க மலர் இனிதே வெளிவரத் தோன்றாத்துணையாய் அருள் பாலித்த திருவருளை எண்ணி வியக்கின்றேன்; வாழ்த்துகின்றேன்.

தொழுது தூமலர் தூவித் துதித்துநின்று
அழுது காமுற்று அரற்றுகின் றாரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதும் கீழ்கணக் கின்னம்பர் ஈசனே'

- அப்பர்

பதிப்பு நெறிநின்று சுவடியாய்ந்து தமிழ்வளம் காக்கும் அறிஞர் பலர், நம் தமிழன்னைக்கு வாய்ப்பார்களாக.

தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
*10.3.1989.*

த.கோ.பரமசிவம்

# தமிழ்ச் சுவடிகள்-பயிற்சியும் பதிப்பும்

மு.கோ. இராமன்

உலகின் புறஇருளை நீக்குவது வெம்மையான கதிரவனும், அகவிருளை நீக்குவது ஒப்பற்ற தண்தமிழுமாகும். இக்கருத்தை,

"ஓங்கல் இடைவந்து உயர்ந்தோர் தொழவிளங்கி
ஈங்கொலிநீர் ஞாலத்து இருள்கடியும்-ஆங்கவற்றுள்
மின்னேர் தனிஆழி வெங்கதிர்ஒன்று ஏனையது
தன்னேர் இலாத தமிழ்"

என்ற பழைய பாடல் விளக்கி நிற்கின்றது. உலகிற் சூரியன்போல் மக்கள் அகத்தில் ஒளிர்வது தமிழ் எனப் பேசப் பெறுவதால் மனிதன் நாகரிகம் பெற்றுப் பேசமுயன்ற போது தோன்றிய பழைய மொழிகளுள் தமிழ் ஒன்று என்பதுணரலாகும்.

## மொழியின் தோற்றம்

ஆதியில் மனிதன் தன் உணர்ச்சிகளைச் சைகைமூலம் வெளிப்படுத்தினான். அந்தப் பேச்சு அவர்கள் சூழ்நிலை, தட்பவெப்ப நிலைக்கேற்ப ஒலிவடிவம் பெற்றது. இவ்விதம் ஒலிவடிவம் பெற்ற மொழி பின்னர் வரிவடிவம் பெற்றது. வரிவடிவம் பெற்றமையால் மொழி பல இடங்களுக்கும் பல காலத்துக்கும் பரவ வாய்ப்பேற்பட்டது.

## எழுத்தின் தோற்றம்

முதலில் மக்கள் வரிவடிவத்தில் தங்கள் கருத்துக்களைக் கூறச் சித்திரங்களையே பயன்படுத்தினர். சிந்துவெளி நாகரிகத்தின் அகழ்வாய்வுகளில் இந்தச் சித்திரவடிவக் கருத்துக்களே காணப்படுகின்றன. மக்கள் தங்கள் கருத்துக்களை வரைய முதலில் ஈரக்களிமண்ணைப் பயன்படுத்திப் பின்னர்

அதைச் சுட்டுப் பாதுகாத்தனர். பானை ஓடுகளிலும் இவ்விதம் எழுதிவந்ததை ஆதிச்சநல்லூர் முதுமக்கள் தாழிகளின் மூலம் உணரமுடிந்தது. பின்னர் எழுத்துமுறை உருவாகித் தம் கருத்தை இலைகளிலும், தாழைமடல்களிலும் பனையோலைகளிலும் வரைய முற்பட்டனர்.

ஆதியில் தமிழ் எழுத்துக்கள் எவ்விதம் எப்போது உருப்பெற்றன என்பது கூற இயலவில்லை. பிராம்மி எழுத்தே தமிழுக்குரிய எழுத்தாக இருந்தது எனவும் "தமிழி பிராம்மி" எனத் தனியே எழுத்துமுறை இருந்தது எனவும் ஆராய்ச்சியாளர்கள் இன்றும் வாதிடுகின்றனர். இவை யாவும் கி. மு. இரண்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட செய்தியாகும். கி. மு. இரண்டாம் நூற்றாண்டிலிருந்து தமிழ்மொழி வரிவடிவம் எவ்விதம் உருப்பெற்றது என்பதைத் திரு. சா. கணேசன் அவர்கள் இரண்டாம் உலகத் தமிழ் மகாநாட்டில் வெளியிட்ட கையேட்டில் பட்டியலிட்டுக் காட்டியுள்ளார். இவ்வெழுத்துக்கள் யாவும் கல்வெட்டுக்கள் மூலம் அறிந்தவையாகும்.

### தமிழ்மொழி வரையப் பயன்பட்டது ஓலைச்சுவடியும் எழுத்தாணியுமே

ஆதி காலத்தில் தமிழ் மொழியை வரிவடிவத்தில் மனிதர் எப்படி, எதில் வரைந்துவந்தனர் என்பது தெளிவாக அறியக்கூடவில்லை. தமிழில் தோன்றியுள்ள பழந்தமிழ்ச் சங்க இலக்கியங்களில் இதுபற்றிய குறிப்புகள் காணப்பெறவில்லை. இதழ், ஏடு, மடல் எனப்பெறும் தாழை, பனை ஓலை போன்றவைகளில் எழுத்தாணி கொண்டு எழுதி வந்திருக்கவேண்டும் என்றே கருதவேண்டியுள்ளது.

அகத்துறையில் மடலூர்தல் என்ற துறை இதற்குச் சான்றாக அமைகின்றது. பனை மட்டைகளால் செய்யப் பெற்ற குதிரையில் கைக்கிளைத் தலைவன் தன் காதலியின் உருவத்தை மடலில் வரைந்து தன் ஒருதலைக் காதலை ஊரார் அறியும்படி எடுத்துக்கொண்டு ஊர்ந்து வருவதாக இத்துறை அமைந்துள்ளது. மொழி எழுத்துவடிவம் பெறுவதற்கு முன்னமேயே எண்ணங்களை மனிதன் சித்திர வாயிலாகப் புலப்படுத்தி வந்தமைக்கும் அதற்கு மடல் (ஏடு) பயன்படுத்தப்பெற்றமைக்கும் சான்றாக இது அமைகின்றது.

பல ஏடுகளில் தங்கள் எண்ணத்தின் சுவடாகிய எழுத்துக்கள் பதிக்கப்பெற்றமையால், ஏட்டுச்சுவடி என இத்தொகுப்புக்கள் கூறப்பெற்றன. பல சுவடிகளைச் சேர்த்துக்

கயிற்றில் கட்டித் தொங்கவிட்டமையால், "தூக்கு" என்ற பெயரும் சுவடிகள் பெற்றன. இவற்றைச் "சுவடித்தூக்கு" என்பர். பண்டைய காலத்தில் காலமெல்லாம் நினைந்து பாதுகாக்கப் பெறவேண்டிய கருத்துக்களையெல்லாம் பாடல் வடிவில் எழுதிச் சுவடிகளில் கட்டித் தூக்கி வந்தமையால் காலப்போக்கில் பாட்டே "தூக்கு" என்றும் கூறப்பெற்றதென ஊகிக்கலாம். பலவகைச் செய்திகளும் ஓலையில் எழுதப்பெற்றுக் கட்டி முடக்கிவைக்கப் பெற்றமையால், இவை "முடங்கல்" எனவும் கூறப்பெற்றன. தூக்கு, முடங்கல் என்ற சொல்லாட்சிகள் சங்க இலக்கியங்களில் பயிலக் காணலாமாயினும் இவை நேரிடையாக ஓலைச்சுவடியைக் குறிப்பனவாக அமையவில்லை.

பலவகைச் செய்திகளும் ஆணைகளும் பனை ஓலையில் வரையப் பெற்றுத் தற்காலக் கோப்புக்கள் போல வரிசையாகக் கயிற்றில் கோத்துச் சுருட்டிவைப்பதால் அவை "சுருணை" எனவும், பல செய்திகள் திரட்டி வைக்கப் பெற்றமையால் "திரட்டு" எனவும் கூறப்பெற்றன. இன்றும் இவ்வழக்கைத் திருவனந்தபுரம் ஆவணக் காப்பகத்தில் காணலாம்.

சங்கப் புலவர்களில் ஒருவராகக் கருதப் பெறுபவர் இடைக்காடனார். இவர் பாடல்கள் அகநானூற்றிலும், புறநானூற்றிலும் தொகுக்கப் பெற்றுள்ளன. அகத்தில் முறையே 139, 194, 274, 284, 304, 374 என்ற எண்ணுள்ள பாடல்களும், புறத்தில் 42ஆம் எண்ணுள்ள பாடலும் இவர் இயற்றியனவாகும். 'கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக் குறுகத் தரித்த குறள்' என்ற திருவள்ளுவமாலைப் பாடலும் இடைக்காடனார் இயற்றியதாகக் கூறப்பெறுகின்றது. திரு. மு. இராகவையங்கார் பதித்த பெருந்தொகையில் இடைக்காடர் பாடிய ஊசிமுறிப்பாட்டு என மூன்று பாடல்களுள்ளன (பக். 327). இப்பாடலின் பெயரைக் கொண்டே இவை ஊசி (எழுத்தாணி)யால் வரையமுடியாத ஒலிக்குறிப்புக்களைக் கொண்ட பாடல்கள் என்பது விளங்கும். யாழில் இசைக்க இயலாதவகையில் திருஞானசம்பந்தர் பாடிய பதிகம் யாழ்முறி யாகும். இடைக்காடர் ஊசிமுறிப் பாடல் பாடியது பற்றிக் கதையும் உள்ளது. இதிலிருந்து சங்க காலத்திலேயே ஏட்டில் எழுத்தாணி கொண்டு எழுதும் பழக்கம் தமிழர்களிடை நிலவி வந்துள்ளதை உணரலாம்.

திருஞானசம்பந்தர் மதுரையில் சமணர்களுடன் அனல்வாதம் புனல்வாதம் செய்தபோது தம் தேவாரப் பாடல் எழுதிய ஓலையை அனலிலிட்டபோது, அது எரியாமலிருந்தது எனவும், வேறொரு பாடலை வைகையிலிட்டபோது அது ஆற்றின்

போக்கை எதிர்த்துச் சென்றதாகவும் வரலாறு கூறுகின்றது. அவ்விதம் எதிர்த்துச் சென்ற ஏடு கரை ஒதுங்கிய இடமே "திருஏடகம்" என்ற தலமாக இன்றும் விளங்குகின்றது. இச்செய்தியை நால்வர் நான்மணி மாலையில்.

"ஏடேறப் பால்குறைந்த தென்றமுவ ரேகமுவின்
காடேறப் புக்கஅருகர்"

எனச் சிவப்பிரகாச சுவாமிகள் நயம்பட நவின்றுள்ளார்.

திருவாரூரில் 10-ஆம் நூற்றாண்டில் ஆண்ட ராஜராஜன் அபயகுலசேகரன் அவையில் சிலர் பாடிய தேவாரப் பாடல்களின் சுவையில் ஈடுபட்டுத் தேவாரம் முழுமையும் தேடிப் பாதுகாக்க வேண்டுமென்ற கருத்துள்ளவனாகித் திருநாரையூர் நம்பி மூலம் பொள்ளாப் பிள்ளையார் திருவருளால் திருமுறை ஏடுகளைத் தேடிக் கண்டுபிடித்தார். அப்படித் தேடி கண்டுபிடித்தபோதே பல சுவடிகள் செல் பற்றி அழிந்துவிட, மீதியிருந்தவற்றைப் பாதுகாத்துப் பின்னர்த் திருமுறைகள் அமைத்ததாகத் திருமுறை கண்ட புராணம் கூறுகிறது.

ஏட்டில் எழுதிப் பிரதி செய்து வரும் பழக்கம் தொன்றுதொட்டு வழங்கிய போதிலும் ஏடுகளை நீண்டகாலம் பாதுகாக்க முடியாமையால் சில முக்கியமான வரலாற்றுச் செய்திகளைச் செப்புத் தகட்டிற் பொறித்துப் பாதுகாத்தனர். பனை ஏட்டில் எழுதும் பழக்கமே மிகுதியாக இருந்தமையால் எழுதப் பயன்படுத்திய செப்புத் தகடுகளையும் செப்பேடுஎன்றே குறிப்பிடல் பழக்கமாகிவிட்டது. 'சின்னமனூர்ச் செப்பேடு, அன்பிற் செப்பேடு போல்வன இதற்குச் சான்றாகும்.

'பாடம் ஏறினும் ஏடது கைவிடேல்' என்ற பழமொழியும் நம்நாட்டில் புழங்கிவருகிறது. பிற்காலத்தில் அந்தகக் கவி வீரராகவரும்,

"ஏடாயிரம் கோடி எழுதாது தன்மனத்து
எழுதிப் படித்த விரகன்"

எனக் குறிப்பிட்டுள்ளார்.

## ஏட்டுச் சுவடிகளின் பெருக்கம்

பண்டு தொட்டு ஏட்டில் செய்திகளும், இலக்கிய, இலக்கணம், மருத்துவம் போன்ற நூல்களுமெல்லாம் பிரதிசெய்துவரல் பழக்கமாக இருந்ததாயினும் ஏடுகள் எவ்வளவு

நல்லமுறையில் பாதுகாக்கப் பெற்றாலும், சுமார் 400 ஆண்டுகட்குமேல் அவை இருப்பதில்லை. எனவே, அவ்வப்போது பழைய சுவடிகளைப் பிரதி செய்து மக்கள் பாதுகாத்தனர். மொழியின் வரிவடிவ மாறுதல்களுக்கேற்ப இந்தப் பிரதிகளும் மாறுதலடைந்த எழுத்துக்களாலேயே வரையப் பெற்றன.

சங்க இலக்கியங்களும் பண்டைக் காப்பியங்களும், தொல்காப்பியமும், திருக்குறளும் தோன்றிய காலத் தமிழ் மொழிக்குரிய வடிவில் அவை கிடைக்கப்பெறின், இப்போது அவற்றைப் படித்தறிதல் மிகவும் அரிதாக இருக்கும். அவைபற்றி உணர நமக்குக் கல்வெட்டுக்களே சான்றாக உள்ளன. 'கல்வெட்டில் திருக்குறள்' என்ற நூலின் ஆசிரியர் காலந்தோறும் தோன்றிய கல்வெட்டு எழுத்துமுறைகளைக் கொண்டு அவ்வக் காலங்களில் திருக்குறள் இன்னவாறு இருந்திருக்கும் எனக் கற்பனை செய்து வெளியிட்டுள்ளார். தற்கால வரிவடிவத்தையே அறிந்துள்ள நமக்கு அவை சீன, ஜப்பானிய மொழி போன்று தோன்றுகின்றன.

காலந்தோறும் மாறுபடும் வரிவடிவத்துக்கு ஏற்ப நூல்களை, ஏட்டில் பெயர்த்தெழுதிப் பயின்று மக்கள் பாதுகாத்து வந்தனர். பக்தி இலக்கியங்களின்பாலுள்ள பக்தியால், அவற்றைப் பிரதிசெய்து பூசித்தும் வந்தனர். இவ்வாறு பிரதிசெய்யப்பெற்ற ஏடுகள், காலந்தோறும், இடந்தோறும் உள்ள மாறுதல்களுக்கேற்ப வடிவம் பெற்றுப் பல்கிப் பெருகலாயின.

## ஏட்டில் எழுதும் முறை

ஏட்டில் எழுத்தாணியால் எழுத மக்கள் சிலமுறைகளை மேற்கொண்டனர். ஏடுகளில் இருபக்கமும் எழுதுவதால் புள்ளியிடுவதைத் தவிர்த்தனர். எழுத்து வடிவத்தையும் பிறமொழிகள்போலச் செங்குத்துவசமாகவோ, நேர்கோட்டு வசமாகவோ அமைக்காமல் சாய்வு நிலையிலும், வட்டநிலையிலும் அமைத்தனர். இவற்றால் ஏடு முறிவினின்றும் பாதுகாப்புப் பெற்றது. மேலும் எகர, ஒகர, உயிர்மெய் எழுத்துக்களில் குறிலையும் நெடிலையும் ஒன்றாகவே அமைத்தனர். இடையின 'ர'வுக்கும், 'காலு'க்கும் வேறுபாடு உணரமுடியாது. இதுபற்றி டாக்டர் உ. வே. சாமிநாதையர் 'என் சரித்திரத்தில்'.

> "இது கொம்பு, இது சுழி என்று வேறுபிரித்து அறியமுடியாது. மெய்யெழுத்துக்களுக்குப் புள்ளியே இராது. ரகரத்துக்கும் காலுக்கும் வேற்றுமை தெரியாது. சாபம் சரபமாகத் தோற்றும். ஒரிடத்தில் "சரடு" என வந்திருந்தது. அந்த வார்த்தையைப்

பலகாலம் "சாடு" என்றே எண்ணிவந்தேன். "தரன்" என்பதைத் "தான்" என்று நினைத்தேன். இடையின 'ர'கரத்துக்கும், வல்லின 'ற' கரத்துக்கும் பேதம் தெரியாமல் மயங்கின இடங்கள் பல.[10]

என வரைந்துள்ளார்.

## பிரதிசெய்வதில் பிழைமலியும் வாய்ப்பு

ஏட்டுச்சுவடிகள் காலந்தோறும் ஏற்பட்ட மொழியின் வரிவடிவ மாற்றம் பெற்றுப் பிரதிசெய்யப் பெற்றுப் பரவிவந்தாலும், இவற்றைப் பிரதி செய்பவர்கள் பல்வேறு நிலையில், பல்வேறு இடங்களில் பிரதிசெய்யும்போது, வடிவ வேறுபாடுகளும் பாடபேதங்களும், பிழைகளும் மலியச் செய்துவிட்டனர்.

15-ஆம் நூற்றாண்டுக்கு முன்னர் ஒரு இலக்கியம் தோன்றிய காலத்து எழுதப்பெற்ற சுவடிகள் இப்போது கிடைப்பதற்கு வாய்ப்பில்லை. சுவடிகள் 300-400 ஆண்டுகளுக்கு மேல் அழியாமலிருப்பதில்லை. அப்படி ஏதேனும் கிடைப்பதாக இருந்தாலும், அவை தோன்றிய காலத்து வரிவடிவம் (எழுத்து வடிவம்) வேறாக இருக்கும். எனவே, காலந்தோறும் ஏற்பட்ட மாறுபாடுகளுக்கேற்பத் தமிழ்நூல்களை ஏடுகளில் பெயர்த்து எழுதியே பாதுகாத்துப் பயின்று வந்தனர். இப்போதுள்ள அச்சுமுறைபோல ஆயிரக்கணக்கில் பிரதி செய்யும் முறை பண்டு இல்லாததால் சுவடிப் பிரதிகள் ஒருசில கல்வி நிலையங்களிலும், மாடாலயங்களிலும் புலவர்களின் வீடுகளிலுமே இருந்தன. பிரதிசெய்தலின் அருமை கருதித் தமிழ் நூல்கள் பலவும் மனப்பாடம் செய்து உள்ளக்கிழியில் எழுதிவைப்பதற்கு வாய்ப்பாகச் செய்யுளிலேயே அமைந்தன. உரையாசிரியர்கள் உரைநடையும், கல்வெட்டுச் செய்திகளும், அரசாணைகளும், மெய்க்கீர்த்திகளும் கூட ஒருவகைச் சந்தத்தில் மனப்பாடம் செய்ய ஏற்றவகையில் அமைந்திருந்தன.

16 ஆம் நூற்றாண்டுக்குப் பிற்பட்ட சுவடிகளே இப்போது நமக்குக் கிடைக்கின்றன. அவற்றின் வரிவடிவத்தில் இப்போது பெரிதும் மாறுபாடுகளில்லை. 18 ஆம் நூற்றாண்டில் வீரமாமுனிவரும், 20 ஆம் நூற்றாண்டில் பெரியார் ஈ. வே. ரா. வைப் பின்பற்றித் தமிழக அரசும் செய்த சிறிய மாறுபாடுகள்தான் உள்ளன. குறில் நெடில் மாறுதல்களையும் பிற வேறுபாடுகளையும் உணர யாப்பு இலக்கணமும், சந்தமும் மிகவும் இன்றியமையாததாக உள்ளது. இவை தெரியாமல் ஏட்டைப் பிரதிசெய்வது பல பிழைகள் தோன்ற ஏதுவாகின்றது.

ஏட்டில் பிரதி செய்து நூற்களைப் பாதுகாக்கப் பலமுறைகளையும் மக்கள் கையாண்டனர். படிக்கும் மாணாக்கர்கள் தங்கள் தேவைக்கேற்பச் சுவடியில் நூலைப் பெயர்த்தெழுதினர். இம்முறையில் ஒருவர் படிக்கப் பலர் அதைக்கேட்டு எழுதும் பழக்கமும் இருந்தது. இதனால் , ஒரே சமயத்தில் பல பிரதிகள் கிடைக்க வாய்ப்பு ஏற்பட்டது. இந்தக் கேட்டெழுதும் முறையில் எழுதுபவர் கவனக்குறைவாலும், அறியாமையாலும், கேட்கும் சக்திக் கேற்பவும் ஏட்டில் பலவகைப் பிரதிபேதங்களும் பிழைகளும் ஏற்படலாயின.

பக்தி இலக்கியங்களைப் பெயர்த்தெழுதுவதற்குப் பல ஆலயங்களிலும், மடங்களிலும் மானியம் வழங்கியதாகத் தெரிகின்றது. நாஞ்சில் நாட்டிலும், கேரள மாநிலத்தில் பாலக்காட்டைச் சார்ந்த சில பகுதிகளிலும் கம்பராமாயணத்தைப் பெயர்த்தெழுத மானியங்கள் இருந்தன என்று கூறப்பெறுகின்றது. எனவே நூல்களின் தன்மைக்கேற்பக் கூலி கொடுத்து எழுதும் முறையும் இருந்ததை உணரலாம். கூலிக்குப் பிரதிசெய்பவர்கள் சிறந்த மொழிப்புலமை இல்லாதவராகவும் எழுத்துக்கூலியே வயிற்றுப் பிழைப்பாக உள்ளவராகவும் இருந்தமையால் இவ்வளவு சுவடி எழுதினால் இவ்வளவு கூலி என்ற நினைப்பைக் கொண்டு விரைவாகப் பிரதி செய்தமையால் இம் மாதிரிப் பிரதிகளில் பலவகையான பிழைகள் மலிந்திருந்தன. மேலும் வட்டாரங்களுக்கேற்பப் பேச்சின் ஒலி மாறுபாட்டால் அவையும் ஏட்டில் ஏறிவிட்டன. தென்பாண்டி நாட்டில் பேச்சு வழக்கில் ‘ழ’கரம், ‘ள’ கரமாகவே ஒலிக்கப்பெறும். ஆயினும் எழுதும்போது “வெளுத்து” என்பதை “வெழுத்து“ எனவும், “வாழி” என்பதை “வாளி“ எனவும் சகஜமாக எழுதுவர். “அளித்து” என்ற சொல் “அழித்து“ என்றே காணப்பெறும். இந்த முறையை அறியாத பிற இடங்களைச் சேர்ந்தவர்கள் பிழையாகப் பொருள்கூறும் வாய்ப்புகளும் உள்ளன.

## பிற்காலத்தில் தமிழ்மொழிப் பயிற்சி குன்றல்

சோழப் பேரரசின் வீழ்ச்சிக்குப்பின் தமிழகத்தில் நிலையான ஆட்சியின்மையால் மொழி வளங்குன்றலாயிற்று. பல குறுநில மன்னர்கள் ஆட்சியாலும், பிறமொழியாளர்கள் செல்வாக்காலும், பின்னர் ஐரோப்பியர் வருகையாலும், தமிழ்மொழி வளர்ச்சி குன்றலாயிற்று. ஆட்சியாளர் விருப்பிற்கேற்பவும், ஆட்சியாளர்களைத் திருப்திப்படுத்தவும் தேவையான நூல்களே எழுந்தன. பண்டைய தமிழ்நூல்கள் பெயரளவிலேயே அறியப்பெற்றிருந்தன. சிலப்பதிகாரம்

சேரமான் பெருமாள் நாயனார் இயற்றியது எனவும், "சிறப்பதிகாரம்" எனவும் வழங்கப்பெற்றது. "எட்டுத்தொகை" என்ற நூல்கள் இருப்பதையே மக்கள் அறியவில்லை. ஏட்டில் நெடில் 'ஏ' 'எ' எனவே வரையப்பெறுமாதலால் ஏதோ ஏடுகளின் தொகுதி எனக் கருதி எட்டுத் தொகையை "ஏட்டுத் தொகை" எனக் குறிப்பிடநேர்ந்துள்ளது.

பக்தி இலக்கியங்கள் பிற்காலத்தெழுந்த நூற்களில் முற்பட்டவையாயினும் பக்தி காரணமாக ஓதியும், பிரதி செய்து பாதுகாத்தும் வரப்பெற்றன. இவ்விதம் தேவாரம் ஓதுபவர்கள் 'ஓதுவார்' என்றே அழைக்கப்பெற்றனர். எனினும் நாயன்மார்கள் அருளிய தேவார திருவாசகங்கள் வேதத்துக்கும் உபநிடதத்துக்கும் ஒப்பானதெனக் கருதி அவற்றுக்குப் பொருள்காண்பது பிழை எனக்கொண்டு ஏட்டிலுள்ளவாறே ஓதிவருகின்றனர். 5, 6 ஆம் நூற்றாண்டு முதல் வழிவழியாக ஓதி வந்த இந்தப் பாசுரங்களில் பாடபேதங்களும், பிழைகளும் மலிந்துள்ளன. இந்தப் பிழைகள் இவற்றை அருளிய நாயன்மார்களால் ஏற்படவில்லை. அவர்கள் அருளிச் செய்த காலத்து வரிவடிவமே வேறானது. அவர்கள் காலத்து ஏட்டுச்சுவடிகள் 16 ஆம் நூற்றாண்டின் கால அளவில் கூட இருப்பதற்கு வாய்ப்பில்லை. காலங்காலமாக வடிவ மாற்றத்துக்கு ஏற்பப் பெயர்த்தெழுதியவர்கள் கவனக்குறைவாலும், அறியாமையாலும் செய்த பிழைகளையும் பாடங்களையும் அருளாளர் திருவாக்காகக் கருதுவது பிழையாகுமல்லவா?

## பாதுகாக்கப் பெற்ற தமிழ்ச்சுவடிகளின் நிலை

தமிழ்ச்சுவடிகள் இவ்வாறு பாதுகாக்கப் பெற்றவை 17 ஆம் நூற்றாண்டிலிருந்து இப்போது கிடைக்கின்றன. இதுவரை கிடைக்கப்பெற்ற தமிழ்ச்சுவடிகளில் பழைமையானது கி. பி. 1611 ஆம் ஆண்டைச் சேர்ந்த "கம்பராமாயணச்" சுவடியாகும். இவை பலவகையைச் சார்ந்தவையாக உள்ளன. இவற்றைக் காவியம், புராணம், இலக்கணம், நிகண்டு, மருத்துவம், சோதிடம், இசை, சிற்றிலக்கியங்கள் (அந்தாதி, ஆற்றுப்படை, உலா, ஊஞ்சல், கலம்பகம், சதகம், தூது, பிள்ளைத்தமிழ், கும்மி, குறவஞ்சி, குளுவ நாடகம்) எனப் பலப்பல வகையாகப் பிரிக்கலாம். இவை நாடெங்கும் பரவலாக உள்ளன. ஐரோப்பிய நாட்டினரின் வியாபாரம், ஆட்சி ஆதிக்கத்தால் பல அரிய சுவடிகள் மேலை நாட்டிற்கும் கடத்தப்பட்டுள்ளன.

## சுவடிப் பதிப்பு முயற்சி

19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தமிழ் அச்சிற் பதிப்பிக்கும் முறை வரும் வரையில் ஓலைச்சுவடிகளில் எழுதும் முறை இருந்துவந்தது. இன்றும்கூட நம் நாட்டின் சில பகுதிகளிலும் கேரளத்திலும் ஜாதகம், திருமணப் பரிசம் முதலியவற்றை ஏட்டில் எழுதுவது புனிதமானது என்ற கருத்தில் எழுதிவருகின்றனர். டாக்டர் ஐயரவர்கள் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் பயிலும்போது அவர் பாடிய புராணங்களைச் சுவடிகளில் தாம் எழுதியதாக "என் சரித்திரத்"தில் வரைந்துள்ளார். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தாம் பாடிய பாடல்களைத் தம் கையாலேயே எழுதிய சுவடிகள் திருஆமாத்தூர் கௌமார மடாலயத்திலுள்ளன.

19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அச்சில் தமிழ்ச்சுவடிகளைப் பதிப்பிக்கும் முயற்சியில் இராமாநுசக் கவிராயர். ஆறுமுக நாவலர், விசாகப் பெருமாளையர், ட்ரு துரை, பாவர் துரை, தாமோதரம் பிள்ளை, கோமளேசுவரன் பேட்டை ராசகோபால பிள்ளை, எழும்பூர் வேங்கடாசல முதலியார், சபாபதி முதலியார், உ. வே. சாமிநாதையர் ஆகியோர் ஈடுப்பட்டுத் தமிழ் நூல்கள் பலவற்றைப் அச்சிட்டு வெளியிட்டனர். பண்டைய ஏட்டில் எழுதியிருந்தவற்றை இவர்கள் ஆதியில் பதிப்பித்தனர். முன்னுரை, முகவுரை, பதவுரை, பொழிப்புரை, விளக்கவுரை எதுவுமே இல்லாமல் ஏட்டிலுள்ளவாறே பதிப்பாகி இருக்கும் பாடலும் உரையும் பாடல் எது ? உரை எது? என்பது பிரித்துணர இயலாதவண்ணம் பதிப்பிக்கப் பெற்றது. இவற்றை முறைப்படுத்தி முகவுரை, ஆய்வுக்குறிப்புக்கள், மேற்கோளகராதி, அரும்பத அகராதிகளுடன் பதிப்புமுறையில் செம்மையைப் புகுத்தியவர் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்களாவார்.

## உ. வே. சா. அவர்கள் பயின்ற காலத்தில் தமிழின்நிலை

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் ஐயரவர்கள் பக்தி இலக்கியங்களும், புராணங்களும், சிற்றிலக்கியங்களும், கம்பராமாயணமும், நன்னூல், தொல்காப்பியம், திருக்குறள் போன்ற பழைய நூல்களுமே பயின்றார். இவை அக்காலத்தில் நடைமுறையில் பயின்றுவந்த நூல்கள் ஆகும். தொல்காப்பியமும் திருக்குறளும் அவற்றின் சிறப்பால் உணரப்பெற்று வழங்கிவந்தன. சீவகசிந்தாமணியை ஒருசில ஜைனர்கள் மட்டும் அறிந்திருந்தனர்.

கி. பி. 1880-இல் தமிழ்த்தாயின் நல்வினைப் பயனால் சேலம் ராமசாமி முதலியாரின் முயற்சியால் சாமிநாதையர் சீவகசிந்தாமணிப் பதிப்பை மேற்கொண்டார். சீவகசிந்தாமணியின் நச்சினார்க்கினியர் உரையைப் படிக்கும்போதுதான் நச்சினார்க்கினியர் காட்டியுள்ள மேற்கோள்களிலிருந்து பழங்காலத் தமிழ்நூல்கள் பல உருவம் அறியாத நிலையில் மறைந்து கிடப்பதை உணர்ந்து அவற்றைத் தேடித் தொகுத்து வெளியிடும் பணியைத் தம் வாழ்க்கைக் குறிக்கோளாக மேற்கொண்டார். அவர் தேடித் தொகுத்த சுவடிகள் 1400 ஆகும். மேலும் சுவடி உரிமையாளர்கள் பெற்றுப் பிரதிசெய்த காகிதப்பிரதிகள் 74 ஆகும். இந்தத் தொகுப்பிலுள்ளவர் 300 நூல்களுள்ளன. ஐயரவர்கள் தம் 60 ஆண்டுப் பதிப்புப் பணியில் சுவடியினின்றும் பதிப்பித்த நூல்கள் 74 ஆகும். அவருக்குப் பிறகு அவர் பேராலியலும் அவர் சுவடிகளைத் தன்னகத்தே கொண்ட நூல்நிலையம் பதிப்பித்துள்ள நூல்கள் சுமார் ஐம்பதாகும். அவர் தொகுப்பில் மட்டும் இன்னும் பதிப்பிக்கப் பெற உள்ள நூல்கள் சுமார் ஆயிரம் உள்ளன.

### சுவடிப் பயிற்சியில் தளர்ச்சி

டாக்டர் ஐயரவர்களுக்குப் பிறகு ஏட்டுச் சுவடிகளைப் பதிப்பிக்கும் முயற்சியைப் பொறுப்புடன் மேற்கொள்ளவில்லை (ஸ்ரீ வையாபுரிப்பிள்ளையவர்கள் ஐயரவர்கள் காலத்துக்குப் பின்னர் ஒருசில ஆண்டுகளே வாழ்ந்தமையாலும், சில நூல்களே வெளியிட்டமையாலும் இவ்விதம் கூற நேர்ந்தது)

அச்சு முறையில் தெளிவான அமைப்பில் நூல்கள் பல வெளிவந்தபிறகு படிப்பதற்குக் கஷ்டமான சிறிய எழுத்துக்களில் புள்ளியின்றி கொம்பு, சுழி மாறுபாடின்றி ஓலைச்சுவடியில் உள்ள நூல்களைப் படிக்க யாரும் அக்கறை கொள்ளவில்லை. சுவடிகளைப் படிப்பதே ஒரு அரிய கலையாகிவிட்டது. ஒரு சிலரே சுவடிக் கலையில் வல்லுநர் எனக் கூறுமளவுக்குத் தமிழின் நிலை தாழ்ந்துவிட்டது. இதன் காரணமாக அச்சில் வராத தமிழ்ச் சுவடிகளைப் பதிப்பிக்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ள ஒருசிலரும் சுவடி படிக்கும் ஆற்றல் இன்மையால் நூலின் பொருளை உணராதுபிழைமலியப் பதித்து வெளியிடலாயினர். 'பச்சை நரம்போடி' என்ற பகுதி 'பச்சை நாமப்பொடி' எனவும், 'கர தலத்தான்' என்ற பகுதி 'காதலத்தான்' எனவும், 'ஸ்ரீகோதை கேரளவன்மன்' என்ற பெயர் "ஸ்ரீகோதைகொள்வன்மன்" எனவும், "கோதாவிரி" "சேர்தாவிரி" எனவும் பதிப்பில் வந்துள்ளன. ஏட்டில் அப்படியே இருந்தாலாவது நூலின் சரியான பாடத்தை

ஊகிக்கலாம். தவறான வடிவில் அச்சுப் பதிப்பில் வந்துவிட்டால், பின்னர் சரியான பாடம் காண்பதே அரிதாகிவிடும்.

## ஏட்டுச் சுவடிகளின் சிதைவு

ஏட்டுச் சுவடிகளில் தமிழ் நூற்கள் வழிவழியாகக் காலந்தோறும் ஏற்பட்ட வடிவ மாற்றங்களுக்கேற்பப் பிரதிசெய்யப் பெற்றுப் பாதுகாத்து வந்தது ஒருபுறமிருக்க, மேலை நாட்டினர் வியாபாரத்தில் நாட்டின் ஆட்சியைக் கைப்பற்றி மக்களை அடிமைப்படுத்தி ஆண்ட காலத்தில் நாட்டில் குழப்பங்கள் மிகுந்த கல்வி வளர்ச்சியும் மொழி வளர்ச்சியும் வெகுவாகச் சரிந்துவிட்டன. அன்னிய ஆட்சியில் ஆளுபவர்களுக்கு வேண்டியவர்களாக அவர்கள் கூறியவிதம் எல்லாம் ஆளுபவர்களே செல்வாக்குப் பெற்றமையால் மக்கள் தமிழ்மொழி பயில்வதையே மறந்தனர். தாய் மொழியிற் பேசுவது அநாகரிகம் என்றும் கருதினர். இன்றைக்கும் பலர் அந்த எண்ணம் கொண்டுள்ளனர்.

ஆட்சியிலிருந்த ஆங்கிலேயரும் தங்கள் கல்வித் திட்டத்தில் ஆங்கிலத்திற்கு முதலிடம் அளித்துப் பிராந்திய மொழிகளைப் புறக்கணித்தனர். எட்டாம் வகுப்புக்குமேல் தாய் மொழிக்கு இடமில்லை. இந்த நிலையில் தமிழ், தமிழர் அறியாத மொழியாகித் தமிழர்களே தமிழ்ச் சுவடிகளைச் சுமையெனக் கருதி அழிக்கவும் நேரிட்டது. ஐயரவர்கள் "என் சரித்திரத்"தில் குறிப்பிடும் இரண்டு நிகழ்ச்சிகளைத் தமிழர் எவ்விதம் தமிழை (சுவடிகளை) அனலிலும், புனலிலுமிட்டு அழித்தனர் என்பதற்குச் சான்றாகக் காணலாம்.

## தற்போது சுவடிகள் உள்ள இடங்கள்

இவ்விதம் அனலிலும் புனலிலும் அழிந்தவை போக, நம் நாட்டில் மடாலயங்களிலும் புலவர் பரம்பரையினர் வீடுகளிலும், சுவடி நூலகங்களிலும் பாதுகாக்கப் பெற்ற தமிழ்ச் சுவடிகள் இப்போது அடியிற் குறிப்பிட்ட இடங்களிலுள்ளன. அவை அண்மைக்காலம் வரை சரியாகப் பாதுகாக்கப் பெறாமலுள்ளன. பல இடங்களில் விளக்க அட்டவணைகூட இல்லை.

### 1. சென்னை

அ. பல்கலைக் கழகக் கீழ்த்திசைச் சுவடி நிலையம், சென்னை.

ஆ. உ. வே. சா. நூல்நிலையம், திருவான்மியூர்.

இ. பிரமஞானசபை நூலகம், அடையாறு.

ஈ. தொல்பொருள் ஆய்வுத்துறை - சென்னை 28.

உ. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை 113.
ஊ. சித்த மருத்துவ ஆராய்ச்சி நிலையம், சென்னை.
எ. ஆசியவியல் ஆய்வு நிறுவனம், சென்னை 41.

2. காஞ்சிபுரம்

அ. காமகோடிபீடம் ஸ்ரீசங்கராச்சார்யர் மடம்

3.பாண்டிச்சேரி

அ. பிரஞ்சிந்திய கலைக்கழகம்

4.தஞ்சை

அ. சரஸ்வதி மகால் நூல்நிலையம்
ஆ. தமிழ்ப்பல்கலைக் கழகம்
இ. தருமபுர ஆதீனம், மயிலாடுதுறை
ஈ. ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள்
உ. திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை

5. மதுரை

அ. மதுரைத் தமிழ்ச் சங்கம்
ஆ.மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

6. கோவை

சாந்தலிங்க அடிகளார் திருமடம், பேரூர்

7.பெரியார் மாவட்டம்

கலைமகள் கல்வி நிலையம் - ஈரோடு

8. கேரள மாநிலம்

அ. கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த் திசைச் சுவடிநிலையம், காரியவட்டம், திருவனந்தபுரம்
ஆ.கள்ளிக்கோட்டை,சர்வகலாசாலை- கோழிக்கோடு
இ. சாகித்ய அகாதமி - திருச்சூர்

9. ஆந்திர மாநிலம்

அ. ஆந்திரப் பல்கலைக்கழகம் - விசாகப்பட்டினம்
ஆ. உஸ்மானியா பல்கலைக்கழகம் -ஹைதராபாத்
இ. திருவேங்கடவன் பல்கலைக்கழகம் - திருப்பதி

10. மேற்கு வங்கம்

தேசிய நூலகம் - கல்கத்தா
மேலே குறிப்பிட்ட இடங்களில் சுமார் இருபத்தையாயிரத்துக்கு

மேல் தமிழ்ச் சுவடிகள் உள்ளன. இவற்றில் பல இடங்களிலுள்ள தமிழ்ச் சுவடிகளுக்கு அட்டவணையே இல்லை. ஆந்திரத்திலுள்ள தமிழ்ச் சுவடிகள் தெலுங்கு வடிவிலுள்ளன. கேரளத்தில் தமிழ்ச் சுவடிகளேயன்றி மலையாளச் சுவடிகளுமுள்ளன. மலையாள எழுத்தில் பல தமிழ்ச் சுவடிகளுமுள்ளன. இவற்றுக்குச் சரியான அட்டவணை இல்லை.

### மேலைநாடுகளில் தமிழ்ச் சுவடிகள்

ஐரோப்பிய மேலைநாட்டினர் இங்கு 16 ஆம் நூற்றாண்டில் வியாபாரம் செய்ய வந்து ஆட்சியைப் பிடித்து ஆண்ட காலகட்டங்களில், தமிழ் மொழியின் சிறப்பையுணர்ந்து தங்கள் ஆதிக்கமிருந்த காலத்தில் போர்த்துக்கிசியர்களும், பிரஞ்சுக்காரர்களும், ஆங்கிலேயர்களும், அவர்கள் நேசநாட்டினரான பிறரும் சுவடிகள் பலவற்றைத் தங்கள் நாட்டிற்கு எடுத்துச் சென்றுவிட்டனர். அண்மைக்காலம் வரையில் அங்குள்ள தமிழ்ச்சுவடிகள் பற்றிய விபரம் தெரியவில்லை. அவற்றுள் முக்கியமாகப் பாரிசு தேசிய நூலகம், இங்கிலாந்தில் பிரிட்டிஷ் கவுன்சில் நூலகம், இந்தியா ஆபீசு நூலகம் என்ற இடங்களில் பல சுவடிகள் உள்ளன. அவற்றுக்கெல்லாம் விளக்கமான அட்டவணை இல்லை. நூற்பெயர் மட்டும் குறிக்கப்பெற்ற லிஸ்டே (*list*) உள்ளன.

1960 ஆம் ஆண்டில் நம் நாட்டிலிருந்து பேராசிரியர் அ.கிருஷ்ணமூர்த்தி என்பவர் மேலை நாட்டில் பல இடங்களுக்கும் சென்று தமிழ்ச் சுவடிகளுக்கு விளக்கமான அட்டவணை தயாரித்துத் தமிழக அரசிடம் 5 தொகுதிகள் சமர்ப்பித்துள்ளார். அந்த அட்டவணைத் தொகுதிகள் பற்றிய விவரம் 1982 ஆம் ஆண்டுவரை ஒன்றும் தெரியாமலிருந்தது. இப்பொழுது அவற்றில் நான்கு தொகுதிகள் சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ்த்துறை நூலகத்தில் இருப்பது கண்டுபிடிக்கப்பெற்றது. ஒரு தொகுதி காணாமற் போய்விட்டது. இந்த நான்கு தொகுதிகளையும் பரிசீலித்ததில் கிரேட் பிரிட்டனில் 12 இடங்களிலும் மற்றைய ஐரோப்பிய நாடுகளில் 22 நூலகங்களிலுமுள்ள சுவடிகளின் விவரம் அறிய வந்துள்ளது.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன அரையாண்டு சஞ்சிகை 'தமிழ் இயல்' 18 ஆவது இதழின் கிரிகோரி ஜேம்ஸ் என்பார் 'ஐரோப்பிய நாட்டில் தமிழ்ச்சுவடிகள்' என்ற கட்டுரையில் ஐரோப்பாவில் 88 இடங்களிலுள்ள தமிழ்ச்சுவடிகள் பற்றிய விவரங்கள் தந்துள்ளார். இவற்றில் பல இடங்களில் தமிழ்ச்சுவடிகள் இருக்கலாமெனவும் குறிப்பிட்டுள்ளார்.

இலண்டன் "தமிழ்ச் சங்க மலர்" (1975-76) இதழில் மேற்கு ஜெர்மனியிலுள்ள பேராசிரியர் தாமோதரன் அவர்கள் 'தமிழ்ச் சுவடிகளின் தலைவிதி' என்ற கட்டுரையில் மேலை நாட்டிலிருந்து தமிழகம் வரும் ஐரோப்பியர்கள் ஏட்டுச்சுவடிகளின் பழைமை, எழுத்தாணியால் ஏட்டில் எழுதியுள்ளதின் அருமை ஆகிய இவற்றின் சிறப்பில் ஈடுபட்டு அரும்பொருட்காட்சிப் பொருளாகச் சுவடிகளை வாங்கித் தங்கள் நாட்டிற்குக் கடத்திச் செல்வதாக எச்சரித்துள்ளார். அப்படி, அவர்கள் கடத்திச் செல்லும் சுவடிகளில் உள்ள செய்தி பற்றி அவர்களுக்கும் தெரியாது. தெரிந்தவர்களைப் பார்க்கவும் அனுமதிப்பதில்லையாம்.

"*Tamil culture*" தொகுதி 3-4 அக்டோபர் 1954 இதழில் தனிநாயக அடிகள் 'ஐரோப்பிய நூலகங்களில் தமிழ்ச்சுவடிகள்" என்ற கட்டுரையில் போர்த்துகல், ஸ்பெயின், இத்தாலி நாட்டிலுள்ள சுவடிகளைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். வியாபார நோக்கமும், மதப் பிரச்சார நோக்கமும் கொண்ட இந் நாட்டினர் பெரும்பாலும் கிறிஸ்துவ மதத் தொடர்பான தமிழ்ச்சுவடிகளை எடுத்துச் சென்றுள்ளனரெனக் குறிப்பிடுகின்றார். மேலும், இவற்றுடன் பல சுவடிகள் இன்னதென அறியாத நிலையில் இருப்பதாகவும், இவை முற்றும் தக்கவர்களைக் கொண்டு அட்டவணை செய்யப்பெறல் வேண்டுமென்றும் வரைந்துள்ளார்.

அமெரிக்க நாட்டிலும் சில தமிழ்ச்சுவடிகள் இருப்பதாகப் பேராசிரியர் வ. அய். சுப்பிரமணியன், முன்னாள் துணைவேந்தர், தமிழ்ப் பல்கலைக்கழகம் எழுதியுள்ளார்.

'சீவக சிந்தாமணி - முதல் புத்தகம் நாமகள் இலம்பகம்' என்ற நூலை 1867 இல் பதிப்பித்த ரெவ. எச். பாவர் என்பவர் அந்த நூலின் முன்னுரையில், தாம் சீவக சிந்தாமணி நூல் முழுவதையும் அச்சிற் பதிப்பிக்கும் நோக்கத்துடன் பிரதி செய்து குறிப்புகள் எழுதி வைத்திருந்ததாகவும், பின்னர் அப்பிரதியை அமெரிக்க மிஷனைச் சார்ந்த 'ஸ்டேர்' என்ற பாதிரியாரிடம் பதிப்பிக்குமாறு அளித்ததாகவும், அவர் அந்தப் பிரதியுடன் அமெரிக்கா சென்றுவிட்டதாகவும், ஒருகால் அப்பிரதி அமெரிக்க நூலகங்களில் எங்காவது இருக்கலாமெனவும் குறிப்பிட்டுள்ளார். 1867 ஆம் ஆண்டிற்கு முன்னரே சீவகசிந்தாமணிப் பிரதி ஒன்று அமெரிக்கா சென்றுவிட்ட செய்தி இதன்மூலம் தெரியவருகிறது. டாக்டர் ஐயரவர்களின் சீவக சிந்தாமணி ஆய்வில் அகப்படாத பிரதி இது.

## கீழைநாடுகளில் தமிழ்ச் சுவடிகள்

கீழை நாடுகளிலுள்ள தமிழ்ச் சுவடிகள் பற்றிய செய்தி ஒன்றுமே தெரியவில்லை. ஐரோப்பியர் வருவதற்கு முன்பே பல நூற்றாண்டு காலமாகத் தமிழ்நாட்டுடன் அரசியல், வாணிபம், கலாசாரம் முதலிய தொடர்பு கொண்டவை கீழைநாடுகளே. கீழைநாட்டிற்குப் புத்தமதம் தமிழகத்தின் வழியாகவே சென்றுள்ளது. இன்றும் தாய்லாந்தில் திருப்பாவை, திருவெம்பாவைப் பாடல்கள் பொருள்தெரியாமல் அவர்கள் மதச் சடங்குகளில் ஓதப்பெறுவதாகவும் அறியமுடிகின்றது. எனவே இந்நாடுகளில் பல தமிழ்ச்சுவடிகள் இருப்பதற்கு வாய்ப்புண்டு.

அண்மையில் ஒரு நண்பர் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்துக்கு அளித்த தமிழ்ச்சுவடியின் இறுதியில் '1853-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 5 ஆம் தேதி வெள்ளிக்கிழமை சிங்கப்பூரில் எழுதியது' என்ற குறிப்பு காணப்படுகிறது.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் சுவடியியல் பயிற்சி பெற்ற மாணாக்கர் ஒருவர், இரண்டு சுவடிகளின் நிழற்படப் பிரதியைப் பிரதி செய்து, அதை நிழற்படப் பிரதியுடன் ஒப்புநோக்கித் தரவேண்டுமென வேண்டினார். அவை 'வர்மக்கலை' பற்றிய நூல்கள். ஜப்பான் நாட்டிலுள்ள ஏட்டுச் சுவடியிலிருந்து நிழற்படப் பிரதியெடுக்கப் பெற்றதாகக் கூறினார்.

இச்செய்திகளால், பல தமிழ்ச் சுவடிகள் கீழை நாடுகளிலும் இருக்கலாமென்ற ஊகம் வலுப்பெறுகின்றது.

## தமிழ்ச்சுவடிகளின் வெளிவராத நிலை

நம் நாட்டிலுள்ள பல நூலகங்களிலிருந்தும் சுவடிகளின் பெயர் மட்டும் அறிய வந்த சுவடிகள் சுமார் இருபதாயிரமாகும். இவற்றை, ஒருவாறாக வகைப்படுத்தியதில் சுமாராக இவை கீழே குறிப்பிட்ட சதவீதத்திலிருப்பதாக உணரப்பெற்றது.

மருத்துவம்60 சதவீதம்
சோதிடம் 10 சதவீதம்
சமயம், பக்தி 10 சதவீதம்
கலை, இலக்கியம் 10 சதவீதம்
வரலாறு 5 சதவீதம்
இலக்கணம் 5 சதவீதம்

இன்னும் கணக்கில் வராத தமிழ்ச்சுவடிகளைத் தேடிப்பிடித்து ஆராய்ந்தால், இந்தப் புள்ளிவிவரம் மாறுபடலாம்.

டாக்டர் உ.வே.சா. அவர்கள் தம் அறுபதாண்டுப் பதிப்புப் பணியில் சுவடிகளினின்றும் பதிப்பித்த நூல்கள் 74 என்பதை அறியும்போது, இன்னும் வெளிவரவேண்டிய சுவடிகள் சுமார் 20,000 என்பதை எண்ணுகையில் உ.வே.சா. போன்ற தமிழ் அறிஞர்கள் எத்தனை பேர், எத்தனைக் காலம் உழைக்கவேண்டும் என்பது மலைப்பைத் தருகின்றது.

தற்போது அச்சுப்பிரதிகளையே படித்துப் பழகிய தமிழறிஞர்களுக்கு ஏட்டுச் சுவடி படிக்கத் தெரியவில்லை. ஆர்வங்காரணமாகத், தமிழ்ச்சுவடிகளைப் பதிப்பிக்கும் சில அறிஞர்களும், சுவடிப் பயிற்சியின்மையால், பிழைபடப் பதித்துவிடுகின்றனர். எனவே, இப்போதைய தலைமுறையில் தமிழைப் பயில்பவர்களுக்குச் சுவடியில் படிக்கும் பயிற்சியும், பிரதிசெய்வதில் பயிற்சியும் அளித்தல் அவசியமாகின்றது. சுவடிப் பயிற்சி அளிப்பதற்கு முறையான நெறிமுறைகள் (Methodology) ஏற்படவில்லை. யானறிந்த வரையில், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் சுவடியியல் பயிற்சி துவங்கியபோது, சில நெறிமுறைகள் வகுக்கப்பெற்றன. அவற்றை இங்கு எடுத்துக் கூறுகிறேன். இதையே முடிந்த முடிபென்று கொள்ளாமல் பயிற்சி முறை வளர வளரப் புதிய நெறிமுறைகள் உருவாகும்.

இப்போது கிடைக்கும் ஏடுகள் எல்லாம் கி.பி. 1600 க்குப் பிற்பட்டவையாகும். பழைய நூல்கள் எல்லாம், எழுத்து மாற்றத்துக்கேற்பப் பிரதி செய்யப்பெற்றவை. பிரதி செய்தவர்கள் எல்லாரும் சிறந்த அறிஞர்கள் எனக் கூற வியலாது. கூலிக்கெழுதியவர்களுமுண்டு. ஏடெழுதும் முறையில் ஒற்றுக்குப் புள்ளிகள் இராது. குறில்நெடில் கொம்பு வித்தியாசமிராது. ‘எ’ ‘ஒ’ நெடில்-குறில் வேற்றுமையிராது. ‘ா’ கால் ‘ர’ உயிர்மெய், ‘ர்’ ஒற்று மாறுபாடின்றியிருக்கும். 1/2 புள்ளி, 1/4 புள்ளி, சீர் முதலிய குறியீடுகளின்றி ஏட்டில் ஒரே தொடராக எழுதப் பெற்றிருக்கும். இவற்றைப் பொருளுணர்ந்து பிரதி செய்ய வேண்டும்.

நல்லவேளையாகப் பண்டைத் தமிழ் நூல்கள் எல்லாம் எளிதில் மனப்பாடம் செய்யக் கூடிய வகையில் செய்யுள் அமைப்பிலேயே உள்ளன. எனவே, ஏட்டைப் பிரதி செய்பவருக்கு யாப்பிலக்கணம், பாட்டியல் நூல்களில் பயிற்சி மிக மிக அவசியம்.

பாட்டியல் பயிற்சியால், நூல் எந்த யாப்பிலமைந்தது என எளிதில் உணரலாம். யாப்பிலக்கணத்தின்மூலம் எதுகை, மோனை,

சீர், தளை முதலியவற்றை யறிந்து, ஏட்டில் எழுதப்பெற்ற பாடலின் வடிவத்தைச் செம்மையாகக் காணலாம். மேலும் ஏட்டில் எழுதுவோர் கவனக் குறைவால் ஏற்படும் எழுத்துமிகை, எழுத்துக் குறை, புள்ளி மயக்கம், எழுத்து மயக்கம், குறில் நெடில் மயக்கம், சந்தி மயக்கம், ஒருமை பன்மை ஆகிய மயக்கங்களை யாப்பிலக்கணப் பயிற்சி மூலம் பொருளுணர்ந்து பிரதி செய்யலாம். மேலும் சில வட்டாரங்கள் (தென்பாண்டி நாட்டில்) 'ழ' கரம் 'ள' கரமாகவும், 'ள' கரம் 'ழ' கரமாகவும் தாராளமாக மாற்றியெழுதப் பெற்று மயங்கச் செய்யும். 'ல்' 'ள்' என்ற மெய்களோடு வல்லினம் புணரும்போது, 'ல்', 'ற்' என்றும், 'ள்' 'ட்' என்றும் மாறும். ஆனால் தென்பாண்டி நாட்டில் அப்படி மாற்றாமலேயே இரண்டு ஒற்றுக்களைப் போட்டு எழுதுவது பல ஏடுகளிலும் காணப்பெறுகின்றது. கல் தூண் - கற்றூண் என எழுதப்பெறாமல் 'கல்த்தூண்' எனவும், நாள் குறிப்பு- 'நாட்குறிப்பு' என இல்லாமல் "நாள்க்குறிப்பு" எனவும் காணப்பெறும். மேலும் ஏட்டில் எழுதுவோர், இடச் சிக்கனம் கருதி 'மூர்த்தி' என்பதை "மூற்தி" எனவும், "கார்த்திகை" யை "காற்திகை" எனவும் எழுதுவதுமுண்டு. இவற்றையுணர்ந்து பிரதிசெய்ய வேண்டும். இதற்குச் சுவடிப் பயிற்சி மிகவும் அவசியம்.

சுவடிப் பயிற்சியில் ஈடுபடுவோர் மொழியில் சிறந்த புலமை பெற வேண்டும். ஆதலால் அவர்களுக்கு,

1. மொழி வரலாறு
2. எழுத்து வரலாறு
3. சுவடியில் எழுதிய முறை
4. யாப்பியல்
5. பாட்டியல்
6. செயல்முறை

முதலியவற்றின் கடினமான பயிற்சி அவசியம். நாடோறும் சில ஏடுகளைப் பிரதிசெய்து, பிரதி செய்யும்போது ஏற்படும் பிழைகளைக் களையும் முறைகளை அறியவேண்டும். இயல்பாகப் பயிற்சியின்மையால் ஏற்படும் பிழைகள், அவற்றைக் களையும் முறைகள் சில உதாரணங்களால் அடியில் விளக்கப்பெற்றுள்ளன:-

"மெய்தவிரும் கழற்குடம்போல் முறையன்றிப் பிறழ்தல்
 மிகும்முடத்தெங் காய்முயன்றோர்க் கன்றி அல்லோர்க்கீதல்
செய்பருத்திக் குண்டிகைபோல் கோளல் கொடைமுட்டுறுதல்
 செறியுமடற் பனையெனத்தா னேகொடுத்தால் அன்றி
எய்து அடுத்தோர்க்கு ஈயாமை உடைத்தாகி யெவைக்கும்
 இச்சித்தல் அழுக்காறு மனவார்சங் கொடுமை

இப்பாடல் "சுவாமி நாதம்" என்ற இலக்கண நூலின் ஐந்தாம் பாடலாகும்.

இந்நூல், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் 1975 இல் டாக்டர் செ.வை. சண்முகம் அவர்களால் பதிப்பிக்கப்பெற்றுள்ளது. பதிப்பில் உள்ளபடியே மேலே எழுதப் பெற்றுள்ளது. இப்பாடல் மூன்று காய்ச்சீரும், ஒரு மாச்சீரும் ஆக 4 சீர் மீட்டும் மோனையுடன் மடங்கி எண் சீராக வந்த விருத்தமாகும். சுவடியைப் பிரதி செய்யும் பயிற்சியின்மையாற் பிரதி செய்வோர் பிழைபடப் பிரதி செய்துள்ளார். முதலடி சரியாகப் பிரதி செய்யப்பட்டுள்ளது. விருத்தப் பாடல்களின் அடி அளவொத்து வரவேண்டும். இரண்டாமடி பிரதியிலுள்ளபடி பார்த்தால் அளவொத்து வரவில்லை.

3 - காய்ச்சீர், 1 மாச்சீராக இல்லாமல் "செய்பருத்திக் குண்டிகைபோற் கோளல் கொடை முட்டுறுதல்" என உள்ளது. மூன்றாம் சீர் "கோளல்கொடை" எனவும், நான்காம் சீர் "முட்டுறுதல்" எனவும் கனிச்சீராகவும், காய்ச்சீராகவும், பிரதி செய்யப்பெற்றுளது. இது பிழை. 3 ஆம் சீர் காய்ச்சீராகவும், 4 ஆம் சீர் மாச்சீராகவும் இருத்தல் வேண்டும். யாப்பிலக்கண அளவு கொண்டு கவனிப்பின் பிழை புலனாகும். படிக்கும்போதே ஓசை நெருடும் 3 ஆம் சீரில் "கோளல் கொடை" எனக் கொண்டது பிழையாகும். ஏட்டில் குறில்நெடில் கொம்பு வித்தியாசமிராது.

"கொளல்" "கோளல்" இரண்டும் கொளலாகவே காட்சியளிக்கும். இப்பகுதியில் நெடிலாக்காமல், "கொளல்" எனக் கொளின், "கொளல்கொடை" என விளச்சீராகும். இந்த விளச்சீருடன் 4 - ஆம் சீரில் "முட்டுறுதல்" என்ற மூவகைச் சீரிலுள்ள முதலசை 'முட்' என்பதைச் சேர்த்து, "கொளல்கொடைமுட்" எனக் காய்ச்சீராக்கினால் மூன்று சீர்களும் காய்ச்சீராகும். நான்காம், சீரில் மீதமுள்ள 'டுறுதல்' புளிமாவாகிப் பாவடிவளவுக்கேற்ப அடி—

"செய்பருத்திக் குண்டிகைபோற் கொளல்கொடைமுட் டுறுதல்"
என அமையும். இஃது குறில்நெடில் மயக்கால் வந்த பிழையாகும்.

மூன்றாமடி அளவொத்துள்ளது. நான்காமடியில் சீர்கள் ச்ரிவரப் பிரிக்க இயலாமல் பிரதி செய்யப்பெற்று 7 சீர்களே காட்டப் பெற்றுள்ளன.

"ஐயுறல்வீண் படிப்போதன்ற குருவுக்குள தாமக் குணங்கள்
இன்மையுமே உள்ளவன் துற்குருவே"

இரண்டாம்சீர் - "படிப்போதன்ற குருவுக்குள்"
நாலாம் சீர்- "தாமக்குணங்கள்"
4 அசை, கனிச்சீர், 4 அசைச்சீர்களாக அளவொத்து வரவில்லை. மேலும், "இன்மையுமே உள்ளவன் துற்குருவே" என்ற பிற்பகுதி மோனை பெறாமல் அளவொத்து வராமலுள்ளது. உரையைக் கொண்டு சரியான வடிவத்தைக் காணமுயலல் வேண்டும்.

வீண்படிப்பு, நற்குருவுக்குள அக்குணங்கள் இன்மை என உரை காணப்பெறுகின்றது. எனவே, இவ்வடியில்,

"ஐயுறல்வீண் படிப்போதல் நற்குருவுக் குளதாம்"

எனப் படிப்போதன்ற என்ற பகுதியில் "படிப்போதனற்" எனப் புள்ளியை மாற்றியமைத்துப் படிப்போத இரண்டாம் சீராகி "குளதாம்" என்பதை 4 ஆம் சீராகக் கொண்டு, அக்குணங்கள் 5-ஆம் சீராகின் 4ஆம் அடி எட்டுச் சீருடன் மோனை பெற்று,

"ஐயுறல்வீண் படிப்போத னற்குருவுக் குளதாம்
அக்குணங்கள் இன்மையுமே உள்ளவன்துர்க் குருவே"

எனச் சரியாகவமையும். இவ்வடியில் "படிப்போதனற்" என்பதில் புள்ளி மயங்கிப் "படிப்போதன்ற" என வந்தது பிழையாகும். மேலும் "துர்க்குரு" என்பது ஏடெழுதுவோர் சுருக்கமுறையைக் கையாண்டு "துற்குரு" என எழுதியுள்ளனர். இதுவும் "துர்க்குரு" எனப் பிரதிசெய்யப் பெறவேண்டும். இந்த ஒரு பாடலின் எடுத்துகாட்டின் மூலம், குறில் நெடில் மயக்கம், புள்ளி மயக்கம், பாடலமைப்பு உணர்த்தப் பெற்றது. இனி எழுத்துமிகை, எழுத்துக் குறைக்குரிய எடுத்துக்காட்டு வருகிறது.

"மங்கையர்க்கரசி வெண்பா" என்ற நூல் அண்மையில் மதிப்புரைக்காக வரப்பெற்றது. நூலைப் பதிப்பித்தவர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்து டாக்டர் சு. சாமி ஐயா ஆவார். அந்த நூலில் ஒரு பாடலில்,

"வில்லா வளையாமல் வில்வளைக்கு மேருவுக்கு
வில்லார்ந்த வாகுவலையம் மேலி யிட்டான்"

என உள்ளது. இந்த நூல் வெண்பா நூலாதலால், வெண்பாவிலக்கணம் பொருந்தியுள்ளதா? எனக் காணல் வேண்டும். அப்படிக் காண்கையில் "வில்லார்ந்த வாகுவலையம்" என்ற இரண்டாமடி தளை கெடுகின்றது. வெண்பாவில் 4 அசைச்சீர், கனிச்சீர் வராது.

"வாகுவலையம்" - என்றால் 4 - அசை
"வாகுவ லையம்" - எனில் கனிச்சீர்

எனவே, இரண்டாமடி இரண்டாம் சீர் காய்ச்சீர் அல்லது விளச்சீராக வேண்டும். "வில்லார்ந்த" என்பதில் "ஆர்ந்த" என்ற எழுத்துக்கள் மிகை. இவற்றை நீக்கி, "வில்வா குவலையம்" எனப் பதிக்க வேண்டும். "வில்வாகு வலையம்" - வில்லும் அம்பறாத்தூணியும் என்ற உம்மைத்தொகை. இதே நூலில்,

"தனை - நயந்து நின்றான் தாதையும்தன் பாவை
தனைநயந்து முன்னீந்தான் சார்ந்து"

"தனை நயந்து-நின்றான் தாதையும்" என்பது பிழை வெண்பாவில் மாமுன் - நிரையும், காய்முன்-நேரும் வரலே விதி. இங்கு "நின்றான் தாதையும்" என்பதில் மாமுன் நேர்வந்து தளை பிறழ்ந்தது. இறுதியடி, "தனைநயந்து முன்னீந்தான்" என்பதற்கேற்பத் "தனைநயந்து முன்நின்றான்" எனவமையின் தளை கெடாது. இதிற் பிரதிசெய்பவர் "முன்" என்ற சீரை விட்டுவிட்டார். யாப்பிலக்கண உதவிகொண்டு இம்மாதிரிப் பிழைகள் களையப் பெறவேண்டும்.

## புள்ளி மயக்கம், கால் மயக்கம், குறில்நெடில்

"அமுத ரஸ மஞ்சரி" என்ற நூலில் சூலுற்ற ஒரு பெண்ணின் உடலில் பசலை படர்ந்ததைக் கூறுமிடத்து, "பச்சை நாமப் பொடி படர்ந்து கொண்ட" எனப் பதிப்பாகியுள்ளது. இது "பச்சை நரம்போடிப் படர்ந்து கொண்ட" எனவமைதல் வேண்டும்.

"நரம்" என்பது "நாம" எனவும், "போடி" என்பது "பொடி" எனவும் தவறாகக் கொள்ளப்பெற்றது.

"ஆழிவளைக் கரதலத்தான்" என்ற பகுதி "ா" என்ற காலுக்கும், 'ர' என்ற இடையின உயிர்மெய்க்கும் வேறுபாடறியாமையால் "ஆழிவளைக் காதலத்தான்" எனப் பிரதிசெய்யப்பெற்றது.

கல்வெட்டெழுத்துக்களிலும் இதுபோன்ற குழப்பமுண்டு. "ஸ்ரீகொதைகொளவனமன என்ற பகுதி - ஸ்ரீகொதை கொள்வன்மன்" எனப் பேர்த்தெழுதப் பெற்றுள்ளது. ஆனால் இது உண்மையில் ஸ்ரீகோதை கேரளவன்மனாகும்.

ஏட்டில் பிரதிசெய்கையில் இவ்விதம் ஏற்படும் குறைகளை யாப்பின் உதவியுடன் பொருளும் கண்டு சீர்திருத்த வேண்டும்.

இனிச் சுவடிப் பதிப்பு நெறிமுறை பற்றிக் கவனிப்போம். பதிப்பிக்க எடுத்துக்கொள்ளும் சுவடியைச் சுவடிப் பயிற்சியின் துணைகொண்டு, சுவடியிலுள்ள நூல், பாட்டியல் வகையின் எந்த வகையைச் சார்ந்ததென அறிந்து யாப்பிலக்கண அடிப்படையில் அதற்குரிய வடிவுடன் பிரதிசெய்தல் வேண்டும். பிரதிசெய்யும்போது சில இடங்கள் சிதைந்திருப்பின்.......... எனப் புள்ளியிட்டுக் காட்டலாம். அல்லது, அதே நூலின் வேறு சுவடி கிடைப்பின், அதன் உதவியுடன் நிரப்பலாம். பதிப்பாசிரியரே தம் ஊகத்தினால் நிரப்புவதாயின்,[ ] எனப் பகர வளைவிட்டு, அதற்குள் ஊகித்தவற்றை எழுதவேண்டும். ஒரு சுவடியைப் பதிப்புக்கு மூலப்பிரதியாகக் கொண்டு, பிற சுவடிகள் கிடைப்பின், ஒத்துப் பார்த்துப் பிழைகளைச் செப்பம் செய்யலாம். பாடபேதங்கள் காணப்பெறின், அவற்றைப் பாடலின் கீழ், அடிக்குறிப்பில் காட்டவேண்டும். மூலப்பிரதியைத் தயார்செய்தபின் நூலுக்குச் சொல்லடைவு தயாரித்தல் மிகவும் முக்கியம். இந்தச் சொல்லடைவால், நூலின் பிழையான பகுதிகள் திருந்த வாய்ப்புண்டு. இப்போது அப்படிச் செய்யாமல், நூல் அச்சானபிறகு, அச்சுப் பிரதியின் சொல்லடைவு பின்னிணைப்பாக வருகிறது. இது தவறு. இந்தச் "சொல்லடைவு" நூல் பற்றிய ஆராய்ச்சி முன்னுரைக்குப் பெரிதும் உதவும்.

நூலைப் பதிப்பிக்கும்போது, பாடலை முதலில் பதித்து, அதன்கீழ் பொழிப்புரை, குறிப்புரை வரையவேண்டும். இவ்வுரையின்கீழ், அரிய சொற்களுக்கு விளக்கமும், மேற்கோளும் அமைதல் வேண்டும். மேற்கோள், கூடியவரை பதிப்பிக்கும் நூலிற்கு முன்வந்த நூல்களிற் பழமையான நூலிலிருந்து காட்ட வேண்டும். பல மேற்கோள்கள் காட்ட விரும்பினால், அவை, கால அடிப்படையில் அமையவேண்டும். சில பழந்தமிழ் நூல்களுக்கு முந்திய கால நூல்களிலிருந்து மேற்கோள் காட்ட இயலாவிடின், அந்த நூலைத் தொடர்ந்துவந்த அண்மைக்காலத்து மேற்கோள்களைக் காட்டலாம்.

பாடபேதம் - அடிக்குறிப்பில் அமைய வேண்டும்.

இப்போது கிடைக்கும் தமிழ்ச்சுவடிகள் யாவும் கி.பி. 1600க்குப் பிற்பட்டவையே. எனவே இதற்கு முற்பட்ட காலத்தெழுந்த நூல்களுக்கு, மூலபாட ஆய்வுசெய்து தெளிதல் இயலாது. கூடுமானவரை கிடைக்கும் ஏடுகளைக் கொண்டு, சுத்தமான பாடமே காணலாம். நூலை வரையறை செய்து, மூலம், பொழிப்புரை, குறிப்புரை, அரும்பதவுரை, மேற்கோள், பாடபேதம் அமைத்த பின் முன்னுரை வரைதல் வேண்டும்.

முன்னுரையில், 1. பதிப்பிக்க எடுத்துக் கொண்ட நூலின் இலக்கணத்தை முதலிற்கூறிப் பின்னர், 2. நூல் இன்ன செய்தி தருகின்றது எனக் கூறவேண்டும். இப்பகுதியில் பாட்டுடைத் தலைவன் பற்றிய செய்திகள், சிறப்புக்கள், எல்லாவற்றையும் பிற நூற்செய்திகளையும் கூறவேண்டும். நூலைப் படிப்பவர்கள், பாட்டுடைத் தலைவன் பற்றிய, நூலைப் பற்றிய செய்திகள் அறியப் பிற நூலைத் தேடாத வகையில், இப்பகுதி அமைதல் வேண்டும். 3. இதில், நூலைப் பற்றிய செய்திகள் - நூலாராய்ச்சி அமைதல் வேண்டும். இதற்குச் சொல்லடைவு மிகவும் பயன்தரும். 4. அடுத்து, நூலாசிரியர் வரலாறு கூற வேண்டும். 5. சுவடி பற்றிய செய்திகளும், 6 நன்றியுரையும் அமைய வேண்டும்.

நூலின் பின்னிணைப்பாகப் பாடல் முதற்குறிப்பகராதி, அருஞ்சொற் பொருளகராதி, துணை நூற்பட்டியல், மேற்கோளாகக் காட்டும் நூற்களின் சுருக்க விளக்கம் அமைதல் வேண்டும்.

சுவடிப் பயிற்சி - சுவடிப் பதிப்பு நெறிமுறை பற்றி இது ஒரு கன்னி முயற்சி. இந்தத் தொடர்ந்து, அறிஞர்கள் சிறந்த நெறிமுறைகளை வகுக்கலாம் என்ற ஆசை பற்றியே இவற்றை கூறலானேன். கன்னிமுயற்சியாதலால், குறைகள் இருக்க வாய்ப்புண்டு.

"குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்"

என்ற எண்ணத்தில் இக்கட்டுரையை ஏற்கவேண்டும்.

# எழுத்து வரிவடிவும் திரிபுகளும்

ச. பாலசுந்தரம்

இருதிணைப் பொருளையும் அவற்றின் நிலைகளையும் இயக்கங்களையும் ஒருவர் ஒருவர்க்குப் புலப்படுத்த மக்களான் தோற்றுவிக்கப்பட்ட மொழி முதற்கண் செவிப்புலனாகும் ஒலிக்கூட்டங்களான் ஆக்கம் பெற்றதாகும். அது கொண்டு பல்லாண்டுகட்குப் பின்னர்க் கட்புலனாக உருவாக்கப்பட்டதே எழுத்துமொழியாகும். பேச்சுமொழி முன்னிலை இடத்திற்கும், நிகழ் காலத்திற்கும் மட்டும் பயன்பட்ட நிலையினின்றும் வளர்ந்து படர்க்கையிடத்திற்கும் எதிர்காலத்திற்கும் பயன்படவேண்டிச் சமைத்துக் கொள்ளப்பட்டது எழுத்துமொழியாகும். எழுத்துமொழி அழியாததாகும். அதனை அழியாமற் காப்பது எழுதப்படும் கருவிகளைப் பேணும் நிலையைப் பொருத்ததாகும்.

வரிவடிவ எழுத்துக்களின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றிய வரலாறு யாவரும் ஏற்கும் வண்ணம் தெளிவுபடக் கூறற்கு அரியதொன்றாக உள்ளது. ஒரு பொருளையோ சுருக்கத்தையோ சொல் வடிவான் உணரவும், உணர்த்தவும் இயன்றதொரு காலஎல்லையிற்றான் அச்சொல்லுக்கு வரிவடிவ அடையாளம் அமைக்கும் சிந்தனை தோன்றும். முதற்கண் ஒரு சொல்லுக்கு ஓர் அடையாளமாக அமைந்து பின்னர் எழுத்தொலி அடையாளங்கள் தோன்றும். அங்ஙனம் எழுத்துக்களை வகைப்படுத்தி அவற்றிற்கு வரிவடிவம் அமைப்பது என்பது ஓர் அரிய செயலேயாகும்.

அங்ஙனம் ஒரு மொழியின்கண் முதற்கண் அமைத்துக் கொள்ளப்பட்ட வரிவடிவம் எழுதும்கருவி, எழுதப்படும் கருவி வளர்ச்சிகட்குஏற்ப வேறுபடும். கையால் எழுதும் பயிற்சிக்கு ஏற்பக் காலந்தொறும் வேறுபடும். அங்ஙனம் வேறுபட்டு வளர்ந்து ஒரு காலத்திற் செம்மையுறும். செம்மையுற்ற வடிவங்கள் மக்களின் அறிவு வளர்ச்சிக்கேற்பத் திருத்தங்களும் பெறும். மேற்கூறிய கருத்துக்கள் உலக மொழி யாவற்றிற்கும் பொதுவானதொரு மரபாகும்.

தமிழ்மொழியமைப்பினையும் அதனைக் கையாளும் முறைமையையும் பற்றி அறிவியலடிப்படையில் மிக நுட்பமாகவும் தெளிவாகவும் இலக்கண நெறியான் வகுத்துக்கூறும் தொல். காப்பியம் தனக்கு முன் வழங்கிய பல நூல்களையும் நூன்மரபுகளையும் சுட்டிக் கூறுவதனை நோக்குமிடத்து இன்றைக்கு மூவாயிரம் ஆண்டுகட்கு முன்பே தமிழில் செம்மையான எழுத்து வரிவடிவங்கள் அமைந்திருத்தல் வேண்டுமென்பது புலனாகிறது.

எனினும் வரலாற்றுக் காலத்திற்கு முன்னைய வரிவடிவங்களையோ தொல்காப்பியர் கால வரிவடிவங்களையோ இன்றைக்குக் கட்புலனாக அறியக்கூடிய ஆதாரங்கள் ஒன்றுமில்லை. காரணம் எழுதப்படும் கருவிகள் காலத்தால் அழியும் தன்மையுடையனவாக அமைந்தமையேயாம். கல் எழுத்துக்களும் காலத்தான் அழிதற்கும் மறைதற்கும் உரியனவேயாம். செம்பு முதலாய மாழைகளில் எழுதியனவும் அவ்வாறேயாம், மாழைகள் அழிக்கப்படுவதற்கு உரியனவாகும்.

இன்றைக்கு அழிவினின்று உய்ந்து கிடைத்துள்ள கல்வெட்டுக்களானும் சங்ககால இலக்கியங்களானும் வரிவடிவ எழுத்துக்களைப் பற்றியும் அவை எழுதப்பெற்ற முறைகள் பற்றியும் எழுதப்பட்ட கருவிகள் பற்றியும் ஓரளவு தெரிந்து கொள்ளலாம்.

விழுத்தொடை மறவா வில்லிடத் தொலைந்தோர்
எழுத்துடை நடுகல் (ஐங். 352)
செல்லுந்த தேயத்துப் பெயர்மருங் கறிமார்
கல்லெறிந் தெழுதிய நல்லரை மராஅத்த (மலைபடு. 395)
கூருளிகுயின்ற கோடுமாய் எழுத்து (அகம். 297)

என்றாற்போலப் பயின்றுவரும் சங்க இலக்கியத் தொடர்கள் வரிவடிவ எழுத்தினைப்பற்றி ஐயமற அறிவிக்கின்றன.எனினும் சான்றுகளோடு தெளிவாக அமைந்த எழுத்து வரிவடிவங்கள் கி.பி. க்குப் பின்னர்தான் கல்வெட்டு, செப்பேடு, ஓலைச்சுவடி ஆகிய கருவிகள் வாயிலாக நமக்குக் கிட்டியுள்ளன. அவற்றுள்ளும் ஓலைச்சுவடிகளைப் பொறுத்தவரை 16-17 ஆம் நூற்றாண்டுகளில் அமைந்தவையே பழமையானவையாக உள்ளன. காரணம் ஓலைகள் மடிந்து ஒடிந்து சிதையும் இயல்பினவாதலான் என்க.

இதுகாறும் கூறிய சில குறிப்புக்களான் வரிவடிவங்கள் காலந்தோறும் திருத்தம் பெற்று அமையும் தன்மையன என்பது விளங்கும்.

பண்டை நூல்களை ஓலைச் சுவடிகளில் எழுதிப் பயிலும் மாணாக்கர் அவற்றைப் படி எடுக்குந்தொறும் சில குறை நிறைகள் நேரலாம். அதனான் பாடத் திரிபுகள் உண்டாவது இயல்பே. அங்ஙனம் ஒரு நூல் காலந்தொறும் ஓலைகளிற் பெயர்த்து எழுதப்பட்டு எழுதப்பட்டு வந்து இற்றை நாம் காணும் வடிவத்திற்றோற்றமளிக்கின்றது. உலோக அச்சு எழுத்துக்கள் கண்டுபிடிக்கப்பெற்று அச்சிடத் தொடங்கிய காலத்தில் உள்ள வரிவடிவங்களும் காலந்தொறும் மாறி வந்துள்ளமையைக் காணலாம்.

இற்றைக்குப் பன்னூறாண்டுகட்கு முன்பிருந்தே இலக்கண இலக்கிய நூல்களைவரிப்படுத்தப் பெற்ற ஓலைகளில் எழுதப்பெற்று வந்துள்ளமையைச் சங்கப்பாக்களுள் வரும் குறிப்புக்களான் அறியலாம். இற்றைக்கு அச்சுவாயிலாகப் பதிவு செய்யப்பெற்று நாம் பயிலும் நூல்கள் யாவும் ஓலைச் சுவடிகளினின்றும் சிறுபான்மை கல்வெட்டுப்படிகளினின்றும் பெயர்த்தெழுதிப் பதிவு செய்யப்பெற்றவையே. தமிழ் எழுத்துகளான் ஆன ஓலைச்சுவடிகள் இற்றைக்கு உலகில் பல்வேறு நாடுகளில் கல்விக்கூடங்களில் உள்ளன. நமது நாட்டிலும் பல்வேறிடங்களில் நூற்றுக்கணக்கான சுவடிகள் உள்ளன. அண்மையில் தமிழ் வளர்ச்சி கருதித் தோன்றிய தமிழ்ப்பல்கலைக்கழகம் அதற்கென்றே ஒரு புலத்தை நிறுவி அரிய ஓலைச் சுவடிகளைத் திரட்டி ஆராய்ந்து வேண்டுவனவற்றை வெளியிடும் பணியை மேற்கொண்டு அரும்பணியாற்றிவருவதை நாமறிவோம். இற்றைக்குத் தமிழ்ப்பல்கலைக்கழகத்தில் மட்டும் இலக்கியம், இலக்கணம், மருத்துவம், சோதிடம் முதலாய பல துறைப்பட்ட ஓலைச் சுவடிகள் 1725 உள்ளன.

இனி ஏடு பெயர்த்து எழுதுவோர் யாவரும் அந்நூற் பயிற்சியுடையார் எனற்கியலாது; கூலி பெற்று எழுவோரும் உண்டு. இந்நிலையிற்றான் பாடவேறுபாடுகளும் பிழைகளும் தோன்றும். பெயர்த்தெழுதுவோர் தம் அறிவாற்றலுக்கேற்பச் சில பல திருத்தங்களைச் செய்துகொள்வதும் சிலவற்றைக் கூட்டுவதும் குறைப்பதும் செய்தல் இயற்கையே. மேற்கூறிய பல நிலைமைகளுக்குட்பட்டவையே இன்று நாம் அச்சிட்டுப் பயிலும் பழந்தமிழ் நூல்கள்யாவும்.



இருக்கும். மாணாக்கரின் தரத்திற்கேற்ப அவற்றுள் சில மாற்றங்கள் அமையும். இவ்வாறே காலந்தோறும் பயில்வோருக்குத் தக்கச் சுவடிகள் பெருகும் அருகும்.

இனி ஏடு பெயர்த்து எழுதுவோர் யாவரும் அந்நூற் பயிற்சியுடையார் எனற்கியலாது கூலி பெற்று எழுவோரும் உண்டு. இந்நிலையிற்றான் பாடவேறுபாடுகளும் பிழைகளும் தோன்றும். பெயர்த்தெழுதுவோர் தம் அறிவாற்றலுக்கேற்பச் சில பல திருத்தங்களைச் செய்துகொள்வதும் சிலவற்றைக் கூட்டுவதும் குறைப்பதும் செய்தல் இயற்கையே. மேற்கூறிய பல நிலைமைகளுக்குட்பட்டவையே இன்று நாம் அச்சிட்டுப் பயிலும் பழந்தமிழ் நூல்கள்யாவும்.

## ஓலை எழுத்தும் ஒப்புமைவடிவமும்

எழுத்தொலிகளை உணர்த்தும் வரிவடிவ அடையாளங்கள் யாவும் கையினால் வரைந்து எழுதுவதற்கேற்ப அமைத்துக் கொள்ளப்பட்டவையே ஆகும். அவையாவும் வட்டம், கோணம், சதுரம், கீற்று, . புள்ளி, ஒற்று என்னும் அடிப்படை வடிவங்களைக்கொண்டு அமைந்தவையே. ஒரு மொழிக்கண் வரையறைப்பட்ட எழுத்தொலிகள் எவ்வளவோ அவ்வளவு அடையாளங்கள் அமையும். எழுத்துக்களின் எண்ணிக்கைப் பெருக்கிற்கேற்ப அடையாள வேறுபாடுகள் நுட்பமாக அமையும்.

இனி எழுத்து அடையாளங்கள் எழுதும் கருவி, எழுதப்படும் கருவிகளுக்கு ஏற்பவும் அமையும். கல்லிற் பொறிக்கப்படும் அடையாளத்திற்கும், செம்பு முதலாய தகடுகளில் செதுக்கப்பெறும் எழுத்தடையாளத்திற்கும், திரைச்சீலை அல்லது துணிகளில் எழுதப்பெறும் அடையாளத்திற்கும், ஓலைகளில் வரையப்பெறும் அடையாளத்திற்கும் வேறுபாடுகள் உண்டு. சில கூறுகளைத் தவிர பல கூறுகள் வேறுபடும். கல்லெழுத்துக்கள் ஒன்றோடு ஒன்று பிணைக்கப்பெறா. தகட்டிற் சிறுபான்மை பிணைக்கப்பெறும். ' எனவே கையெழுத்துக்கள் பிற எழுத்துகளின்றும் பெரிதும் வேறுபட்டமையும் என்பதை நினைதல் வேண்டும். மற்றும் வட்ட வடிவங்கள் கல்லெழுத்துக்களில் தவிர்க்கப்பெறும். நேர்க் கீற்றும், வளைக்கீற்றும் புள்ளியுமே பயின்றுவரும். ஓலையில் வட்ட வடிவங்கள் பயின்று வரும். புள்ளியும் ஒற்றும் தவிர்க்கப்பெறும்.

இனி எழுத்து வடிவங்களைப் பொறுத்தவரை கிழக்காசிய மொழி எழுத்துக்கள், மேற்காசிய மொழி எழுத்துக்கள், ஐரோப்பிய, அமெரிக்க மொழி எழுத்துக்கள், இந்திய மொழி

எழுத்துக்கள் என நான்கு வகையாகப் பிரிக்கலாம். ஒவ்வொன்றும் தமக்குள் பெரிதும் வேறுபாடுடையவை. இந்திய மொழிகளுள் தென்னிந்திய மொழி எழுத்துக்கள் ஏறத்தாழ ஒரு நெறியினை உடையவையாகும். அவற்றுள் தமிழ் மொழி எழுத்துக்களை மட்டும் சிறிது காண்போம்.

தமிழ் மொழியில் அடிப்படை எழுத்துக்களும் அவற்றின் வடிவங்களும் தனியாகவும் இணைத்தும் எழுதப்பட்டு வந்துள்ளன. அஃதாவது உயிரெழுத்து வடிவம், மெய்யெழுத்து வடிவம் இரண்டும் கூடிய உயிர்மெய் எழுத்துவடிவம். அம்முறையான தமிழில் வரிவடிவம் பல்கியதொடல்லாமல் சிக்கலுக்கும், உட்படுவனவாயின். உயிரெழுத்து வடிவங்களுள் எ, ஏ, ஒ, ஓ, என்பவையும் மெய்யெழுத்து வடிவங்களுள் கசத-ஞந-பயமழ-லவ-ளணற என்பவையும் பெரிதும் ஒற்றுமை உடையவை. உயிர்மெய் வடிவ அடையாளங்கள் யாவும் ஒரு நெறிமுறை உடையனவல்ல காரணம் குழப்பமின்றி வரைந்துணரவேண்டிப் பல்வேறு நெறிகளில் அமைக்கப்பெற்றமையேயாகும். உயிர்மெய் ஆகார நெட்டெழுத்தின் துணைவடிவமும் மெய்யுள் இடையினரகரமும் ஒற்றுமையுடையவை, இவை யாவும் ஓலை எழுத்துக்களில் அமைந்துள்ள வடிவம் பற்றியவையாகும். இன்றைய அச்சுவடிவங்களும் அவற்றைச் சாந்தவையேயாகும்.

தமிழ் மொழி எழுத்து வடிவங்கள் தனித்தனி வடிவங்களேயாயினும் கையால் எழுதுவோர் அவற்றைப் பிணைத்து எழுதும் வழக்கினை மேற்கொண்டமையான் பல சிக்கலுக்கு உட்படுவனவாயின. மேலும் தமிழ் மொழி ஓசையை அடிப்படையாகக் கொண்டதாதலின், புணர்ச்சி விகாரங்களுக்கு உட்படும் கட்டுப்பாட்டினதாக உள்ளது. அவ்வகையில் ஓலைச் சுவடியைப் படிப்போரும் படியெடுப்போரும் பிழை புரிதற்கு வாய்ப்புடையதாயிற்று.

சில எடுத்துக்காட்டுகள்

| | |
|---|---|
| உடம்படுமெய் | : நாவாடிற்று - நா ஆடிற்று |
| பிறழ்பிரிப்பு | : பணியாரம்மா - பணியாரம் மா; மாதேவா - மா தேவா, |
| குற்றுகரப்பிரிப்பு | : மருதுவந்தான் - மருது உவந்தான் வந்துஆட்கொண்டான் - வந்தாள் கொண்டான் |

| | |
|---|---|
| னகரப்புணர்ச்சி | : அவனல்லன் - அவன் நல்லன், அவன் அல்லன் |
| னகரப்புணர்ச்சி | : கண்ணீர் வந்தது - கண்நீர் - கள்நீர் |
| இலக்கணம் அறியார் | : மலர்கழல் - மலர்க்கழல் |
| அரைகுறையறிவோர் | : வயிறு - வயறு, மன்னன் - மண்ணன், கவிஞர்கோயிலன் - கவிஞர்கோ இலன் |
| கல்லார் செய்பிழை | : - எழுத்துமாற்றம் : ஆலிநாடர் - ஆவிநாடார்பாடுபெற்றார் - மாடுபெற்றார், நாகுயர்ந்தது - நாடுயர்ந்தது, பொருது சென்றான்- பொறாது சென்றான், கன்னிவந்தாள்- கள்ளிவந்தாள் பாடிவீடு-மாடிவீடு |
| பொருள் மாற்றம் | : அலம்படுவென்றி-வளம்படுவெற்றி, அளிக்கத்தக்கவன் - அழிக்கத்தக்கவன், கொளைவல்பாணன், - கொலைவல்பாணன், கட்டூர் சென்றான் - காட்டூர்சென்றான், கழுதுநீண்டது - கழுத்துநீண்டது, தொல்செருவு - தோல்செருப்பு |
| சுவடி எழுத்துணராமை | : பரவினான் - பாவிநான், காமலர் - கரமலர், |
| நன்வாய்ச்சென்றான் | : நனவாய்ச்சென்றான், நேர்வாய் என்றான் - நோவாய் என்றான். |

இவ்வாறு நேரும் பிழைகளை ஓர்ந்து ஓலைச்சுவடிகளைப் பயின்றறிதல் வேண்டும்.

# பாடவேறுபாடும் பாடத்தெரிவும்

த.கோ. பரமசிவம்

'எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான்
படித்தவன் பாட்டைக் கெடுத்தான்'

என்னும் பழமொழி மிகப்பரவலாகவும், மிகமிகச் சாதாரண நிலையிலும் வழங்குகிறது. இப்பழமொழி எல்லாவகைப்பட்ட நூல்களிலும் பாடவேறுபாடுகள் தோன்றுவது இயல்பு, தவிர்க்க முடியாதது, அவ்வக் காலத்தே கூடத் தோன்றமுடிந்த விரைவைக் கொண்டது என்பவற்றைத் துல்லியமாகக் காட்டவல்லதாம்.

பாடவேறுபாடுகளும் பாடத்தெரிவும் என்னும் இக் கட்டுரையில் ஒரு நூலின் படிகளாகக் காணப்பெறும் சுவடிகளில் அமைந்த பாடவேறுபாடுகள் தோன்றும் சூழலையும் அப்பாடங்களுள் மூலபாடமாகக் கருதத்தக்க - சிறந்த பாடமாகக் காணத்தக்க பாடத்தைத் தேர்வு செய்வதற்கு வேண்டிய வழி முறைகளையும் காண்போம்.

## பாடவேறுபாடு தோன்றும் விதம்

பனிமலையிலிருந்து உருண்டு வரும் பனிக்கட்டி அடிவாரத்துக்கு வருமுன் பல்வேறு மாற்றங்களை அடைதல் கண்கூடு. வடிவச் சிதைவும் வடிவமாற்றமும் அடைவதோடு அளவில்கூட அது மாற்றத்தையடைய நேரிடும். அப்பனிக்கட்டி பல பொருள்களுடன் கூடித்திரண்டு பெருத்துவரலாம். பாறைகளில், மரங்களில் மோதி உடைந்து சிதறிச் சிறுத்தும் வரலாம். ஒரு காலத்தில், ஒரு தலைமுறையில் தோன்றிய நூல்களும் கால இடையீடுகளுக்குப் பின்பும், தலைமுறையிடையீடுகளுக்குப் பின்பும் பல்கியும், சிறுத்தும் வேறுபட்டு வடிவ வேறுபாடுகளுடன் காணப்படுதல் இயல்பு.

ஆயின் மனிதனுக்கிருக்கின்ற பகுத்தறிவும், அதைச் சார்ந்த நினைவாற்றலும் இவ்வேறுபாடுகளைத் தவிர்க்கப் பெரிதும் துணை நிற்பன. எனினும் சில நேரங்களில் இவையே வேறுபாடுகளைத் தோற்றுவிக்கவும் துணை செய்கின்றன எனத் தோன்றுகிறது.

நம் காலத்தில் நம் கையெழுத்தைப் பார்த்துத் தட்டச்சு செய்யும் போதும், அச்சுக்கோக்கும்போதும், அல்லது தட்டச்சுப்படியைப் பார்த்து அதை அச்சுக்கோக்கும்போதும் எம்பெருமான் என்பதை எழபெருமான் எனவும், கதலிவாழை என்பதைக் காதலிவாழை எனவும், தேவாரத் திரட்டு என்பதைத் தேவாரத் திருட்டு எனவும், சிந்தனை என்பதை நிந்தனை எனவும் பல்வேறுவகைப்பட்ட எழுத்துப் பிழைகளைச் சந்தித்து அதனால் பொருள் விபரீதங்களையடைந்து வருந்துகிறோம். அவ்வாறெனில் எப்போதோ தோன்றிய நூல்கள் வாய்மொழியாகக் கேட்கப்பெற்றும், எழுதப்பெற்றும், திருத்தப்பெற்றும் மீண்டும் மீண்டும் காலயிடையீட்டுக்குள்ளான தலைமுறைகளால் படி எடுக்கப்பெற்றும் வருகின்றன. அத்தகு நூல்களில் - அச்சுக்கலையும் பதிப்புக்கலையும் தோன்றாத காலத்துப் பாடவேறுபாடுகள் தோன்றுவது இயல்பே. பாடவேறுபாடுகள் தோன்றாதிருப்பதுதான் வியப்புக்குரியது.

பாடவேறுபாடுகள் தோன்றுவதற்கு அடிப்படையே மொழியின் ஒலியமைப்புதான் என்றால் அது மிகையாகாது. நெருங்கிய ஒப்புமை கொண்ட ஒலியமைப்பும், மிக நுட்பமான வேறுபாட்டைக் கொண்ட ஒலியமைப்பு முறையும்தான் ஒன்றை மயங்கிக் கேட்பதற்கும், புரிந்து கொள்வதற்கும், மயங்கிய நிலையிலேயே எழுதுவதற்கும் காரணமாக அமைகின்றன. மனம் என்பதும் மணம் என்பதும் கிட்டத்தட்ட ஒலியமைப்பில் ஒன்றுபோலவே தோற்றமளிப்பன. பனி-பணி, வால்-வாள்-வாழ், அனு-அணு, பரவை-பறவை போன்றன நுட்பமான ஒலிவேற்றுமை கொண்டன. இவை ஒன்று மற்றொன்றாகக் கருதப் பெற்றால் எவ்வளவோ பொருள் மாறுபாட்டை விளைவித்து விடுவனவாம். நுண்ணிய ஒலி வேறுபாடுகளையுடைய எழுத்துக்கள் மிகுந்துள்ள மொழிகளின் நூல்களில் இத்தகு பாடவேறுபாடுகள் மிக்கிருப்பது தவிர்க்க முடியாததாம். மூலபாட ஆய்வில் பாட வேறுபாடுகள் தோறும் காரணங்களை அறிந்துகொள்ளாமல் பாடத்தெரிவில் நுழைவது அடிப்படையில்லாமல் கட்டடம் கட்டுவது போன்ற சிக்கலை உருவாக்குவதாம்.

## வாய்மொழி நூல்கள்

உலக மொழிகளுள் பெரும்பாலன தொடக்ககாலத்தில் வாய்மொழி வழியாகவே நூல்களைப் பரவச் செய்தன. (பைபிள், எழுதப்பட்ட காலம் அது எழுந்த காலத்தைவிட மிகமிகப் பிந்தியதாகும்). நம் பாரத நாட்டின் பழம்பெரும் காவியமான மகாபாரதம் தோன்றிய வரலாறு இக் கருத்தை அரண் செய்தல் நோக்கத்தகும்.

வியாசர் மகாபாரதக் கதையைத் தம் 5 சீடர்களுக்கும் மொழிந்தார். அவர்கள் அதனை ஆங்காங்குச் சொற்பொழிவாகப் பரவச் செய்தனர். அவர்கள் தாம் சென்ற நாடு, திசை, மொழி, கேட்கும் மக்கள், சூழல் இவற்றையொட்டித் தம் விளக்கங்களை மாற்றித்தான் பரப்பியிருப்பர். ஆகத் தொடக்க காலத்திலேயே - வியாசர் காலத்திலேயே 5 வகைப்பட்ட பாரதக்கதை உருவாக்கப்பட்டுவிட்டது எனலாம். அதாவது ஒன்று ஐந்தாக, ஐந்து பத்தாக, பத்து நூறாக என அக்கதை நாடுமுழுவதும் பரவப் பரவப் பல்கிப் பெருகிவிட்டது. அடிப்படை ஒன்றாக அமைந்தாலும் இடம், காலம், சூழல், மொழி, அரசியல், கேட்போர் அறிவு முதலான பல்வேறு சூழல்களுக்கு ஏற்பச் சொற்பொழிவாளரின் மொழித்தன்மை, கற்பனைச்சூழல், பாத்திரப்படைப்பு விளக்கக்கதைகள் ஆகியன மாறிவிட்டன. இச்சூழலுடன் காலந்தோறும் மாறிவந்த மொழிமாற்றங்கள் எழுத்துமாற்றங்கள், நாகரிகப் பழக்க வழக்கங்கள் இவையும் அக்கதையில் ஊடுருவிவிட்டன. அதாவது இம்மாற்றங்கள் ஏதோ சொற்களில் மட்டும் நிகழ்ந்துவிடவில்லை. சுலோகங்களின் எண்ணிக்கை, கதையமைப்புகளில் கூட பெரும் மாற்றத்தை உருவாக்கிவிட்டன.

சான்றாக மகாபாரதத்தின் ஆதிபருவத்தைக் காண்போம்.

| | |
|---|---|
| கல்கத்தா பதிப்பு | : 8,460 சுலோகம் |
| பம்பாய்ப் பதிப்பு | : 8,620 சுலோகம் |
| சென்னை சாஸ்திரியார் பதிப்பு | : 9,984 சுலோகம் |
| கும்பகோணப் பதிப்பு | : 10,889 சுலோகம் |
| சாரதா சுவடி | : 7,984 சுலோகம் |

அதாவது குறிப்பிட்டுச் சொல்லும் சிறப்புடைய பதிப்புகளிலும் சுவடிகளிலும் கூட இவ்வளவு பெரிய மாற்றங்கள் காணும் போது பாடவேறுபாடுகளின் தோற்றத்தை நாம் ஓரளவு

கணிக்க முடியும். விரிவான மாற்றங்களைக் சுத்தாங்கரின் மகாபாரதப் பதிப்பில் காணலாம்.

நம் தமிழ் மொழியின் நூல்களும் இவ்வாறு வாய்மொழியாகவே பரவத் தொடங்கிய சூழலை நாம் பல்வேறு சான்றுகளால் தெளியலாம். இந்நூல்கள் தோன்றி 1,000 ஆண்டுக் கால இடைவெளிக்குப் பின்பும் எழுத்துவடிவம் பெறுவதுண்டு. அதுவரை அது வாய்மொழியாக - செவிவழிச் செய்தியாகவே பரவி நிலைத்திருக்கும்.

இறையனார் அகப்பொருள் உரை தோன்றிய வரலாறு இதனை அரண் செய்தல் காணலாம்.

> "மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் தம் மகனார் கீரங்கொற்றனார்க்கு உரைத்தார். அவர் தேனூர்க் கிழார்க்கு உரைத்தார், அவர் படியங் கொற்றனார்க்கு உரைத்தார், அவர் செல்வத்தாசிரியர் பெருஞ்சுவனார்க்கு உரைத்தார், அவர் மணலூர் ஆசிரியர் புளியங்காய்ப் பெருஞ்சேந்தனார்க்கு உரைத்தார், அவர் செல்லூராசிரியர் ஆண்டைப் பெருங்குமாரனார்க்கு உரைத்தார், அவர் மாதவனார் இளநாகர்க்கு உரைத்தார், அவர் திருக்குன்றத்தாசிரியர்க்கு உரைத்தார் அவர் முசிறியாசிரியர் நீல கண்டனார்க்கு உரைத்தார்"

என ஒன்பது தலைமுறையினர் வரை வாய்மொழியாக வளர்ந்து வந்த செய்தியைக் காண்கிறோம்.

இவ்வாறே சங்க இலக்கியக் குறிப்புகளில் காணப்படும் தொகுத்தார் தொகுப்பித்தார் போன்ற செய்திகளும் வாய்மொழியாகப் பரவிய நூல்கள் சில காலத்துக்குப் பின்பே எழுத்துவடிவம் பெற்றன என்பதை உறுதி செய்கின்றன.

படிஎடுத்தல்

வாய்மொழியாகக் கேட்டு எழுதும் பழக்கத்தைத் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் வரலாற்றிலும் நாம் காணலாம். எழுதுகிறவர் ஒய்ந்து போகுமளவிற்கு ஆசுகவியாக, காளமேகமாகப் பாடலைப் பாடுகின்ற புலவர்கள் பெரும்பாலான நூல்களைத் தம் மாணாக்கரைக் கொண்டே எழுதுவித்தனர். மூல நூலின் தோற்றம் இந்நிலையில் காணப்படுகிறது. எழுதுவித்தபின் அவற்றைப் பிழையறப்

பார்த்தோதித் திருத்துவது நூலாசிரியர் கடனாகும். அவர் திருத்திய செய்தியினைக் கேட்டுப் பல படிகளைத் தொழில்முறை எழுத்தர்கள் உருவாக்கிப் பரப்பினர்.

நூலாசிரியரிடம் நெருங்கிப் பயின்றுவந்த மாணாக்கரின் நுண்ணறிவைப் போன்றதொரு அறிவைத் தொழில்முறை எழுத்தர்களிடம் நாம் எதிர்பார்க்க முடியாது. எனவே மாணாக்கர் எழுதிய படியைவிடத் தொழில்முறை எழுத்தர் எழுதிய படிகளில் மாறுபாடுகள் குறிப்பிடும் அளவில் புகுவதற்குப் பெரிதும் வாய்ப்புள்ளது எனக் கருதவேண்டும்.

அறிவிற் சிறந்த மாணாக்கர் கேட்டெழுதும்போதுகூட ஒலிமாற்றம் காரணமாக எழுத்துகளைப் பிழைபட எழுதுவதற்கும், கைச்சோர்வால் சொற்களிடையே சிலபல மாற்றங்களை ஏற்படுத்துவதற்கும் இடம் உண்டு. இவ்வாறே படிப்பவரின் ஒலிப்புமுறையும் ஒரு சில பிழைகளை உருவாக்குதல் கூடும். இந்நிலையில் தொடக்க காலச் சுவடிகளிலே கூட அதாவது ஆசிரியரின் காலத்தே படி எடுக்கப்பெற்ற நூல்களிலே கூட எழுத்துகளும் சொல்வடிவங்களும் மாற்றங்கண்டன என்றால் அது மிகையாகாது.

மாணாக்கர் சுவடியே இவ்வாறு மாற்றங்களை உண்டாக்குவதற்கு வாய்ப்பாக இருக்கும்போது, பொருளீட்டம் கருதித் தொழில்முறையாக விரைவாக எழுதித் தருவோரால் மாற்றங்கள் ஏற்படாதிருக்குமோ? இத் தகையோர் நூல்களை எழுதி வரும்போது படித்தவாறோ, கேட்டவாறோ அல்லது புரிந்து கொண்டவாறோ தம் மொழியறிவுக்கு ஏற்ப எழுதிவிடுவர். நினைவாற்றலால் தமக்குத் தெரிந்த நூல்களில் உள்ள சொற்களை தொடர்களை, சிலர் புகுத்திவிடுவதும் உண்டு.

ஆசிரியர் தாமே முயன்று எழுதிய சுவடியிலும், தம்மேற்பார்வையில் எழுதுவித்த சுவடியிலும் பிழைகள் குறைந்திருக்கும். பிழைகள் இல்லையெனும்படி நிறைவாக மூலப்படியாக அவை இலங்கும். மூலப் படியைப் பார்த்து ஒன்றின்பின் ஒன்றாக கால இடையீட்டுடன் பெருகிய படிகளில் பிழைகள், மாற்றங்கள் பலவாகப் பெருகி நிற்றல் இயல்பு.

முதுமுனைவர் வ. அய். சுப்பிரமணியம் அவர்கள் சுவடிப்பதிப்பில் பெரிதும் ஈடுபாடு கொண்டவர்கள், தோய்ந்த அறிவைப் புலப்படுத்தியவர்கள். அவர்கள் மூல, படி ஏடுகளைப் பற்றி பிரதிபேத ஆராய்ச்சியின் (மு. இராமகிருட்டிணன்) அணிந்துரையில் கூறும் செய்தி இவண் சுட்டத் தகுவதாம்.

"இலக்கிய ஆசிரியர் தாமே எழுதிய அல்லது பிறர் எழுதத் தாமே சரிபார்த்துத் திருத்திய பிரதியைத் தன்பிரதி (*Autograph*) என்பார்கள். இந்தப் பிரதி கிடைக்குமாயின், அந்த இலக்கியத்தின் பாடத்திற்கு இதை விட உறுதி நல்கும் வேறொரு சான்று இருக்கமுடியாது. பின்னுள்ளவர்கள் இந்தப் பிரதியைப் பலமுறை நகல் செய்திருப்பார்கள். இவ்வாறு செய்பவர்கள் மனிதர்கள். ஆகையால், அறிந்தோ அறியாமலோ பல மாறுபாடுகள் நகலில் புகுவது திண்ணம். எடுத்துக்காட்டாகப் புறநானூற்று ஏட்டை எழுத்தர் சொக்கன் நகல் எடுத்தார் என வைத்துக்கொள்வோம். அந்த நகலிலிருந்து எழுத்தர் முருகன் மீண்டும் நகல் செய்தார் என்றும் வைத்துக்கொள்வோம். ஒவ்வொரு நகலிலும் ஒரு விழுக்காடு (*Percentage*) பிழை இருக்கும் என்றும் வைத்துக் கொள்வோம். புறநானூற்றின் மூலப்பிரதி முற்றிலும் (100%) சரியாக இருக்கும். சொக்கனின் நகல் ஒரு விழுக்காடு குறையுடையதாக இருக்கும். முருகனின் நகல் 2:73 விழுக்காடு குறையுடையதாக இருக்கும். இதில் இருந்து தலைமுறை தலைமுறையாக வழங்கிவரும் இலக்கிய ஏட்டு நகல்களில் எவ்வளவு மாறுபாடுகள் மலிந்திருக்கும் என்று தெளியலாம்" (பக். 9).

இவ்வாறு தவறாகப் படிப்பதால், கைத்தவறாக, வாய்த்தவறாக, மறதியாகத் தோன்றிய பாடவேறுபாடுகள் போலவே, தமிழ் எழுத்துக்களின் கால வளர்ச்சியும் பாடவேறுபாடுகளை உருவாக்கின. குறில் நெடில் மாற்றமில்லாமை, மெய்யெழுத்துகளும் உயிர் மெய்களும் ஒன்று போலவே எழுதப்பட்டமை, ரகரத்திற்கும் காலுக்கும் (ா) வேறுபாடின்றி எழுதப்பட்டமை, ஒற்றைக் கொம்புக்கும் டுவுக்கும் வேறுபாடின்மை - இவ்வாறே கு, று, நு; டு, ரு, கு; ர, ற; து, று, நு; மு, மூ, ழு, ழூ; ன, ண; ல, ள, ழ; அ, வ, சு; ஆ, சூ; பா, ய; ப, ய; த,ச, க; போன்றன ஒன்றைப்போன்று வேறொன்றின் தோற்ற மயக்கத்தைக் கொடுத்துப் பின் பொருள்வேறுபாட்டை உண்டாக்குகின்றன. வரிவடிவில் இவற்றிடையே காணப்படும் வேறுபாடு சிறிதே. எனினும் பொருளடிப்படையில் பெருத்த வேறுபாட்டைக் காட்டுவன. அச்சுக்கலை தோன்றிய இக் காலத்தும் இவ்வெழுத்துகள் ஒன்றுக்கொன்று மயக்கமூட்டி அச்சுப்பிழைகளை உண்டாக்குகின்றனவெனில் பழைய சுவடிகளின் எழுத்து மாற்றத் தோற்றங்கள் பலவாக இருப்பது வியப்புக்குரியதன்று. ஆக இவ்வாறெல்லாம் பாடவேறுபாடுகள் தோன்றுகின்றன என்பதை முதற்கண் அடிப்படையாகத் தெரிந்துகொண்டு பாடத்தெரிவுக்குச் செல்வோம்.

## பாடங்களைத் தேர்வு செய்தல்

ஆசிரியரின் மூலம் எதுவதாக இருக்கும் என்பதை நுண்ணிதின் ஆய்ந்து தேர்வு செய்வதே பாடத்தெரிவு ஆகும். ஒருவரால் ஒரு காலத்து இயற்றப்பட்ட மூலத்தில் பிற்காலத்தில் நிகழ்ந்த மாசுகளை நீக்கி, அம் மூலத்தின் உண்மையான பொருளை நிச்சயித்து மூலத்தை நிலைபெறச் செய்தலையே மூலபாட ஆய்வு *(Textual Criticism)* என்பர்.

சுவடிகளில் இவ்வாறெல்லாம் பல வேறுபாடுகள், மாறுபாடுகள் தோன்றும் விதத்தை நம்முன்னோர் நன்குணர்ந்திருந்தனர். பாடங்களைத் தேர்வு செய்து உரை கண்டனர். தொல்காப்பிய உரைகளிலும், திருக்குறள், சிந்தாமணி, கலித்தொகை போன்ற நூல்களின் உரைகளிலும் வருகின்ற குறிப்புகள் நம் முன்னவரிடம் மூலபாட ஆய்வு சிறப்பாகக் குடிகொண்டிருந்தமையைப் புலப்படுத்துவனவாம். 'இன்னவாறு பாடம் ஓதுவாரும் உளர்', 'இன்னவாறு பாடங்கொள்வாரும் உளர்' இன்னதூஉம் பாடம், இன்ன காரணத்தால் அது பொருந்தமையறிக' என வரும் குறிப்புகள் இக்கருத்தை அரண் செய்தல் காணலாம். இவற்றினின்று வேறொரு சிறந்த குறிப்பும் நமக்குக் கிடைக்கிறது. நூலாசிரியரும் உரையாசிரியரும் தாம் பயில்வதற்கும், பயிற்றுவிப்பதற்கும் ஒரே நூலின் பல சுவடிகளை-படிகளைத் தொகுத்திருக்கின்றனர் என்பதே அது.

நூல்களைப் பதிப்பிப்பாரும் முதற்கண், தொடர்புடைய சுவடிப் படிகளைத் தொகுத்துக் காண்பது இன்றியமையாக் கடமையாகக் கொள்ளவேண்டும் என்பது நம்முன்னோர் அடிச்சுவடிட்டினின்று தெரிவதாகும். சுத்தாங்கரின் மகாபாரதப் பதிப்புக்கு நாடெங்கிலுமிருந்து 200 க்கும் மேற்பட்ட சுவடிகள் தொகுத்து ஒப்புக் காணப்பெற்றன என்பது ஈண்டுக் குறிப்பிடவேண்டிய செய்தியாகும்.

சுவடிகளும் பாடவேறுபாடுகளும் மிக மிக - ஆசிரியரின் மூலம் எது என்பதைத் துணிவதில் குழப்பமும் தயக்கமும் மிகும். பாடவேறுபாடுகள் நூல்களின் இலக்கிய இலக்கணத் தன்மைக்கேற்பவும் மாறுபடுகின்றன. அறிஞர் பெருமக்களிடம் மட்டுமே உலவித் திரிகின்ற நூல்களில் பாடவேறுபாடுகள் குறைவு. ஆயின் இலக்கிய நூல்களில் குறிப்பாக, பாமரமக்களிடம் பரவியுள்ள நாடகநூல்கள், புராணங்கள் போன்றவற்றில் பாட வேறுபாடுகள், கதை வேறுபாடுகள் மிக்குக் காணப்படுகின்றன. மகாபாரதத்தில் பாடவேறுபாடுகள் மிகுந்து காணப்படுவது அது

நாடெங்கும் பரவியதாலேயாம். நம் தொல்காப்பியத்துள் பாடமாறுபடுகள் குறைந்திருப்பதற்குக் காரணம் அது அறிஞர்தம் மத்தியில் மட்டுமே உலவியமைதான் எனலாம். அவ்வாறே மக்களிடம் அதிகம் பரவாத சங்க இலக்கியங்களில் பாடவேறுபாடுகள் குறைவு, ஆயின் மக்களிடையே அதிகமாகப் பரவிய கம்பராமாயணத்தில் பாடவேறுபாடுகள் மிகுதி. பாடல் எண்ணிக்கையில் கூடப் பெருத்த மாற்றம். சங்க இலக்கியத்துள் (குறுந்தொகை 400 என்பதற்கு 420 என்றோ 500 என்றோ மாறுபடுமளவிற்கு ) பாடல் எண்ணிக்கை மாறுபாடுகள் காணப்படவில்லை. கம்பராமாயணத்தில் ஒரு படலத்திலேயே கூட நூற்றுக்கணக்கான பாடல்கள் மாறுபடுகின்றன. இந்த அடிப்படையை மனதில் இருத்தி முதற்கண் ஏடுகளைத் தொகுத்தல் வேண்டும்.

ஏடுகளைத் தொகுத்தபின் 'அவற்றை இனங்காண முடியுமா? என்னும் ஆய்வில் ஈடுபட்டு ஏடுகளின் கொடிவழியைக் காணல் வேண்டும். இதற்கு இது மூலமாக இருக்குமா? எழுத்தமைதியாலும், ஓலைகளின் பழமையாலும் ஏட்டின் பழமையை நிச்சயித்து அந்த அடிப்படையில் தலைமை ஏடு ஒன்றை மூலமாகக் கருதி பாடங்களைத் தொகுத்தல் பயனுடையதாக அமையும். ஏடுகளை வகைப்படுத்தி இனம் காணப் பெற்றால்தான் ஏடுகளின் மொழிநிலை உறுதியாகும். ஏடுகளில் காணப்படும் ஒற்றுமைப்பகுதிகள் ஒன்றுபோல அமைவதைக் கண்டு இனம்பிரிக்கலாம். வேற்றுமைப் பகுதிகள் ஒன்றாக, தவறுகளும், பிழைகளும் குறையும் ஒன்றாகவே அமைவதையொட்டியும் இனம்பிரிக்கலாம். ஏடுகளைத் தொகுத்தபின் அவற்றின் உள்ளே காணப்படும் முற்குறிப்பு பிற்குறிப்புகளை ஆய்தல் வேண்டும். அவற்றுள் காணப்படும் காலம், எழுதியவர் வரலாறு போன்ற குறிப்புகள் ஏட்டின் தரத்தை நிச்சயிப்பதற்குப் பெரிதும் பயன்படுவதாகும். காலப்பழமைக்கு அகச்சான்றையும் புறச்சான்றையும் உறுதிப்படுத்தியபின் அவற்றின் கொடிவழியைக் கண்டு பாடவேறுபாடுகளின் புள்ளி விவரத்தைக் கணக்கிடலாம்.

பாடவேறுபாடுகளைத் தொகுத்தபின் பழைய உருவத்தை மீட்டுருவாக்கம் செய்யமுடியுமா என்பதில் தலைப்படுதல் வேண்டும். அவ்வாறு தலைப்படும்போது ஒற்றுமையான பாடங்கள், சற்று வேற்றுமை காட்டுவது, முற்றிலும் வேறுபட்டன என மூவகையாகப் பிரித்துக்கொண்டு ஒப்பியல் நோக்கில் ஏடுகளையும் பாடங்களையும் இனப்படுத்தவேண்டும். வேறுபாடுகளில் ஒரு விதிமுறை இருக்கிறதா என்பதை நுணுகிக் காணலாம்.

ஏடுகளைத் திரட்டும்போது இது தொடர்பான உரைநடை நூல்களையும் பிற உரைநூல்களையும், பிறநூல்களில் எடுத்தாளப்பெறும் மேற்கோள் வடிவங்களையும் தொகுத்தல் இன்றியமையாததாகும். புறநானூற்றில் சில பாடங்கள் பாட்டின் பழைய உரையால் திருத்தம் பெற்றமை இங்கே சுட்ட வேண்டுவதாம். இவை போன்றே மொழிபெயர்ப்பு நூல்களையும் செய்திகளையும் கூட திரட்டி நோக்குதல் வேண்டும். இவற்றையெல்லாம் திரட்டிப் பாட வேறுபாடுகளைத் தொகுத்த பின்பு. முந்தைய திராவிட மொழியமைப்பு எவ்வாறிருந்தது என்பதை ஆராய்ந்தால் பழைய நூல்களின் பதிப்புக்கு அது வகை செய்வதாக அமையும். பழந் திராவிட மொழியாய்வும், சொல் வழக்குகளும் பிறநூல்களில் காணப்பெறும் ஒப்புமை வடிவங்களும் பொருள்களும் பாடங்களைத் தேர்வதில் பெரிதும் துணைநிற்பனவாம்.

பெரும்பாலான ஏடுகளில் ஓரடி, ஒரு சொல் மாற்றமின்றித் காணப்பெறின் அது மூலமாக இருக்க முடியும் எனக்கருதலாம். அது பிழையான வடிவமாக இருப்பினும் அதனை ஏற்கவேண்டும். சொல்லும் பொருளும் மயக்கத்தை உண்டாக்குகிறதா என்பதைக் கூர்ந்து பார்த்து ஏற்பது, ஏலாதது, ஐயமானது என அவற்றைக் துணிந்து பொருள்பொருத்தம் காணமுற்பட வேண்டும். அவ்வாறு தேர்ந்தெடுக்கும் பாடம் யாப்போடு உடன்பட்டு உள்ளதா? நூல் முழுவதும் யாப்பமைதி எவ்வாறுள்ளது? நூலாசிரியரின் யாப்புக்கொள்கை யாது? சொல்லின் இலக்கண அமைதி இடங்கொடுக்கிறதா? ஒரு குறிப்பிட்ட புலவரின் தொடரை, சொல்லை ஆயும்போது வேறு இடங்களில் அவர்தம் தொடர்கள், சொற்கள் எவ்வாறு உள்ளன என்பதை ஆராய்ந்தால் அவர்தம் யாப்புக் கொள்கை புரிந்துவிடும் பரணர் பாடல்கள் எல்லாமே இப்படித்தான் இருந்தனவா? என்றவாறெல்லாம் ஆய்ந்து துணிதல் வேண்டும். இவ்வகை இலக்கண இலக்கிய மொழி ஆய்வு அக்குறிப்பிட்ட நூலில், குறிப்பிட்ட காலத்தைச் சார்ந்த இலக்கிய வகையில் அப்பதிப்பாசிரியர்க்கு மிகுந்த பயிற்சியிருந்தாலொழியச் சிறக்காது எனலாம்.

இவ்வாறெல்லாம் செய்யுமுன் ஏடுகளைத் தொகுத்த உடனே தள்ள வேண்டியவற்றை உடனே தள்ளிவிட வேண்டும். இது நம்பிக்கைக்குரிய ஏடன்று - இவ்வளவு பிழை மலிந்ததைத் சான்றேடாகக் கொள்ளலாமா? எனச் சிந்தித்துத் தள்ளுவது போலவே பாடவேறுபாடுகளிலும் தள்ளத் தகுந்த வடிவங்கள், பொருளற்ற வடிவங்கள், முரணான வடிவங்கள் போன்றவற்றைத்

தள்ளிக் கழித்தபின் பொருளான பாடங்களுள் தேர்வு செய்தல் சிறந்ததாக அமையும்.

எவ்வளவு விழிப்பாகச் செய்தாலும் மூல நூலாசிரியரின் பாடத்தை மீட்டுருச் செய்துவிட்டோம் என்று கூறிவிட முடியாது. மூல நூலாசிரியர்க்கு நெருங்கிய வடிவுக்குச் சென்றிருக்கிறோம் என்ற நிலை கிடைத்தாலும் அப்பதிப்பு வெற்றிபெற்ற பதிப்பாகக் கருதமுடியும்.

சுருங்கச் சொல்லின் பாடத்தெரிவுக்குக் கீழ்க்கண்ட வழிகளில் ஆய்வு செய்தல் சிறந்த பயனைத் தருவதாகும்.

1. மூலஏடு ஒப்பு
2. பலசுவடி ஒப்பு
3. எடுத்தாண்ட நூல்கள் ஒப்பு
4. உரைகள் ஒப்பு
5. பொருட்பொருத்தங் காணல்
6. இலக்கண அமைதி காண்டல், செய்யுளாயின் யாப்பமைதி நோக்குதல்
7. சொல்வழக்கு, சொல்லாட்சி ஆய்தல்
8. செய்யுளும் உரையுமாயின் உரையால் தெளிதல்
9. மொழிபெயர்ப்பாயின் மூலநூல் ஒப்பு
10. நூலின் பொதுக் கோட்பாட்டில், நோக்கில், அமைப்பில் மாறுபடாமை ஆய்தல்.
11. மொழிநூல் ஒப்பு
12. பிறநூல் ஒப்பீடு

## பொருட்பொருத்தம் கருதுதல்

பொருட்பொருத்தமும் பொருட்செறிவும் கருதிப் பாடங்களைத் தேர்வு செய்தல் சில நேரங்களில் மூலபாட ஆய்வுக்குச் சிறந்ததாகத் தோன்றும். இலக்கணமரபு, யாப்பமைதி எனப் பல்லாற்றானும் ஒத்து விளங்குகின்ற பாடங்களுள் ஒன்றைத் தெரிவு செய்வது எவ்வாறு? இச்சூழலில் அப்பாடங்களுள் பொருட்பொருத்தமும் பொருட்செறிவும் கொண்டு நூலின் மையக் கருத்தை-சூழலைப் பெரிதும் பொருந்தியிருக்கின்ற பாடங்களைத் தேர்வு செய்தலே சிறந்ததாக அமையும்.

'ஆவொடு பட்ட நிமித்தம் கூறலும்' எனும் பொருளதிகாரப் பகுதியுள் (தொல். பொருள். நச். 177) 'வேள்விக் கபிலையாற் பயங்குறுதலும், குன்றாது கலநிறையப் பொழிதலானும்' என்பது முந்தைய அச்சுப் பாடமாகக்

காணப்படுகிறது. இப்பகுதியின் பொருட்பொருத்தம் கருதி, (பா, யாவாகத் தவறாகப் படிக்கப்பட்டது என்பதையுணர்ந்து) கழகப் பதிப்பினர்,'வேள்விக்கபிலை பாற்பயங் குன்றுதலும்' எறு மாற்றி அச்சிட்டுள்ளனர். உள்ளபடியே பாராட்ட வேண்டிய பாடமாகும் இது.

இவ்வாறே மற்றோரிடத்து (தொல். பொருள். நச். 187) 'தலைவியும் தலைவனும் துணிந்தும் இருத்தலிற் பிரிந்துரையார் எனப் பன்மையாற் கூறினர்' என்றிருப்பதன் பொருட் செறிவின்மையையுணர்ந்து சிறப்பின்மையையுணர்ந்து (ன-ண வாகப் படிக்கப்பட்டுத் தவறாகப் பதிப்பிக்கப்பெற்றது) கழகப் பதிப்பினர் 'தலைவியும் தலைவனும் துனித்தும் இருத்தலிற் பிரிந்துரையார் எனப்பன்மையாற் கூறினர்' எனப் பதிப்பித்துள்ளனர். அகப்பொருளில் துனித்திருத்தலுக்குள்ள சிறப்பிடத்தைக் காண இப்பொருட்செறிவு கொண்ட பாடத்துணிவு பாரட்ட வேண்டுவதேயாகும்.

அகநானூற்றில் (31) 'சென்றார் என்பிலர் தோழி' என்ற பகுதிக்குச் 'சென்றார்.அன்பிலர் தோழி' என்றொரு பாடம் கிடைக்கும் போது 'சென்றார் அன்பிலர் தோழி' என்னும் பாடத்தைத் தேர்வு செய்வதுதானே பொருட் பொருத்தமுடையதாகும்?

## இலக்கண அமைதி காணல்

இலக்கண அமைதி கொண்டும் யாப்பமைதி கண்டும் பாடங்களைத் தெரிவு செய்தல் பல நேரங்களில் பொருத்தமாக இருப்பதைக் காணலாம். சங்க இலக்கியங்களில் பயிலப்பெறும் சேர நாட்டு ஊரான மாந்தை, பதிப்பாசிரியப் பெருமக்களால் (சி. வை. தா., வையாபுரியார்) மாந்தை, மரந்தை என்றெல்லாம் மாற்றி மாற்றிப் படிக்கப்பெற்றது. ஊர்ப்பெயர் என்னவாக இருக்கும் என்பதை உறுதியாகக் கூறமுடியவில்லை. ஆயின், இராகவையங்கார் அவர்கள் அச் சொல் இடம்பெறும் வெண்பாவைச் சுட்டிக் காட்டி வெண்பாவிற்கு வேண்டியதளை, தொடையமைப்புகளையும் விளக்கி அது 'மாந்தை' என்றுதான் படிக்கப்பெறுதல் வேண்டும் என்பதை நிறுவினார்கள்.

இவ்வாறே சங்க இலக்கியத்தில் பயிலப்பெறும் மரவகை ஒன்றின் பெயரும் பல்வேறு வகையான வடிவுடன் காட்டப்பெற்றது. 'யா' எனப்படும் அம்மரத்தின் பெயரை 'யாஅ' எனவும் 'யாம்' எனவும் தவறாகக் கணித்தனர் என்பதை அவர்கள் கொண்ட விளக்கங்கள் காட்டுகின்றன. செய்யுளின் ஓசை கருதி

வரும் அளபெடை, சந்தி கருதிவரும் எழுத்துக்கள் அப்பெயரைக் காட்டுவதில் மயக்கமூட்டின.

மென்சினை யாஅம் நெறிக்கும்-குறுந். 37
நிலையுயர் யாஅந் தொலையக் குத்தி-குறுந். 307
யாஅங் கொன்ற மரஞ்சுட்டு-குறுந். 198

இங்கெல்லாம் அளபெடை ஓசை கருதியே இடம் பெற்றுள்ளது. ஆயின் அதையும் பெயருடன் இணைத்து யாஅம் எனவும், சந்திகளைச் சேர்த்து யாவும் எனவும் கருதிய பதிப்பாசிரியர்கள் உண்டு. 'மரப்பெயர்க்கிளவி மெல்லெழுத்து மிகுமே' -தொல். உயிர்மயங். 15,

குறியதன் முன்னரும் ஓரெழுத்து மொழிக்கும்
அறியத் தோன்றும் அகரக் கிளவி - தொல். உயிர்மயங். 24

யாமரக் கிளவியும் பிடாவுந் தளாவும்
ஆமுப் பெயரும் மெல்லெழுத்து மிகுமே' தொல். உயிர்மயங். 27

என வருகின்ற நூற்பாக்களைக் காணும்போது 'யா' என்பதுதான் அதன் பெயராகும் என்பது வெள்ளிடைமலையாகிறது. உவே. சாமிநாதையரைக்கூட இந்த இடம் மயக்கிவிட்டது போலும். இவ்வாறு இலக்கண மரபுகளை-யாப்பு வடிவங்களைக் கொண்டும் பாடங்களைத் தெரிவு செய்தல் அறிஞர் தொழிலாகும்.

## பாடவேறுபாடு-வடிவவேறுபாடு

ஒரே நூலின் படிகளாகவுள்ள சுவடிகளுள் காணப்படும் செய்தி வேறுபாடுகளை இரண்டு வகையாகப் பிரிக்கலாம் என்பர். ஒன்று பாட வேறுபாடு, மற்றொன்று வடிவவேறுபாடு. இவை இரண்டுக்கும் உள்ள வேற்றுமை நுண்ணிது.

பாடலின் க்ருத்தை மாற்றுவதாகவோ தொடரின் பொருளுக்கு மாற்றுக் கருத்தைத் தருவதாகவோ ஒரு சொல்லுக்கோ தொடருக்கோ மாற்றுச் சொல்லோ, மாற்றுத் தொடரோ காணப்படுவது பாடவேறுபாடாகும். இது ஓசையமைப்பிலும், யாப்பமைதியிலும்கூடப் பொருந்திக் காணப்படுவதாம்.

'மாதர்கள் கற்பின்மிக்கார் கோசலை மனத்தை ஒத்தார்' இக் கம்பராமாயண அடிக்கு, (கைகேயி சூழ்வினைப். 70)

'மாதர்கள் வயதின்மிக்கார் கோசலை மனத்தைஒத்தார்' என்பது பாடவேறுபாடாகும். இவ்வேறுபாடுகளுள் கம்பரின் உயர்ந்த நோக்கை-காப்பியத்தின் ஒட்டுமொத்த பார்வையை-சொற்களின் ஆழமான பொருளுணர்ச்சியைக் கருத்தில் கொண்டு நாம் உரியவற்றைத் தேர்ந்தெடுத்தல் வேண்டுவதாகும். இத்தேர்வுக்கு மொழிப்பயற்சி இன்றியமையாதது. சிந்தனைத் தெளிவும் மொழியறிவும் காப்பியத்தை-நூற்பொருளை முழுவதுமாக ஊடுருவிய நுண்ணறிவும் இன்றியமையாத்தாகும். திருக்குறளுக்குச் சுகாத்தியர் கண்ட மாற்றங்கள்கூடப் பாடவேறுபாடுகள் (தக்கார் தகவிலர் என்பது அவரவர் எச்சத்தாற் காணப்படும்-தக்கார் தகவிலர் என்பது அவரவர் மக்களாற் காணப்படும்) போல்வனவே.

வடிவவேறுபாடு என்பதும் கிட்டத்தட்ட இதுபோல்வதோர் வேறுபாடே, எனினும், இது பெரும்பாலும் பொருளடிப்படையில் பெரிய மாற்றத்தை உருவாக்குவதாக அமையாது. அதாவது பாடலின், தொடரின் முழுக்கருத்தை மாற்றுவதாக இவ்வேறுபாடு காணப்படாது.ஒரு சொல்லில், தொடரில் காலப்போக்கில் காணப்படும் உருமாற்றமாகவே இதனைக் கருதலாம்.

புலைத்தி-புலத்தி - குறுந். 230
புலைத்தி-புலச்சி - குறுந். 230
கொடுங்கால்-கொடுந்தாள் - குறுந். 324
தப்பற்கு-தப்பிற்கு - குறுந். 292
அவிழ்ந்த-விரிந்த - குறுந். 282

இவை பொருளடிப்படையில் பெருமாற்றத்தைத் தரவில்லை. ஆயின் இவ்வகை ஒத்த பொருளுள்ள சொற்களிலேகூடச் சிலபொழுது பொருள்மாற்றத்தை நாம் சந்திக்கவேண்டி வரும் என்பதும் இங்குச் சுட்டத் தகுவதாம்.

சினை என்பதற்கு மாற்றுச் சொல்லாகக் கிளை என்பது வடிவவேறுபாடாகத் தோன்றலாம். அதுவே முட்டை என்ற பொருளையும் பயந்து நிற்பதால் ஆண்டு மயக்கமும் நேர்தல் கூடும். இவ்வகை வடிவ வேறுபாட்டைக் கூர்ந்து நோக்கி, மொழி வரலாற்றுக் காலப்போக்கோடு, நூல் தோறிய காலச் சூழலோடு நாம் நுண்ணிதின் வேறுபடுத்தி இது நூலின் சொல்லாக இருக்கக்கூடும், இது பிற்கால வழக்கினது என்றெல்லாம் உறுதி செய்யலாம். சங்க இலக்கியத்துள் கடந்தான் என்ற பொருளுக்கு இறந்தான் என்ற சொல்லை விடுத்துச் செத்தான் என்ற

வடிவவேறுபாடு காணப்பட்டால் எவ்வளவு பொருள்மாற்றும் வந்துவிடும்? இவ்வித வேறுபாடுகளை நுண்ணிதின் உணர்ந்து அவ்வக்காலத்துத் தோன்றிய பிறநூல்களை எல்லாம் ஒப்பீடு செய்வதால் தெளிவாக்கிக் கொள்ளல் கூடும்.

திவ்வியப் பிரபந்தம் முதலாயிரம் முகவுரையில் அதன் பதிப்பாசிரியர் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையவர்கள் இவ்விரண்டையும் பற்றிக் கூறியுள்ள கருத்து இங்குச் சிந்திக்கத் தகுவதாகும்.

> 'பாடபேதம் என்று குறிப்பது ஒரு சொல்லுக்குப் பிரதியாக வரும் பிறிதொரு சொல்லை, உதாரணமாக, 'கோளரி மாதவன்' (556) என்பதற்குக் 'கோளரி வாமனன்' என்று வருவது போல்வன பாடபேதங்கள். 'துரியோதனன்' 'திரியோதனன்' (175) 'முழுசாதே-முழுவாதே' (734) என வருவன போல்வன ரூபதேங்கள்.'

பொருளடிப்படையில் இவைபெருமாற்றத்தை உண்டாக்காவிட்டாலும் மூல நூலாசிரியரின் சொல்லுக்கு மாறுபட்ட எதுவும் பாடவேறுபாடாகக் கொள்ளத் தகுவனவேயாம் எனக் கருதுவாரும் உளர். வளர்ந்துவரும் மொழிநிலை காலந்தோறும் சொற்பொருள் மாற்றத்தை உருவாக்கி நிற்பதாகும். ஏழு, எட்டாம் நூற்றாண்டுகளில் நாற்றம் என்ற சொல்லின் பொருள் இந்நூற்றாண்டில் கொள்ளும் பொருளோடு முற்றிலும் மாறுபட்டதாகும். ஒரு காலத்தில் தோன்றிய சொல்லுக்கு வேறொரு காலத்தில் மாற்றுச் சொல் போட்டுவிட்டு அதனை மற்றொரு காலத்தில் கற்பார் முற்றிலும் மாறுபட்ட பொருளைக் காணவேண்டிய சூழலுக்கு ஆளாதல் தவிர்க்க முடியாததாகும். எனவே மாறுபட்ட சொல், தொடர் எதுவும் பாடவேறுபாடே எனக் கொள்வதில் தவறேதுமில்லை எனலாம்.

சொற்திரிபுகள், சொற்குறைகள் திரிந்த வழக்குகள், மாறுபட்ட பேச்சு மொழிகள், போலி, மரூஉ மொழிகள், கொச்சை வடிவங்கள், கிளை மொழிகள், வட்டார வழக்குகள், பிறமொழிச் சொற்கள் போன்றனவும் வடிவ வேறுபாடுகளாகக் கருதத் தக்கனவே. தொடங்கற்க-துடங்கற்க, பைய-பய, பசலை-பயலை, தசை-சதை, இயம்பினான்-சொன்னான், துளை-தொளை, வெண்ணெய்-வெண்ணை, தஞ்சாவூர்-தஞ்சை, சொன்றி-சோறு, அழகு-சுந்தரம், அழகு-ரம்யம், ஞமலி-நமலி, ஞெண்டு-நண்டு போன்ற வேறுபாடுகளும் நூல் தோன்றிய காலச் சூழலுள்,

வட்டாரச் சூழலுள், மொழி வழக்குள் மயக்கத்தை ஊட்டுவதால் இவ்வேறுபாடுகளையும் நாம் பாடவேறுபாடுகளாகவே கருதலாம்.

இவ்வகை வேறுபாடுகளையெல்லாம் நுண்ணிதின் நோக்கி, பிழைபட்டன இவை, மாறுபட்டனஇவை, தள்ளத்தக்கன இவை, கொள்ளத்தக்கன இவை என்றெல்லாம் சிந்தித்துத் தெளிதில் பதிப்பாசிரியர் கடனாம். இவற்றைத் துணியும்போது இலக்கிய ஆட்சி, வழக்குமொழி, மொழிமரபு ஆகியவற்றை ஒப்புநோக்கியும், மொழி பெயர்ப்பு நூல்களுக்கு மூலநூல் கொண்டும் உரை நூல்களுக்கு உரைப்பொருள் கருதியும் அவ்வக்காலத்தின் இலக்கண அமைதி, ஓசையமைதி, எதுகை மோனையமைப்பு ஆகிய மொழியின் பலதரப்பட்ட அமைதியுடன் பொருள் பொருத்தத்தைக் கணித்துத் தேர்வு செய்தல் நலம் பயப்பதாகும்.

## பாடவேறுபாடுகள் தருதல்

அண்ணாமலைப் பல்கலைக்கழகம் பல சுவடிகளை ஒப்புநோக்கிக் கம்பராமாயணத்தைப் பதிப்பித்து வெளியிட்டது. அதில் 5, 000 பக்கம் மூலம், 5,000 பக்கம் உரை, 5,000 பக்கம் பாடவேறுபாடுகள் என்னும் விகிதத்தில் மூலநூலின் அளவுக்குப் பாடவேறுபாடுகள் பல்கியிருப்பதைக் காணலாம். அவர்கள் பார்வைக்குக் கிட்டாத-பதிப்புக்கு எடுத்துக் கொள்ளாத கம்பராமாயணச் சுவடிகள் மேலும் சிலவாக இருத்தல் கூடும். அவ்வாறானால் இந்த 5,000 பக்கத்தையும் தாண்டி 6,000 பக்கம் மூலநூலைவிட பாடவேறுபாடுகளின் அளவு மிகுந்து தோன்றுவதற்கு வாய்ப்பு உள்ளமை நாம் உணரலாம்.

டாக்டர். உவே. சாமிநாதையர், பேராசிரியர். ச. வையாபுரிப் பிள்ளை போன்ற பதிப்பாசிரியப் பெருந்தகையினர் வெளியிட்ட நூல்களில் பாட வேறுபாடுகளையும் நாம் காணலாம். அவ்வாறே சைவ சித்தாந்த மகாசமாஜத்தினரின் திருவாசகம், திருமந்திரம், மர்ரே ராஜமையரின் திவ்வியப் பிரபந்தம் போன்ற நூல்களிலும் அவர்கள் பாடவேறுபாடுகளைத் தொகுத்துத் தந்துள்ளனர். வையாபுரிப்பிள்ளையவர்கள் வெளியிட்ட சங்க இலக்கியப் பதிப்புக்கும் பாடவேறுபாடுகள் தொகுக்கப்பெற்றன. ஆயின் அப்பாட வேறுபாடுகள் பொருளாதாரத் தட்டுப்பாடு கருதி நூலுள் சேர்க்கப்பெறவில்லை

சில நூல்களில் முதற்பதிப்பில் கொண்ட பாடங்கள் அடுத்த பதிப்புகளில் தள்ளப்பெற்றும் காணப்படுகின்றன. மொழி அறிவும், பிறநூல் ஒப்பும் பெருக மூலபாட ஆய்வின் தரம் உயர்வதை இவை

காட்டுகின்றன எனலாம். இவற்றை உற்றுநோக்கும்போது பாடவேறுபாடுகளையும் பதிவு செய்தல் இன்றியமையாததாகத் தோன்றுதல் காணலாம்.

பாடங்களைச் சீர்தூக்கித் தேர்வு செய்த பின்பு பிறபாடங்களை ஒதுக்கி இருட்டடிப்பு செய்துவிடுதல் பதிப்பாசிரியர் நேர்மையாகாது. தாம் கண்ட பாடங்களை எதேனும் ஓரிடத்தில் அடிக்குறிப்பாலோ, வேறோரிடத்துத் தொகுத்தோ காட்டுதல் வேண்டும். இவ்வாறு பாட வேறுபாடுகளையெல்லாம் தொகுத்துத் தருவது ஆராய்ச்சி முறையில் பதிப்பிக்கும் ஒரு பதிப்புக்கு இன்றியமையாத அமைப்பாகக் கருதப்பெறும்.

பாடவேறுபாடுகளின் தொகுப்பு எல்லோருக்கும் பயன்படுவதன்று. எனினும் ஆராய்ச்சியாளர்கட்கு மொழி பற்றிய பல்வேறு மரபுகள்,வழக்குகளை ஆய்ந்து துணிய இவை பெரிதும்பயன்படுவதாகும். மொழிநூல் வல்லார், இலக்கியச் சுவைஞர், இலக்கணிகள், இலக்கணங்கற்றார், மொழிவழிச் சமுதாயத்தை ஆய்வார், ஒப்பியல் மொழி ஆய்வார் போன்றார்க்கு இவ்வேறுபாடுகள் மொழியின் மரபையும், மாற்றத்தையும், வளர்ச்சியையும் இவற்றின் காரணத்தையும் அறியப் பெரிதும் பயன்தருவனவாம்.. எனவே சுவடியில் தாம் கண்ட பாடவேறுபாடுகளையெல்லாம் தொகுத்துத் தருவது பதிப்பாசிரியரின் பெருங்கடமையாகும். இவ்வாறு காணப்பெறும் பாடவேறுபாடுகள் எந்தச் சுவடியில் காணப்பட்டன என்னும் விவரத்துடன் அவற்றைத் தருவது மேலும் பயனுடையதாகும், அறமுடையதாகும் எனலாம்.

## தவறுகளைத் திருத்தலாமா?

நமக்குக் கிடைக்கின்ற சுவடிகளில் எல்லாம் காணப்படுகின்ற பாட வேறுபாடுகளும் வடிவவேறுபாடுகளும் தவறாகவோ, பொருத்தமற்ற தாகவோ தோன்றுகின்ற சூழல்களும் சிலபோது ஏற்படும். சொற்பிழை, எழுத்துப் பிழை ஒலிப்பிழை போன்ற பிழைகளை விடுவித்துப் பாடமாற்றப் பிழைகளாகத் தோன்றுகின்ற பிழைகளை என்ன செய்வது? ஓர் ஏட்டிலும் காணாத-ஆனால் பொருத்தமாக இருக்கும் எனக் கருதும் பாடத்தை நாமாகப் புகுத்தலாமா? நூலமைப்பில் உரையமைப்பில் இடமாற்றத்தைச் செய்வதைக் கூட நாம் சுட்டிக்காட்டவேண்டிய அமைப்பியல் மாற்றத்தைச் சுட்டிக்காட்டவேண்டிய கடப்பாடு நமக்குண்டு. அவ்வாறு இருக்க

நாமாகப் புகுத்தும் பாடங்களை அறிஞர் உலகு ஏற்குமா? அது பதிப்பாசிரியர் அறமாகுமா?

ஏடெழுதுவோரால் நேர்ந்த பிழையைத் திருத்துவதற்குக்கூட முந்தைய பதிப்பாசிரியர்கள் அஞ்சினர்.

> அடியோடு அழிந்தபோகும் பழைய நூல்களை
> நிலைநிறுத்துவான் புகுந்தேனாதலின் நூலைத் திருத்துவதும்
> பொருள் இசையச் செய்வதும் என் கடமையன்று. இயன்றளவும்
> பூர்வரூபம் பெறச் செய்வதும் இயலாதவிடத்து இருந்தபடி
> உலகிற்கொப்பிப்பதுமே யான் தலையிட்ட தொழில்
> (சி.வை.தா. கலி, பதிப்புரை)
> 'ஏட்டுச் சுவடிகளிற் கண்ட பாடங்களின் வேறுபாட்டைக் கண்டு
> கண்டு என்மனம் புண்ணாகி இருக்கிறது. இன்னபடி இருந்தால்
> பொருள் சிறக்குமென்று எனக்குத் தோற்றின இடங்களிலும்,
> பிரதியில் உள்ளதையே பதிப்பித்தேன். என்னுடைய கருத்தையோ,
> திருத்தத்தையோ சிந்தாமணியில் ஏற்றாமல் மிகவும்
> ஜாக்கிரதையாகக் கவனித்துப் பதிப்பித்தேன். பதிப்பிக்கத்
> தொடங்கிய நூல் எனக்கு ஒரு தெய்வ விக்கிரகம் போல்
> இருந்தது. அதன் அழுக்கைத் துலக்கிக் கவசமிட்டுத் தரிசிக்க
> வேண்டுமென்பதே என் ஆசை. 'கைகோணியிருக்கிறது,
> வேறுவிதமாக அமைக்கலாம்; நகத்தை மாத்திரம் சிறிது
> திருத்தலாம்' என்ற எண்ணம் எனக்கு உண்டாகவில்லை. அதன்
> ஒவ்வோரணுவிலும் தெய்வீக அம்சம் இருக்கிறதென்றே
> நம்பினேன். அழுக்கைநீக்கி விளக்குவதற்கும் அங்கத்தையே
> வேறுபடுத்தவதற்கும் உள்ள வித்தியாசத்தை நன்றாக
> அறிந்திருந்தேன்'
> (உ.வே. சா. என் சரித்திரம். பக். 389)

இன்னோரன்ன குறிப்புகளைக் காணும்போது நாமாக எதையும் புகுத்துவதோ, திருத்துவதோ அறமாகாது என்பது வெள்ளிடைமலை. எனினும் எழுத்துப்பிழைகளை, வழூஉக்களைத் திருத்தி அச்சிட்டால் அவை குறித்த விளக்கத்தை முன்னுரையில் சொல்லிவிடுதல் இன்றியமையாததாகும்.

## முடிவுரை

பாடவேறுபாடுகளைக் கண்டுணர்ந்து பாடத்தெரிவை மேற்கொள்வதில் பதிப்பாசிரியரின் சிந்தனையாற்றல் தலைசிறந்த இடத்தைப் பெறுவதாகும். பாடவேறுபாடுகளைப் பற்றிய ஆய்வில் எல்லாவகைப்பட்ட நோக்குகளிலும் ஆய்வை

மேற்கொண்ட பின்பு, சுயமாகச் சிந்தித்து 'நாம் இப்பாடத்தை ஏன் தேர்வு செய்யவேண்டும்? இத் தேர்வுக்கு நாம் எதைக் காரணமாகக் காட்ட முடியும்? அக்காரணம் அறிஞர் பெருமக்களால் ஏற்கப்படுமா? ஏற்கப் படாதென்றால் அவர்களின் தடைகளுக்கு விடைகொடுக்க முடியுமா? என்பவற்றை ஆழமாகச் சிந்திக்கவேண்டும். மொழிநிலை, காலநிலை, சொல்நிலை இவற்றைத் தெளிந்து தாம் அந்நூலின் தோய்ந்துநின்ற பயிற்சியை வெளிப்படுத்தி நிற்கும்போது, அவர் தேர்ந்தெடுத்த பாடம் சிறந்ததாக விளங்க முடியும் என்பது திண்ணம். அத்தகு பதிப்பாசிரியர்கள் வெளியிட்ட நூல்களை அறிஞர் உலகம் நம்பிக்கையுடன் வரவேற்று மகிழும்.

இன்றைய இலக்கிய இலக்கண ஆய்வுலகம் எவ்வளவோ விரிந்தும் பரந்தும்,ஆழ்ந்தும் விளங்குகிறது. சொல்லடைவுகள், தொடரடைவுகள், பிற அகராதிகள், ஒப்பீடுகள் போன்ற பல வசதிகள் பெருகியமைந்துள்ளன. கணிப்பொறியின் பயன்பாடு இதில் மிகச் சிறந்த நிலையில் பயன்படுவதாக வளர்ந்துள்ளமையும் இங்குச் சுட்டத் தகுவதாம். இந்நிலையில் மொழிநிலை, சொல்நிலை, காலநிலை, இவற்றையெல்லாம் பிறநூல்களுடன், பிற உரைகளுடன், பிற விளக்கங்களுடன், பிற இன மொழிகளுடன் ஒப்பிட்டு ஆய்வது எளிதாகிவிட்டது. இவ்வளர்ச்சியும் வாய்ப்பும் சுவடிப் பதிப்பாசிரியர்க்குப் பெரிதும் துணை செய்வனவாய் அமைதல் மகிழ்வுக்குரியதாகும்.

இவ்வாறெல்லாம் சிந்தித்து ஆய்ந்து வெளியிட்ட நூல்களையும் அறிஞர்தம் கருத்துரைக்கனுப்புதல் நன்று. அவர்தம் கருத்துரையை ஏற்று அடுத்தடுத்த பதிப்புகளில் திருத்தி வெளியிடுதல் மேலும் அந்நூலைச் செப்பம் செய்வதாக அமையும். ஒருமுறை பதிப்பித்து வெளியிட்ட நூல்களை, 'பதிப்பித்து வெளியிட்டாயிற்று, இனி நமக்கென்ன' என்று வாளாவிராமல் அதைப்பற்றிய சிந்தனையைத் தொடர்ந்து செயலாக்க வேண்டும். டாக்டர் உ.வே. சாமிநாதையரின் முதற்பதிப்பு நூல்களையும் அடுத்தடுத்து வந்த பதிப்புகளையும் காண்பார் மேலே கூறியவற்றின் தேவையை நன்கு உணர்வர். பதிப்பாசிரியத் தந்தையாக விளங்கிய சி. வை. தாமோதரம் பிள்ளையவர்களின் தொல்காப்பியப் பொருளாதிகாரப் பதிப்புரை இதனை அரண் செய்தல் காணலாம்.

> 'இஃது இப்போது வழுவறப் பிரசுரஞ் செய்யப்பட்டதென்று
> கொள்ளற்க. எனக்குச் சந்தேகம் பிறந்துழியெல்லாந்
> தற்காலத்துப் பெயர் போந்த வித்வான்களாயுள்ளார் பலரையும்

வினவியும் அயனூற் துணிபுகள் மேற்கோள்களோடு சீர்தூக்கியும் இன்றும் ஐயமறுத்துக் கொள்ளாத இடங்கள் அனேகம் உள. அவைகளைக் கூடிய மாத்திரம் பிரதிகளிலிருந்தவாறு அச்சிடுவித்தனன். ஆயினும் பொருட்தொகுதி, போருட் தொகுதி, பேரர் உட்தொகுதி, பேர் அருட்தொகுதி, பேரருட் தேர்குதி, போருட் தேர்குதி, பொருட் தேர்குதி என்றற் தொடக்கத்தனவாய் இன்னும் பல பாடபேதமாகப் படித்தற்கிடம் பெற்றுப் பொருட்டொகுதி என்றெழுதிக் கிடந்த தொன்றையான் அவற்றுள் ஒன்றாக என் சிற்றறிவு சென்றவழிக் குறிப்பிட்டுப் பதிப்பித்தமைபற்றி அதுவே பாடமென்று நிச்சயிக்கற்க. சமுசய நிகழ்வுழியெல்லாஞ் சந்தியை மீளவும் இலக்கணப் பிரகாரம் புணர்த்துத் தீர்க்க பேதத்தையும், புள்ளியையும் நீக்கிப் பாடபேதப் படுத்திப் பார்க்குமாறு வேண்டிக்கொள்கிறேன்' (பக். 6).

பன்னிரண்டு சுவடிகளைத் தேடித் தொகுத்துச் சிறந்த முறையில் ஒப்பிட்டுப் பதிப்பித்தவரின் கூற்றே இது என்பது நினைவில் கொள்ளத் தகுவதாம்.

இது அவர்தம் பதிப்பாசிரிய அறத்தை நிறுவுவதாகவும் திகழ்தல் காணலாம்.

எனவே, பாடவேறுபாடுகளுடன் கூடிய சுவடிகளைப் பதிப்பித்து வெளியிடும் பதிப்பாசிரியர்க்கு மொழியறிவும் சிந்தனையாற்றலும் இருந்தால் போதும்..... அவர்வழிச் சிறந்த நூல்கள் வெளிவந்துவிடும் என்று உறுதியாக நம்பலாம். அவர் தேர்ந்தெடுத்த பாடத்தையும் பதிப்பித்த நூலையும் முழுதும் ஏற்று மகிழலாம். அத்தகு மொழியறிவு நிறைந்த சிந்தனையாளர்கள் பலராகத் தமிழன்னைக்கு வாய்ப்பார்களாக.

# சுவடிப்பதிப்பில் யாப்பின் இன்றியமையாமை

ப.வெ.நாகராசன்

பழந்தமிழ் நூல்களுள் பெரும்பாலானவை செய்யுளால் ஆனவையாகவே காணப்படுகின்றன. தமிழில் உரைநடை நூல்கள் தோன்றத் தொடங்கியது வீரமாமுனிவர் காலத்திற்கு - அதாவது கி.பி.17ஆம் நூற்றாண்டிற்குப் பிறகுதான் எனலாம். எனவே, கிடைக்கின்ற தமிழ்ச் சுவடிகளில் அதிகமானவை செய்யுள் நூல்களே. இதன் காரணத்தை ஆராய்வது இக்கட்டுரைக்கு அப்பாற்பட்டது. எனவே அதனை விடுத்துச் செய்யுள் நூல்களைச் செம்மையாகப் பதிப்பிக்க விழைபவருக்கு யாப்பறிவு மிக இன்றியமையாதது என்பதையும், யாப்பிலக்கணத்தைக் கவனிக்காவிடில் எத்தகைய பிழைகள் நேரிடும் என்பதையும் விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

தமிழில் யாப்பிலக்கணம் நாளடைவில் விரிந்து வளர்ந்துள்ளது. தொல்காப்பியர் காலத்தில் பொருளதிகாரத்தின் ஒரு பகுதியாகச் செய்யுளியல் என்ற அளவில் இருந்த நிலை மாறி, யாப்பிலக்கணம் ஒரு தனித்தகுதியும் பெற்றது. பிறகு அணியும் சேர்ந்து ஐந்திலக்கணமானதை அனைவரும் அறிவர். என்றாலும் மற்ற நான்கையும்விட யாப்பிலக்கண நூல்களே தமிழில் அதிகமாகத் தோன்றின. இலக்கியங்கள் மாறி மாறித் தோன்றியதால் இலக்கணங்கள் புதிதாகத் தோன்ற வேண்டிய இன்றியமையாமை நேர்ந்ததே இதற்குக் காரணம்.

தொல்காப்பியர் கூறும் நேர்பு, நிரைபு போன்ற வாய்பாடுகள், கட்டளையடி போன்ற அடிவகைகள் எல்லாம் மிக விரைவில் வழக்கொழிந்தன. நாயன்மார், ஆழ்வார்களின் தோற்றத்தால் பாவினங்கள் மிகுதியும் செல்வாக்குப் பெற்றன. யாப்புவகைகள் விரிய விரிய, யாப்பு நூல்களும் புதியனவாகத் தோன்றத் தொடங்கின. பாரதியாரின் காலத்திற்குப் பிறகு தோன்றிய புலவர் குழந்தையின் யாப்பதிகாரம், சிந்துப் பாடல்களுக்குச் சிறந்தமுறையில் இலக்கணம் கூறிச்செல்வதை இங்குச்சிந்திக்கலாம். இவற்றிலிருந்து தமிழில் யாப்பியல் மற்ற

துறைகளை விட விரிவாகவும் விரைவாகவும் வளர்ந்துள்ளது என்பது வெளிப்படை.

ஒரு செய்யுள்நடையி லமைந்துள்ள ஓலைச் சுவடியைப் பதிப்பிக்க முயலும் பதிப்பாசிரியர் முதலில் அக்காலத்தின் யாப்பு நிலையைத் தெளிவாக அறிந்துகொள்ள வேண்டும். அகவல், வெண்பா, கலிப்பா எனும் சங்கநூல் யாப்புகளை மட்டும் அறிந்த ஒருவர் பாவினங்கள் நிறைந்த பிற்கால நூல்களைப் பதிப்பிக்க இடர்ப்படுவர். யாப்பருங்கலக் காரிகை கற்றுத் தேறிய புலவரும், சந்தப் பாடல்களாகிய திருப்புகழ், வகுப்பு, வண்ணங்களில் தடுமாறுவர். எனவே எத்தகைய நூல் பதிப்புக்கு எடுத்துக் கொள்ளப்படுகிறதோ அதில் பயின்றுள்ள பா மற்றும் பாவினங்களைப் பற்றிய தெளிவான அறிவு அப் பதிப்பாசிரியருக்கு மிக மிக இன்றியமையாது வேண்டப்படுகிறது.

ஏட்டுச் சுவடிகளில் மெய்யெழுத்துகட்குப் புள்ளியின்மை, சில உயிர்களில் குறில் நெடில் வேற்றுமையின்மை, எழுத்து மாற்றங்கள் என்பன போன்ற வேறுபாடுகளால் விளையும் சிக்கல்களையே நாம் திரும்பத் திரும்ப வலியுறுத்தி வருகிறோம். இந்த வேறுபாடுகளை ஊக்கமும் கூரிய அறிவும் உள்ள ஒரு மாணவர் குறுகிய காலத்தில் பயின்றுவிட முடியும். ஆனால், இலக்கிய மரபு யாப்பறிவு என்பனவற்றைத் தெள்ளத் தெளிய உணர அவருக்கே சற்றுக் காலம் பிடிக்கும். எனவேதான், பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை அவர்கள், "ஏட்டுப் பாடங்கள் பரிசோதிக்கப்படல் வேண்டும். இவ்வாறு பரிசோதிப்பதற்கு ஏடுகளை வாசிப்பதில் தக்க பயிற்சி உடையவர்களே உரியர். பயிற்சியற்றவர்கள் ஏடு வாசிப்பதால் பெரும்பிழைகள் நேரிடுதல் கூடும். பயிற்சி என்ற அளவில், ஏடுகளைச் செய்யுளோசை, பொருள் முதலியவற்றைக் கவனியாதபடி வாசித்தல் மட்டும் அன்று. அது போதுமானதல்ல. செய்யுளிலக்கணம் முதலியவற்றிலும் தக்க பயிற்சியுடையாரே இதற்கு உதவக் கூடியவர்கள்" என அழுத்தமாக வலியுறுத்துகிறார் (காரைக்குடிக் கம்பன் கழகத்தில் 1950ஆம் ஆண்டின் கம்பன் விழா உரை). இவ்வுரையில் ஏடுகளைச் செய்யுளோசை, பொருள் முதலியவற்றைக் கவனியாதபடி வாசித்தல் என்பது புள்ளியின்மை முதலாகக் கூறப்படுகின்ற சுவடி எழுத்திற்கே உரிய இயல்புகளை மட்டும் அறிந்தவராய், யாப்பு, இலக்கிய மரபு அறியாதவராய் உள்ள நிலையையே சுட்டுகிறது. பேரா.வ.அய்.சுப்பிரமணியம் அவர்களும், "இலக்கிய ஆசிரியர் கையாளும் செய்யுளமைப்பு முறையையும் நன்கு தெரிதல் சுத்தப் பதிப்பிற்கு இன்றியமையாதது. பாடத்தெளிவு இல்லாத இடமொன்றில் மட்டும் செய்யுளமைப்பு கெட்டிருக்குமாயின்,

இருக்கும் பாடம் தவறானது என்பது கூறாமலே விளங்கும்" (சில கட்டுரைகள் பக்.120) என்று கூறுவதிலிருந்து பாட நிர்ணயத்திற்கு யாப்பறிவின் இன்றியமையாமை உள்ளங்கை நெல்லிக்கனியென விளங்குகிறது.

இனி மு.கோ.இராமன் அவர்கள் ஓலைச்சுவடிப் பதிப்பில் எவ்வாறெல்லாம் பிழைகள் நேருகின்றன என்பதனை விளக்கமாக எடுத்துக்காட்டுவதன் பொருட்டுத் தம் சுவடியியல் பயிற்சிக் கையேட்டில் மொத்தம் 150 தவறுகளைச் சுட்டிக் காட்டியுள்ளார். இவற்றை எழுத்துமிகை, எழுத்துக்குறைவு, குறில்நெடில் மயக்கம், புள்ளி மயக்கம், எழுத்து மயக்கம், பாடலமைப்பு, பலவகை என்ற ஏழு பகுதிகளாகப் பிரித்துள்ளார். அவர் காட்டியுள்ள 150 பதிப்புப் பிழைகளுள் 77 பிழைகளை யாப்புக் கண்கொண்டு பார்த்திருந்தால் தவிர்த்திருக்கலாம். எனவே மு.கோ.இராமன் அவர்களின் ஆய்விலிருந்தே சுவடிப்பதிப்பில் நேருகின்ற பிழைகளிற் செம்பாதி யாப்பிலக்கணத்தைச் சரியாகக் கவனிக்காததால்தான் நேருகின்றது என்பதும், மற்ற எல்லாவகையான தவறுகளும் சேர்ந்து அடுத்த பாதியாக அமைகின்றன என்பதும் உறுதியாகப் பெறப்படுகிறது.

அரைத்த மாவையே திரும்பத்திரும்ப அரைப்பதுபோல் அவர் காட்டிய பிழைகளையே மறுபடியும் திருப்பிச் சொல்லிக் கொண்டிருக்காமல் சுவடிப்பதிப்பில் எவ்வாறெல்லாம் யாப்புப் பிழைகள் காணப்படுகின்றன என்பதனை வேறு சில பதிப்புகளிலிருந்து எடுத்துக்காட்டி விளக்க விரும்புகிறேன். நான் காட்டாக எடுத்துக் கொண்ட நூல்கள் யாவும் சுவடிப்பதிப்புகளே. சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம், தஞ்சை சரசுவதிமகால் ஆகிய புகழ்பெற்ற இரு நிறுவனங்களின் வெளியீடுகளான இவை பேரறிவும், நீண்ட அனுபவமும் பெற்ற மாபெரும் புலவர்களால் பதிப்பிக்கப்பெற்றனவாகும். அப்பிழைகளை இங்கு எடுத்துக்காட்டுதல் அவர்களைக் குறை கூறுவதற்காக அன்று. அத்தகைய யானைகளுக்கே அடிசறுக்குமென்றால் சுவடிப் பதிப்பில் ஏற்படுகின்ற யாப்புச் சிக்கல் எத்தகையது என்பதை உய்த்துணர வைப்பதே இதன் நோக்கம் ஆகும்.

நான் காட்டக் கருதும் பதிப்புப் பிழைகளை யாப்பிலக்கண நெறியிலேயே எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என்ற முறையில் காட்டி இறுதியில் சிலவற்றை இணைக்க விழை கிறேன்.

## எழுத்து

### அ. புள்ளிமயக்கம்

ஓலைச்சுவடிகளில் மெய்யெழுத்துகள் புள்ளி பெறுவதில்லை என்பதும் அதனைப் பதிப்பாசிரியரே இடவேண்டும் என்பதும் நாமனைவரும் நன்றாக அறிந்த ஒன்று. ஒரெழுத்தைச் சரியாகப் படிப்பதற்கு யாப்பறிவு எவ்வளவு இன்றியமையாதது என்பது இப்பகுதியில் காட்டப்படும். இது உயிர்மெய்யை மெய்யெழுத்தாகக் கொண்டது எனவும், மெய்யெழுத்தை உயிர்மெய்யாக மயங்கியது எனவும் இரு பிரிவாகக் காட்டப்படும்.

#### 1. உயிர்மெய்யை மெய்யெழுத்தாகக் கருதிய மயக்கம்

சென்னைக் கீழ்த்திசைச் சுவடி நூலகம் வெளியிட்ட தூதுத்திரட்டு என்னும் நூலில், பெரிய தம்பிப்பிள்ளை மான்விடுதூது என்னும் ஒரு சிற்றிலக்கியமும் இடம் பெற்றுள்ளது. அத்தூதின் 58 ஆவது கண்ணி கீழ்க்கண்டவாறு உள்ளது (பக்.5)

கட்டியமே கூற ரதிகண்ணார் மயங்கிவர
மட்டார் மகிழ்மலர் சூடி - இட்டமாந்

இக்கண்ணியில் இரண்டாமடியின் மூன்று நான்காம் சீர்களுக்கிடையே வெண்டளை அமையவில்லை. கலிவெண்பா வாலியன்ற தூதுப் பிரபந்தத்தில் தளை இன்றியமையாதது. மோனையும் அமையவில்லை. மகிழமலர் என்பதனை மகிழ்மலர் எனப் படித்ததே குழப்பத்திற்குக் காரணம். இக்கண்ணி பின் வருமாறுதான் இருக்க வேண்டும்.

கட்டியமே கூறரதி கண்ணார் மயங்கிவர
மட்டார் மகிழ மலர்சூடி·இட்டமாந்

அதே நூல் 11ஆம் பக்கத்தில் உள்ள 62ஆவது கண்ணி,

சாந்திருக்கும் கும்பத் தனமடவார் கண்போல்
வாய்ந்திருக்கும் பூங்குவளை மாலிகையான்

என உள்ளது. இதில் கண்போல் வாய்ந்திருக்கும் என்றால் வெண்டளை பிறழ்கிறது. எனவே இங்கு லகரத்தை உயிர்மெய்யாகக் கண்போல என்றே படிக்க வேண்டும்.

மேலும் அதே பக்கத்தில் 66 ஆவது கண்ணி,

தென்னா லூரங்காள் தேவி இருபதத்தை
என்னாளும் போற்றிவள ரிங்கிதவான்

என உள்ளது. இங்கு முதலடியில் தளை தட்டுகிறது. பொருளும் தெளிவில்லை. இங்கு ளகரத்தை உயிர்மெய்யாக்கித்

தென்னாலூ ரங்காள தேவி இருபதத்தை

என்றால் சரியாகிவிடும்.

## 2. மெய்யெழுத்தை உயிர்மெய்யாகக் கருதிய மயக்கம்

முன்சொன்ன பெரியதம்பிப்பிள்ளை மான்விடு தூதிலேயே 49 ஆம் கண்ணி (பக்.4) பின்வருமாறு உள்ளது.

அன்னங் கொடுத்து அரவின் மணியளித்தும்
சொன்னமொழி தப்பாத துரந்தரீகன்

என உள்ளது. தப்பாத துரந்தரீகன் என்றால் காய் முன் நிரை வந்து வெண்டளை பிறழ்கிறது. எனவே இதனைத், தப்பாத் துரந்தரீகன் என்றுதான் பதிப்பிக்க வேண்டும். தகர மெய்யை உயிர் மெய்யாகக் கொண்ட பிழை இது.

மேற்படி நூல் 28ஆம் பக்கத்திலுள்ள 112 ஆவது கண்ணியின் பதிப்பு வடிவம் வருமாறு:-

சிவனடிக்கீ ழாய்வணங்கும் செவ்வியா லதன்மேல்
துவளும் பணிகலந்தச் சூழ்வால்.

இதில் செவ்வியா லதன்மேல் என்பது நிரையொன்றாசிரியத் தளை ஆகிறது. இதற்குக் கலிவெண்பாவில் இடமே இல்லை. இது லகர மெய்யை உயிர் மெய்யாகக் கருதியதால் வந்த பிழை. யாப்பு மட்டும் அன்று. பொருளிலும் தெளிவின்மை வந்துவிட்டது. சரியான வடிவம் இவ்வாறு இருத்தல் வேண்டும்.

சிவனடிக்கீ ழாய்வணங்கும் செவ்வியால் தன்மேல்
துவளும் பணிகலந்த சூழ்வால்.

## ஆ. எழுத்து மிகை

சுவடி எழுத்தர்கள் சில இடங்களில் சில எழுத்துகளைத் தாமாகச் சேர்த்துவிடுவதுண்டு. இதனால் தளையும், சிற்சில இடங்களில் பொருளும் மாறுபடக்கூடும். இதனை அறிந்து களையவும் யாப்பறிவே துணைபுரியும் என்பது அடுத்துக் காட்டப்பெறுகிறது.

சென்னைக் கீழ்த்திசைச் சுவடி நூலக வெளியீடாகிய கலம்பகக் கொத்து என்னும் நூலில் பேரைக் கலம்பகம் ஒன்று. அதன் 6ஆம் பாடலின் இரண்டாம் அடி பின்வருமாறு உள்ளது:

கழைத்ததிருப் பாவிசை கண்டருள் வோர்குழைக் காதர்நன்னாட்

இப்பா நிரையசைக் கட்டளைக் கலித்துறையாகும். இது மெய் ஒழியப் பதினேழு எழுத்துகளை உடைய அடிகளானியன்றது. இவ்வடியைப் படித்துப் பார்த்தால் கட்டளைக் கலித்துறை ஓசையின்மை எளிதில் புலப்படும். கூர்ந்து பார்த்தால் ஒரு தகரம் இடையே புகுந்து ஓசையைக் கெடுப்பது வெளியாகும். இவ்வடியின் சரியான வடிவம் வருமாறு:-

கழைத்திருப் பாவிசை கண்டருள் வோர்குழைக் காதர்நன்னாட்

முன்கூறப்பட்ட தூதுத்திரட்டில் உள்ள பெரிய தம்பிப்பிள்ளை மான் விடுதூதில் 59 ஆவது கண்ணியின் முதலடி பின்வருமாறு பதிப்பிக்கப்பட்டுள்ளது. (பக்.11)

கொண்டெதிர்த்த வொன்னார்க் கற்கோட்டை நெறுநெறென

இதில் வெண்டளை தட்டுகிறது. மோனை சரியான இடத்தில் அமையவில்லை. கலிவெண்பாவில் இத்தவறுகள் நேரக்காரணம் சுவடி எழுதியவர் ஒரு ககரத்தை அதிகப்படியாகச் சேர்த்துவிட்டார் என்பதே. அதை நீக்கிவிட்டால் இதே அடி,

கொண்டெதிர்த்த வொன்னார்கற் கோட்டை நெறுநெறென

எனப் பொலிவு பெறும்.

சென்னைக் கீழ்த்திசைச் சுவடி நூலகம் முத்துநயினாத்தை முதலியார் அவர்களால் இயற்றப்பெற்ற பேரூர்க் கோவையை வெளியிட்டுள்ளது. அதில் ஆறாம் பாட்டின் ஈற்றடி,

உளந்தோய் தலைக்குறி யீர்பெறு குவனுயிர் ஒண்டொடியே

எனப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. (பக்.2). இந் நிரையசைக் கட்டளைக் கலித்துறையின் தளைப் பிறழ்ச்சியால் இதில் ஒரெழுத்து மிகை என உணரப்படுகிறது. "வேனு" எனச் சுவடியில் உள்ளது. இதில் இரட்டைக் கொம்பு கு எனக் கொள்ளப்பட்டதால் வந்த வினை இது. இதோ சரியான வடிவம்.

உளந்தோய் தலைக்குறி யீர்பெறு வேனுயிர் ஒண்டொடியே

சுவடி எழுத்தர் விளக்கம் கருதி விரித்த பிழை இதே நூல் 89 ஆம் பாடல் 2ஆம் அடியில் நேர்ந்து உள்ளது. (பக்.14)

வான்போதி சூழ்ந்தெனப் பேரைப்பட் டீசர் வரையிலிந்த

என இருக்க வேண்டிய அடியில் சூழ்ந்தென எனும் சீர் விரிந்து

வான்போதி சூழ்ந்ததெனப் பேரைப்பட் டீசர் வரையிலிந்த

என ஒர் எழுத்து மிக்குப் பிழைபடக் காட்சியளிக்கிறது.

இந்தப் பேரூர்க் கோவையிலேயே 168 ஆம் பாடலின் 1,2 ஆம் அடிகளில் (பக்.25) இந்த மிகை எழுத்து பரிதாபகரமான பொருள் மாற்றத்தைத் தந்துவிடுகிறது. அவ்வடிகள் வருமாறு:-

விரும்பு மெயினர் தினைப்புனம் நாளைக்குமே விடக்கடன்
இரும்புகொண்டேகுது மென்றா ரிறைவர்நம் மேந்திழைகோங்

முதலடியில் ஒரெழுத்து மிகை என்பதை ஓசை காட்டுகிறது. சற்றுப் பொருளுணர்வோடு பார்த்தால் தலைவியின் உறவினர்கள் மறுநாள் தினைப் புனத்தில் அறுவடை செய்யப் போகிறார்கள் என்ற செய்தியைத் தோழி தலைவனுக்குக் கூறுகிறாள். அறுவடைக்கு அரிவாள் வேண்டுமே. அந்தக் கூன் இரும்புதான் கடன் இரும்பு ஆகிவிட்டது. கூ என்ற சுவடி எழுத்து கட என்ற இரண்டு எழுத்துக்களாகப் படிக்கப்பட்டு அச்சுவாகனமும் ஏறிவிட்டது. அடுத்த அடியில் தலைவனைக் கூப்பிடுகிறாள். எனவே இறைவ எனத்தான் இருக்கவேண்டும். ரகரமெய் மிகையே.

இ. எழுத்துக்குறை

வேகமாக எழுதும்போது சில எழுத்துகள் விடுபட்டுப் போவது இயல்பே. செய்யுள் நூல்களில் அத்தகைய விடுபாடுகள்

காணப்பட்டால் பதிப்பாசிரியன் அவற்றை உணர்ந்து நிரப்ப வேண்டும். நிரப்பாவிடில் பிழைகளாக முடியும்.

முன்சொன்ன பேரூர்க்கோவையிலேயே 223ஆம் பாடலின் 2ஆம் அடி,

நறைகொப் புளிக்கு மலர்க்குழ லாயிந் நள்ளிருளில்

என உள்ளது. இவ்வடியில் தளை தட்டுகிறது. பதினேழு எழுத்துகளும் இல்லை. எனவே ஓர் எழுத்து விடுபட்டுவிட்டது என்பது நன்கு புலனாகிறது. திருத்தினால் சரியான வடிவம் கிடைக்கும். அது இதுதான்.

நறைகொப் புளிக்கு மலர்க்குழ லாயிந்த நள்ளிருளில்

இவ்வாறே, இதே நூல் 257 ஆம் பாடலாகிய நேரசைக் கட்டளைக் கலித்துறையில் ஓர் எழுத்து விடுபட்டுக் குழப்பியுள்ளது. (பக்.38)

காமனைக் காய்ந்த விழியின்று காண்கிலனே கதிர்ச்

எனக் காட்சி தரும் அந்த அடி.

காமனைக் காய்ந்த விழியின்று காண்கி லனேககதிர்ச்

என்பதுதான். ஒரு 'க' வைச் சேர்த்தால் அனேக கதிர்கள் ஒளிவீசுகின்றன அல்லவா?

ஈ. எழுத்து மாற்றம்

சுவடிகளுள் ஓர் எழுத்து வேறோர் எழுத்தாகக் காட்சியளித்து மயக்குவதை நாமறிவோம். இதனால் வரும் பிழைகளை யாப்பறிவால் களைதல் எவ்வாறு என நோக்குவோம். சுவடியில் இடையின ரகரமும் உயிர்மெய் நெடிலின் காலும் ஒன்றாகவே இருக்கும். இது பல இடங்களில் மாற்றிப் படிக்கப்பட்டுவிடும். முன் சொன்ன தூதுத் திரட்டில் 22ஆம் பக்கத்திலுள்ள 17ஆவது கண்ணி,

பூட்டிய பாவையுடன் புல்லும் வகைதெரியக்
காட்டிமிஞ்ச வரற்றுவண் டகர்முகனே

என உள்ளது. இதன் இரண்டாமடியில் வெண்டளை பிறழ்ந்துள்ளது. மோனை இல்லை. பொருள் விளங்காமல் ஏதோ

வேற்றுமொழிபோல மருட்டுகிறது. ரகரமும் காலும் இரண்டு இடங்களில் மாறியதால் தோன்றிய அசுர வடிவம் இது. நேராக்கிவிட்டால் இது,

காட்டிமிஞ்ச வாற்றுவண்ட காமுகனே

எனத் தெளிவாகிவிடும். காமுகன் பாவையை ஆற்றுகிறானோ இல்லையோ யாப்பு நம் குழப்பத்தைத் திண்ணமாக ஆற்றிவிடும்.

இவ்வாறே சுவடியில் தகர நகரங்கள் கூர்ந்து நோக்கித் தீர்மானிக்க வேண்டியவனவாக அமைந்துள்ளன. இவைகளின் மாற்றமும் மயக்கத்தை விளைவிக்கக்கூடும்.

மேற்படி நூலிலேயே 28ஆம் பக்கத்திலுள்ள 114 ஆம் கண்ணி

........................................... பாரரசர்
தந்தா வளமும் தலமும் விலக்களன்றே
நந்தா வளங்கொடுத்துச் சந்திக்க

என்று பதிப்பிக்கப்பட்டுள்ளது. இதில் தளை சரிதான். பொருளும் கூட எப்படியோ, "பெரிய தொகையைக் கப்பமாக வருடம்தோறும் தொடர்ந்து செலுத்துவதால் நந்தாவளம் எனப்பட்டது" என விசேடஉரை கூறி ஒப்பேற்றலாம். ஆனால் இரண்டாம் அடியில் மோனை இன்மையைக் கவனித்தால் இரண்டாமடி தந்தாவளம் கொடுத்து என இருப்பதே சிறப்பு. தம்தாவளமும் (வசிப்பிடம் இங்கு தலைநகரைச் சுட்டும்) தலமும் (நாட்டைக் குறிக்கும்) போரிலிருந்து விலக்கப்படுவதற்காகத் தந்தாவளத்தை (யானையை)த் திறையாகச் செலுத்துகிறார்களாம். யானையைத் திறையாகத் தருதல் இலக்கியங்களில் பரவலாகப் பேசப்படுகிறது. இக்கண்ணியில் தந்தாவளம் என்பது மடக்கு. இச்சிறப்பான பொருளை அறிய மோனை உதவி செய்கிறது.

அசை

சுவடிகளில் சில இடங்களில் எழுத்தைப் போலவே அசையும் பிழை தோன்றக் காரணமாகின்றது.

அ. அசைமிகை

பேரூர்க்கோவையின் 45ஆம் பாடலின் ஈற்றடி,

தாங்கற் கருமையென் னாற்பாங்க நீயிகழுந் தன்மைநன்றே

எனப் பதிப்பாகி உள்ளது (பக்.7). இவ்வடியின் தளை சரிதான். எனினும் ஓசை இல்லை. சோதித்துப் பார்த்தால் உம் என ஒரு நேரசை இடையே புகுந்துள்ளது. அவ்வடி,

தாங்கற் கருமையென் னாற்பாங்க நீயிகழ் தன்மைநன்றே

என்றே இருத்தல் வேண்டும்.

இம்மாதிரியே மேற்படி நூலின் 223 ஆவது பாடலிலும் அசைமிகை இடம் பெற்றுள்ளது (பக்.33).

பறையை யறைவது போற்கா வலர்கள்செய் பறையொலியே

என்னும் இந்நிரையசைக் கட்டளைக் கலித்துறையடியில் தளை தட்டி, எழுத்துக் கட்டளை பிறழ்கிறது. இம்மயக்கத்திற்குக் காரணம் சுவடி எழுத்தர் காவலர்க்குக் கள் கொடுத்ததுதான்.

பறையை யறைவது போற்கா வலர்செய் பறையொலியே

என்பதுதான் இந்த அடியின் செப்பமான வடிவம்.

ஆ. அசை குறை

மேற்படி கோவையின் 70ஆம் பாடல் நிரையசைக் கட்டளைக் கலித்துறையாகும். அது பின்வருமாறு பதிப்பில் காணப்படுகிறது (பக்.11).

தொலையா நலஞ்செயும் பட்டீசர் மால்வரை சூழ்ந்த

இதில் எழுத்துக்கள் குறைகின்றன. ஈற்றில் பெரும் என்ற ஓர் அசையைச் சேர்த்துப் பதிப்பித்திருந்தால் (அடைப்பிற்குள்) சிறப்பாக இருந்திருக்கும்.

சீர்

இப்பகுதியில் சீர் மிகுதியாக இருத்தல், சீர் குறைந்து போதல், யாப்பிற்குப் பொருந்தாச் சீர் இடம் பெறுதல் என மூன்று வகையாகப் பார்க்கலாம்.

அ. சீர்மிகை

தூதுத் திரட்டு பக்கம் 36இல் உள்ள 221 ஆவது கண்ணி,

வரிசைப்ப வனிவழங்கு வழங்குமுலாப் போந்து

என அலங்கோலமாகக் காட்சியளிக்கிறது. இதை மேற்போக்காகப் பார்த்தாலே சுவடி எழுதியவர் வழங்கு என்னும் சொல்லைத் தவறாக இருமுறை எழுதிவிட்டார் என்பது உள்ளங்கை நெல்லிக்கனியாகத் தெரிகிறது. அவர் அதிகமாக வழங்கியதை ஏற்றுக் கொள்ளாமல் விட்டுவிட்டால் அந்த அடி

வரிசைப் பவனி வழங்குமுலாப் போந்து

அலங்காரமாக நடக்கும்.

ஆ.சீர்க்குறை

மேற்படி நூல் முத்துவீரப்பப்பிள்ளை மான்விடுதூதின் 26ஆவது கண்ணியின் முதலடி

வளமேவு மிந்திரர்க்கு மையல்தீர

என உள்ளது. இவ்வடியில் ஒரு சீர் குறைந்துள்ளது. இது மூன்றாம் சீர் ஆகும். இது தேமாச் சீராக இருத்தல் வேண்டும். எனவே இதனை,

வளமேவு மிந்திரர்க்கு (வாட்டும்) மையல்தீர

எனப் பதிப்பிக்கலாம். வாட்டும் என்பதற்குப் பதில் வந்த என்றாலும் சரி. ஆனால் இவ்வாறு பதிப்பாசிரியர் தாமாக ஒரு சொல்லைப் பயன்படுத்தினால் அதனை அடைப்புக் குறியிட்டுத் தெளிவாகக் காட்டிவிட வேண்டும். பிழைத்திருத்தமாக மட்டும் அமையாமல் இது இடைச்செருகலாகவும் அமைகிறபடியால் இதனை மறைக்காமல் காட்டிவிட வேண்டியது பதிப்பாசிரியரின் கடமையாகும்.

இ.பொருந்தாச்சீர்

குறிப்பிட்ட யாப்பில் இடம் பெறக் கூடாத சீர்கள் அதற்குப் பொருந்தாதனவாகும். வெண்பா நூல்களில் கனிச்சீர் வரலாகாது.

வித்துவபரி பாலனஞ்சேர் விற்பனவான் - சத்தியவரிச்
சந்திரன்கங் காகுலபிர தாபன்வீ ரப்பமன்னன்

என்பது பெரியதம்பிபிள்ளை மான்விடுதூதின் 68-69ஆம் கண்ணிப்பகுதி (பக்.12) கலிவெண்பாவாலான இவ்விலக்கியத்தில்

வித்துவபரி, சத்தியவரிச், சாகுலபிர என மூன்று கூவிளங்கனிச் சீர்கள் அடுத்தடுத்து வந்துள்ளன. இது நூலாசிரியரின் பிழை அல்லவே அல்ல. அவர் இச்சீர்களாக முறையே வித்வபரி, சத்யவுரிச், காகுலப்ர-என வடமொழித் தற்சமப் பதங்களையே பயன்படுத்தினார். இவை கூவிளங்காய்ச் சீர்களே. இவற்றால் கலிவெண்பாவின் செப்பலோசை சிதையாது. ஆனால் சுவடி எழுதியவர் தமிழ் மரபிற்கேற்ப அவ்வடமொழிச் சொற்களைத் தற்சமமாக்கிவிட்டார். அதனால் அக்கண்ணிகள் கலிவெண்பா என்னும் சீரிய தன்மையையே இழந்து விட்டன. மேற்படி நூல் 24ஆம் பக்கம் 61ஆம் கண்ணி, 30ஆம் பக்கம் 141 ஆம் கண்ணி, 35ஆம் பக்கம் 217 ஆம் கண்ணி ஆகிய இடங்களிலும் இத்தகைய மாற்றத்தைக் காணலாம்.

தஞ்சைச் சரசுவதி மகால் நண்ணாவூர் சங்கமேஸ்வர் விறலிவிடு தூது என்னும் ஒரு சிற்றிலக்கியத்தைப் பதிப்பித்துள்ளது. அதில் 123 ஆவது கண்ணியை,

நாளும் புரிந்து நரசிம்மையரும்வருக

எனப்பதிப்பித்து பூச்சீர் வந்துள்ளது, என ஓர் அடிக்குறிப்பும் தந்துள்ளனர். இக்குறிப்பு தேவையற்றது.

நாளும் புரிந்துநர சிம்மைய ரும்வருக

என்பதுதான் அடி. பல சிற்றிலக்கியங்களில் மோனைக்குரிய எழுத்து உரிய இடத்தில் இல்லாமல் சில சமயங்களில் முன்பின் அசையில் அமைவதும் உண்டு. இதனைத் தண்டபாணி சுவாமிகள் சொல்நடுஉறு மோனை என்பார் தம் அறுவகை இலக்கணத்தில் (நூற்பா 483).

அன்னத் திருவுரு வுள்ளே வளர்ந்ததற் கோரண்டமாம்

(திருவரங்கத்துமாலை 21)

பெருமையைப் பேசுவ தெப்படி நாம்பிறை வாளெயிற்று

(மேற்படி 27)

என்னும் கட்டளைக் கலித்துறையடிகளில் ஐந்தாம் சீரின் முதல் எழுத்தில் நிற்க வேண்டிய மோனை முறையே அடுத்த அசையிலும், முதலசையிலும் இருக்கக் காண்கிறோம். இத்தகைய மோனை மிகப்பலவாகத் தமிழ் இலக்கியத்தில் இடம் பெற்றதால்தான் அறுவகை இலக்கணம் அதனைக் காட்ட வேண்டி வந்தது.

பொதுவாக அடியைப் பொறுத்தவளவில் பெரும் பிழைகள் நிகழ்வது அரிது. சீர், தளை முதலியவற்றின் பிழைகளைக் களைந்தால் அடி தானாகவே சரியாகிவிடும். எனினும் எடுத்துக்கொண்ட முறைக்கேற்ப இங்கும் இரண்டு காட்டுகிறேன். இவை வேறிடத்திற்கே உரியன என்பதை நான் நன்கு உணர்ந்துள்ளேன்.

முத்துவீரப்பபிள்ளை மான்விடு தூது 144ஆம் கண்ணியில்

கங்கைகுல திலக்கான னவதாரன் வந்தான்

என உள்ளது (பக்.16). இவ்வடி கலிவெண்பாதானா? தளையோ, மோனையோ, செப்பலோசையோ இல்லாத இவ்வடியின் வடிவம் என்ன? திலக்கான என்னும் சீரில் உள்ள ககர மெய்யை உயிர்மெய்யாக்கிக் காலை இடையின ரகரமாகப் படித்தால் திலககர்ன ஆகும். இப்போது அந்த அடி,

கங்கை குலதிலக கர்னனவ தாரன்வந்தான்

எனத் தமிழ்வடிவம் பெற்று வெண்பாவாக வீறுநடை போடும்.

பெரியதம்பிப்பிள்ளை மான்விடு தூது இப்பதிப்பில்,

மாலைதனை வாங்கிவர வாழி

என முடிகிறது (கண்ணி 69, பக்.5). கலிவெண்பா எங்காவது வாழி என முடியலாமா? இது தேமாச்சீரன்றோ? சுவடி படிப்பதில் நேர்ந்தபிழை இது. வா என்பது வர எனப் படிக்கப்பட்டது. நூலிற்குப் புறத்தே தனியாக அமைந்த வாழிச்சொல் பாட்டின் அங்கமாகக் கொள்ளப்பட்டது. இவற்றைச் செப்பமாக்கினால் வெண்பா ஈற்றடி சரியான வடிவம் பெற்று,

மாலை தனைவாங்கி வா

என உண்மையாக வாழும்.

## தொடை

இனித் தொடை நோக்கியும் சுவடிப் பதிப்பில் செப்பம் காணலாம். இங்கு எதுகை, மோனை, அந்தாதி ஆகியன எவ்வாறு பிழைகளைக் களையப் பயன்படுத்தப்படலாம் என்பது காட்டப்படும்.

அ.எதுகை

முற்கூறப்பட்ட பெரியதம்பிப்பிள்ளை மான்விடுதூதின் 52ஆம் கண்ணி,

................ துத்தியம்சேர்
போகன் அளகப்ப பூபன் துணைவன்எனப்
பேசும் தென்கூடல் பெரியவனாம் - வீசுமதன்

எனப் பதிப்பாகி உள்ளது (பக்.4). போகன் என்ற சீரில் எதுகை அமையவில்லை. (இரண்டாமடியில் சீர்ப்பிரிப்பால் விளைந்த தளைப் பிறழ்ச்சி வேறு.) போகன் என்பது போசன் என இருந்தால்தான் எதுகை சரியாகும். மேலும் துத்தியம்சேர் போசன் என அடையோடு இயைந்து புகழ்மிக்க போஜராஜன் என்று பொருள்தரும். இரண்டாமடியையும் சரியாகப் பிரித்து இக்கண்ணியை,

போசன் அளகப்ப பூபன் துணைவன்எனப்
பேசும்தென் கூடல் பெரியவனாம் - வீசுமதன்

எனப் பதிப்பிக்க வேண்டும்.

ஆ.மோனை

"மோனை இல்லா முத்தமிழ்ப் பாட்டு
நாணம் இல்லா நங்கையொப் பாமே"

என்பார் தண்டபாணி சுவாமிகள் (அறுவகை இலக்கணம் 495). ஆறாம் நூற்றாண்டிற்குப் பிறகு தோன்றிய தமிழ் இலக்கியங்களில் மோனை இல்லாத பாடலைக் காண்பதே அரிது. எனவே மோனையும் ஒரடியின் சரியான வடிவத்தைத் தீர்மானிக்கத் துணைபுரியும்.

முத்துவீரப்பபிள்ளை மான்விடுதூது 15ஆம் கண்ணி,

கொண்டாடு நல்லகுல மானீ யாதலினால்
தண்டாமரை யாளுன்றன் வடிவங் - கொண்டதுவும்

என அச்சாகியுள்ளது (பக்.8). இரண்டு அடிகளிலும் எல்லா எழுத்துகளும் பிழையின்றி இருந்தும் மோனையை நோக்காமல் மனம் போனவாறு பிரித்ததால் தளை பிறழ்ந்துவிட்டது. ஒன்று மூன்று சீர்களில் மோனையை அமைத்தால் இதே கண்ணி,

கொண்டாடு நல்ல குலமானி யாதலினால்
தண்டா மரையாளுன் றன்வடிவங்-கொண்டதுவும்

என்று தன் சுயவடிவம் கொள்ளும்.

மேற்படி நூலின் 16ஆம் பக்கத்திலுள்ள 148 ஆம் கண்ணி,

சீதள நீலத்திரைக் கடலி னோசையென்ன
ஊதிய தாரை ஒலிகேட்டு

என உள்ளது. இதன் முதலடியை,

சீதள நீலத் திரைக்கடலி னோசையென்ன

என மோனை வழிப் பிரித்தால் வெண்பாவடி எளிதில் துலங்கும்.

## இ. அந்தாதி

அந்தாதித் தொடையால் அமைந்த இலக்கியங்களுள் சிற்சில இடங்களில் இதுவும் பதிப்பாசிரியருக்குப் பேருதவி செய்யக்கூடும்.

சென்னைக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் கலம்பகக் கொத்து என ஒரு நூலை வெளியிட்டுள்ளது. இதில் இடம் பெற்ற கலம்பகங்களுள் பேரைக் கலம்பகமும் ஒன்று. கலம்பகங்கள் எப்போதும் அந்தாதித் தொடை பெற்றே நடக்கும்.

இக் கலம்பகத்தின் 33ஆம் பாடல் "நமக்கிலையோ" என முடிகிறது. அடுத்த பாடல் (34 ஆவது) "எமக்கு முகம் வாட" எனத் தொடங்கி, "கொண்மதி உண்டோ கழல்" என முடியும் ஒரு வெண்பாவாக உள்ளது. 35 ஆவது பாடலோ "தழல் பிழிந்து" எனத் தொடங்குகிறது. இதனால் 33, 34, 35ஆம் பாடல்களுக்கு இடையே இரு இடங்களிலும் அந்தாதித் தொடை அறுபட்டுவிட்டது. வெண்பா ஈற்றடியில் மோனையும் இல்லை. பதிப்பிக்கும்போது இவற்றைக் கவனித்திருந்தால் எளிதில் திருத்தியிருக்கலாம். இப்போது திருத்தினால் நம் யூகம்தான் இடம்பெறுமே அன்றி நூலாசிரியனின் கருத்து இதுதான் என உறுதியாகக் கூற முடியாது.

இதுகாறும் கூறப்பட்ட சுவடி மயக்கங்களுள் ஒன்றுக்கு மேற்பட்டவை ஒரே இடத்தில் சேர்ந்து விடுவதால் ஏற்படும் குழப்பங்களைச் சற்றுக் காண்போம்.

முற்கூறப்பட்ட பேரூர்க் கோவையின் 29ஆம் பாடல் "ஆயவெள்ளம் வழிபடக்கண்டிது மாயமோ என்றல்" என்னும் துறையிலமைந்தது. இதன் மூன்று நான்காவது அடிகள் பதிப்பில் பின்வருமாறு காட்சியளிக்கின்றன.

குடமோங் குயதனத் தாய் மெரி இன்மைக் கூடினவென்
மடமோ கனவு கொல்லோ நனவோ வென்(ளீ) ஊமாய நெஞ்சே

இதில் பொருளும் விளங்கவில்லை. யாப்பமைதியும் சரியாக இல்லை. இதில் நேர்ந்துவிட்ட சுவடிப் பிழைகளை ஆராய்வோம். இதற்குத் துறைப் பொருள் பற்றிய ஆய்வும் துணைசெய்ய வேண்டும்.

முதலடியில் குயதனத் என்பதற்கிடையில் ஒரு ரகரமெய்யும், மெரி என்பதற்கிடையில் ஒரு காலும் விடப்பட்டுவிட்டன. தாய எனப்படிக்கப்பட வேண்டியது தாய் எனவும், மொரீ எனப் படிக்கப்பட வேண்டியது குறிலாக மொரி எனவும் படிக்கப்பட்டது. இவ்வடியில் உள்ள இகரம் மொரீஇ என்பதன் அளபெடைக் குறியே என்பது உணரப்படவில்லை. இகரத்தை அடுத்த ஈற்று னகரம் தந்நகரமாகப் படிக்கப்படாமல் இரண்டு சுழி னகர மெய்யாகப் படிக்கப்பட்டு விட்டது. ஒரு கட்டளைக் கலித்துறை யடியில்தான் இவ்வளவு பிழைகள். இவ்வழுக்களைக் களைந்துவிட்டால் இவ்வடி,

குடமோங் குயர்தனத் தாய மொரீஇநமைக் கூடினதென்

எனக் கவர்ச்சிகரமாக அமைந்துவிடுகிறது. இறுதியில் உள்ள வென், தென் மாற்றம் அச்சகத்தில் நேர்ந்த பிழையாகக் கூட இருக்கலாம். இவ்வடியை இப்படிச் சரிசெய்து விட்டால் அடுத்த அடி தானாக,

மடமோ கனவுகொல் லோநன வோவென்ன மாயநெஞ்சே

எனத் தன்னை வெளிப்படுத்திக் கொண்டுவிடும். யாப்பறிவோடு இந்தத் துறையில் இந்தப் பொருள்தான் கூறப்பட்டிருக்கும் என்னும் இலக்கிய மரபு உணர்வும் இத்தனைப் பிழைகளையும் களைய உதவி புரிகின்றன.

இதே நூலின் 75ஆவது கட்டளைக் கலித்துறையின் பிற்பாதி பின்வருமாறு பதிப்பிக்கப்பட்டுள்ளது. (பக்.12)

சூதி லெழுந்த களபமும் வெவ்விடந் தோய்குவளைப்
போதி லெழுந்துமை யுரும்மளி யாதுன் புனல்குடைவே

ஈற்றடியில் தளை தட்டுகிறது. ஓர் எழுத்து மிகுதியாக உள்ளது. முதல் நிலையாகப் பொருளின் துணைகொண்டு இதனைத் திருத்திக் கொண்டால்,

போதி லெழுதுமை யும்மளி யாதுன் புனல்குடைவே

என வரும். குவளைப் போது என்றது கண்களை. கண்களில் எழுதும் மை என்ற உடனே அழியாது என்றே இருத்தல் வேண்டும். வழக்கமான ளகர ழகர மாற்றமே. இதனையும் செப்பமிட்டால் இவ்வடி,

போதி லெழுதுமை யும்மழி யாதுன் புனல்குடைவே

என விளக்கம்பெறும்.

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீடுகளுள் ஒன்று நண்ணாவூர் சங்கமேஸ்வரர் விறலிவிடு தூது. இதில் 151 ஆவது கண்ணி,

சாற்று மரகத மேரிமிகச் சாரிவந்து தகை

எனக் காட்டப்பட்டுச் சீர் சரியில்லை என்ற குறிப்பும் கொடுக்கப்பட்டுள்ளது. இது கலிவெண்பா. வெண்டளையும் மூன்றாஞ்சீரில் மோனையும் வரும். இந்த நினைவுடனும், பொருள் உணர்ச்சியுடனும் மேற்கண்ட அடியை நோக்குவோம். சுவடியில் ஒன்றுக்கு மேற்பட்ட பிழைகள் ஒரடியில் சேர்ந்துவிட்டன. நிதானமாக ஆய்வோம். சாரிவந்து என்ற சீர் பிழையில்லாமல் இருப்பதுடன் சகர மோனை பெற்றிருப்பதால் மூன்றாம் சீராக இருக்கலாம். இது ஏறிமிக என இரண்டாம் சீரின் ரகர மயக்கத்தைக் களைய உதவுகிறது.

சாற்று மரகத மேறிமிகச் சாரிவந்து

என நிற்கின்றது. சாற்றுமரகத வெண்பாவில் ஒரு சீராக வராது. இதில் மகரத்தை மெய்யாக்கி, ஏறிவருவதுரதத்தில்என உணர்ந்து இப்பொருள் தெளிவால் ஒரு ககரம் மிகையான எழுத்து என நீக்கிவிட்டால் இச்சீர்கள்

சாற்றும்ரத மேறிமிகச் சாரிவந்து

எனவரும். இனிச் சாரிவந்து என்னும் காய்ச்சீரை அடுத்து நிரையசை வரா. எனவே அங்கும் சுவடியில் விடுபாடு நேர்ந்துள்ளது. எனவே இவ்வடியைச்

சாற்றிரத மேறிமிகச் சாரிவந்து,.........தகை

எனப் பதிப்பிக்க வேண்டும். அங்கோர் அசையை ஊகித்து அடைப்புக் குறியில் காட்டினாலும் சிறப்பே.

இனி இதே நூலின் 232 கண்ணியை

கண்டாள் குறிப்பதனி லக்க மணிபோலப்

பெண்ரூபம் உண்டாமெனவே உறுதிகொண்டாள் ஒண்டொடியாள் எனக் காட்டிவிட்டுச் சீர்கள் சரியில்லை என்ற அடிக்குறிப்பும் தரப்பட்டுள்ளது (பக். 19). சீர்கள் எல்லாம் சரியாகத்தான் உள்ளன. சுவடிகளுக்கே உரிய சில பிழைகள் சேர்ந்துவிட்டன. அவ்வளவே. இதனை ஒவ்வொன்றாக நோக்குவோம். அச்சுப்புத்தகத்தில் உள்ளபடி இரண்டு அடிகளிலும் எதுகை, மோனை சரியில்லை. (கண்டாளுக்குப் பெண்ரூபம் நல்ல எதுகை ஆகாது). எதுகை மோனைகளை மட்டும் வைத்துப் பார்த்தால்.

கண்டாள் குறிப்பதனி லக்கமணிபோலப் பெண்ரூபம்
உண்டா மெனவே உறுதிகொண்டாள் - ஒண்டொடியாள்

என நின்று இரண்டாமடி சரியாகி விடும். அடுத்து முதலடியை ஆராய்வோம். முதலடியில் இரு லகரங்களையும் மெய்யாகப் படித்தால்,

கண்டாள் குறிப்பதனில்க் கமணிபோல்ப் பெண்ரூபம்

என அமையும். சற்றுச் சிந்தித்தால் கமணி என்னுமிடத்தில் சுவடி எழுத்தர் ஒரு ணகரத்தை விட்டுவிட்டார் என்பது புலப்படும். அதனைச் சேர்த்து விட்டால் இந்த அடி

கண்டாள் குறிப்பதனிற் கண்மணிபோற் பெண்ரூபம்

என நிறைவு பெற்று அடுத்த அடியுடன் அழகாக இணைந்து

கண்டாள் குறிப்பதனிற் கண்மணிபோற் பெண்ரூபம்
உண்டா மெனவே உறுதிகொண்டாள் - ஒண்டொடியாள்

என முழுக்கலையாகப் பொலிவு பெறும்.

இதே நூலில் 634 ஆவது கண்ணி

மோக விகாரம்வந்து முடிப்பதால் எந்தனுக்கு

வாகான புத்தி மதிமயங்கி

எனக் கொடுக்கப்பட்டு வழக்கமான "சீர் சரியில்லை" என்னும் அடிக் குறிப்பும் தரப்பட்டுள்ளது (பக்.50). இங்கும் முதலடியில் இரு பிழைகள் நேர்ந்துவிட்டன. மு என்ற எழுத்து நெடிலாகப் படிக்கப்பட வேண்டும். ப்ப எனக் கூட்டெழுத்தாகப் படித்தது சரியன்று. அது யகரமே. இந்த இரு பிழைகளைக் களைந்துவிட்டால் இக்கண்ணி

மோகவிகா ரம்வந்து மூடியதால் எந்தனுக்கு
வாகான புத்தி மதிமயங்கி

எனப் பொருள் தெளிவுடன் அமைந்துவிடும். என்றாலும் இதில் நூலாசிரியனால் நேர்ந்த ஒரு குறை இருக்கத்தான் செய்கிறது. நெடிலடுத்த ககரக் குறிலுக்கு அத்தகைய ககர நெடிலை எதுகையாக மரபுப்புலவர்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். ஆனால் இதற்குப் பதிப்பாசிரியர் ஒன்றும் செய்ய இயலாது.

இனி இப்பதிப்பைப் பற்றி மற்றொரு இன்றியமையாத செய்தியையும் சுட்டிக் காட்டுதல் இக்கட்டுரைப் பொருளோடு தொடர்புடையதாகும். இந்நூலில் 35க்கு மேற்பட்ட இடங்களிலுள்ள சீர்கள் வெண்பாவிற்கு ஆகாத சீர்கள் என அடிக்குறிப்பில் காட்டப்பட்டுள்ளன. (கண்ணி எண்கள்: *3, 70, 94, 102, 130, 197, 205, 210, 217, 220, 253, 271, 286, 319, 332, 343, 350, 357, 381, 384, 392, 396, 528, 547, 565, 566, 579, 590, 596, 603, 629, 708, 718, 757, 765, 789, 847, 896*). மேலோட்டமாகப் பார்த்தால் ஆயர்மனை, மன்னவிசை, செஞ்சொல்மிகும், தங்கள்குடி, யானும்விளை, தன்னில்வைத்தே போன்ற சீர்கள் கனிச்சீராகவும், பூச்சீராகவும் அமைந்து வெண்பாவிற்கு உரிமை யற்றனவாகத்தான் உள்ளன. ஆனால் தூது பாடவந்த ஒரு புலவன் ஒரு நூலில் 35 இடங்களில் இவ்வளவு பெரிய பிழையைச் செய்வானா? சற்றுச் சிந்திக்க வேண்டும்.

ய, ர, ல, ன ஆகிய நான்கு மெய்கள் இரு குறில்களுக்கு இடையே இடம்பெற்று, அங்கு அலகிடும்போது வெண்டளை பிறழுமானால் இம்மெய்களே இல்லாததுபோல் பாவித்துக்கொள்ளவேண்டும் என்பது யாப்பிலக்கண மரபு. உதாரணமாகப் பாயல்தவிர், ஆயர்மனை, செஞ்சொல்மிகும், மன்னன்விசை எனும் சீர்களைத் தேமாங்கனியாகக் கொள்ளாமல் கூவிளங்காயாகக் கொள்ள வேண்டும். முறையே யல்தூ, யர்ம,

சொல்மி, னன்வி என்பவை நிரையசையாகக் கொள்ளப்படும். தண்டபாணி சுவாமிகள் இந்நுட்பத்தைத் தெளிவாக,

"செய்கை தர்மம் கல்வி தன்மை
பொன்வில் எனுமிவை போன்றநேர் நேரும்
நிற்கும் இடத்தால் நிரைஎனப் படுமே"

என உணர்த்துகிறார். இரண்டாவது குறிலுக்குப்பின் மற்றொரு மெய் வந்தாலும் இவ்விதி பொருந்தும் என்பதனை உணர்த்தவே பொன்வில் என்னும் உதாரணத்தையும் தந்துள்ளார். இவ்விலக்கணத்திற்கு இலக்கியம் 17ஆம் நூற்றாண்டிலிருந்து நிறையக் காணக் கிடைக்கின்றன. சங்கமேஸ்வரர் விறலிவிடு தூதில் அனைத்துச் சீர்களும் இவ்விதியின்படி விளங்காயாகவே கொள்ளப்படும். ள், ம் என்னும் இரண்டு மெய்களையும் இவர் இவ்விதிக்குட்படுத்தித் தங்கள்குடி, யானும்விளை என ஆளுகிறார் என்பது சிறப்பாக எத்துக்காட்டத் தக்கது.

நாம் இப்போது செய்யுளாகட்டும், உரைநடையாகட்டும் பிரித்துப் பிரித்து எழுதியே பழகிவிட்டோம். உரைநடை எப்படியோ போகட்டும். இந்தப் பதிப்பு முறையால் செய்யுளின்பம் கெடுதல் ஒருதலை. பல பதிப்புகளில் கவியைப் பாவோசையுடன் படிக்கவே இயலவில்லை. குறிப்பிடத்தக்க வகையில் குற்றியலுகரப் புணர்ச்சி பல இடங்களில் மயக்கந் தருகிறது.

சென்னைக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் பதிப்பித்த தூதுத் திரட்டில் 4 ஆம் பக்கம் 49ஆம் கண்ணி

அன்னங் கொடுத்து அரவின் மணியளித்தும்

எனப் பதிப்பாகி உள்ளது. இரண்டு மூன்றாவது சீர்கள் இணைந்தால் கொடுத்தரவின்றானே ஆகும். பிறகு வெண்டளை எங்கே? சற்று இந்த அடியைக் கூர்ந்து கவனித்தால் மணியளித்தும் என எண்ணும்மை வருவதால் கொடுத்தும் என இருத்தல் வேண்டும் என்பது விளங்கும்.

அன்னங் கொடுத்தும் அரவின் மணியளித்தும்

என்பதுதான் சரியான அடி.

இவ்வாறே பேருர்க் கோவையின் 225ஆம் பாடல்

பாகைப் பழிக்கும் பனிமொழி யாயரும் பாவலர்க்கு

ஈகை யெனநடங் காட்டுந்தென் பேரைப்பட் டீசர்வெற்பின்

என உள்ளது (பக்.33). முதலடி ஈற்றுச்சீரின் இறுதியில் உள்ள குற்றுகரம் இரண்டாம் சீர் முதலடியிலுள்ள உயிர்வந்த உடனே ஓடிவிடுமே. பாவலர்க் கீகை என்றே வரும். அப்போது முதலடியில் பதினாறு எழுத்துகள் இராதே. அந்த எழுத்து எதுவாக இருக்கும் என்று கண்டுபிடிக்க வேண்டும். பாவலர் என்பதில் சுவடி எழுத்தர் ஒரு வகரத்தை விட்டுவிட்டார். பிரித்துப் பதிப்பிப்பதால், இப்பிழையைக் கண்டு களைய இயலவில்லை. இங்கு முதல் அடியின் ஈற்றுச்சீர் "பாவலவர்க்கு" என்றே இருத்தல் வேண்டும்.

சில சமயங்களில் குறுக்கல், நீட்டல் போன்ற செய்யுள் விகாரங்களைப் பயன்படுத்தியும் சுவடிகளில் ஏற்பட்டு விடுகின்ற பிழைகளைக் கண்டு பிடிக்கலாம். மேற்படி பேருர்க்கோவை 88ஆம் பாடலின் ஓரடியின் பதிப்பு வருமாறு:- (பக். 14)

துன்று மலர்க்குழ லாள்மன மும்மிவர் தூய்மனமும்

மூன்று நான்காம் சீர்களுக்கிடையே வெண்டளை அமையவில்லை. எழுத்துகள் எதுவுமே விடுபட்டுவிட்டதாகவும் தெரியவில்லை. சற்று ஊன்றிக் கவனித்தால் இவ்விடத்தில் மனமும்மிவர் என விரித்தல் விகாரம் பெற்றிருக்க வேண்டும் என்பதையும் சுவடியில் ஒரு மகரம் விடுபட்டிருக்கலாம் என்பதையும் உணர்வோம். செப்பம் செய்து படித்தால் இந்த அடி,

துன்று மலர்க்குழ லாள்மன மும்மிவர் தூய்மனமும்

எனத் தூய்மை பெறும்.

அடுத்துத் தமிழில் சந்தக் குழிப்புடன் அமைந்த வண்ணப் பாடல்களுக்கு ஒரு சிறப்பிடம் உண்டு. ஆனால் இத்தகைய பாக்களைப் பற்றிய தெளிவான இலக்கணம் துரதிருஷ்டவசமாக அதிகம் பரவாததால் மிகப் பெரும்பாலான பதிப்புகளில் சந்தப்பாடல்கள் பிழைகள் நிறைந்தே காணப்படுகின்றன. சந்தப் பாடல்களில் காணப்படும் யாப்புப் பிழைகளை ஆய்வுசெயத் தொடங்கினால் அதுவே ஒரு மிகப்பெரிய கட்டுரை ஆகிவிடும். எனவே இப்போது அதில் நுழையவில்லை. இத்தகைய பாடல்களில் பொருளமைதி கூடச் சரியாகக் கவனிக்கப்படுவதில்லை என்பதனைக் காட்ட ஒரே ஒரு எடுத்துக்காட்டு மட்டும் தருகிறேன்.

முன்சொன்ன பேரைக்கலம்பகத்தின் 7ஆம் பாட்டு ஒரு சந்த விருத்தமாகும். இதன் சரியான சந்தக் குழிப்பு

தான தந்த தந்த தான தந்த தந்த
தான தந்த தந்த தனனா

என்பதாம். இதனைக்

தானனந் தனந்த தானனந் தனந்த
தானனந் தனந்த தனனா

என்பது போலப் பதிப்பித்துள்ளனர். ஆனால் குழிப்பேதும் கொடுக்கப்படவில்லை. அதைப்பற்றிய ஆய்வும் இங்கு மேற்கொள்ளப்படவில்லை. இதன் ஈற்றடி பின்வருமாறு காணப்படுகிறது. (பக்.5)

கோகிலங் களினா விமென்று தின்று
கூவுகின்ற தன்பர் குறையே

சந்தத்தை விட்டுவிடுவோம். இவ்வடியின் பொருள் என்ன? குயில்களைப் பிடித்துக் கடித்துத் தின்றுவிட்டுத் தலைவன் கூச்சலிடுவது பிழை என்பதா தலைவி கூற்று? கட்டாயமாக இருக்க முடியாது. இவ்வடி

கோகி லங்க ளின்றெ னாவி மென்று தின்று
கூவு கின்ற தன்பர் குறையே

என்றுதான் இருத்தல் வேண்டும். குயிலோசையைக் கேட்டு வருந்தும் தலைவி, தன் துயரத்திற்குத் தலைவனே காரணம் என்கிறாள். இதுபோன்ற வெளிப்படையான பிழைகளையாவது பதிப்பாசிரியர்கள் கவனித்துக் களையத்தான் வேண்டும்.

இதுகாறும் கூறியவற்றால் சுவடிகளுள் காணப்படும் பெரும்பாலான பிழைகளை யாப்பிலக்கணத்தின் உதவியைக் கொண்டு திருத்திப் பதிப்பிக்க இயலும் என்பது பெறப்பட்டது.

## துணை நூல்களின் அகரநிரல்

1. <u>அறுவகை இலக்கணம்</u>
ஆசிரியர்: வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்.
தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரி, பேரூர், 1978.

2. <u>அஷ்டப்பிரபந்தம்</u>
ஆசிரியர்: பிள்ளைப்பெருமாளையங்கார்.

மர்ரே அண்டு கம்பெனி, சென்னை, 1957.

3. கலம்பகக் கொத்து
பதிப்பாசிரியர்: தி.சந்திரசேகரன்.
கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சென்னை, 1960.

4. சில கட்டுரைகள்
ஆசிரியர்: முதுமுனைவர். வ.அய்.சுப்பிரமணியம்
மீனாட்சி புத்தக நிலையம், மதுரை.
5 ஆம் பதிப்பு, 1987.

5. சுவடிஇயல் பயிற்சிக் கையேடு
ஆசிரியர்: மு.கோ.இராமன்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1982.

6. தூதுத்திரட்டு
பதிப்பாசிரியர்: தி.சந்திரசேகரன்,
கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சென்னை,1957.

7. நண்ணாவூர் சங்கமேஸ்வரர் விறலிவிடுதூது
பதிப்பாசிரியர்: புலவர்.வீ.சொக்கலிங்கம்.
சரசுவதி மகால், தஞ்சாவூர், 1979.

8. பேரூர்க்கோவை
ஆசிரியர்: முத்து நயினாத்தை முதலியார்.
பதிப்பாசிரியர்: திரு.சி.எம்.இராமச்சந்திரன் செட்டியார்.
கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சென்னை, 1955.

# பதிப்பாசிரியர்களும் அவர்தம் கடமைகளும்

சா. கிருட்டிணமூர்த்தி

## பதிப்பு-ஒரு தொடர்பணி

பதிப்பித்தல் என்பதற்கு ஒன்றை வெளிப்படுத்திக் காட்டுதல் என்று கூறலாம். ஓவியமாயினும் சிற்பமாயினும் கல்வெட்டாயினும் பிறவாயினும் அவற்றைப் பிறிதொன்றின் மூலமாகப் பதித்துவைத்தல்-வெளிப்படுத்திக் காட்டுதலாகும். ஒவ்வொரு கால கட்டத்திலும் எழுதுபொருள்களின் *(Writing Materials)* பல்வேறு நிலைகளுக்கேற்பப் பதிப்பித்தல் மாறுபட்டிருக்கும் என்று கொள்ளலாம். ஓலை எழுதுபொருளாகப் பயன்பட்ட காலத்தில் ஒருவர் கருத்தை-படைப்பை அவ்வோலையின் மூலமாகப் பதிப்பித்து வந்தனர். ஓலைச்சுவடிகளில் இன்னார் குமாரன் இன்னார் எழுதியது என்று குறிப்பிடப்பெறும் முன், பின் குறிப்புகளெல்லாம் அந்நூலுக்கு (சுவடிக்கு) உரிய பதிப்பாசிரியர் அவரே என்று துணிதற்கு இடமளிக்கும். சுவடி எழுதியவன், எழுதப்பட்ட காலம், எழுதவியன்ற இடம் போன்றவை, இன்று அச்சுநூல்களில் காணப்படும் பதிப்பு விவரங்களைப் போன்று அமைந்துள்ள தன்மை அன்றை நிலையில் அவை பதிப்பு வேலையாகப் போற்றப்பட்டிருந்தன என்பதை நன்கு விளக்கும்.

கல் எழுதுபொருளாகப் பயன்பட்ட காலத்திலும் அவ்வாறே. கல்வெட்டிலிருந்து ஓலையில் எழுதப்பட்ட செய்திகள் எழுதுபொருள் பயன்பாடு பிறிதொன்றாக மாற்றப்பட்ட தன்மையை உணர்த்தும். அதோடு மட்டுமன்றிக் கல்வெட்டில் பதிப்பிக்கப்பட்ட செய்தி மீண்டும் ஓலையில் பதிப்பிக்கப்பட்ட தன்மையை உணர்த்துவதாகவே நாம் கொள்ளவேண்டும்.

எவ்வாறெனில் ஓலைச்சுவடிகளில் உள்ளவற்றை இன்று நாம் தாள்களில் பதிப்பிப்பதைப் போன்றதாகும். எனவே பதிப்பு வேலை என்பது காலந்தோறும் பல்வேறு நிலைகளில் தொடர்ந்து நிகழ்ந்து வரும் ஒன்றாகவே காணப்படுகின்றது.

## பதிப்பு-சொற்பொருள்

சுயமாக உருவாக்கி வெளியிடுவதும், முன்னுள்ளவற்றை வெளியிடுவதுமே பதிப்பு என்று கொள்ளப்படும். முன்னுள்ளவற்றை வெளியிடுதல் என்பது இதுவரை அச்சாகாத, வெளிவராத எழுதப்பட்ட செய்திகளைக் குறிக்கும்.

பதிப்பித்தல் என்னும் பொருள்தரும் ஆங்கிலச் சொல்லாகிய *'edit'* என்பது *'edit-us'* என்னும் இலத்தீன் சொல்லிலிருந்து வந்தது என்று அகராதி கூறும் *(OED Vol. III 1961). editio-onis* என்னும் இலத்தீன் சொல்லுக்கு நூல் வெளியிடுதல் *(the Publishing of a Book)* என்ற பொருளை இலத்தீன் ஆங்கில அகராதி கூறுகின்றது *(D.D.Simpson, Latin English Dictionary)*

பதிப்பித்தல் என்பதற்கு அகராதிகள் கூறும் பல்வேறு விளக்கங்கள் அதற்குரிய பொருள்களைத் தெளிவுபட எடுத்துக் காட்டுகின்றன.

1) எழுத்து வடிவங்களில் நிலவுகின்ற முந்தைய படைப்பாளர்களின் பலதரப்பட்ட படைப்புகளை வெளியிடுதலும் உலகோர்க்கு அளித்தலும்

2) முந்தைய படைப்பாளர்களின் படைப்பையே பதிப்புப் பொருளாகக் கொண்டு அதனைப் பதிப்பிற்கு உருவாக்கம் செய்தலும்

3) முழுமையுடைய ஒன்றையோ பிறரின் பகுதியான ஒன்றையோ முறைப்படுத்தி அமைத்தலும், உருவாக்குதலும்

4) திரைப்பட வெளியீட்டிற்கான ஒலி, ஒளி பதிவுகளில் தேவையில்லாதவற்றை நீக்கிவிட்டு அதனைச் செப்பம் செய்தலும்

5) செய்தித்தாள், மலர் போன்றவற்றின் வெளியீட்டில் அவற்றை மேற்பார்வை செய்தலும், நெறிப்படுத்துதலும் பதிப்பு *(edit)* வேலைகளாகக் கொள்ளப்படுகின்றன.

மேற்கருத்துகளைப் பொதுமைப்படுத்தி நோக்கும் பொழுது

அ. தானே புதிய படைப்பை உருவாக்குதல்
ஆ. முன்புள்ள பிறர் படைப்பை வெளிப்படுத்திக் காட்டுதல்
இ. தொகுப்புக் கூறுகளை வகைப்படுத்திக் காட்டுதல் போன்றவை

பதிப்பித்தலின் செயலாக அடங்குமென்பதை உணரலாம்.

## பதிப்பு வேலையும் வெளியீட்டு வேலையும்

பதிப்பிற்கு உருவாக்குதல் பதிப்பு வேலை என்று கொண்டால் அதனை வெளியிடுதல் வெளியீட்டுப் பணியாகும். பதிப்பித்தல் வேறு; வெளியிடுதல் வேறு. பதிப்பிற்குரிய பணிகளுக்குள்ளாகாமல் ஒரு வெளியீட்டாளர் பதிப்பாளராக முடியாது. வெளியிடுதல் என்பது பதிப்பு வேலைகள் முடியப்பெற்ற ஒரு படைப்பை அச்சுவடிவமேற்றி உலகோர்க்கு அளித்தலும் அளிக்கக் காரணமாய் இருத்தலும் ஆகும் (*OED Vol.iii. 1961*). பதிப்பு என்பது முன்னிலை; வெளியீடு என்பது பின்னிலை. நூலை வெளிக்கொணர்தல் பதிப்பு என்று கூறும்பொழுது, நூலாக்க வேலைகள் முடிந்தபின் அதனைக் கொணரும் வேலையும் இப்பொழுது பதிப்பு வேலையாகக் கருதப்பட்டு வருகின்றது. இவ்வளவில் பதிப்பித்தல் என்பதை அச்சேற்றுதல் என்று கொண்டு சில அச்சகங்கள் பதிப்புப் பொறுப்பை மேற்கொண்டனவாக நிலவுதலைக் காணலாம். அத்தகைய நிலையில்கூட நூலாசிரியர்க்கு முதன்மை தந்து அவ்வச்சகங்கள் இலங்குகின்றன என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

அவ்வாறாயின் பதிப்பு வேலை என்பது என்ன? இதற்கு ஓராசிரியர் தரும் விளக்கத்தை இங்கு அப்படியே நோக்குதல் பொருத்தமுடையதாக விருக்கும்.

> To edit means to present anything in a disciplined manner-to arrange, to annotate or otherwise prepare an author's work for Publication (M.L.Chakkaraborti 1975, P.318)

உள்ளதைக் கொணர்வதும் உள்ளத்தைக் கொணர்வதும் நூலாக்கம் அல்லது நூற்பதிப்பு என்று கொள்ளலாம். சான்றாக உள்ளதைக் கொணர்தல் - முன்னிலவுவதை வெளிக் கொணர்தல் என்பதற்குச் சுவடியை அச்சேற்றுவதைக் கொள்ளலாம். அச்சுவடியைத் தேடி, அதற்குரிய பல பிரதிகளையும் தொகுத்து,

அவற்றுள் ஒன்றை அடிப்படையாகவும் ஏனையவற்றைத் துணையாகவும் கொண்டு சுவடி பெயர்த்தெழுதிப் பிழைநீக்கம் செய்து, பாடம் தேர்ந்து படித்தவை போற்றி, விளக்கம் அளித்து வேண்டுவன தந்து, படி பெயர்த்தெழுதிப் பாங்குடன் திருத்திப் பதிப்புக்குரிய செம்பதிப்பாக விதிப்படி அளித்தலே பதிப்பு வேலையாகும். அச்சக வாசலை அடையும்வரை நிகழ்கின்ற அனைத்து வேலைகளுமே பதிப்பு வேலைகள் என்று கொள்ளத் தகும். எனவே பதிப்புக்குரிய-பதிப்பை நோக்கிச் செய்ய வேண்டிய வேலைகள் பதிப்பு வேலைகள் எனலாம்.

## பதிப்பாசிரியர் (Editor)

பதிப்பு வேலைகளைச் செய்பவர் பதிப்பாசிரியர். பதிப்பு, ஆசிரியர் எனும் இருசொற்களின் கூட்டுச் சொல்லே பதிப்பாசிரியர் என்பதாகும். இச் சொல்லோடு மட்டுமன்றித் தொகுப்பு, வெளியீடு, புத்தகம், பத்திரிகை, இதழ் போன்ற சொற்களோடும் இவ்வாசிரியர் என்ற சொல் சேர்ந்து தொகுப்பாசிரியர், வெளியீட்டாசிரியர், புத்தகவாசிரியர், பத்திரிகையாசிரியர், இதழாசிரியர் எனக் கூட்டுச் சொற்களாவதைக் காணலாம். இவற்றினின்றும் ஒருண்மை புலனாகும். ஆசிரியர் என்ற சொல் *(Teacher)* தனக்குரிய பழம் பொருளினின்றும் மாறுபட்டிருப்பதை உணரலாம். ஆசிரியர் என்ற சொல்விற்குப் பல பொருள்கள் உண்டு. குரு, ஆக்கியோன், உரிமையுடையோன், செய்பவன் என்னும் பல பொருள்களைக் கூறலாம். பின்னுள்ள இருபொருள்களையும் ஏற்பனவாகவே மேற்கண்ட கூட்டுச் சொற்கள் அமைந்துள்ளன. 'ஆளன்' என்னும் பின்னொட்டிற்கு *(Suffix)* உள்ள பொருளைக் கொண்டதாகவே 'ஆசிரியர்' என்ற சொல் காணப்படுகின்றது என்று கூறலாம். ஆராய்ச்சியாளர், தொகுப்பாளர் போன்று பதிப்பாளர் என்று கூறலாமா என்பதும் ஆய்விற்குரியது.

எனினும் பதிப்பு வேலைகளைச் செய்பவர் பதிப்பாசிரியர் எனத் தொழிற்பெயர் உணர்த்தும் நிலையிலேயே அவ்வாசிரியர் என்ற சொல் அமைந்துள்ளது என்று கருதலாம். எனவே சொற்றன்மை திரிந்து பின்னொட்டு நிலையில் பதிப்பு என்ற சொல்லோடு சேர்ந்து நிற்கிறது என்பது புலனாகும். இச்சிறப்புச் சொல்லாகிய பதிப்பாசிரியர் என்பது நூற்பதிப்பாசிரியர் என்ற தன்மையில் மட்டுமே நமக்குப் பொருந்துவதாகத் தோன்றக்கூடும். பதிப்பாசிரியர் (Editor) என்பதோடு

தொடர்புடைய பிற சொற்களை நோக்கும்பொழுது இவ்வுண்மை நமக்குப் புலனாகும்.

பதிப்பாசிரியர்கள் பலர்

பதிப்பாசிரியர் என்றவளவில் நாம் பலரைக் காணமுடியும். நூற்பதிப்பாசிரியர் (Book Editor), இதழாசிரியர் (Journal Editor), மலர் ஆசிரியர் (Magazine Editor), கலைக்களஞ்சியப் பதிப்பாசிரியர் (Encyclopeadia editor), அகராதிப் பதிப்பாசிரியர் (Lexicon Editor), பத்திரிகையாசிரியர் (News paper Editor), திரைப்படத் தொகுப்பாளர் (Motion Picture Editor), ஓவியத் தொகுப்பாளர் (Art Editor) போன்றும் இன்னும் பல திறத்திலும் இப்பொருண்மையுடையோர் காணப்படுகின்றனர். இவற்றுள் பதிப்பாசிரியர் என்ற பெயரில் சில அமைவுகளும், ஆசிரியர் என்றபெயரில் சில அமைவுகளும், தொகுப்பாளர் என்ற பெயரில் சில அமைவுகளும் நிலவுவதைக் காணலாம். இவை அடிப்படையில் ஒரே பணித்தன்மையைக் கொண்டனவாக இருப்பினும் இடத்திற்கேற்ப வேறு பெயர் கொண்டனவாக அமைகின்றன. பொதுவாகப் பதிப்பாசிரியர் என்ற சொல்லைப் பயன்படுத்துவது அவற்றின் ஒற்றுமை நயம் கருதியேயாகும். வேற்றுமை நயம் கருதும்போதுதான் அவற்றைப் பிரித்துப்பார்த்து அவற்றிற்குரிய பணித்தன்மையைக் கருத்தில் கொள்ள வேண்டியிருக்கின்றது. இப்பதிப்பாசிரியர்கள் ஒவ்வொருவரின் பணிநிலைகளையும் கடமைகளையும் நோக்குவதால் அக்கடமைகளினிடையே ஒரு பொதுத்தன்மை நிலவுவதை நம்மால் உணர முடியும். பணியின் செயற்பாடுகள் வேறுவேறாக அமையுமேயன்றிப் பிறிதில்லை.

இப்பதிப்பாசிரியர்களை ஆய்வு நோக்கிற்காக நாம் இருவகையில் பிரித்துக் காணலாம். தொழில்சார் பதிப்பாசிரியர்கள் (Technical Editors), கல்விசார் பதிப்பாசிரியர்கள் (Academic Editors) என. திரைப்படத் தொகுப்பாளர் (Motion Picture Editor), ஓவியத் தொகுப்பாளர் (Art Editor) போன்றோர் முன்வகையைச் சேர்ந்தவர்கள்; ஏனையோர் பின்வகையைச் சேர்ந்தவர்கள்.

திரைப்படத் தொகுப்பாளர்

இத்திரைப்படத் தொகுப்பாளரின் பணி மிக இன்றியமையாததொன்றாகும். இங்கும் Editor என்ற சொல்லே

அவர் பணியைக் குறிக்கும் சொல்லாக அமைகின்றது. இச்சொல்லிற்குத் தொகுப்பாளர் என்றே பொருள் கொள்ள வேண்டியுள்ளது. இத்தொகுப்பாளருக்கு முதல்வேலை நறுக்குதலாக இருப்பினும் இவ்வேலை சிறப்பது தொகுப்பதினால் ஆதலின் இவருக்குத் தொகுப்பாளர் என்று பெயர் வந்தது. திரைப்பட வெளியீட்டில் இவர்தம் பணியைக் குறிக்கும்பொழுது, "படத்தொகுப்பு" என்று சுட்டுதலும் 'எடிட்டர்' என்று சொல்லுதலும் அவற்றை வெளிப்படுத்திக் காட்டும்பொழுது கூடவே ஒரு கத்திரிக்கோலை இணைத்துக் காட்டுதலும் இவ்வுண்மையைப் புலனாக்கும். வளர்ந்த துறையான தொலைக் காட்சியிலும் இத்தகைய தொகுப்பாளர்கள் உள்ளனர். இவர்தம் பணியை

> to adopt (film) as for television or motion picture, by rearranging, cutting and splicing (New Webster's Dictionary, 1971)
>
> To prepare a film for the cinema or recordings for broadcasting by eleminating unwanted material (OED Supplement Vol.I)

- - - - - -

இத்திரைப்படத் தொகுப்பாளரை நறுக்குவோர் *(cutter)* என்றே கூறுவர் *(World Book, Vol. 13)*. ஒரு நாளைய படப்பிடிப்பு முடிந்தவுடன் அவற்றுள் நன்முறையில் அமைந்த காட்சிகளை முதற்கண் தேர்ந்தெடுத்துக்கொள்கிறார். பிறகு படத்திற்கான அனைத்துப்படப்பிடிப்பும் முடிந்தபின் தேர்ந்த காட்சியெடுப்புகளை *(film shots)* சாதாரண நிலையில் வெட்டிச் சேர்க்கிறார் *(Rough cut)*. அதன்பின் அச்சாதாரணத் தொகுப்பிற்குள்ளான படத்தொகுப்பை மீண்டும் இறுதித் தொகுப்பிற்குக் *(Final cut)* கொண்டு வருகிறார். இதுவே படத்தொகுப்பாளரின் பணி.

படத்தைத் தொகுத்தளிக்கும் படத்தொகுப்பாளர் பல நிகழ்ச்சிகளை மனத்தில் கொள்ளவேண்டியிருக்கிறது. தனித்த பலவேறுபட்ட காட்சியெடுப்புகளை *(Film shots)* முறையான வெளிப்பாட்டில் ஒன்றுசேர்த்துச் சீரிய கதையமைப்பை உருவாக்கித் தரவேண்டிய நிலையில் அத்தொகுப்பாளர் இருக்க வேண்டும். படத்தை நுகர்வோர், ஓரிடத்தின் நிகழ்ச்சிக்குப்பின் அடுத்த நிகழ்ச்சியை முறையே நுகர முடிகின்ற அளவிற்கு அக்காட்சியை அமைத்துத் தரவேண்டுமென்ற உணர்வும் அவருக்கு இருக்க வேண்டும். படத்தொகுப்பு என்பது உணர்வின்

ஒத்திசைவையும் (*Sensibility to rhythm*), விறுவிறுப்பையும் (*tempo*) உண்டாக்கும் தன்மையது. சான்றாகக் காட்சியெடுப்புகளில் உண்டாகும் எதிர் பாராத மாற்றங்கள் (*abrupt to changes in shots*) காணுதற்கு வேண்டுமானால் களிப்பூட்டுவனவாக அமையலாம். அவையும் துப்பாக்கிச் சண்டை போன்ற காட்சிகளுக்குத்தான் பொருந்தும், உணர்வியல் காட்சிகளுக்குப் பொருந்தாது (*World Book, Vol.13*).

இச்செயற்பாடுகளின் நுண்மைக் கூறுகளை நாம் நூற்பதிப்பிற்கும் பொருத்திக் காணமுடியும். நுகர்வோரின் ஏற்பிற்குப் பொருந்துமாறு செய்யப்படும் எந்தவொரு பணியும் சிறந்த பணியாக அமையும்.

ஓவியத் தொகுப்பாளரும் மற்றும் வானொலித் தொகுப்பாளரும் ஏறத்தாழ இத்தகைய பணிநிலைகளைக் கொண்டவர்களே.

பத்திரிகைப் பதிப்பாசிரியர்

`பத்திரிகையியலைப் பொறுத்தவரை ஆசிரியருக்கும் பதிப்பாசிரியருக்கும் பொருள் வேறுபாடு இல்லாதநிலையிலேயே இருவேறு சொற்கள் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளன. பத்திராசிரியர் என்பதற்குப் பத்திராதிபர் என்ற பொருளைத் தந்து அச்சொல்லிற்குப் பத்திரிகையை நடத்தும் தலைவர் (*Editor of a Journal*) என்று பொருள் கூறப்படுகின்றது (சென்னைப் பல்கலைக்கழக அகராதி, தொகுதி 4). இன்றும் ஒவ்வொரு பத்திரிகையின் முழுமையான பதிப்புப் பணிகளைக் கவனிக்கும் தன்மை பெற்றவர்க்கு ஆசிரியர் (*Editor*) என்ற சொல்தான் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. தினமணி ஆசிரியர் ஐராவதம் மகாதேவன், துக்ளக் சோ போன்ற எடுத்துக்காட்டுகள் மேற்கருத்தை விளக்கும். பத்திரிகையியலில் தலைமையிடம் பெறுவது செய்தித்தாளாதலால் அதன் உருவாக்கத்தில் ஆசிரியரின் கடமை இன்றியமையாததாகக் கருதப்படுகின்றது. ஏனெனில் பத்திரிகையியல் என்பது சமுதாய மாற்றத்தை மதிப்பிடுகின்ற முக்கியத்துவம் வாய்ந்ததாகவும் பொது நோக்கங்களின் சூழல்காட்டி (*Barometer*) யாகவும் விளங்குகின்றது (*John Hohenberg 1978, P. 3*). செய்தித்தாளைப் பொறுத்தவரை ஆசிரியரும் பதிப்பாசிரியர் பலரும் தொழில் சார்ந்த பணியாளர்களுமாக இணைந்து உருவாக்கப்படுகின்றது என்பது

வெளிப்படை. ஆசிரியர் (*Editor*) தலைமையில் ஒரு பதிப்பாசிரியர் குழு இடம் பெறுகின்றது. இறுதிமுடிவும் உறுதியான முடிவும் ஆசிரியரின் உள்ளத்தைப் பொறுத்ததே.

பத்திரிகையாளருக்கு என்னென்ன குணநலன்கள் அமையவேண்டும், என்னென்ன கடமைகள் உண்டு என்பன பதிப்புத் (*Editing*) தொடர்பிலுள்ள அனைவருக்கும் பொருந்துவனவாகவே உள்ளன. துணிவு, உறுதிப்பாடு (*Persistence*) வலிமை (*vitality*), தொழில் நேர்மை (*moral purpose*), போர்க்குணம் (*aggressiveness*), ஒப்பற்ற எழுத்தாளுமை, தொழில்நுட்ப மேம்பாடு (*Technical Excellence*) போன்றவை ஒரு பத்திரிகை ஆசிரியருக்குரிய குணங்களாக வரையறுக்கப்படுகின்றன (*John Hohenberg, 1978, P. 100*). செய்தித்தாளில் வரும் அனைத்துச் செய்திகளுக்கும் அவ்வாசிரியரே பொறுப்பாளியாகிறார். செய்தித்தாள் நிலையில் ஆசிரியர் அல்லாமல் *News editor, copy editor, top editor* என்று பதிப்பாசிரியர்கள் பலர் காணப்படுகின்றனர். இவ்வொவ்வொருவரின் கடமையையும் காணுதல் விரிந்துபடும் என்பதால் நகல் பதிப்பாசிரியர் (*copy editor*) என்பவரின் செயற்பாடுகளை மட்டும் காணுதல் பயனுடையதாகவும் எல்லாப் பதிப்பாசிரியர்களுக்கும் பொருந்துவனவாகவும் அமையும்.

நகல் பதிப்பாசிரியர் ஒவ்வொரு கருத்துக்கோவையையும் மூன்று முறை படிக்க வேண்டும். முதன்முறையில் எந்தவிதமான ஒதுக்குதல் (*editing*) வேலையையும் செய்யாமல் அக் கருத்துக்கோவையின் பொருளமைதியினை மட்டும் நோக்கவேண்டும். வேண்டுமானால் எழுத்துப்பிழைகளைக் களைதலையும் மிகுதியான காற்புள்ளியை அகற்றுதலையும் மட்டுமே செய்யலாம். இரண்டாம் முறை படிக்கும் பொழுதுதான் ஒதுக்குவதும் சேர்ப்பதுமாகிய முழுமையான பதிப்பு வேலைகளைச் செய்ய வேண்டும். மூன்றாம் முறை படிப்பதன்மூலம் இனிமேல் அதனுள் பிழையில்லை என்பதை அவர் உறுதி செய்யவேண்டும் என்று அவர்க்குரிய கடமைகள் உரைக்கப்படுகின்றன (*Thomas Berner, 1982, P. 44*).

மேலும் அக்கருத்துக்கோவைகளின் மிகுதியான நீளத்தைக் குறைப்பதும் அவற்றிற்குரிய பொருத்தமான தலைப்பினையிடுவதும் அவர்க்குரிய பணிகளாகும். அனைத்துப் பொறுப்புகளையும் ஏற்கக்கூடியவர் தலைமைப் பதிப்பாசிரியர்

என்றும், மேலாண்மைப் பதிப்பாசிரியர் என்றும் பதிப்பாசிரியர் (ஆசிரியர்) என்றும் அழைக்கப்படுகின்றார். இவர் செய்தித்தாள் பற்றிய அனைத்துக் கூறுகளிலும் தெளிந்த அறிவுடையவராகவும் மக்களை '(நுகர்வோரை) எப்படி அணுகவேண்டும் என்பதைத் தெரிந்தவராகவும் இருக்க வேண்டும் (*World Book, Vol. 14*). அப்பொழுதுதான் அப்பதிப்புப்பணி சிறந்ததாக அமையும்.

## மலர் ஆசிரியர் (Magazine Editor)

மலர் (இதழ்) ஆசிரியர்கள் நூற்பதிப்பாசிரியர்க்குரிய பொறுப்பும் கடமையும் கொண்டவர்கள். கட்டுரைகள், கதைகள் போன்றனவும், பிறவும் எவை எவை மலருள் இடம்பெற வேண்டும் என்பதை முடிவு செய்கிற பொறுப்பு ஆசிரியருக்கு உண்டு. மலரில் இடம்பெறும் செய்திகள் பலவும் கிடைத்தவுடன் அவற்றை நன்கு நோக்கி அவற்றின் மெய்ம்மையையும் (*Accuracy*), எளிமையையும் (*readability*) சரிபார்க்கிற பொறுப்பும் அவருக்கிருக்கிறது.

மலருக்கான கட்டுரைகளையும் பிறவற்றையும் மற்றவரிடமிருந்து பெறுவதில் மட்டுமன்றி மறுப்பதிலும் பதிப்பாசிரியரின் கடமையுறுதி பொதிந்திருக்கின்றது (*Chalapathi Rao, 1984. பக். 89*). ஏனென்றால் மலரின் தன்மை, அதன் வடிவம், அழகு போன்றவற்றில் அவர் மிகவும் கவனமாக இருக்கவேண்டியுள்ளது.

பதிப்பாசிரியராக இருந்தாலும் அச்சுப்படி திருத்துவதிலும் அவர் சிறந்தவராக இருக்கவேண்டும். ஒரு நல்ல பதிப்பாசிரியரிடத்தில் குறை காணுதற்கியலாதவகையில் எழுத்துப்பிழைகள் தோன்றாதிருக்கவேண்டும்.

## கலைக்களஞ்சிய அகராதிப் பதிப்பாசிரியர்கள்

முதன்மைப் பதிப்பாசிரியர், பதிப்பாசிரியர்கள், துணைப்பதிப்பாசிரியர்கள், தொகுப்பாளர்கள் என்ற முறையில் அடங்கிய குழு களஞ்சிய அகராதிப் பணிகளை மேற்கொள்கின்றது.

கட்டுரைகளைத் தாங்களே எழுதியும், செய்திகளை வல்லுநர் பலரிடமிருந்து திரட்டியும் தொகுத்துக்கொள்கின்றனர். தொகுக்கப்பெற்றவை அனைத்தும் பதிப்பாசிரியர் குழுவினால் ஆய்வு செய்யப்பெற்று மீண்டும்

துறைவாரியான வல்லுநர்களால் சரிபார்க்கப்படுகின்றன. அடுத்து முதன்மைப்பதிப்பாசிரியரின் பார்வைக்குப்பிறகு அவை ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. செய்திகளைப் பிறர் கொண்டு திரட்டுவது முதல் தொகுத்து வகைப்படுத்திச் சரிபார்த்து ஏற்றுக்கொள்வது முடிய பதிப்பாசிரியர் குழுவின் தலையாய பணியாக அமைகின்றது.

தனி ஒருவராலும் களஞ்சியத்தைப் பதிப்பிக்க முடியும் என்பதற்கு அபிதான சிந்தாமணி சான்றாகும். ஆ.சிங்காரவேலு முதலியார் அவர்கள் தனது முகவுரையில் இதனைக் குறிப்பிடும்போது "நான் ஒருவனே பலர் கூடிச் செய்யவேண்டிய இதனைக் கலேகபோத நியாயமாகப் பலவிடங்களில் சென்று பல அரிய கதைகளைத் தொகுத்த"தாகக் கூறுகிறார். மேலும் அபிதான சிந்தாமணியை எழுதப்புகுங்கால் அவர் மேற்கொண்ட சில செயற்பாடுகளையும் குறிக்கிறார். 'இதனை எழுதப்புகுங்கால் சிலர் வாயிலாகக் கேட்டதை அப்போதைக்கப்போது மறப்பெனும் கள்வன் அவற்றை வஞ்சியாது என் கைப்புத்தகத்தில் முதலில் குறித்துவைத்துக்கொண்டு, பின்னர் கதையெழுதும் புத்தகத்தில் பதித்து, அவற்றைச் சின்னாள் பொறுத்து, அகராதி முறைப்படுத்தி மீண்டும் பெயர்த்து எழுதினேன்' (ஆ. சிங்காரவேலு முதலியார், 1986) என்று கூறுவார். இக்கூற்றினுள் இரண்டு உண்மைகள் அடங்கியுள்ளன. ஒன்று அவருக்கு அப்பணியில் இருந்த பொறுமை உணர்வு; இரண்டு அயராத முயற்சி. இவ்விரண்டு உணர்வுகளும் பதிப்பாசிரியருக்கு மிக இன்றியமையாதவை.

அகராதி, களஞ்சியப் பணிகள் தனித்தாயினும் கூட்டு முயற்சியினாயினும் செய்யப்பெறும்பொழுது அவற்றுள் தம் முழு நேரத்தையும் செலவிடுகிற கடமை உணர்வு பதிப்பாசிரியருக்கு இருக்க வேண்டும். இல்லையெனில் பணியும் நிறைவடையாது நிறைவடைந்தாலும் சிறக்காது. பாலி ஆங்கில அகராதியின் தயாரிப்புப் பணியைப் பற்றி அதன் பதிப்பாசிரியர் கூறும் பொழுது அகராதிப்பணி என்பது ஒருவரின் இடைப்பட்ட காலத்திலோ (*enpassant*) எஞ்சிய நேரத்திலோ (*spare time*) செய்யவியலாதது; அவரின் முழு நேரத்தையும் அதற்காகவே செலவிட வேண்டும் என்று கூறுவார் (*William Stede, 1975*).

இவ்வாறு இப்பதிப்பாசிரியர்க்குள்ள கடமையுணர்வுகளும் பிறவும் ஒரு சுவடிப்பதிப்பாசிரியர்க்கும் மிக இன்றியமையாது

வேண்டப்படுகின்றன. புதியன உருவாக்கும் திறமும், இருப்பதை வெளிக்கொணரும் திறமும் மேற்கூறப்பெற்ற பதிப்பாசிரியர்களின் பொதுமைக் கூறுகளைக் கொண்டவர்க்கே கைவரப்பெறும்.

## நூற்பதிப்பாசிரியர்கள் (Book Editors)

நூற்பதிப்பாசிரியர்கள் என்ற வடிவில் நாம் இங்குக் கருதுவது இலக்கிய இலக்கண நூற்பதிப்பாசிரியர்களையே. அவர்களுள்ளும் இருப்பவற்றை வெளிக்கொணருபவரும், புதியன படைப்பவரும் என இருதிறத்தோர் உள்ளனர். இருப்பவற்றை வெளிக்கொணரும் தன்மையரே இங்கு ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்படுகிறார். இருப்பவை என்பது இதற்கு முன் வெளிவரப்பெறாத சுவடியில் உள்ளனவும், வெளிவந்து அருகியனவுமாகும். இவ்விருநிலையிலும் நூல்கள் பதிப்பிக்கப்பெறுகின்றன.

சிறப்பாகச் சுவடியில் உள்ளவற்றைப் பதிப்பிக்கும் ஆசிரியர் என்னென்ன தகுதிகளைப் பெற்றிருக்க வேண்டும், என்ன என்ன கடமையுணர்வுகள் கொண்டிருக்கவேண்டும் என்பனவற்றையெல்லாம் அறிவார்ந்த பதிப்பாசிரியர்கள் பலரும் திறம்படக் கூறிச்சென்றுள்ளனர். வையாபுரிப்பிள்ளை, தாமோதரம்பிள்ளை, சண்முகம்பிள்ளை போன்றோர் பல கட்டுரைகளில் மேற்கருத்துக்களை எடுத்துக் கூறியுள்ளனர்.

சுவடிப் பதிப்பாசிரியர்களைப் பொறுத்தமட்டில் அவர்களின் பணியை இருநிலைகளில் பகுத்துக் காணலாம்.

1. சுவடி பெயர்த்தெழுதுவதற்குமுன்
2. சுவடி பெயர்த்தெழுதிய பின்

### சுவடி பெயர்த்தெழுதுவதற்கு முன்

ஒரு சுவடியைப் பதிப்பிக்க எடுத்துக்கொண்டவுடன் அதன் பிரதிகள் இன்னும் உள்ளனவா என்று அறிந்து தேடுதலில் முயலவேண்டும். உ. வே. சாமிநாதையர் சுவடி தேடி அலைந்த நிகழ்ச்சிகளை அவர்தம் நூலில் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். சுவடி நூலக அட்டவணைகளைக் கண்டு அவற்றின் படிகளைப்பெற்ற பின் அவற்றுள் ஏதேனும் ஒன்றைப் பதிப்பிற்குத் தெரிந்தெடுத்துக்கொள்வதில் பதிப்பாசிரியர்

மிகுந்த கவனம் செலுத்தவேண்டும். அதன் நிலை (முழுமை அல்லது குறை) தன்மை, காலம், செம்மை போன்ற பல கூறுகளின் அடிப்படையில் அத்தேர்வு நடைபெறும். ஆசிரியர் தம் கையாலேயே எழுதிய பிரதியை (*Autograph*) பெறுவதென்பது இயலாதது. வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் தாமே எழுதிய சுவடிகள் இன்னும் இருப்பதாகக் கூறுவர். சுவடி பெயர்த்தெழுதுபவர் எழுதிய சுவடிகளே (*Holograph*) நமக்குக் கிடைப்பதால் அவற்றுள் மேற்கண்ட கூறுகளைக் கொண்டு மூலப்பிரதியைத் தேர்ந்தெடுப்பர். அவ்வாறு தேர்ந்தெடுத்த பிரதியை ஆதாரமாகவும் ஏனையவற்றை அதற்குத் துணையாகவும் கொள்ளுவர். அதன்பின் அம்மூலப்பிரதியை அதன் தன்மைக்கேற்பப் பெயர்த்தெழுதுவர்.

சுவடி பெயர்த்தெழுதிய பின்

நூல் முழுமையும் பெயர்த்தெழுதிய பின் பலவற்றோடும் ஒப்பிட்டுப் பாடவேறுபாடுகளைப் பட்டியலிட்டுக் குறித்துக்கொள்வர். அவற்றுள் எவற்றை நூலுள் குறிப்பிட்டுக் காட்டவேண்டும் என்பதும், எந்தப் பாடத்தை இறுதிசெய்து உறுதிப்படுத்த வேண்டும் என்பதும் பதிப்பாசிரியரின் பொறுப்பே.

பாடவேறுபாடுகளை ஒப்பிடும்பொழுது வரிக்கு வரி, சொல்லுக்குச்சொல், எழுத்துக்கு எழுத்து ஒப்பிட வேண்டும் என்று கூறுவர். அவ்வாறு ஒப்பிடும்போது மூலத்திற்கு ஒவ்வாத பொருள்தரும் பிழையான பாடங்களைக் களைந்து அதனைத் திருத்துவது பதிப்பாசிரியரின் கடமையாகும்(*Chakkaraborti, 1975, P. 317*). திருத்தப்பட்ட பாடத்தை மூலத்திலும், பிழையாய் இருந்த பாடத்தை அடிக்குறிப்பிலும் தருதல் வேண்டும். விளங்காத பகுதியையும், பாடத் திருத்தத்திற்கான கருதுகோளையும் அடிக்குறிப்பில் தரவேண்டும். அவ்வாறு தருவது நுகர்வோரின் ஆய்வு நோக்கிற்குப் பெரும்பயன் அளிப்பதாக அமையும். அதன்பின் அவற்றை ஒழுங்குபடுத்தி வேண்டியவற்றிற்கு விளக்கம் தந்து வேண்டும் பின்னிணைப்புகளுடனும் பிறவற்றுடனும் அச்சுக்கு ஏற்ற நிலையில் தயார் செய்தல் வேண்டும். இவ்வாறு இருநிலைகளிலும் செய்யப் பெறுகின்ற வேலைகள் அனைத்தும் பதிப் பாசிரியர்க்குரியன.

தகுதியும் கடமையும்

இத்தகு பதிப்புப் பணியை மேற்கொள்ளுகிற பதிப்பாசிரியர் பல்வகைத்திறனும் பெற்றவராக இருக்க வேண்டும். பலதுறை அறிவும் கைவரப்பெற்றவராக இருந்தால்தான் பதிப்பின் திறம் நன்கு வெளிப்படும்.

ஒரு சுவடிப் பதிப்பாசிரியர் நல்ல சுவடிப் பெயர்ப்பாளராகவும் (*Transcriber*), எழுத்தமைதியியல் அறிவு (*Palaeographic knowledge*) கொண்டவராகவும், மொழியியல் சிந்தனை (*Linguistic thoguht*) உடையவராகவும், சிறந்த இலக்கண அறிஞராகவும் (*Grammarian*), சொல்வளம் (*Copiousness of language*) கைவரப்பெற்றவராகவும், திறனாய்வாளராகவும் (*critic*) இருக்கவேண்டும் என்று கொள்வது பதிப்புச் செம்மை கருதியேயாகும்.

சுவடி பெயர்த்தெழுதுவது என்பது எல்லாராலும் செய்யவியன்ற எளிய செயலன்று. அதற்கெனத் தனிப்பயிற்சி பெற்றவரும் மரபுவழிக் கற்றவருமாகிய சிலரால் மட்டுமே செய்யவியலும். பிழையற்ற முறையில் எழுதப்படும் பெயர்ப்பே பதிப்புப்பணியின் சிக்கலைக் குறைக்கத் துணை செய்யும். அவ்வாறு செய்வதற்கு முதற்கண் யாப்பியல் அறிவு மிக இன்றியமையாதது. யாப்பின் பல்வேறு நிலைகளையும் அறிந்தவராலேயே அந்தந்தக் கால இலக்கியங்களைப் பெயர்த்தெழுதிப் பதிப்பிக்கவியலும்.

பதிப்பிற்கு இன்றியமையாததான பெயர்த்தெழுதுதலும், ஒப்பு நோக்கலும் இலக்கண அறிவும், சொல்வளமும் கொண்ட பதிப்பாசிரியரால்தான் செய்தற்கியலும். சுவடியைப் படிக்கும்பொழுது ஏற்படுகிற பல்வேறு பிழைகளும் பாட வேறுபாடுகளும் பதிப்பிற்குப் பல்வேறு சிக்கல்களை உண்டாக்கக் கூடும். பெயர்த்தெழுதுவதிலும் படிப்பதிலும் உண்டாகிற குறைபாடுகளை டாக்டர் உ. வே. சா. அவர்கள் தம் நூல்களுள் பலவிடங்களிலும் சுட்டியுள்ளார். இது தமிழுலகிற்கு மட்டும் உரியதன்று. கிரேக்கத்திலும் இந்நிலை இருந்தது என்பதை நம்மால் உணர முடிகின்றது. 'ஊசியின் காதில் ஒட்டகம் நுழைந்தாலும்' என்ற சொற்றொடர் (*phrase*) தவறாகப் படிக்கப்பெற்றதன் விளைவாகும்.

Kamilos - rope
kamelos - camel

கயிறு என்று பொருள் தரும் சொல்லை (*kamilos*), ஒட்டகம் என்று பொருள் தரும் சொல்லாகப் (*kamelos*) படித்ததன் விளைவே மேற்குறிப்பிட்ட சொற்றொடராகும். இச்சொற்கள் பாடவேறுபாட்டிற்குட்பட்டன என்பதைக் கிரேக்க - ஆங்கில அகராதி தெளிவுபடுத்தியுள்ளது (*Greek-English Dictionary, 1968*).

இத்தகைய வேறுபாடுகள் தோன்றாதிருக்க வேண்டுமெனில் எழுத்தமைதியியல் (*Palaeography*) அறிவைப் பெற்றிருக்க வேண்டும். காலந்தோறும் இடந்தோறும் எழுத்துகளின் வடிவம் மாறும் என்பதைப் பதிப்பாசிரியர் தெரிந்துகொள்ளவேண்டும் என்பர் (மு.சண்முகம் பிள்ளை, 1984). குறில் நெடில் வேறுபாடுகளைச் சுட்டும் குறியீடுகள் காலத்திற்குக் காலம் சுவடிகளில் வேறுபட்டிருக்கும் என்பதையும், அவற்றின் வடிவ வளர்ச்சிநிலைகளையும் அறியும்பொழுது பாட வேறுபாடுகள் குறைவதோடு சுவடிகளின் காலநிலையைக் கணிப்பதற்கும் ஏதுவாகும்.

பெயர்த்தெழுதும்காலும், அதன்பிறகும் நடைபெறும் பதிப்புப்பணிகள் திறம்பட நடைபெறுதற்கும் பதிப்பாசிரியரின் சொல்வளத்திறன் குறிக்கத்தக்க இடம் வகிக்கின்றது. நிரம்பிய சொற்களை அவர் அறிந்திருக்கவேண்டும். சான்றாக 'கொள' என்ற சொல்லைக் காண்போம். இதனைக் 'கொள' என்றும் 'கொள்' என்றும், 'கோள்' என்றும், 'கோள' என்றும் 'கேரள' என்றும் படித்தற்கியலும். இவ்வாறு படித்துப் பொருண்மை காண்பதற்கு நிரம்பிய சொல் தொகுதியை (*Vocabulary*) மனத்துள் பெற்றிருக்கவேண்டும். அவ்வாறு இருந்தாலன்றி முன்னும் பின்னும் இயைய உச்சரித்துப் பல்வேறு பொருளைக் கண்டு உண்மைப் பொருளைத் தெளியமுடியாது.

வட்டாரமொழிக் கூறுகளை ஒருவாறு அறிந்திருந்தால் இது எவ்விடத்தில் எழுதப்பட்ட சுவடி யென்பதைத் தெரிந்துகொள்ள வியலும். சில பகுதிகளில் மட்டுமே வழக்கத்திலிருக்கும் வழக்குச்சொற்களை அறிந்து அதற்குரிய பொருளை அளிக்கவும், இருவேறிடத்தில் வழக்கத்திலிருக்கும் சொற்களை அறிந்து அவற்றிற்கேற்பப் பொருளுரைக்கவும் அத்தகைய மொழியியல் அறிவு இன்றியமையாததாகும்.

பரந்துபட்ட நூற்புலமை பெற்றவராகப் பதிப்பாசிரியர் விளங்கவேண்டும். பதிப்பித்தற்கு எடுத்துக்கொண்ட பொருளை விளக்குவதற்கும், நடுவு நின்று வேறுபடுத்திக் காட்டுதற்குமுரிய

திறனாய்வுஉணர்வு நூற்புலமை இருந்தாலொழியச் சிறப்படையாது. பண்டைய உரையாசிரியர்கள் அனைவரும் இத்தகு திறம் வாய்ந்தவர்களே. நூல்களுக்குத் தம் புலமை நலத்தால் உரைவகுத்து அவற்றை அவர்கள் வெளிக்கொணர்ந்து காட்டியமையும் ஒருவகைப் பதிப்புப் பணியேயாகும்.

இவை போன்ற பல்வேறு இன்றியமையாக் கூறுகளோடு பதிப்பாசிரியர் ஒரு சிறந்த மெய்ப்புத் திருத்துநராகவும் (*Proof reader*) திகழவேண்டுவதும் குறிப்பிடத்தக்கதாகும். நூலின் சிறப்பிற்கு அது பிழையின்றி வெளிவருவது அடிப்படைக் காரணமாகும். எனவே பிழைதிருத்தத்தில் பதிப்பாசிரியரின் முடிவே இறுதியானதாக அமையவேண்டுவதால் அப்பணி செம்மை பெறச் செய்யப்பெறுதல் வேண்டும். மெய்ப்புத் திருத்துநர் எப்படியிருக்கவேண்டும், திருத்துமுறை எப்படி அமையவேண்டும் என்பதைப் பல்வேறு நூல்கள் எடுத்தியம்புகின்றன. நூலின் வடிவம் தெரிந்தெடுத்தல்முதல் அதன் வண்ணம் தெளிவது வரையிலும் முழுக்கவனத்தையும் பதிப்பாசிரியர் செலுத்த வேண்டும்.

மேற்கூறப்பட்ட தொழில்சார், கல்விசார் பதிப்பாசிரியர்களின் செயற்பாடுகள் வெவ்வேறாக அமைந்திருப்பினும் அவற்றினுள்ளே காணப்படுகின்ற நெறிமுறைகளும் நுட்பங்களும் அனைவர்க்கும் பொதுவானவையே.

## நூற்பட்டியல்


1. சண்முகம்பிள்ளைமு. பாடவேறுபாடுகளும் பதிப்பாசிரியர்களும்', தமிழ்க்கலை,(காலாண்டு ஆய்விதழ், தமிழ் 2 கலை 1) தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1984.

2. சண்முகம் பிள்ளை மு.'முகவுரை' தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை தொகுதி ஒன்று, த. கோ. பரமசிவம் (பதி), தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1987.

3. சிங்காரவேலு முதலியார் அபிதான சிந்தாமணி, ஆசியன் கல்விக்கழகம், புதுடில்லி, 1986.

4. வையாபுரிப்பிள்ளை, ச. தமிழ்ச்சுடர்மணிகள்.

5. *Chakkarborti, M. L., Bibliography in Theory and Practice, The world Press Private Limited, Second Revised edition, Calcutta,* 1975.

6. *Chalapathi Rao, M.Journalism and Politics,*
*Vikas Publishing House Pvt., Ltd.,New Delhi,* 1984.

7. *Henry George Liddell Greek-English Dictionary*
*& Robbert Scott The Clarendon Press,Oxford,* 1968.

8. *John Hohenberg The Professional Journalist,*
*Columbia University, New, York,* 1978.

9. *Katre, S. M. Introduction to Indian Textual Criticism,*
*Deccan College,Poona,* 1954.

10. *New Webster's Dictionary, Delair Publishing Company,* 1971.

11. *Rhys Davids, T. W. Pali-English Dictionary,*
*William Stede Oriental Books Reprint Corporation,*
54, *Rani Jhansi Road,New Delhi,* 1975.

12. *Sham Singh Sindhu Guide to Proof Reading,*
*Hindustan Times Press,New Delhi,* 1940.

13. *The Oxford English Dictionary Volume III,*
*The Clarendon Press,* 1961.

14. *The Oxford English Dictionary Supplement Volume I*
*The Clarendon Press.*

15. *Thomas Berner, R. Editing, CBS College Publishing,*
*New York,* 1982.

16. *World Book E Volume* 6 *Child Craft International Inc.,*
*Chicago.*

17. *World Book M Volume* 13
*Child Craft International Inc.,Chicago.*

18. *World Book N-O Volume* 14,
*Child Craft International Inc.,Chicago.*

# நூலாக்கத்தில் தாள் சுவடிகளும் ஓலைச்சுவடிகளும்

ம. இராசேந்திரன்

## முன்னுரை

காலமும் இடமும் கடந்து நிலைத்துநிற்க, கருத்துக்கள் பதிவு செய்யப் படுகின்றன. கால்களில் இரண்டைக் கைகளாக மாற்றிக்கொண்டு விலங்கினின்று மனிதன் வேறுபட்ட காலம் முதல் கருத்தறிவித்தல் இருந்திருக்கிறது. மனிதகுல வரலாற்றில் தொன்மைப் பொதுவுடமைச் சமுதாயத்தில் வேட்டைக்குச் சென்ற இடம் பற்றியும் வேட்டையாடிய விலங்குபற்றியும், வேட்டையாடிய முறை பற்றியும், கோடுகளால் அக்கால மக்கள் வரைந்து காட்டியுள்ளனர். இவ்வாறு தொடர்ந்து ஒவ்வொரு கட்ட சமுதாய வளர்ச்சியின்போதும், பதிவு செய்யும் முறையிலும் பதிவு செய்வதற்குப் பயன்படுத்தும் பொருள்களிலும் பல்வேறு வகையான மாற்றங்கள் ஏற்பட்டு வருகின்றன. அவ்வகையில் தொன்மையான வரலாற்றிற்குரியவர்களாகிய சுமேரியர்கள் பச்சைக் களிமண்ணைப் பயன்படுத்தியுள்ளனர். எகிப்தியர்கள் கி. மு. நான்காம் நூற்றாண்டிலேயே கிரேக்கத்திற்கு ஏற்றுமதி செய்ததோடு தாங்களும் பேப்பிரசைப் பயன்படுத்தியுள்ளனர். ஆசியாவைச் சார்ந்தவர்கள் கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் பர்ச்மெண்ட் (*Parchment*) எனும் விலங்கின் தோலையும் கி. பி. முதல் நூற்றாண்டு முதல் பேப்பிரசையும் இரண்டாவது நூற்றாண்டில் கோடக்சை (*Codex*)யும் பயன்படுத்தியுள்ளனர்.

இவ்வாறு அந்தந்த நாட்டுச் சூழலுக்கு ஏற்பவும் கிடைக்கும் பொருள்களுக்கு ஏற்பவும் செய்யப்படும் பொருள்களில் நிலவிய வேறுபாடுகள் பதினேழாம் நூற்றாண்டில் ஐரோப்பியர் குடியேற்ற ஆதிக்கத்தாலும் இன்று அறிவியல் வளர்ச்சியாலும் குறைந்து வருகின்றன. இந்தியாவில் கல்வெட்டு, ஓலை, செப்பேடு, தாள், அச்சு, ஒலிப்பதிவு, ஒலி ஒளிப்பதிவு, கணிப்பொறி என்று கருத்துப்பதிவு பல்வேறு வகையில் வளர்ந்து வருகிறது. அவற்றுள் ஐரோப்பியர் வருகைக்குப் பின்னர் உள்ள தமிழக வரலாற்றின்

பன்முகப் பாங்கையும் வெளிப்படுத்தும் கருத்துப் பதிவுகளைத் தம்மகத்தே கொண்டுள்ள தாள் சுவடிகளின் நூலாக்க நெறிமுறைகளை ஓலைச்சுவடிகளின் நூலாக்க நெறிமுறைகளுடன் ஒப்பிட்டு ஆய்வது இக்கட்டுரையாகும்.

தாள்: கடுதாசி என்பது (லெக். 673) போர்த்துக்கீசியச் சொல்லாகிய கேர்டாசு (*Cartaz*) என்பதிலிருந்தும் காகிதம் என்பது மராத்தியச் சொல்லாகிய காகடா (*Kagada-Kagaz in Urudu*) என்பதிலிருந்தும் தமிழில் வந்து சேர்ந்துள்ளன. தமிழிலேயே அப்பொருளுக்குத் 'தாள்' என்பது வழங்கிவருகிறது (லெக். 1355).

எகிப்தின் நைல் நதிக்கரைப் பகுதியிலுள்ள 'பேப்பிரசு' (*Papyrus*) எனும் ஒருவகையான தாவரத்தின் பகுதியை எழுதுவதற்குப் பயன்படுத்திய காரணத்தினால் 'பேப்பர்' (*Paper*) எனும் பெயர் தோன்றியுள்ளது. இதனாலேயே 'விவிலியம்' 'பைபிள்' என்று அழைக்கப்பட்டது. என்பர்.[1] நான்காயிரம் ஆண்டுகட்கும் முற்பட்ட கிரேக்க ரோமானிய பேப்பிரசு சுவடிகள் கெய்ரோ,(*National Museum*) இலண்டன், பெர்லின் ஆகிய இடங்களில் இன்றும் பாதுகாக்கப்பட்டு வருகின்றன[2].

## தாள் உற்பத்தி ஆலை வரலாறு

இயற்கையாகக் கிடைத்தவற்றை எழுதுவதற்குப் பயன்படுத்திவந்த மக்கள் வளர்ச்சிப் போக்கில் எழுதிவைத்தற்குரிய பொருளை உற்பத்திசெய்யத் தொடங்கினர். கி. பி. 150இல் சீனப் பேரரசின் அரசவையிலிருந்த 'சைலுன்' (*Tsai Lun*) எனும் அலுவலர் மல்பரி (*Mulberry*) முதலான இழைகளை மீன்வலை, பழையதுணி, கூடை ஆகியவற்றின் துண்டுகளுடன் சேர்த்து ஒற்றைத்தாளாக உருவாக்கியுள்ளார்.

பின்னர் தாள் செய்யும் கலை மைய ஆசியாவின் சமர்கந்து (*Samarkand*) பகுதிக்கு கி. பி. 751இல் சென்றுள்ளது. கி. பி. 793 இல் அருன்-ஆர்-இரசீது (*Harun-ar — Raschid*) காலத்தில் முகம்மதியர்களின் பொற்காலத்தில் பாக்தாத்தில் முதன்முதலாகத் தாள் ஊற்பத்தி தொடங்கப்பட்டது. அங்கிருந்து பின்னர் ஐரோப்பா சென்றது. கி.பி. பதினான்காம் நூற்றாண்டில் தாள் ஆலைகள் ஐரோப்பா முழுவதிலும் குறிப்பாக சுபெயின் (*Spain*) இத்தாலி, பிரான்சு, செர்மனி நாடுகளில் எண்ணற்றவை ஏற்பட்டன.

கி. பி. 1450 இல் அச்சுப்பொறி கண்டுபிடிக் கப்பட்டபின்னர் தாளின் தேவை மிகுந்தது. நாளும் நாளும் தாள்

உற்பத்தி ஆலைகள் மிகுந்துவந்தன எனினும் அன்றையத் தேவை நிறைவாகவில்லை. கி. பி. 1799இல் நிக்கோலசுலூயிசு இராபர்ட் *(Nicholas Louis Robert)* எனும் பிரான்சுக்காரர் முதன்முதலில் தொடர்ச்சியாக தாள்சுருள் உருவாக்கும் பொறியைக் கண்டுபிடித்தார். அப்பொறியை 'இலிகர் டிடாட் *(St. Leger Didot)* என்பவரிடம் விற்றார். வாங்கியவர் அதனை இலண்டனுக்கு எடுத்துச் சென்று 'பிரியன்டான்கின்' *(Bryan Donkin)* எனும் ஓர் பொறியாளரின் உதவியுடன் மேலும் அப்பொறியைச் செம்மையான வடிவத்திற்கு மாற்றியமைத்தார். அதன்பின்னர் தனித்தாளிற்குப் பதிலாக ஆலையில் தாள் உருளைகள் உருவாக்கப்பட்டன.

தாள், உருளைகளாக உருவாக்கப்பட்டபொழுது அதற்குரியகச்சாப் பொருள்கள் கிடைக்காமற் போயின. ஆகவே மலிவானதும் நிறையக் கிடைப்பதுமான ஒரு பொருளிலிருந்து தாள் தயாரிக்க வேண்டியிருந்தது. 1840இன் 'பிரிட்ரிச் கோத்தோலோப் கெல்லர்' *(Friedrich GottoRob Keller)* எனும் செருமானியர் மரக்கட்டைகளை அரைத்துக் கூழ் செய்யும் ஓர் இயந்திரத்தை உருவாக்கினார். பின்னர் 1850இல்தான் இரசாயன முறையில் கூழ் தயாரித்துத் தாள் தயாரிக்கும் முறை அக் பர்கீசு *(Hugh Burgees)* எனும் ஆங்கிலேயரால் வளர்ச்சி பெற்றது இன்றும் அது தொடர்ந்து பல்வேறு தொழில் நுட்பங்களால் வளர்ந்து வருகிறது[3].

சுவடி

மேனுசுகிருப்டசு *(Manuscriptus)* எனும் இலத்தீன் மொழிச்சொல்லிலிருந்து மேனுசுகிருபட்சு *(Manuscripts)* எனும் ஆங்கிலம் எடுத்துக் கொண்டுள்ளது. இதற்கு இணையாகத் தமிழில் சுவடி எனும் சொல் கையாளப்படுகிறது.

அவை ஓலைச்சுவடி, தாள்சுவடி என்று இருவகையாகப் பகுக்கப்பபடுகின்றன. மேனு *(Manu)* சுகிருப்டசு *(Scriptus)* எனும் இரண்டு சொற்கள் கையால் எழுதப்பட்டது *(written by hand)* எனும் பொருள் தருவதால் எழுதப்பட்ட ஓலைகளை ஓலைச்சுவடி என்றும், எழுதப்பட்ட தாளைச் சுவடி என்று மட்டுமே கூட குறிப்பிடலாம். ஏனெனில் ஓலைச்சுவடி என்று அழைப்பதால் வெளிப்படும் தெளிவு அரிய கையெழுத்து (காகித)ச் சுவடி என்றழைக்கும்போது கிடைப்பதில்லை. சிலர் 'கையெழுத்துப்பிரதிகள்' *(Marx, Engels Manuscripts, unaddressed letters)* என்ற தலைப்பில் அச்சிட்டுள்ளனர். 1597 ஆம் ஆண்டினைச்

சேர்ந்த ஒரு நூல்' *'Certain Worthey Manuscript poems of great Antiquitie'* என்றே தலைப்பிடப்பட்டுள்ளது.

பழமையான தாள் சுவடிகள்

இவ்வாறு 'காகிதத்தில் எழுதிய சுவடிகளிலேயே இதுகாறும் நமக்குக் கிடைத்தவற்றுள் மிகவும் பழமையானது மத்திய ஆசியப் பகுதியில் காஷ்கரில் இருந்து கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் வழங்கிய குப்த எழுத்துக்களில் எழுதப்பட்டுக் கிடைத்ததாகும்.[5] எனினும் நம் நாட்டில் கிடைக்கும் காகிதப்பிரதிகள் கி.பி. பதினான்காம் நூற்றாண்டிற்கு முற்பட்ட காலத்தைச் சேர்ந்தனவாக இல்லை.'[6]

தமிழில் தாள் சுவடிகள்

தமிழ் நாட்டில் தாளும் அச்சும் வந்தபின்னரும் ஓலையில் எழுதுவதையும் எழுதி வைப்பதையுமே பெருமையாகவும் உண்மையுடையதாகவும் கருதி வந்தனர். இன்றும் சிலர், பிறந்தநாள் பற்றிய குறிப்புகளை ஓலையில் எழுதிவருவதையும் ஐரோப்பியப் பாதிரிமார்கள் தங்கள் நூல்களை ஓலையில் எழுதிவைத்துள்ளமையும் மேற்கூறிய கருத்திற்குச் சான்றுகளாகின்றன. மேலும் அச்சுநூலைப் பார்த்தும் ஓலையில் படி எடுத்திருக்கிறார்கள். மெய்ப்பில் விடுபட்டுப் போன பிழைகள் அச்சடிப்பிழை என்று ஓலைச்சுவடியில் குறிப்பிடப்பட்டுள்ளன[7].

எனவே ஓலையில் எழுதி வைப்பது என்பது நம்பிக்கையின் அடிப்படையில் தாள் வந்தபிறகும் இங்கு நடைபெற்று வந்துள்ளது. ஆனால் காலப்போக்கில் எளிமையும் முயற்சிச் சுருக்கமும் அறிவியலும் ஓலையின் பயன்பாட்டைக் குறைத்துவிட்டன.

ஐரோப்பியர் வருகைக்குப் பின்னர் தாளின் பயன்பாடு தமிழகத்தில் அதிகமாயிற்று. வாணிக விவரங்களும் அரசியல் குறிப்புகளும் தாளில் எழுதப்பட்டன. தொடர்ந்து நமது பழக்கவழக்கம், பண்பாடு, வரலாறு தொடர்பான செய்திகளை ஐரோப்பியர்கள் தொகுக்கவும் எழுதிவைக்கவும் தொடங்கினர். இங்கிருந்த கல்வெட்டுகள், ஓலைச்சுவடிகள் ஆகியவைகூட தாளில் படி எடுக்கப்பட்டன. அதனால் அவை பாதுகாக்கவும்பட்டன. இவ்வாறு தமிழ் நாடு பற்றித் தமிழிலும் பிற மொழிகளிலுமான

தாள்சுவடிகள் தமிழகத்திலும் இந்தியாவின் பிற மாநிலங்களிலும் உலகின் பல நாடுகளிலும் இடம்பெற்றுள்ளன.[8]

இதுவரை நமக்குக் கிடைத்துள்ள தமிழ்ச்சுவடிகளுள் (தாள்) இந்தியாவின் முதல் தலைமை நில ஆய்வாளராகப் பணியாற்றி மறைந்த கர்னல் காலின் மெக்கன்சி (*Col.Colin Mackenzie - 1753 - 1821*) என்பவர் தொகுத்து வைத்திருக்கும் தாள் சுவடிகள் தாம் பெரும்பான்மையானவையாக உள்ளன.

## வகைகள்

தமிழில் உள்ள தாள் சுவடிகளை, ஓலைச்சுவடிகளிலிருந்து படியெடுக்கப் பட்டவை, மூலமாகத் தாளிலேயே எழுதிவைக்கப்பட்டவை என்ற இரண்டுபெரும் பிரிவுகளுக்குள் அடக்கலாம்.

## ஓலையின் நகல்

ஓலைச்சுவடிகளிலிருந்து படி எடுக்கப்பட்ட தாள்சுவடிகளுள் 90 விழுக்காடு செய்யுள் நடையிலேயே அமைந்திருக்கின்றன. இச்சுவடிகள் சிதைவுற்றிருப்பினும் மூல ஓலைச்சுவடியிலிருந்து நிறைவு செய்து கொள்ள முடியும். அது போன்றே படியெடுக்கப்பட்ட பின்னர் ஓலைச்சுவடி சிதைந்திருப்பின் அப்பகுதிகளைத் தாள் சுவடி கொண்டு நிறைவு செய்து கொள்ள முடியும். இலக்கியம், இலக்கணம் மருத்துவம், புராணம் என ஓலைச்சுவடிகளின் பெரும்பான்மையான துறைகளைச் சார்ந்தே இத்தாள் சுவடிகள் அமைந்திருக்கின்றன.

## மூலமான தாள்சுவடிகள்

ஐரோப்பியர்களே தமிழகத்தில் தாளில் எழுதும் முறையைப் பெரிதும் பயன்படுத்தினர். அவர்களுக்கு உதவியாக தமிழகத்தில் இருந்த சிலரும் தாளில் எழுதத் தொடங்கினர். அவ்வாறு எழுதிவைக்கப்பட்டுள்ள தாள் சுவடிகள் மூலமான தாள் சுவடிகளாகும்.

## நூலாக்கத்தில் பொதுப்பண்புகள்

தமிழர்கள் தாளில் எழுதத் தொடங்கிய பிறகும் பழக்கத்தால் ஓலையில் எழுதுவதைப் போன்றே எழுதிவந்தனர். அதனால் குறில், நெடில்; உயிர்மெய் மெய், துணையெழுத்து உயிர்மெய்/ மெய்யெழுத்து ஆகியவற்றில் ஓலைச்சுவடி போன்றே வேறுபாடுகளற்றும் இடைவெளியின்றியும் தாள் சுவடிகள்

எழுதப்பட்டு உள்ளன. சான்றாக 'தெககுமாமபலகை' என்ற சொல் ஓலையில் எப்படி எழுதப்படுமோ அவ்வாறே 'பழவேற்காடு கைபீது' எனும் தாள் சுவடியிலும் எழுதப்பட்டுள்ளது. இதனைத் தேக்குமரம் பலகை என்றும் தேக்கு மாம்பலகை என்றும் கருதலாம். எனினும் இரண்டாவதே ஏற்புடையதாகும். இதுபோன்று ஓலைச்சுவடிகளை நூலாக்கம் செய்யும்பொழுது மேற்கொள்ள வேண்டிய சில நெறிமுறைகள் தாள்சுவடிக்கும் பொருந்துவனவாக அமைந்துள்ளன. மேலும் ஓலைச்சுவடியிலிருந்து படி எடுக்கப்பட்டுள்ள தாள் சுவடிகளை நூலாக்கம்செய்யும் பொழுதும் ஓலைச்சுவடிக்குரிய நெறிமுறைகளே அத்தகைய தாள் சுவடிகளுக்கும் பொருந்துவனவாகும்.

## நூலாக்கத்தில் (தாள் - ஓலைச்சுவடி) வேறுபாடுகள்

### உள்ளடக்கம்

ஓ்லைச்சுவடிகள் இலக்கியம், இலக்கணம், புராணம், மருத்துவம், சோதிடம் எனும் வகைக்குள் பெரும்பான்மையும் அடங்கிவிடும். ஆனால் மூலமான தாள் சுவடிகள் 1) ஆவணம், 2) கடிதம், 3) வரலாறு, 4) அயல்நாட்டார் குறிப்புகள், 5) விண்ணப்பம், 6) வாக்குமூலம், 7) நீதிமன்ற முடிவுகள், 8) ஆட்சிமுறைப்பதிவேடுகள் 9) காவல்துறைப் பதிவேடுகள் 10) நாட்டுப் புறவியல் 11) நாட்குறிப்பேடுகள் 12) தன்வரலாறுகள் 13) அறிக்கைகள் 14) பேட்டிகள் என்று பல்வேறு வகைகளாக அமைந்துள்ளன. இவற்றை ஐரோப்பியர் காலத் தமிழகம் பற்றியவை என்றும் தமிழர்களின் வரலாறு பண்பாடு பற்றியவை என்றும் இருபெரும் பிரிவுகளாக்கலாம்.

உள்ளடக்க வேறுபாடுகள் நூலாக்க நெறிமுறைகளையும் வேறுபடுத்தும் என்பதால் ஓலைச்சுவடி, தாள் சுவடி நூலாக்கத்திலும் இத்தகைய வேறுபாடுகள் வெளிப்படுகின்றன. இலக்கணக் குறிப்பு, பொருள், குறிப்புரை, முன்னுரை, பின்னிணைப்பு என்று ஓலைச்சுவடிகளை நூலாக்கம் செய்வது போல் மூலமான தாள் சுவடிகளை நூலாக்கம் செய்திட முடியவில்லை. மூலமான தாள் சுவடிகளை ஆதாரமாகக் கொண்டு, அவற்றிலிருந்து கிடைக்கும் செய்திகளை முற்கால, தற்கால இக்காலச் சான்றாதாரங்களுடன் ஒப்பிட்டு இருக்கின்ற வரலாற்றுச் செய்திகளைத் தெளிவு படுத்தும் வகையிலும் புதிய செய்திகளை வெளிப்படுத்தும் வகையிலும் தாள் சுவடிகள் நூலாக்கம் செய்யப்படுகின்றன.

## நூலாக்கம் அமைப்பு

ஓலைச்சுவடியை நூலாக்கும்பொழுது சுவடியே நூலாகிறது. மூலத்தாள் சுவடியை நூலாக்கும்பொழுது நூலில் அது ஒரு பகுதியாகிறது.

## நூலாக்கத் தேர்வு

இதுவரை அச்சாகவில்லை என்பதும் மொழியின் வளர்ச்சிக்கு ஒருநூல் புதிதாக வருகிறது என்பதுமே ஓலைச்சுவடியை நூலாகத் தேர்ந்திடும்போது அடிப்படைக் காரணங்களாக அமைகின்றன.

ஆனால் தாள் சுவடியை நூலாக்க எடுத்துக் கொள்ளும்பொழுது இதுவரை அச்சாகவில்லை என்பதுடன் அச்சிடப்பட்டால் வெளிப்படும் புதிய செய்தி என்ன என்பது அடிப்படையாகிறது. அதனால் தாள் சுவடியின் நூலாக்கத் தகுதியை அதன் உள்ளடக்கமே தீர்மானிக்கிறது எனலாம்.

## பதிப்பாசிரியர் தகுதிகள்

ஓலைச்சுவடிப் பதிப்பாசிரியர், தாள் சுவடிப் பதிப்பாசிரியர் இருவருக்கும் இருக்கவேண்டிய அடிப்படையான தகுதிகள் பொதுவாகின்றன. ஆனால் தாள் சுவடிப் பதிப்பாசிரியர்க்குரிய தனித்தகுதிகளும் ஓலைச்சுவடிப் பதிப்பாசிரியர்க்குரிய தனித்தகுதிகளும் வேறுபடுகின்றன. அவை பின்வருமாறு.

ஓலைச்சுவடிகள் பெரிதும் செய்யுள் நடையில் அமைந்திருப்பதால், பதிப்பாசிரியர்க்கு யாப்பறிவு இன்றியமையாததாகும். யாப்பறிவால் ஓலையின் சிதைந்த பகுதிகளையும் எதுகை, மோனை, இலக்கண விதிமுறை ஆகியவை கொண்டு துணிந்திட இயலும். மெய்யெழுத்து உயிர்மெய்யெழுத்து குறில் நெடில் போன்ற வேறுபாடுகளைக் கண்டறிந்து சரியான பாடத்தைத் தேர்ந்திட இயலும். ஆனால் மூலமான தாள் சுவடி பெரிதும் உரைநடையில் அமைந்துள்ளதால், பதிப்பாசிரியர்க்கு யாப்பறிவு அடிப்படைத் தேவையாக இல்லை. மேலும் நாட்டுப்புறப்பாடல்களாக உள்ள தாள் சுவடிகளும் இலக்கண விதிகளோடு முழுவதும் பொருந்தி இருப்பதில்லை.

ஓலைச்சுவடிப் பதிப்பாசிரியர் இலக்கிய இலக்கணப் புலமையுடன் வரலாற்றுப் பார்வையும் கொண்டிருந்தால் பாராட்டிற்குரியவராகிறார். ஆனால் தாள் சுவடிப் பதிப்பாசிரியருக்கு மொழியியல், மொழிபெயர்ப்பியல்,

தொல்லியல், கடலியல், வரலாறு, நிலவியல், நீதிமுறை, வாணிகவியல், சமூகவியல், புள்ளியியல், பொருளியல், மானிடவியல், விலங்கியல், தாவரவியல் அளவையியல், பண்பாடு ஆகியபல்வேறு துறைகளின் வரலாறும் வளர்ச்சியும் பற்றிய பொது அறிவு தேவையாகிறது. 18 ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் ஆராய்ச்சி பல்வேறு துறைகளில் பரந்து விரிந்தமையால் அதன்பின்னர் தமிழகத்தில் பெரிதும் பயன்பாட்டிற்கு வந்த தாளில் அத்துறை சார்ந்த செய்திகள் இடம்பெற்றுள்ளன. எனவே அதற்கு முந்திய பயன்பாட்டிலிருந்த ஓலையில் அத்தகைய பல்துறை சார்பான செய்திகள் தாள் சுவடியில் இடம் பெற்றிருக்கும் அளவிற்கு இடம் பெறவில்லை. எனவே ஓலைச்சுவடிப் பதிப்பாசிரியரைவிடவும் தாள் சுவடிப் பதிப்பாசிரியருக்கு அத்தகைய பொதுஅறிவு தேவையாகிறது. அவற்றைப் பின்வரும் சான்றுகள் உறுதிப்படுத்தும்.

## மொழியியல்

ஓலைச்சுவடி பாடல் அமைப்பில் இலக்கிய வழக்கில் இருப்பதால் அகராதிகள் கொண்டே பொருள்காண முடியும். ஆனால் தாள் சுவடிகளில் பெரிதும் பொதுமக்கள் பேச்சு மொழியே எழுதப்பட்டுள்ளது. ஓலைச்சுவடியாக இருப்பின் இலக்கண விதிகளுக்கேற்பச் சொற்களின் உண்மை வடிவத்தைக் கண்டு பிழை நீக்கி மூலபாடத்தைக் காணமுடியும். தாள் சுவடியில் அக்காலத்திய பேச்சு மொழி எழுத்து வடிவம் பெற்றிருப்பதால் அச்சொல்லின் இலக்கிய வழக்கு தெரிந்த பின்னரே பொருள் காண இயலும். பெரும்பாலான சொற்கள் அகராதியிலும் இடம் பெற்றிருப்பதில்லை. இச்சிக்கலைத் தீர்ப்பதற்கு முதலில் அப்பேச்சுமொழிச் சொற்களின் சரியான வடிவத்தைக் கண்டறிதல் வேண்டும். அதற்கு மொழியியல் அறிவு அவசியமாகிறது. ஒரு சொல் எந்த அமைப்பில் அருகில் என்ன ஒலி வரும்பொழுது பேச்சில் எவ்வாறு மாறுதலடையும் என்பதை மொழியியல் விதிகளின் வழியே கண்டறிந்து அச்சொல்லின் சரியான வடிவத்தைக் காணவேண்டியுள்ளது (சான்றுகள், உரல்-ஒரல்; இலை-எலை; வெற்றி- வெத்தி).

## மொழிபெயர்ப்பியல்

தமிழில் பிறமொழிக் கலப்பு காலந்தோறும் அரசியல் சமூகப்பொருளியல் ஆதிக்கங்களால் நடந்து வருகின்றன. எழுத்து வழக்கைவிடவும் பேச்சுவழக்கில் கலப்பு அதிகமாகக் காணப்படுகிறது. பேச்சு வழக்கே தாள் சுவடியில்பெரிதும்

எழுதியுள்ளனர். அவ்வாறு எழுதும்பொழுது சில சொற்களை மொழிபெயர்ப்பாகவும் சில சொற்களை எழுத்துப் பெயர்ப்பாகவும் (Transliteration) அமைத்துள்ளனர். சான்றாக 'தீபாராதனை' என்பது தீப்பூசை என்று தாள் சுவடியில் இடம் பெற்றுள்ளது. 'ஜூனியர் கேப்டன்' (Junior Captain) என்பது 'சின்னக் கப்பித்தான்' என்று முதற்பகுதி (Junior) மொழிபெயர்ப்பாகவும் இரண்டாம் பகுதி (Captain) எழுத்துப் பெயர்ப்பாகவும் இடம் பெற்றுள்ளன. 'கவர்னர்'(Governor) என்பது 'கெவுனர்' என்றும், 'கம்பெனி'(company) என்பது 'கும்பினி' என்றும் 'போர்த்துக்கீசியர் (portugal) என்பது 'புடிதிகீசுகாரர்' என்றும் 'கோசுடல் கார்டுசுமென்' (coastal guardsmen) என்பது கொஸ்தகுற வந்தோர் என்றும் எழுதப்பட்டுள்ளன. எளிதில் பொருள் புரியா வகையில் சில சொற்களும் இடம்பெற்று உள்ளன.

### தொல்லியல்

ஓலைச்சுவடியைப் பதிப்பிக்கும்பொழுது சுவடியில் உள்ள விவரங்களே ஆய்விற்குரியவையாகின்றன. தாள் சுவடியைப் பதிப்பிக்கும் பொழுது அதன் முற்காலத் தொல்லியல் சான்றாதாரங்களும் கவனத்திற்குரியவையாகின்றன.

சான்றாகப் பழவேற்காடு பற்றிய ஆய்விற்கு கி.பி.1521 ஆம் ஆண்டைச் சேர்ந்த நாகலாபுரம் கல்வெட்டில் பழவேற்காடு துறைமுகமாக இருந்தசெய்தியும் அத்துறைமுகத்தில் நின்ற கப்பலில் ஏற்றப்படும் சேலை மற்றும் துணிகளுக்கு விதிக்கப்பட்ட வரி பற்றியசெய்தியும் பயன்படுத்திக் கொள்ளப்பட்டது.

### வரலாறு

தாள் சுவடிகள் பெரிதும் ஐரோப்பியர் வருகைக்குப் பின்னரே எழுதப் பட்டுள்ளதால் அவற்றை நூலாக்கம் செய்வோர்க்கு, ஐரோப்பியர் வருகைக்கு முன்னர் தமிழகம், ஐரோப்பியர் ஆட்சியில் தமிழகம் ஆகிய வரலாறு தெரிந்திருக்க வேண்டியிருக்கிறது.

இவ்வாறே பிறதுறை அறிவும், தாள் சுவடிப் பதிப்பாசிரியருக்கு மிகவும் தேவையாகும்.

### கள ஆய்வுப்பணி

ஓலைச்சுவடியை நூலாக்கம் செய்வோர் பெரிதும் கள ஆய்வுப்பணி மேற்கொள்வதில்லை. சான்றாக உ. வே. சா. சிலப்பதிகாரம் குறிப்பிடும் மதுரைக்குப் போகும் வழிகளைக்

கண்டறியாமலே சிலப்பதிகாரத்தைப் பதிப்பித்திருக்கிறார். பின்னர் கரந்தை சி. கோவிந்தராசன் அவ்வழியே சென்று கண்ணகி சிலையைக்கண்டுபிடித்தார். எனவே கள ஆய்வுப்பணி என்பது ஓலைச் சுவடிப் பதிப்பிற்கு மிக இன்றியமையாததாக எடுத்துக் கொள்ளப்படுவதில்லை.

தாள் சுவடிப் பதிப்பிற்குக் களப்பணி மிகவும் தேவை. சான்றாக 'உலாந்தாக்காரர்கள் பழவேற்காட்டில் கரிமணலில் வந்திறங்கினார்கள்' எனும் சுவடிச் செய்தியைப் படித்தால், அங்கு கடற்கரையின் மணல் கருப்பாக இருக்கும்போலிருக்கிறது என்று எண்ணி கரிமணலுக்குப் பொருள் கொள்ளச் செய்தது. களப்பணி சென்று வந்தபின்னரே அங்குள்ள ஓர் இடத்திற்குக் கரிமணல் என்று பெயர் இருப்பது தெரியவந்தது. மேலும் ஓலையில் உள்ள செய்திகளைவிடவும் தாளில் உள்ள செய்திகளை நேரில் கண்டறிந்துகொள்ள ஒப்பிட்டஅளவில் தாள் சுவடிகளின் கால இடைவெளிக்குறைவும் அதற்குத் துணையாகின்றது.

## ஒப்பீட்டாய்வு

ஓலைச்சுவடியின் செய்திகளை இன்றைய நிலையுடன் ஒப்பிட்டு நூலாக்கம் செய்வதில்லை சான்றாக, பரிபாடலைப் பதிப்பிக்கும் ஒருவர் இன்றைய அழகர்மலையுடன் ஒப்பிட்டு ஆராய்வதில்லை. ஆனால் தாள் சுவடியில் கூறப்படும் செய்திகள் இன்றைய நிலையுடன் ஒப்பிட்டறியப்படும்.சான்றாக 1816 ஆம் ஆண்டு பழவேற்காட்டிலிருந்த மக்கள் தொகை, சாதி, தொழில்கள் ஆகிய சுவடியின் செய்திகளை இன்றைக்குப் பழவேற்காட்டில் உள்ள விவரங்களுடன் ஒப்பிட்டு அறிந்து அவற்றின் வளர்ச்சி, வீழ்ச்சி பற்றிய வரலாறு வெளிப்படுத்தப்பட்டுள்ளது. ஓலைச்சுவடிப் பதிப்பிற்கு அத்தகைய தேவைகள் ஏற்படுவதில்லை.

## பின்னிணைப்பு

நூலின் பிற்பகுதியில் சுவடிப்பதிப்பின் பொதுவான கூறுகளாகிய அருஞ்சொல்லகராதி துணைநூற்பட்டியல் ஆகியவற்றுடன் பேச்சு மொழிச்சொற்கள் நிறைந்திருப்பதால் தாள் சுவடி நூலாக்கத்திற்கு முழுச் சொல்லடைவும் பயன்பெற்ற புள்ளிவிவரப் பட்டியலும், நாட்டுப் படங்களும் வரைபடங்களும் தேவையாகின்றன.

## முடிவுரை

எழுதி வைக்கப் பயன்படுத்தப்பட்ட பொருள்களின் வரலாற்று வரிசையில் தாள் கடந்த மூன்று நூற்றாண்டுகளாகப் பெரும்பாலோர் பயன்படுத்தும் பொருளாக உள்ளது கடந்த எக்காலத்தை விடவும் இன்று கல்வியும் அறிவியலும் வளர்ச்சியடைந்துள்ள நிலையில் தாளும் அவ்வாறே மக்களின் பயன்பாட்டில் பொதுமைப்படுத்தப்பட்டுள்ளது. தாளில் வாழ்ந்து அச்சேறாத சுவடிகளைத் தேவை கருதி நூலாக்கம் செய்யும் பொழுது நேர் கொள்ள வேண்டிய நெறிமுறைகளும் தாள் சுவடிக்கேயுரிய தனி நெறிமுறைகளும் இக்கட்டுரையில் ஒப்பிட்டு ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

## பின்குறிப்புகள்

1.ச. வையாபுரிப்பிள்ளை, இலக்கிய உதயம் முதற்பகுதி, தமிழ்ப்புத்தகாலயம் 1958, பக். 18,19
2.New standard Encyclopeadia, Vol. 10, p. 80
3.Ibid, p.78
4.The Oxford English Dictionary vol, VI Reprint 1961, p.145
5.Bengal Asiatic Society Journal vol. 66
6.தி. நா. சுப்பிரமணியம், தென்னிந்தியக்கோயிற் சாசனங்கள் பாகம்3, பகுதி2 1957, ப, 349
7.டாக்டர். இ. சுந்தரமூர்த்தி 'சுவடியியல்' களஞ்சியம்தொகுதி 1. இதழ்1 வளர் தமிழ்மன்ற வெளியீடு சென்னை ஏப். 1986, ப. 61
8.Gregory James, 'European sources for Tamil Manuscripts' Journal of Tamil Studies, vol.18, I.I.T.S., 1980, pp.4-13
A. Krishnamurthy, "A Report on a scientific catalogue of the Tamil Manuscripts in Europe 1960 (Prepared for the Govt. of Madras)

# செப்பேடுகளும் ஓலைச்சுவடிகளும்

செ. இராசு

## பொதுப் பெயர்

செப்பேடு (செம்பு+ஏடு), ஏட்டுச் சுவடி (ஓலைச்சுவடி) ஏடு + சுவடி என்ற இரண்டு பெயர்களிலும் 'ஏடு' என்ற பொதுவான பெயர் வருவதைக் காணலாம். செப்பேடுகளும் ஓலைச் சுவடிகளும் தனித்தனி ஏடுகள் கொண்ட தொகுதிகளாக உள்ளன.

'பாடம் ஏறினும் ஏடது கைவிடேல்'
'ஏடாயிரங்கோடி எழுதாது'
'ஏடெடுத்தேன்'

போன்ற எடுத்துக்காட்டுகளில் ஏடு என்பது சுவடியையும் ஏனைய எழுதப் பயன்படும் பொருள்களையும் குறிக்கிறது. ஓலைச் சுவடிக் கட்டுக்கள் 'புத்தகக் கவளி' என்று குறிக்கப்பெறும்.

## அளவு

கூறப்பெறுகின்ற செய்திகட்கு ஏற்றவாறு செப்பேடுகள் அளவில் சிறிய தாகவோ அல்லது பெரிதாகவோ அமைக்கப்படும்.

எழுதப்படும் பொருளுக்கு ஏற்றவாறு ஓலையை நறுக்கி ஓலைச் சுவடிகளும் சிறிதாகவோ பெரிதாகவோ அமைக்கப்படும்.

ஒரு செய்தியைக் கூறப் பல செப்பேடுகள் தேவைப்பட்டால் அவை ஒரே மாதிரியில்தான் அமைக்கப்படும். அவ்வாறே ஒரு நூலை முழுமையாக எழுதப் பயன்பெறும் ஓலைச் சுவடிகளும் ஒரே அளவில், அமைப்பில் தான் உருவாக்கப் பெறும்.

முதல் குலோத்துங்கன் காலத்திய கல்வெட்டுப்பாடல் ஒன்று இவ்விதம் அமைந்த செப்பேடுகளைப் பற்றிக் குறிப்பிடும்போது 'ஒத்து அமைந்த செப்பேடு' என்று கூறும்.

இவ்வாறு ஒத்து அமைத்தல் செப்பேடுகட்கு மட்டும் அல்ல ஓலைச் சுவடிகட்கும் பொதுவாகும்.

இவ்வாறு எல்லா ஓலைச் சுவடிகளும், செப்பேடுகளும் ஒரே அளவாக இல்லாமல் ஒவ்வொன்றும் ஒரு அளவில் இருப்பதால் இவை கட்டுக்கள் குலைந்து ஒன்றோடு ஒன்று கலந்துவிட்டால் அவைகளைப் பிரித்துத் தனித்தனி ஏடுகள் ஆக்குவது எளிமையாக அமைகிறது.

## அமைப்பு

செப்பேடுகளை உருக்கி நீட்டித் தட்டியும், வெட்டியும் தேவையான அளவுள்ள செப்பேட்டை உருவாக்குவர். சதுரமாகவோ நீண்ட சதுரமாகவோ அவை அமைக்கப்படும். மேடுபள்ளம் இல்லாமல் சமமாக்கப்படும்.

பனை ஓலைகளை எழுதுவதற்குத் தக்கவாறு பாடம் செய்வர். பனை ஓலைகளை வெயிலில் உலர்த்தியும், நீரில் ஊறவைத்தும், வேகவைத்தும் பதப்படுத்துவர். பனியில் இட்டுப் பாடம் செய்வதும் உண்டு. இவ்வாறு பாடம் செய்யப்பட்ட ஓலைகளைச் சோழி அல்லது கூழாங்கற்கள் கொண்டு தேய்த்துப் பக்குவப்படுத்துவதும் உண்டு. செப்பேடுகளிலும், ஓலைச் சுவடிகளிலும் அளவுக்குத் தக்கவாறு ஒன்றோ இரண்டோ வட்ட வடிவமான துளைகள் இடுவது உண்டு. எழுதும்போது துளைகள் உள்ள இடத்தில் இடம்விட்டு எழுதுவது வழக்கம்.

## எழுத்துமுறை.

செப்பேடுகளுக்கும், ஓலைச்சுவடிகட்கும் பெரும்பாலும் ஏடுகளின் தொடக்கத்தில் எண் இடுவது வழக்கம். தனித்தனி ஏடுகட்குத்தொடர்எண் குறிப்பது வழக்கமே தவிரப் பக்கங்களுக்கு எண்ணிடுதல் பெரும்பாலும் வழக்கம் இல்லை.

செப்பேட்டில் எழுத்துக்களை வெட்டுமுன் பளிச் என்று தெரியும் ஒரு பொருளால் எழுத்துக்களை எழுதிய பின்னர் அதன்மீது வெட்டுவர். செப்பேட்டில் எழுத்துக்களை எழுதும் முறைக்கு வெட்டுதல், கொத்துதல். பொறித்தல் என்று கூறப்பெறும்.

ஓலைச் சுவடியில் இவ்வாறன்றி நேரடியாக எழுத்தாணி கொண்டு எழுதப்படுகிறது.

ஓலைச் சுவடியில் கற்றறிந்த புலவர்களோ நன்கு இலக்கிய, இலக்கணம் கற்றவர்களோ தாமே எழுதுவது வழக்கம். ஆனால் செப்பேடுகளில் படிப்பறிவின்றிக் கொத்துதல் தொழில் வல்ல தொழிலாளர்களோ பிறரோ வரைந்த எழுத்துக்கள் மீது கொத்துவர்

செப்பேட்டிலும் ஓலைச்சுவடிகளிலும் மெய் எழுத்துக்கள் பெரும்பாலும் புள்ளி பெறுவதில்லை. ஓலைச் சுவடியில் எழுத்துக்கள் இணைந்து கோர்வையாகவும் செப்பேடுகளில் தனித்தனியாகவும் காணப்பெறும்.

ஓலைச்சுவடி 'நீட்டோலை' என்றும் அதன் எழுத்து நெட்டெழுத்து என்றும் வழங்கப்பெறும்.

## பெயரிடுதல்

செப்பேடுகள் அவை கிடைத்த இடத்தைக் கொண்டோ அவை இருக்கும் இடத்தைக் கொண்டோ பெயரிடப்படுகின்றன. ஆனால் ஓலைச் சுவடிகளோ எழுதியுள்ள பொருளால் மட்டுமே பெயர்பெறுகின்றன.

## இடம் பெயர்தல்

செப்பேடுகளும், ஓலைச் சுவடிகளும் எடுத்துச் செல்லும் எளிமை காரணமாக ஓரிடத்திற்குரியவை வேறுபட்ட தொலை தூரமான இடங்களில் கூடக் கிடைக்கலாம்.

செப்பேடுகளோ அல்லது ஓலைச்சுவடிகளோ அவை கிடைக்கும் இடத்தை மட்டும் வைத்து அவ்விடத்திற்கே உரியன என்று கூறமுடியாது.

## அழிவு

செப்பேடுகளைப் படிக்கவும் பாதுகாக்கவுமின்றிப் பூமியில் புதைத்து வைத்தனர். ஓலைச் சுவடிகளையும் அவ்வாறே தகுந்த பாதுகாப்பு ஏற்பாடுகள் இல்லாமல் பரண்மேல் இட்டனர்.

பதினெட்டாம் பெருக்கில் நீரில் ஓலைச்சுவடிகள் அழிந்தன. பல நெருப்புக்கும் இரையாயின. எஞ்சிய ஏடுகளோ பராமரிப்பு இன்றி இராமபாணப் பூச்சிகளால் அழிவுற்றன.

செப்பேடுகள் பல உருக்கப்பட்டுப் பாத்திரங்களாக மாறின. செம்பின் உபயோகத்துக்காகப் பல செப்பேடுகள்

அழிக்கப்பெற்றன. இயற்கையாக ஓலைச்சுவடிகள் எளிதில் அழிவதுபோலச் செப்பேடுகள் அழிவது இல்லை.

## படிகள்

ஓலைச்சுவடிகட்கு மூல ஓலை மட்டுமின்றிப் பல படி ஓலைகள் இருந்தன. ஏடு பெயர்த்து எழுதுதல் என்பது பண்டைய வழக்கம்.

ஆனால் செப்பேடுகளைப் பொறுத்தவரை பெரும்பாலும் ஒரே படிதான் இருப்பது வழக்கம்.

உலோகம் அல்லாத எழுது பொருள்களில் ஓலையே முதலிடம் வகிக்கிறது.

பல உலோகங்களும் எழுதப் பயன்பட்டாலும் செம்பே மிகுதியும் பயன்படுத்தப் பெற்றுள்ளது.

## செம்பும் ஓலையும்

பழங்காலத்தில் 'ஓலை' என்றாலே உத்தரவு, ஆணை என்று பொருள்பட்டது. முதலில் ஆணைகள் ஓலையில்தான் எழுதப்பட்டன. பின் கல்வெட்டில் தேவையானவை பொறிக்கப்பட்டன. ஓலையை (ஆணையை) 'சிலையிலும் செம்பிலும் வெட்டிக்கொள்ளுக' என்ற தொடரைக் கல்வெட்டுக்களில் காணுகின்றோம். எனவே ஓலை முதல்படியாகவும், கல்வெட்டு இரண்டாவது படியாகவும் செப்பேடு மூன்றாவது படியாகவும் ஆகிறது.

ஆவுடையார் கோயில் கல்வெட்டுக்கள் பொறிக்கப்பெற்ற சில செப்பேடுகளை நம் கல்வெட்டுத்துறை பெற்றுள்ளது.

அதுபோல் செப்பேடுகள் சில ஓலை நகல்களைப் பெற்றுள்ளன. ஈரோடு கலைமகள் கல்வி நிலையத்தில் குறுப்புநாட்டுப் பட்டயம், கத்தாங்கண்ணிப் பட்டயம், திருமுகன்பூண்டிச் சாசனம் என்ற மூன்று ஓலைப் பட்டயங்கள் உள்ளன. அவற்றின் செப்பேடுகள் முறையே கள்ளிப்பட்டி திரு க. கு. கோதண்டராமக் கவுண்டர், கத்தாங்கண்ணி இராசாக் கவுண்டர், திருப்பூர் விஜயபுரம் வெங்கடாசலக்கவுண்டர் ஆகியோரிடம் உள்ளன.

பண்டைய செப்பேடுகள் ஓலைச்சுவடிகளை மனதில் கொண்டு சுவடி அமைப்பிலேயே செய்யப்பட்டன. பிற்காலச் செப்பேடுகள் வடிவத்தில் மாறுபட்டன.

## செப்பேட்டில் இலக்கியம்

தில்லையில் காலிங்கராயன் என்னும் தலைவனுல் 11ஆம் நூற்ருண்டின் இறுதியில் மூவர் தேவாரம் செப்பேட்டில் பொறித்து வைக்கப்பெற்றது.

'முத்திறத்தார் ஈசன் முதல்திறத்தைப் பாடியவாறு
ஒத்தமைத்த செப்பேட்டினுள் எழுதி-இத்தலத்தில்
எல்லைக் கிரிவாய் இசைஎழுதி ஞன்கூத்தன்
தில்லைச்சிற் றம்பலத்தே சென்று'

என்பது அக்கல்வெட்டுப் பாடலாம்.

திருப்பதியில் தெலுங்கு, வடமொழி நூல்கள் பொறிக்கப்பட்ட செப்பேடுகள் உள்ளன. திருவாவடுதுறை ஆதீனச் செப்பேடுகள் சிலவற்றில் குமரகுருபரர் இயற்றிய சகலகலாவல்லிமாலை எழுதப்பட்டுள்ளது.

இன்று செப்பேடு அளிக்கும் வழக்கம் மீண்டும் தொடங்கியுள்ளதைக் காணுகின்றோம்.

## ஒலைப்பட்டயங்கள்

செப்பேடுகளில் எழுதப்பெறும் ஆவணங்கள் போன்றவை பல ஒலைகளில் எழுதப்பட்டுள்ளன. அவை கிழக்கிந்தியக் கம்பெனி, மராட்டியர், நவாபுகள் முத்திரையுடன் கிடைத்துள்ளன. அவற்றில் பல முதுகு நரம்பு ஆகிய ஈர்க்கு எடுபடாமல் இரட்டை ஒலைகளில் எழுதப்பட்டுள்ளன. விற்பனை, ஒத்திவைப்பு, ஒப்பந்தம், அடிமைமுறைகொடுக்கல்-வாங்கல்,கடன் பத்திரம் ஆகியவை அவற்றில் அடங்கும் பொருளாகும்.

செப்பேடுகட்குக் கொடுக்கும் மதிப்பையே இவ்வகை ஒலைகட்கும் கொடுக்கலாம்.

பழம்பதிப்பு

பழந்தமிழ்ப் பதிப்புகளுள்-இலக்கிய நூல்களுள்-மிகப் பழமையான பதிப்பாக இன்று நமக்குக் கிடைப்பது 1812ல் வெளியிடப்பெற்ற திருக்குறள் பதிப்பாகும்.

> 'இலக்கணவிலக்கியவாராய்ச்சியுடைவர்களாலிகிதப் பிழையற வாராய்ந்து சுத்த பாடமாக்கப்பட்டது' என்னும் குறிப்புடனும் தொண்டை மண்டலம் சென்னைப்பட்டினத்தில் தஞ்சநகரம் மலையப்பபிள்ளை குமாரன் ஞானப்பிரகாசனால் அச்சிற் பதிப்பிக்கப்பட்டது

-மாசத தினச்சரிதை அச்சுக்கூடம் இ.ஆண்டு ................ (1812 எனத் தமிழ் எண்ணில் தரப்பட்டுள்ளது) என்னும் குறிப்புடனும் தலைப்புப்பக்கம் திகழ்கின்றது. இந்நூலுடன் நாலடியார் மூலபாடமும், திருவள்ளுவமாலை மூலபாடமும் சேர்ந்து வெளியிடப் பெற்றுள்ளன.

மரவெழுத்தால் அச்சடிக்கப் பெற்றுள்ள இப்பதிப்பே திருக்குறள் பதிப்பு வரலாற்றில் முதல் நூலாகத் திகழ்கின்றது. 1712ஆம் ஆண்டு முதன் முதலாகத் தமிழகத்தில் தஞ்சையில், தரங்கம்பாடியில் அச்சுக்கூடம் ஏற்பட்டது. இதற்குச் சரியாக ஒருநூற்றாண்டிற்குப்பின் இப்பதிப்பு 1812இல் தோன்றியுள்ளது. இன்று ஏறத்தாழ 175 ஆண்டுகளுக்குப்பின் கிடைத்த இப்பதிப்பில் அரிய சில பதிப்புக் குறிப்புகள் காணப்படுகின்றன. இன்று மூலபாட ஆய்வியல் (Textual Criticisim) என்று கூறப்பெறும் பாட வேறுபாடுகள் பற்றிய கருத்துகளை அடியொற்றி எத்துணை அளவு முயன்று ஒரு நூலை உருவாக்கியுள்ளனர் என்பதனை இக்குறிப்புகள் காட்டுகின்றன.

மூலபாட ஆய்வியல்.

நெடிய கால இடைவெளிக்குப்பின் ஒரு நூலினைப் பதிப்பிக்கும்போது ஆசிரியரின் உண்மைப் பாடத்தைத் தெளிந்து பதிப்பிப்பது என்பது சிக்கலான செயலாகும். கிடைக்கின்ற பல்வேறு சுவடிகளையும் திரட்டி நுணுகி ஆராய்ந்து மூலபாடத்தைத் துணிதல் வேண்டும். நூலுக்குள்ளேயே கிடைக்கின்ற ஆதாரங்கள் (Internal evidences) நூலின் நடை, நூலில் கையாளப்படும் சொற்களின் தன்மை, வரலாற்றுக் குறிப்புகள் முதலாயின கொண்டு மூலபாடத்தைத் துணியலாம்

என்பர். இரண்டாவதாக நூலுக்கு வெளியில் கிடைக்கின்ற ஆதாரங்கள் (*External evidences*) நூலாசிரியருடைய பிற படைப்புகள், அவர் காலத்திய பிற படைப்புகளில் காணப்படும் அந்நூலைப்பற்றிய குறிப்புகள், மேற்கோள்கள் முதலாயினவும் மூலத்தைத் துணிதற்குப் பயன்படும்.[1]

1812 ஆம் ஆண்டில் தோன்றிய இத்திருக்குறள் பதிப்பில் நூலின் பதிப்புப்பணிகள் குறித்துச் சில சிந்தனைகளைப் பதிப்பாசிரியர் தருகின்றார்.

> "கற்றுணர்ந்த தமிழாசிரியர்களருமையினியற்றிய இலக்கிண விலக்கியங்களாகிய அரிய நூல்களெல்லாம்-இந்நாட்டில் அச்சிற் பதிக்கும் பயிற்சியின்றிக் கையினாலெழுதிக் கொண்டு வருவதில்-எழுத்துக்கள் குறைந்தும் மிகுந்தும்-மாறியும்-சொற்கடிரிந்தும்- பொருள் வேறுபட்டும் பாடத்துக்குப் பாடம் ஒவ்வாது பிழைகள் மிகுதியுமுண்டாகின்றவால்-அவ்வாறு பிழைகளின்றிச் சுத்த பாடமாக நிலைக்கும்படி-அச்சிற் பதித்தலை வழங்குவிப்பதற்குத்தேசித்து நூலாசிரியர்களுள் தெய்வப் புலமைத் திருவள்ளுவநாயனாரருளிச் செய்த - அறம் பொருளின்ப மென்னும் முப்பாலையும் நுட்பமாக் விளங்கவுணர்த்துந் திருக்குறள் மூலபாடமும், முனிவர்களருளிச் செய்த நீதி நூலாகிய நாலடி மூலபாடமும் இப்போதச்சிற் பதிக்கப்பட்டன." சுவடிகளின் தொன்மையில் எழுத்துகளைப் புரிந்து எழுதுவதில் ஏற்படும் இடர்ப்பாடுகளை இக்குறிப்பு எடுத்துரைக்கின்றது.

## பதிப்பு நெறிகள்

இந்நூலினை அச்சிற் பதிப்பதற்கு முன் அவர்கள் மேற்கொண்ட முயற்சிகளை அடுத்த பகுதி எடுத்துரைக்கின்றது.

> "இவை அச்சிற் பதிக்குமுன் தென்னாட்டில் பரம்பரை ஆதீனங்களிலும் வித்துவ செனங்களிடத்திலுமுள்ள சுத்த பாடங்கள் பலவற்றிற்குமிணங்கப் பிழையற இலக்கணவிலக்கிய வாராய்ச்சியுடையவர்களாலாராய்ந்து சுத்த பாடமாக்கப்பட்டன"

என்னும் குறிப்பு, திருக்குறளின் அனைத்துச் சுவடிகளையும் தொகுத்துப் பார்த்த செய்தியை அறிவிக்கும். சுத்த பாடங்களை முடிவு செய்வதற்குத் தனி ஒருவரின் முயற்சி பெரிதும் பயன்தராது. எனவே அறிஞர் குழு கூடி முடிவெடுத்தமையையும், அவ்வாறு எடுத்த முடிவையும் பல்வேறு அறிஞர்களுக்கு அனுப்பிக்

1. அ.விநாயகமூர்த்தி, மூலபாட ஆய்வியல், பக். 78

நூலாக்க முயன்ற போது ஏற்படுகின்ற சிக்கல்களையும் அவற்றைத் தீர்ப்பதற்குரிய முழுமுயற்சிகளையும் இக் குறிப்புகள் நமக்கு நன்கு காட்டுகின்றன.

இங்ஙனம் பல்வேறு அறிஞர்களிடம் அனுப்பியும் ஆய்ந்தும் முடிவுகண்ட இப்பதிப்பின் மூலபாடங்களிலும் பிழை திருத்தம் கண்ட வரலாறு இன்னும் சுவையானதாகும். இந்நூல் அச்சானதிற்குப் பின்னரும் இந்நூலினைப் பார்த்து ஓலையில் படியெடுத்து வைத்துள்ளனர். அவற்றில் பாடபேதங்களை மீண்டும் ஆராய்ந்து குறித்துவைத்துள்ளனர்.

கல்கத்தாவில் உள்ள தேசிய நூலகத்தில் கிடைக்கும் திருக்குறள் ஓலைச் சுவடி ஒன்றின்மூலம் இவ்வரலாறு தெரியவருகின்றது. அவ்வோலைச் சுவடியில் காணும் குறிப்பு வருமாறு:

> "இது பொத்தகம் கலியுகாப்தம் 4900 க்கு ஆங்கிரச தொண்டை மண்டலம் சென்னைப் பட்டணத்தில் தஞ்சைநகரம் மலையப்பபிள்ளை குமாரன் ஞானப் பிறகாசனால் அச்சிற் பதிப்பிக்கப்பட்டது. மாசம தினச்சரிதையின் அச்சுக்கூடம், ஆண்டு 1812"

> "திருநெல்வேலி அம்பலவாண கவிராயர் பிழை தீர்த்துச் சென்னைப் பட்டிணத்துக்கு அனுப்பிவிச்சு அவ்விடத்திலிருந்து திருவாவடுதுறை ஆதீன வித்துவான் அம்பலவாணத் தம்பிரான், சீர்காழி வடுகநாத பண்டாரம் அவர்கள் மறுபடிக் கண்ணோட்டத்துடன் ஆராயப்பட்டு அச்சிற் பதித்த காயிதப் பொத்தகத்தை ஆழ்வார் திருநகரியில், தேவபிரான் கவிராயர், ஆதிநாத பிள்ளை தலத்தேடுகள் வைத்துச் சோதித்து வேறேடு எழுதியிருப்பது. மறுபடி திருநெல்வேலியில் அம்பலவாண கவிராயரிடத்தில் தீர்மானமானது. ஆழ்வார் திருநகரியில் சோதித்தது. 999 தை மீ....... நம்முடைய ஏடு சுத்தமாய்த் திருத்தியிருக்கிறது"

என்னும் குறிப்பினால் அச்சேறிய திருக்குறளின் முதல்பதிப்பிலும் மூலபாடங்களைத் திருத்தி மீண்டும் பதிப்பாசிரியருக்கே அனுப்பித் தீர்மானம் செய்த பதிப்பு வரலாறு தெரிய வருகின்றது. பிழையான பாடங்கள் நூலில் வந்துவிடக்கூடாது எனும் உயரிய நோக்கமும் அவர்தம் பதிப்பு நெறியும் புலனாகும். இந்த ஓலைச் சுவடியில்

பிழை திருத்தங்கள் பற்றி விரிவான குறிப்புகள் இருப்பதோடு அவற்றைப் பின்வருமாறு பட்டியலிட்டும் தந்துள்ளனர்.

---

அதிகாரம் – குறள் – ஆழ்வார்திருநகரி ஏடு – அச்சடிபிழை

---

என்னும் நான்கு தலைப்புகளின் கீழும் இச்சுவடியில் அமைந்துள்ள குறிப்புகள் பாடபேத ஆராய்ச்சியாகவே விளங்குகின்றமை தெளிவாகும். திருக்குறளுக்குக் கிடைத்த முதல் அச்சுப்பதிப்பு நூலிலேயே பதிப்பு நெறிகள் குறித்த பல அரிய விவரங்கள் நமக்குக் கிடைப்பது பெரிதும் குறிப்பிடத்தக்கதாகும். பதிப்புப் பணியில் குழுமுயற்சிகளின் பயன்பாடும் இக்குறிப்புகளால் புலனாகும்.

பதிப்பு முன்னோடிகளில் ஒருவரான யாழ்ப்பாணம் சி.வை. தாமோதரம் பிள்ளை, அவர்கள் பதிப்பித்து வெளியிட்ட பல நூல்களும் பதிப்பு நெறியை நமக்கு அறிவுறுத்தும் அரிய நூல்களாகும். தம்முடைய இருபதாம் வயதிலேயே நீதிநெறி விளக்கம் நூலினை உரையுடன் (1852) வெளியிட்டனர். வீரசோழியம் (1881), இறையனார் களவியலுரை (1883), தணிகைப்புராணம் (1883), தொல்காப்பியம்-பொருளதிகாரம் (1885), கலித்தொகை (1887), இலக்கணவிளக்கம் (1889), சூளாமணி (1889), தொல்காப்பியம்-எழுத்து (1891), தொல்காப்பியம் -சொல்லதிகாரம் நச்சர் (1892) ஆகிய தமிழ்ப்பதிப்புகள் அவர் தமிழிற்கு வழங்கிய கொடைகள் எனலாம்.

இவற்றுள் ஒரு நூற்றாண்டிற்கும் முன்னர் வெளியிட்ட அவர்தம் வீரசோழியம் நூலின் பதிப்பு நெறிமுறைகளை ஆராய்வது பதிப்பியலில் ஆர்வம் கொண்டோர்க்குப் பெருவிருந்தாய் அமையும்.

வீரசோழியம் நூலிற்கு வழங்கிய அவருடைய நீண்ட பதிப்புரை பதிப்பாசிரியர் சி. வை. தா. அவர்களின் இலக்கிய ஆராய்ச்சிப் போக்கினைக் காட்டுவதாக அமைந்துள்ளது. தெய்வாசாரிய வணக்கம், சரஸ்வதி வணக்கம், தமிழாசிரிய வணக்கம், அவையடக்கம் எனச் செய்யுளில் அமைத்துப் பின்னர்த் தமிழின் பெருமைகளை ஆராய்ந்துரைக்கின்றார். அடுத்துத் தமிழ் இலக்கிய ஆராய்ச்சியில் காணும் கருத்தமைதிகளை அடிப்படையாகக் கொண்டு அவர்தரும் காலவாராய்ச்சிக்

குறிப்புகள் (ஒரு நூற்றாண்டிற்கு முன்னர் எழுதியவை) பெரிதும் எண்ணத்தகுந்தன. தமிழிலக்கிய சரிதத்தைத் காலமுறைப்படி பாகுபாடு செய்து அபோதகாலம், அக்ஷரகாலம், இலக்கணகாலம், சமுதாயகாலம், அநாதரகாலம், சமணகாலம், இதிகாசகாலம், ஆதீனகாலம் என எட்டுக் காலப்பிரிவுகளாய்த் தமிழலக்கிய வரலாற்றை வகுத்தானர்.

'தமிழ்நாட்டில் மொழியியல், வரலாறு, கல்லெழுத்தாய்வு, அகழ்வாய்வு முதலியன ஓங்கி வளராத காலத்தில் வாழ்ந்தபோது பிள்ளையவர்கள் காலவாராய்ச்சியை மேற்கொண்டது' அக்காலச் சூழலில் புதுமை நோக்குகளை ஆங்கிலக்கல்வி மூலம் பெற்றிருந்த காரணம் என்பர் கலாநிதி க. கைலாசபதி. மேலும் அவர் காலத்திலிருந்து புதிய கல்வி விழிப்புணர்ச்சி, ஈழத்தமிழகம் தமிழ்க்கலைகளில் பெற்றிருந்த முன் அனுபவம் (அகராதித்துறை...முதலாயின) போல்வன பதிப்பாசிரியர்க்கு இத்தகு ப்பார்வை வரக் காரணம் என்பார். பதிப்பு முயற்சிகளில் சி. வை. தா., உ. வே. சாமிநாதையர்க்கு வழிகாட்டியாகவும் சில வழிகளில் அவரிலும் மேம்பட்டவராயும் விளங்குகின்றார் என்பார். 'தாமோதரம்பிள்ளை பதிப்புகளையும்,சாமிநாதையர் பதிப்புகளையும் ஒப்பு நோக்கி ஆராயும் போது காலவாராய்ச்சி, சரித்திரவுணர்வு, ஒப்பியல் நோக்கு திறனாயும் தன்மை, ஆய்வறிவு நேர்மை, முறையியல் நுட்பம் ஆகியன ஐயரிலும் பார்க்கப் பிள்ளையிடத்து அதிகமாகக் காணப்படுதல் தெளிவு' என்பார் அறிஞர் க. கைலாசபதி.[2]

ஏற்பட்ட சிக்கல்கள் முதலாயவற்றைக் குறிக்கும்போது பதிப்பின் நெறிமுறைகள் புலனாகின்றன.

சுவடிகளில் உள்ள பல்வேறு பாடவேறுபாடுகளுக்கிடையே சுத்தமான மூலபாடம் காண்பதில் எத்துணை அளவு இடர்ப்பாடு நேரும் என்பதனை அறிஞர்கள் நன்கு உணர்வர்.

'கரலிகிதங்களால் ஏட்டுப் பிரதிகளிற் காலந்தோறும் புக்க அக்ஷர வழுவும் சொற்சிதைவும் வாக்கியப் பிறழ்வும் இத்துணையவென்று சொல்லற்பாலதன்று. இதிகாச சிரோரத்தினமாகிய இராமாயணத்தை எழுதி அரங்கேற்றிய கம்பர் சோழன் மேற்கொண்ட சில வெறுப்பினால் அவனூரைவிட்டு இருபது முப்பது வருஷஞ் சேரனிடம் போயிருந்து பின்பு சோழனைக் காண அபேட்சையுடையாராய்த் திரும்பிவரும் வழியில் ஒரு மடத்திலே சில வித்துவான்கள் சேர்ந்து இராமாயணப் பிரசங்கம் செய்து

2. ஈழத்து இலக்கிய முன்னோடிகள், பக். 24.

கொண்டிருந்தனர். அஃது தனது இராமாயணப் பிரசங்கமெனத் தெரியாதிருந்துங் கற்றாரைக் கற்றார் காமுறுதல் இயல்பாதலின் கம்பர் யாது பிரசங்கமாயினுமாகுக; கல்விப் பிரசங்கங் கண்டுங் கம்பன் புறம் பொழுகலாமாவென்று, தன்னை இன்னானென்றன்னோர்க்குத் தெரிவியாது யாரோ வழிப் பிரயாணக்காரன் போல உள்ளே சிலநேரம் போயிருந்து ஒன்றையொன்று பார்த்தெழுத எழுதப் பிரதிகள் தோறும் புக்க வழுக்களும் திரிபுகளும் அதிகப்பட்டிருந்தமையால் அஃது தனதி ராமாயணமென்று மட்டிடாமற்றன்வாக்குஞ் செய்யுட்களும் இடைக்கிடை யாரோ சொருகுகவிகள் சேர்த்திருப்பதாகச் சொன்னாராம். ஒருவர் காலத்திலே இவ்வளவாயின் ஆயிரத்தைஞ்ஞூறு வருஷத்துத் திரிவு எப்படியிருக்கலாமென்பதை அநுமானித்துக் கொள்க'

என்று ஒரு சுவையான கதை மூலம் ஏடுகளில் உள்ள பாடவேறுபாடுகள் எத்துணைஅளவின என்பதைக் காட்டுவார்.

## மாறுபாடான பாடங்களும் பழைமையும்

அனைத்துப் பகுதியிலிருந்து வரும் ஏடுகள் ஒவ்வொன்றிலும் பாடங்கள் வேறு வேறாக இருக்கும். 'ஒரு தேசத்தில் வழங்கிவரும் பிரதிகளை மாத்திரம் பார்த்தார்க்கு இம்மாறுபாட்டின் பெருக்கந் தோன்றாது. மதுரைப்பிரதி திருநெல்வேலிப் பிரதிக்கு வேறு. யாழ்ப்பாணப் பிரதி இவ்விருதேசப் பிரதிகட்கும் வேறு. தஞ்சாவூர்ப் பிரதி முதன் மூன்றிற்கும் வேறு. சென்னபட்டினப் பிரதிகள் இவையெல்லாவற்றிற்கும் வேறு. எழுத்ததிகாரத்தும் சொல்லதி காரத்தும் அத்துணைப் பெரும் வித்தியாசமில்லை. அதற்கு நியாயம் சொல்லிக்காட்ட வேண்டியதில்லை. அப்பால் மூன்றதிகாரங்களிலும் பிற்காலத்தோராற் செய்யுள் உரை உதாரணம் என்றிவ்வெல்லாம் தங்கள் தங்கள் மனம் போன வழியே மாற்றப்பட்டன. சில செய்யுளும் உரையும் ஒருங்கே தள்ளப்பட்டன. பழைய உதாரணங்களை நீக்கிப் புது உதாரணங்கள் பின்னூல்களிலிருந்தெடுத்துப் பதிலாகச் சேர்க்கப்பட்டன. தென்தேசப் பிரதிகளில் அலங்காரத்தின் பிற்பகுதி முழுவதும் யாப்பிற் சில பகுதியும் மூல்மும் உரையும் ஒருங்கு பிறழ்ந்து செய்யுள் தொகையோடு மாறிப் போயின. இதனால் பிற்காலத்தாராற் சேர்க்கப்பட்ட உதாரணங்கள் இப்பதிப்பிலும் பலவிடத்துச் செறிந்திருக்குமென்று

அஞ்சுகிறோம். அதுகொண்டு நூலின் பழமையை மறுக்கற்க' என்று பாடங்கள் மாறிய நிலையையும், புதியன சேர்ந்த நிலையையும் ஆய்ந்து கூறுவார்.

ஏட்டுப் பிரதியில் இருந்த நிலையைப் பதிவு நிலைக்கு உருவாக்கும்போது ஏற்படும் இன்னல்கள்தாம் எத்துணை?

| ஏட்டுப்பிரதி நிலை | பதிப்பு நிலை |
| --- | --- |
| பிவாசம்விருத்தியம் | விலாசம், பரிசர்ப்பம், விதூதம், |
| விவாசம் தாவனபம் | சமம், நாபம், நமதூதி, |
| சயதூரகம் மரிசோதம் | பிரகமம், நிரோதம், |
| பரியானம் பாவைச் | பரியுபாசனம், வச்சிரம், |
| சிரம் செல்வம் வருண | புட்பம், உபநியாசம், |
| சங்கரம்- | வருணசங்காரம் இவை |
| இவை பிரதிமுகத்திலங்கும் | பயிர்முகத்தில் |
| பதின்மூன்று | அங்கம் பதின்மூன்று |

என இருவகையிலும் இருந்த முன்பின் நிலைகளை விளக்கிக்காட்டி 'ஏட்டுப் பிரதிகளோடு பட்ட பிரயாசைக்குப் பிரயாசையென்னுஞ் சொல் போதுமா?' எனக் கேட்பார்.

அனைத்துப் பிரதிகளோடு ஆராய்ந்து பதிப்பித்த அவர் ஏட்டுப்பிரதியின் ஆதாரமில்லாது எதனையும் யாம் மாற்றவில்லை என்பார். பழம்பிரதியே ஏனைய பிரதிகளோடு ஒப்புநோக்கி முடிவு செய்யத்தக்கது என்பார். வீரசோழியத்தில் இறுதியாகக் குறிப்பிடும்போது, "ஆயினுந் தற்காலத்தில் தமிழ் நாடுகளில் வழங்கும் பிரதிகள் அனைத்திலும் இப்பொழுது யாம் அச்சிட்டு வெளிப்படுத்தும் ரூபம் மேலானதென்று கொள்வதேயன்றி ஏட்டுப் பிரதியின் ஆதாரமில்லாது யாம் ஒரு மொழியும் மாற்லேமாயினும், இதுதான் ஆசிரியர் எழுதிய சுத்தருபம் என்று கொள்ளற்க. அனைத்து மாறுபாடும் திருத்தி ஆதிருபம் காட்டுதல் இனி எத்துணை வல்லார்க்கும் அரிது. பிறநூற்துணிவிற்கு மாறுபட்டும் தற்கால வழக்கத்தை விரோதித்தும் சரியான அர்த்தம் புலப்படாமலும் சமுசயம் நிகழ்ந்த இடத்தும் எல்லாத் தேசத்துப் பிரதியும் ஒத்திருந்தனவற்றையும் யாம் சிறிதும் திருத்திப் பதிப்பித்திலேமாயினும்" என்பார்.

இதனால் ஏட்டில் காணலாகும் சிறந்த பாடங்களையே போற்றியமை புலனாகும். எனவேதான் ஏனைய பதிப்பாசிரியர்களோடு ஒப்பிடும்போது இவருடைய பதிப்பு நெறித்திறனைப் பின்வருமாறு பாராட்டுவர்:

"சி. வை. தாமோதரம்பிள்ளை மூலபாடத் திறனாய்வை முழுமையான ஆய்வுத்துறையாகக் கொண்டு செயற்பட்டார். அனுபவ அறிவுக்கு அனுசரணையாக மூலபாடத் திறனாய்வுக் கொள்கைகளைக் கைக்கொண்டார். தாம் பதிப்பித்த நூல்களுக்கு அவர் எழுதிய நீண்ட பதிப்புரைகளைப் படிப்போர்க்கு, பதிப்புக் கலையைப் பற்றி எத்துணை நுட்பமாகவும் விரிவாகவும் அவர் சிந்தித்துச் செயலாற்றினார் என்னும் உண்மை தெரியவரும். ஐயருக்கும் பிள்ளையவர்களுக்கு மிருந்த அணுகுமுறையிலிருந்த அடிப்படை வேறுபாடே இவ்வாறு வெளிப்பட்டதெனலாம். எத்தனையோ வழிகளில் இவ்வேறுபாடு புலப்படுவதாயிற்று. உதாரணமாக ஒருநூலைப் பதிப்பிக்கையில் அதற்கு முற்பட்ட பதிப்பு முயற்சிகளைக் குறிப்பிடுதல் வரலாற்றுணர்ச்சியின் பாற்படுவதாகும். பின் வரும் ஆய்வாளருக்குச் சில செய்திகள் வழங்கப்படுதல் இன்றியமையாதது. பின்வரும் பதிப்புகள் மேலும் திருத்த மடைய அச்செய்திகளும் தகவல்களும் உதவும்".

என்றுகூறி சி.வை.தா. அவர்கள் இங்ஙனம் முன்பதிப்பு வகை வரலாற்றை எடுத்துரைக்கும் பதிப்பு நெறியுடையவர் என்பதைச் சுட்டுவர்.[3]

இங்ஙனம் பழந்தமிழ்ப் பதிப்புகளின் முன்னுரைகளின் மூலம் பல அரிய பதிப்பு நெறிமுறைகளைக் காண முடிகின்றது. பதிப்பாசிரியரின் பதிப்பு அணுகுமுறை, பின்பற்றிய அடிப்படைக் கோட்பாடுகள், பதிப்பிக்கும்போது ஏற்படும் சிக்கல்கள், தீர்வுகள் முதலாயின பின்வரும் பதிப்பாளர்க்குக் கிடைக்கும் அரிய கருத்துகளாம். ஒரு நூற்றாண்டிற்கு முன்னர்த் தோன்றிய இவ்விருநூல்கள் காட்டும் பதிப்புப் பட்டறிவு பின்னையோர் பணிக்கும் பயன்படத் தக்கன என்று கூறவும் வேண்டுமோ?

## துணை நூல்கள்

1. அம்பலவாண கவிராயர், திருக்குறள் மூலபாடம்
மாசத்தினச்சரிதை அச்சுக்கூடம், சென்னை 1812.

3. ஈழத்து இலக்கிய முன்னோடிகள், பக் 24-25.

2. மு. சண்முகம்பிள்ளை மற்றும் இ. சுந்தரமூர்த்தி கல்கத்தா தேசிய நூலகத் தமிழ்ச் சுவடிகள், சென்னைப் பல்கலைக்கழகம் 1975.

3. அ. விநாயக மூர்த்தி மூலபாட ஆய்வியல், மக்கள் பதிப்பகம், மதுரை, 1978.

4. ச. கைலாசபதி, ஈழத்து இலக்கிய முன்னோடிகள், மக்கள் பதிப்பகம், சென்னை, 1986.

5. தாமோதரம், யாழ்ப்பாணம் கூட்டுறவுத் தமிழ் நூற்பதிப்பு விற்பனைக் கழகம், யாழ்ப்பாணம், 1971.

6. சி.வை. தாமோதரம்பிள்ளை, வீரசோழியம் 1881.

1. அ.விநாயகமூர்த்தி, மூலபாட ஆய்வியல், பக். 78
2. ஈழத்து இலக்கிய முன்னோடிகள், பக். 24.
3. ஈழத்து இலக்கிய முன்னோடிகள், பக் 24-25.

# மறைந்த நூல்களைப் பதிப்பித்தல்

இரா. இளங்குமரன்

"வெண்ணிலா விளையாட்டு" என்னும் பெயரால் 1975 இல் ஒரு நெடும்பாடல் இயற்றினேன். அதில் கடலுக்கு ஒரு பெயர் சூட்டினேன். அஃது 'ஏடு தின்னி' என்பது.

யா.வி. பதிப்பு

என் நெஞ்சத்தின் ஆழத்துள் 'கொடுங்கடல்' கொண்ட செய்தியும், 'வாரணங் கொண்ட தந்தோ' என்னும் இரங்கலும் படிந்துகிடந்தன. அவற்றுக்கு மூலத் தூண்டலாக அடியார்க்கு நல்லாருரை, யாப்பருங்கலவிருத்தியுரை, களவியற் காரிகையுரை, புறத்திரட்டு என்பன அமைந்தன. இவற்றையெல்லாம் உணர்வுடையார் ஒருங்கே கண்டு கொள்ளுமாறு மயிலை. சீனி. வேங்கடசாமி அவர்கள் தொகுத்தளித்த 'மறைந்துபோன தமிழ் நூல்கள்' என்னும் நூல் பேரசைவு அசைத்தது. இந்நிலையில் 'யாப்பருங்கல விருத்தி' யைச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காகப் பதிப்பிக்கும் பொறுப்பை யான் மேற்கொள்ள நேர்ந்தது. அது 1973 ஆம் ஆண்டு. அப்பதிப்பின் வழியாக ஏற்பட்ட - ஏற்பட்டு வருகின்ற - நலங்கள் எண்ணற்றன.

மேற்கோள் நூற்பாத் தொகுப்பு

96 நூற்பாக்களைக் கொண்ட யாப்பருங்கலத்திற்கு அதன் விருத்தி யுடையார். தொல்காப்பியம், அவிநயம், காக்கை பாடினியம், சிறுகாக்கை பாடினியம், பல்காயம், நற்றத்தம், சங்கயாப்பு, மயேச்சுரம் முதலிய இலக்கண நூல்களிலிருந்து 1034 நூற்பாக்களை மேற்கோள் காட்டி விளக்கியுள்ளார். அம்மேற்கோள் நூற்பாக்களின் அருமையும், பெருமையும் உணர்ந்து அவற்றை அடைவு செய்யவேண்டும் எனவுட் கொண்டேன். அப்பணி முடித்த பின்னர் தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களிலும் சிலப்பதிகாரம் முதலிய இலக்கிய நூல்களிலும் உரையாசிரியர்களால் எடுத்தாளப் பெற்றுள்ள

மேற்கோள் நூற்பாக்களையும் தொகுத்தேன். ஆகச் சிதறிக் கிடந்த இலக்கண மேற்கோள் நூற்பாக்கள் மட்டும் ஈராயிரத்தைத் தாண்டியிருக்கக் கண்டு கழிபேருவகை யுற்றேன். அவற்றைப் பொருள் வகையால் அகர வரிசைப்படுத்தி "மேற்கோள் விளக்க நூற்பா அகர வரிசை" என்னும் பெயருடன் தனி நூலாக அமைத்துக்கொண்டேன்.

பின்னர்த் தெள்ளிதின் ஆசிரியர் பெயர் புலப்படும் நூற்பாக்களைத் தனித்தனி ஆசிரியர் பெயரால் அடைவு செய்து பார்க்கும் ஆர்வம் மீதூர்ந்தது. அவ்வகையில் அப்பொழுது காக்கை பாடினியத்தையும், அவிநயத்தையும் அடைவு செய்தேன். காக்கை பாடினிய அடைவும் உரையாக்கமுமே என்னுள் முந்து நின்றன.

## காக்கை பாடினிய அடைவு

காக்கை பாடினியார் நூற்பாக்களை ஒழுங்குறுத்திப் பார்த்த அளவில் அவர் யாப்பிலக்கணம் மட்டுமே செய்தார் என்பது புலப்பட்டது. அவர் பாக்களை யாப்பிலக்கண முறைவைப்பாகிய எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை, பா, இனம், ஒழிபு என்னும் முறையில் பகுத்துப் பார்வையிட்டேன். அந்நிலையில் யாப்பிலக்கணச் செய்திகள் எனப்படுவனவற்றுள் விரல்விட்டு எண்ணக்கூடிய ஒரு சிலவற்றைத் தவிர அனைத்துப் பகுதி நூற்பாக்களும் அமைந்து கிடக்கக் கண்டு அளப்பரும் வியப்பில் ஆழ்ந்தேன். என் ஆய்வுப் பார்வையில் என்னையறியாத இன்பம் எனக்கே உளதாகிப் பூரித்து நூலாக்கப் பணியில் புகுந்தேன்.

## விடுபாடு நிரப்புதல்

தொடைகளுள் சிலவற்றுக்கும், நேரிசை ஆசிரியப்பா, ஆசிரியத்தாழிசை, குறட்டாழிசை முதலியவற்றுக்கும் மட்டுமே காக்கை பாடினியார் நூற்பாக்கள் கிடைத்தில. அல்லது அவர் நூற்பாக்கள் கிடைத்தும் அவர் நூற்பாக்களெனத் திட்டவட்டமாகப் பெயர் அறிந்து கொள்ள வாய்க்கவில்லை. அதனால்

"முன்னோர் மொழிபொருளே யன்றி அவர்மொழியும்
பொன்னேபோல் போற்றுவம்"

என்னும் தொன்னெறிப்படி உரைமேற்கோளாக அமைத்துக் கோடல் சர்லும் எனத் துணிந்தேன். அவ்வகையில் சிறுகாக்கை பாடினியார்க்கு முதன்மை இடம் தந்து நான்கு நூற்பாக்கள்

மேற்கொள்ளப்பட்டன. எஞ்சியவற்றுக்கு ஆசிரியர் தொல் காப்பியனார், அவிநயனார் முதலியோர் நூற்பாக்கள் மேற்கொள்ளப்பட்டன. அவ்வாறு மேற்கொள்ளப்பட்ட நூற்பாக்கள் 13. அவற்றின் அடிகள் 17, அவை உரைமேற்கோள் நூற்பாக்கள் என்பதை அவ்வவ்விடத்துக் காட்டி ஆசிரியர் பெயரும் ஆங்காங்குத் தரப்பட்டன.

## நூற்கொள்கை வரையறை

காக்கைபாடினியார் நூற்பாக்கள் தொல்காப்பிய இளம்பூரணருரை, பேராசிரியருரை, சேனாவரையருரை, நச்சினார்க்கினியருரை ஆகியவற்றிலும் நன்னூல் மயிலை நாதருரை, இறையனார் களவியலுரை, வீரசோழியவுரை ஆகியவற்றிலும் இடம் பெற்றுள. யாப்பருங்கலக்காரிகையுரை, யாப்பருங்கல விருத்தியுரை ஆகிய இரண்டனுள்ளும் மிகப் பல்வாக இடம் பெற்றுள. ஒரு நூற்பா காக்கை பாடினியார் பெயரால் இருக்கலாம். பெயரால் இருப்பவை எல்லாம், அவர் நூற்பாக்களெனக் கொள்ளமுடியாமையும் உண்டாயிற்று. அதனை நீக்குதற்குக் காக்கை பாடினியார் கொள்கைகளைத் தெளிவு செய்து கொள்ளுதல் இன்றியமையாததாயிற்று.

## நேரசை - தனியசை

"வெண்சீர் இறுதியின் நேரசை பின்வரின்
வெண்சீர் வெண்டளை ஆகும் என்ப"

என்னும் நூற்பா டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையக் காரிகைப் பதிப்பிலும், பெருப்புலவர் மே. வீ. வேணுகோபாலப்பிள்ளை பதிப்பிலும், காக்கை பாடினியார் நூற்பா எனக் காட்டப்பட்டுள்ளது. காக்கை பாடினியார் மதம் நேரசையைத் 'தனியசை' என்றும் நிரையசையை இணையசை' என்றும் கொள்வது. ஆகலின் நேரசை என்னும் ஆட்சியுடைய இந்நூற்பா, காக்கை பாடினியம் சார்ந்ததன்று என விலக்குதற்கு முடிந்தது. அம்முடிவு சரியானதே என்பதை மெய்ப்பிப்பதுபோல், கழகப் பதிப்பிலும் அண்ணாமலைப் பல்கலைக்கழக பதிப்பிலும் அந்நூற்பா இடம்பெறவில்லை அதனால் எடுத்த முடிவு உறுதியாயிற்று.

## ஒருபொருளுக்கு இரு நூற்பா

இனியொரு புதுவகைச் சிக்கல், செந்தொடை என்பதற்கு இரண்டு நூற்பாக்கள் கிடைக்கின்றன. அவ்விரண்டும் காக்கை

பாடினியார் பெயரால் சில நூல்களிலும் வேறு பெயரால் சில நூல்களிலும் இடம் பெற்றுள. இவற்றைத் தெளிந்து ஒன்றைத் தேர்வது பொறுப்புடனும் பொறுமையுடனும் செய்யத்தக்கதாம்.

"அசையினும் சீரினும் இசையினம் எல்லாம்
இசையா தாவது செந்தொடைதானே"

என்பது காக்கை பாடினிய நூற்பாவெனக் கழகப்பதிப்பு, உ.வே.சா நூல் நிலையப்பதிப்பு, அண்ணாமலைப் பல்கலைகழகப் பதிப்பு ஆகியவை காட்டுகின்றன. கையனார், பல்காயனார் என்னும் பாட வேறுபாடுகளையும் காட்டுகின்றது நூல் நிலையப்பதிப்பு. கையனார் நூற்பாவென மே.வீ.வே. பதிப்புக் காட்டுகின்றது. இவை இவ்வாறிருக்க யாப்பருங்கல விருத்தி இதனைப் பல்காயனார் நூற்பா என்று காட்டுவதுடன், இந்நூற்பா அமைந்துள்ள இடத்திலேயே,

"செம்பகை அல்லா மரபினதாம் தம்முள்
ஒன்றா நிலையது செந்தொடை யாகும்"

என்னும் நூற்பாவைக் காக்கை பாடினியார் பெயரால் காட்டுகின்றது. ஆதலால் முன்னது காக்கை பாடினியம் சார்ந்ததன்று என்று தள்ளவும், பின்னது காக்கை பாடினியம் சார்ந்ததென்று கொள்ளவும் அவ்வுரை உதவியதாம். அதுதானே இரண்டு நூற்பாக்களையும் காட்டி இருவர் பெயரையும் கூறுகின்றது.

இவ்வாறே 'இன்னிசை வெண்பா' வின் இலக்கணத்தைக் கூறும் நூற்பாக்கள் இரண்டு காக்கை பாடினியார் பெயரால் சுட்டப்பெறுவதை ஆய்ந்து "தனிச்சொல் தழுவலவாகி" என்னும் நூற்பாவே அவர் நூற்பாவெனக் கொள்ளப்பட்டது. அதற்குத் துணையாயமைந்ததும் யாப்பருங்கல விருத்தியேயாம்.

உரைமரபு

காக்கைபாடினியத்திற்கு இயன்ற வகையான் உரையெழுதுதல் வேண்டும் என்னும் எண்ணம் உண்டாயிற்று. பழைய நூலாகலின் பழமரபு போற்றுதல்வேண்டும் என்பதும் எழுந்தது. அதனால் அவ்வுரை இயங்குமாற்றைத்திட்டப்படுத்திக் கொண்டேன். அது வருமாறு:

"இந்நூற்பா என்ன கூறிற்றோ? எனின்,"இன்னது கூறிற்று" என்று நூற்பா நுதல் பொருளும், பின்னர் நூற்பாவின்

பிண்டப் பொருளும் அதன்பின்னே ஆராய்ச்சியுரை குறிப்புரை விளக்கவுரை எடுத்துக் காட்டு ஆகியனவும் முறையே அமைக்கப்பட்டன.

'இவ்வாறு கூறியமையால் இது பெற்றாம் 'என்றும், இவ்வாறு கூறாக் கால் இவ்வாறாம்' 'என்றும்,இவ்வாறு கூறினும் அமையுமாக இவ்வாறு கூறியது இது பெறுதற்கு என்றும்,'இதற்கும் இதற்கும் இவ்வேற்றுமை' என்றும் இவ்விலக்கணத்தை இவரிவர் இவ்விவ்வாறு கூறினார் என்றும், இவ்வாறு கூறவேண்டிய தென்னை? என்றும் பெயர் கூறுமாற்றானே இலக்கணமும் கூறினார்' என்றும், ' நூற்பாவிலேயே இவ்விலக்கணம் அமைய வைத்தார் என்றும் இதனால் இதனைக் கூறாராயினர் என்றும் இந்நூற்பாவை இவ்வாறியைக்க வேண்டும் என்றும் இதனை இவ்வாறு கொண்டு கூட்ட வேண்டும்' என்றும் 'இதனை மேலே கூறினாம்' என்றும், ' இதனை முன்னே கூறுவாம்' என்றும் இது தொல்லாசிரியர் நெறியாம் என்றும் இஃதிவர் மதமாம்' என்றும் 'இதனால் தழுவி உரைத்தாம் என்றும் அவ்வுரை இயங்குவதாயிற்று.

## எடுத்துக்காட்டு நிரப்புதல்

'இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பல்' முன்னை மரபு; ஆனால் இலக்கணம் கண்டதற்கு இலக்கியம் படைத்தலும் பின்னை மரபாக அமைந்துவிட்டமையயால் உரையாசிரியர்கள் பேரிடப்பட்டிருப்பர் என்னும் எண்ணம் எடுத்துக்காட்டு அமைக்குங்கால் தோன்றியது.

வல்லின மோனைக்குக் 'கயலேர் உண்கண்' என்னும்பாடல் யாப்பருங்கல விருத்தி வழியால் கிடைத்தது. ஆனால் மெல்லின இடையின மோனைகளுக்கு எடுத்துக்காட்டுக் கிட்டவில்லை வாளா விடவும் மனமில்லை. ஆகலின்

"ஞயம்பட உரைக்கும் நாவினர் என்றும்
நலிதுயர்க் காட்பட லின்றி
மாண்பயன் எய்தி வாழ்குவர் இனிதே"

என மெல்லின மோனைக்கும்

"வாழைக் கழகு வளமுற நீள்குலை
யாழுக் கழகிசை யாம்"

என இடையின மோனைக்கும் புதிது யாத்தமைக்கப் பெற்றன. விளக்கமும் எழுதியாகும் நிலையும் உண்டாயிற்று.

"வல்லின மோனைக்கு நான்கு எழுத்துகள் (க.ச.த.ப) அமைந்த பாட்டைக் காட்டினாராக, மெல்லினத்திற்கு மூன்று எழுத்துகளாலும் (ஞ.ந.ம) இடையினத்திற்கு இரண்டு எழுத்துகளாலும் (வா,யா) சான்று காட்டிய தென்னை எனின் மெல்லினத்துள் ஞ,ந,ம என்னும் மூன்றும் இடையினத்துள் ய, வ என்னும் இரண்டும் அல்லா எழுத்துக்கள் மொழி முதலாகாவாகலின் இவ்வாறு காட்டினாம் என்க. இனி 'ங' கரம் மொழிமுதல் வாராதோ எனின் 'ஙனம்' என்னும் ஓரிடத்தன்றி வாராதாகலின் விடுத்தாம்" என்பது அவ்விளக்கம். இவ்வாறே அளபெடைத் தொடைக்குச் சில எடுத்துக்காட்டுப் பாக்கள் யாக்க வேண்டியது நேர்ந்தது. அப்பொழுதுதான், பண்டை உரையாசிரியர்கள் பலரும் பாவன்மை மிக்கோராகவும் விளங்கியிருப்பர் என்பது புலப்பாடாயிற்று.

## பழநூற் பயிற்சி நலம்

உறுப்பியல், செய்யுளியல், பொதுவியல் என மூவியல்களாகப் பகுத்துக் கொள்வதற்கும், அவற்றின் உட்பிரிவுகளை வகுத்துக் கொள்வதற்கும் நூற்பாக்களை முறையாய் அடைவுறுத்திக் கொள்வதற்கும், சிற்றுரை வரைதற்கும் பழநூற் பயிற்சியே மூலமாய் அமைந்தது என்று கூறுதல் என் கட்டாயக் கடமையாம்.

## களவியற் காரிகை

யாப்பருங்கல விருத்தியைப் பதிப்பித்த பின் யான் பதிப்பித்த மற்றொரு நூல் களவியற்காரிகை. அது முதற்கண் பேராசிரியர் வையாபுரியாரால் பதிப்பிக்கப்பட்டது. அந்நூற் பெயர்தானும் அவராலே சூட்டப் பெற்றதே. அந்நூல் முதலும் ஈறும் இல்லா இறையெனவே காட்சியளித்தது. இடைஇடையே ஏற்பட்டிருந்த விடுபாடுகளையும் எண்ணி முடியா. ஓராற்றான் நூலுருவாக்கப்படுத்துதல் வேண்டும் என்னும் முனைப்பில் பயின்றேன்.

முதற்கண் அமைந்திருந்த சிதைவுப் பகுதிகளின் தொடர்களை நோக்க இறையனார் களவியலுரையே பளிச்சிட்டது. உரைவிளக்கம் வேண்டுமிடத்தும், உரை வேறுபாடு காணுமிடத்துமன்றி முந்துரையைத் தழுவியே உரையும் விளக்கமும் எடுத்துக் காட்டும் 'உரைமரபு' என்னுள் தோன்றியது.

ஆகலின் இறையனார் களவியல், தமிழ்நெறிவிளக்கப் பொருளியல் இவற்றின் துணையால் சிதைவை ஓராற்றான் ஒழுங்குறுத்த வாய்த்தது.

சிதைவகற்றல்

*களவியற் காரிகையின் 11 ஆம் காரிகை உரை: "இச்சூ.. வெனின் பாலைக்குக் கரு வறிவித்தலைக் கருதிற்று.*

*வரலாறு: தெய்வம் பகவதியும் ஆதித்தனும்; பறை பூசற் பறையும் ஊரெறி பறையும்; செய்கை நிறைகோடலும் ....ம் ; யாழ் பாலை யாழ்;பண் பஞ்சரம்: தலைமகன் பேர் மீளி விடலை காளை; தலைமகள் .... ம் பாதிரிப்பூவும்; நீர் அறுநீர்க் கூவலும் அறுநீர்ச்சுனையும்; அந்நிலத்து மக்கட் பேர் . . . .கரு" (கக)*

மேல்வரும் களவியல் உரையொடும் இதனை ஒப்பிட்டுப்பார்க்க

*தொல்காப்பியனார் பாலைக்கு நிலம் வேண்டிற்றிலர். வேண்டாமையின் தெய்வமும் வேண்டிற்றிலர்.*

பிறர், பகவதியையும் ஆதித்தனையும் தெய்வம் என்று வேண்டுவர்
உணா - ஆறலைத் தனவும் ஊரெறிந்தனவும்.
மா - வலியழிந்த யானையும் புலியும் செந்நாயும்.
மரம் - இருப்பையும் ஓமையும்
புள் - கழுகும் பருந்தும் புறவும்
பறை - பூசற்பறையும் ஊரெறிபறையும் நிரைகோட் பறையும்
செய்தி - நிரை கோடலும், சாத்தெறிதலும், சூறையாடலும்
பண் - பஞ்சுரம், பிறவும் என்றதனால்
தலைமகன் பெயர் - மீளி; விடலை, காளை
பூ - மராம்பூவும், குராம்பூவும், பாதிரிப்பூவும்.
நீர் - அறுநீர்க்கூவலும், அறுநீர்சுனையும்
ஊர் - கொல்குறும்பு
மக்கள் பெயர் - எயினர் எயிற்றியர் மறவர் மறத்தியர் எனப்படும்".

*இவ்வொப்புமைப்பாடு களவியற் காரிகையின் முகப்பை அமைக்க உதவிற்று. இவ்வாறே எண்வகை மணச் செய்தியும் இறையனார் களவியற் செய்தியைக் கட்டளைக் கலித்துறையால் சொல்வதைக் கண்டு அமைத்துக் கொள்ளலாயிற்று.*

*களவியற் காரிகையின் இரண்டாம் பகுதித் தலைப்பு களவொழுக்கம் என்பது. முதற்பகுதித் தலைப்புத் தானம் இல்லை! என் செய்வது?*

*களவியற் காரிகையால் மிகுதியும் பாராட்டப் பெறும் தமிழ் நெறி விளக்கப் பொருளியலில் முதல் கரு உரிப்பொருள்களைக் கூறும் பகுதி அகப்பொருள் எனக்*

குறிக்கப்பெற்றுள்ளமையால் அப்பகுதிக்கு அப்பெயரே சூட்டப்பட்டது.

பதிப்பு வரவுப்பயன்

இதன் முதற்பதிப்பு வெளிவந்த நாளில் வெளிவராத நூல்கள் பின்னே வெளிவந்தமையால் இரண்டாம் பதிப்பு செம்மையுறுதற்கு வாய்ப்பும் உண்டாயிற்று.

"காணாய் தோழிநம் மேனற் றிண்புனம்
பேணா மனைபோய்ப் புறங்கொடுத்தென
வல்வேற் றானை வெள்வரிச்
செவ்வாய்ப் பாசினங் கவர்ந்துகொண் டனவே"

இவ்வாறு முதற்பதிப்பில் இருந்து பாடல் தமிழ்நெறி விளக்கப் பொருளியல் சார்ந்தது. அந்நூல் வெளிவந்தமையால் அப்பாடல்,

" காணாய் தோழிநம் மேனற் றண்புனம்
பேணா மன்னர் பெயர்புறங் கொடுத்தென
வல்வேற் றானை வல்வலிற்
செவ்வாய்ப் பாசனங் கவர்ந்து கொண் டனவே"

எனத் திருத்தம் பெற்றது.

"முளையெயிறு நிரம்பா இளமைப் பருவத்தள்
அளியன் ஒருவன் தளையவிழ் கண்ணி
முலையும் வாராள் முதுக்குறைந் தனளே"

என முற்பதிப்பில் சிதைவுற்றுக் கிடந்த பொருளியற் பாடல்

"முளையெயிறு நிரம்பா இளமைப் பருவத்
தொளிதிகழ் ஒருவன் நீட்டிய
தலையவிழ் கண்ணி தாங்கினள் உவந்தே"

என இரண்டாம் பதிப்பில் செப்பம் அடைந்தது. எனினும் இளமைப்பருவத்தள் ஒளிதிகழ் ஒருவன் ' எனப் பாடம் அமைதலே சிறக்கும்[1] என்பதை உணர்ந்தும், அப்பாடல் இன்மையால் அப்படியே வைக்கப்பட்டது. இவ்வாறே பிறநூல் ஒப்பீடு புதுப்பதிப்பு வரவு இவற்றால் சிதைவுகள் பிழைகள் ஒழுங்காக வாய்ப்புகள் உண்டாயின.

## புனைந்து நிரப்புதல்

மேற்குறித்த வகைகளால் ஒழுங்காக்கும் வாய்ப்பில்லாத இடங்களும் களவியற் காரிகையில் உண்டு. கிளவித் தெளிவு என்பதொரு நூலின் மேற்கோள் பா ஒன்று. அந்நூல் வெண்பாவால் அமைந்தமை அழியக் கிடத்தலால் சிதைந்தது வெண்பா என முடிவெடுக்க வாய்த்தது. அவ்வெண்பா,

"__________
ழிம்பரோ யாதோ விடம்வடிவு - கொம்பரோ
வண்ண மயிலோ கிளியோ மலைநாட
__________

என இடையடி இரண்டால் மட்டும் நிற்கின்றது, இஃது இடம் வினாதல் துறைக்கு எடுத்துக் காட்டாக வருவது, உளங் கவன்றுரைத்த பாங்கன், "எவ்விடத்து? எத்தன்மைத்து? நின்னாற் காணப்பட்ட உரு? என்று தலைவனை வினாவுதல் என உரை கூறுகின்றது. இடம் வடிவு என்பவை இரண்டாம் அடி மூன்றாம் சீரில் இடம் பெற்றுள்ளன. இடமும் நிரம்ப வேண்டும் வடிவின் முடிவும் வேண்டும்.

(உம்பரோ நாகர் உலகோ இருங்கடல்சூ)
ழம்பரோ யாதோ விடம்வடிவு - கொம்பரோ
வண்ண மயிலோ கிளியோ மலைநாட
(எண்ணங் கவர்ந்த எழில்)

என நிறைவு செய்யப்பட்டது. முதற்பதிப்பில் இருந்த வகையை மு.ப. என அடிக்குறிப்பாகத் தரப்பட்டது. உண்மைப் பாடம் கிடைக்குமானால் இப்புனைவை விலக்கிக் கொள்ளலாம் அன்றோ ! இப்படியே செய்த நிறைவுகள் மிகப் பலவாம். அங்கெல்லாம் முதற்பதிப்புப் பாடம் தவறாமல் காட்டப்பட்டது.

## வைப்புநிதி

களவியற் காரிகையின் அச்சீடு முடிந்தது. ஆராய்ச்சி முன்னுரையின் மெய்ப்புத் திருத்தவந்தது. அந்நிலையில் வீரசோழியத்தின் வழியே சிதைவு நீக்கும் சில நூற்பாக்கள் கிடைத்தன. அவற்றை விடுதல் கூடாதே. அதனால் "களவியற் காரிகையில் சிதைந்துள்ள 16,17, ஆம் மேற்கோள் நூற்பாக்களும் விடுபெற்ற பகுதியும் வீரசோழிய உரையில் பின்வருமாறு அறியக்கிடக்கின்றன என அம்முன்னுரையிலே அமைத்துக் கொள்ளப்பட்டது. அதற்குப் பின்னரும் சில விடுபாடுகள்

கிடைத்தன. அவற்றை அடுத்த பதிப்பில் உரிய இடத்தில் சேர்த்துக்கொள்ளலாமே வைப்பு நிதியம் இருப்பின் வாங்கிக் கொள்ளமுடியுமே!

## பழநூற் பதிப்புப்பயன்

களவியற் காரிகைப் பதிப்பின் வழியே பாண்டிக் கோவை முதலிவற்றில் இணைத்துக் கொள்ள வேண்டிய பாடல்கள் உண்மை புலப்பட்டது. புறத்திரட்டுப் பதிப்பால் கீழ்க்கணக்கு நூல்களும் இடம் பெறவேண்டிய பாடல்கள் சில உண்மை புலனாயிற்று. செவ்விய பாடங்கள் பல அவற்றில் கிடைத்தலால் மேல்வரும் பதிப்புகளுக்கு அப்பாடங்களும் பயன்படும் என்றும் உறுதியும் உண்டாயிற்று. தகடூர் யாத்திரை 'களவித் தெளிவு', பொருளியல் என்பன நூல் வடிவுறும் வாய்ப்பும் நேரிட்டது.

யாப்பருங்கலப் பதிப்பில் சித்திரக் கவிகளைச்சித்திரத்தில் திட்டிப்பார்த்து அமைத்தலால் பல செப்பங்கள் கிடைத்தன. 'உழைக்க உழைக்கப் பயனில்லாமல் இல்லை' என்னும் தெளிவும் கிடைத்தன. அதே பொழுதில் பதிப்பு எத்துணை விழிப்பாயி ருப்பினும் மயக்குதல் உண்டு என்பதும் தெள்ளத் தெளிவாகப் புலப்பட்டது; புலப்பட்டும் வருகின்றது. அவற்றையெல்லாம் விரிப்பின் பெருகுமாகலின் ஒரெடுத்துக் காட்டுக் காட்டுவேன்.

## விழிப்பின் இன்றியமையாமை

தமிழ்நாட்டு அரசின் பழஞ்சுவடிப் பதிப்பாக வெளிவந்த குறவஞ்சிகளுள் ஒன்று, சிக்கல் நவநீதேசுவர சுவாமி குறவஞ்சி. அதனைத் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டது. அதில்,

"முத்துரேகைச் சகி வந்தாள்- மோகினிக் கனபா
முத்து ரேகைச் சகி வந்தாள்"

என ஒரு தரு வருகின்றது. கனபா என்பது சரியான பாடம் எனக்கொண்டு அதற்குப் புகழ்பரவிய என்னும் குறிப்புரையும் வரைந்தேன், பின்னே உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் வழியே அறிஞர் மு.கோ.இராமன் அவர்கள் எழுதிய சுவடி ஆய்வு நூலால் அப்பாடத்தைச் சுட்டிக்காட்டி மோகினிக் கன்பா' என்பதே பாடம் என்று குறித்திருந்தனர். அது 'சுவடிப் பதிப்பில்' விழிப்புவேண்டும் என்பதை விளக்கிக் காட்டும் சான்றாகத் திகழ்கின்றது.

நிறைவுரை

தேனும் பாலும் ஊட்டி, ஊனும் உயிரும் கலந்த இன்ப அன்பால். தம் மகாரைப் போற்றும் தெய்வத் தாய்மார் பலர் சங்கச் சான்றோர் வரிசையில் இடம் பெற்றுத் திகழ்கின்றனர். அவர்கள் இலக்கியப் பயிரைப் பேணிவளர்த்தவர்கள். காக்கை பாடினியாரோ இலக்கணப் பயிரைப் பேணி வளர்த்த பெருமைக்குரியவர். அவர் தம் நூல் 'இப்போது இல்லை' என்றும், மறைந்து போனது' என்றும், 'வாரணம் கொண்ட தந்தோ' என்றும் முடிவு செய்யப் பெற்றது. அந்நிலை அகன்று 'காக்கை பாடினியத்தைத் தமிழுலகம் இழந்துவிடவில்லை' என்னும் ஒரு நிலை இந்நூலால் அமையுமாயின் அப்பேற்றை எளியேன் வழி அருளிய திருவருள் திறத்தை வாழ்த்தி வணங்கி 'வண்டமிழ்த் தொண்டு புரிதல் என்றலைக் கடனாம்' எனக் காக்கை பாடினிய ஆராய்ச்சி முன்னுரை நிறைவில் எழுதிய எழுத்தை நினைவுறுத்திக் கொள்கிறேன். மறைந்த நூல்களை வெளிக்கொணர்தலில் தனிப்பேரார்வலராகத் திகழ்ந்த சை.சி.கழக ஆட்சியாளர் தாமரைச் செல்வர் வ. சுப்பையாபிள்ளை அவர்களை இவண் நினைவு கூர்ந்து அமைகின்றேன்.

# சங்க இலக்கியப் பதிப்புகள்

ந. விசாலாட்சி

## சங்க நூல்கள்

தமிழின் தனிப்பெருஞ்செல்வமாக விளங்குவது சங்க இலக்கியமாகும். தொன்மை வாய்ந்த இவ்விலக்கியங்கள் ஏறத்தாழ ஒரு நூற்றாண்டுக்கு முன்னரே அச்சுருவம் பெற்றுத் தமிழ் ஆர்வலர்க்குப் பெருவிருந்தாய்க் கிடைத்தன. எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்களின் பதிப்பு முயற்சிகள் குறித்து இக்கட்டுரை ஆராய்கின்றது.

## முதற்பதிப்புகள்

கற்றறிந்தார் ஏத்தும் கலித்தொகையை முதன்முதலில் பதிப்பித்தவர் தமிழ்த்தந்தை எனப் பல்லோராலும் அழைக்கப்பெறும் இராவ்பகதூர் சி. வை. தாமோதரம்பிள்ளை ஆவர். 1887 ஆம் ஆண்டில் முதற்பதிப்பாகக் கலித்தொகை, தமிழ் உலகிற்கு அறிமுகமானது. அவருடைய பதிப்புப் பணிக்குப்பின் தமிழ்த்தாத்தா என அழைக்கப்பெறும் மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே. சாமிநாதையரவர்களுடைய முதற்பதிப்பாகிய பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியருரையும் 1889 இல் வெளிவந்தது. இப்பதிப்பிற்குப்பின் எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றான புறநானூற்றினை 1894 இல் பதிப்பித்தார். 1903 இல் ஐங்குறுநூற்றினைப் பதிப்பித்தார். 1904 இல் பதிற்றுப்பத்தினை வெளியிட்டார். நற்றிணை பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் எழுதிய உரையுடன் சென்னை சைவ வித்தியாநுபாலன யந்திரசாலையில் 1915 இல் வெளியிடப்பெற்றது. இவருடைய பதிப்புப்பணியைப் பின் தொடர்ந்து சௌரிப் பெருமாள் அரங்கனார் குறுந்தொகையை அழகிய முறையில் பதிப்பித்து 1915 இல் வெளியிட்டார். 1918 இல் வெளியிட்ட பரிபாடலானது உ.வே. சாவின் முதற்பதிப்பாக வெளிவந்தது. ரா. இராகவையங்கார் (பதிப்பாசிரியர்) அவர்கள் அகநானூற்றினை முதற்பதிப்பாக 1920 இல் கம்பர்விலாசம் இராஜகோபாலய்யங்கார் மூலம் வெளியிட்டார்.

## பத்துப்பாட்டின் பிறபதிப்புகள்

இதுகாறும் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களுக்கு ஏராளமான பதிப்பு நூல்கள் தோன்றியுள்ளன. ஆய்வுப்பதிப்பு, மூலப்பதிப்பு, மலிவுப் பதிப்பு எனப் பல நூல்கள் வெளிவந்துள்ளன. இனி ஒவ்வொரு பதிப்பாசிரியர்களுடைய நூல்களையும் தனித்தனியாகக் காணலாம். பொ.வே. சோமசுந்தரனார் அவர்கள் பத்துப்பாட்டினை இரு பகுதிகளாக வெளியிட்டுள்ளார். அவருடை மறுபதிப்பு விவரம் வருமாறு: முதற்பதிப்பு 1956, 1962, 1966, 1968, 1971.

1961 ஆம் ஆண்டில் வை. மு. கோபால கிருஷ்ண மாசாரியாருடைய பத்துப்பாட்டுப் பதிப்பு வெளிவந்துள்ளது. மலிவுப்பதிப்பாக மர்ரே பதிப்பு 1957 இல் முதற்பதிப்பாகவும், 1981 இல் (என். சி. பி. எச் வெளியீடு) இரண்டாம் பதிப்பாகவும் வெளிவந்துள்ளது.

## திருமுருகாற்றுப்படை

பத்துப்பாட்டில் தனித்தனியாகவும் சில நூல்களை உரையாசிரியர்கள் வெளியிட்டுள்ளனர். திருமுருகாற்றுப் படையை வெளியிட்ட பல்வேறு உரையாசிரியர்களுடைய காலநிரல் வருமாறு:- 1902 இல் திருமுருகாற்றுப்படையினைத் திரு. சரவணப். பெருமாளையர் அவர்கள் பதிப்பித்து வெளியிட்டார். பின்னர் 1917 இல் முதற்பதிப்பாக வெளியிட்ட ஆறுமுக நாவலர் 1947 இல் 16 ஆம் பதிப்பாகவும் வெளியிட்டார். 'திருமுருகாற்றுப்படை மூலமும் பரிமேலழகர் உரையும்' என்ற தலைப்பில் 1924 இல் மகாதேவ செட்டியார் அவர்கள் பதிப்பித்து வெளியிட்டார். 1927 இல் 'திருமுருகாற்றுப்படை சிற்றாராய்ச்சி' என்ற பதிப்பு நூலினைத் திரு. எம். ஆறுமுகம்பிள்ளை அவர்கள் வெளியிட்டார். திருமுருகாற்றுப்படை ஆராய்ச்சியுரையினை 1937 இல் பண்டிதர் சு. அருணம்பலம் அவர்கள் வெளியிட்டார். 1937 இல் 'திருமுருகாற்றுப்படை மூலமும் பொருட்சுருக்கமும் பதவுரையும் குறிப்பும்' என்ற தலைப்பில் தை.ஆ. கனகசபாபதி முதலியார் அவர்கள் பதிப்பித்தார். 1945 இல் வை.மு.கோ. பதிப்பும் வெளிவந்தது. ஏறத்தாழத் திருமுருகாற்றுப்படைக்கு மட்டும் பதினைந்து உரையாசிரியர்கள் உரை எழுதியுள்ளனர்.

பொருநராற்றுப்படை

பொருநராற்றுப்படைக்கு இரு உரையாசிரியர் உரை எழுதியுள்ளனர். (மகாதேவ முதலியார், பொ.வே. சோமசுந்தரனார்)

சிறுபாணாற்றுப்படை

சிறுபாணாற்றுப்படைக்கு நான்கு உரையாசிரியர்கள் உரை எழுதிப் பதிப்பித்துள்ளனர். (வை.மு.கோ. வி. கந்தசாமி முதலியார், மு. பி. பாலசுப்பிரமணியன், பொ.வே. சோமசுந்தரனார்)

பெரும்பாணாற்றுப்படை

வை.மு.கோபாலகிருஷ்ணமாசாரியார், ரா. இராகவையங்கார், பொ.வே. சோமசுந்தரனார், சு. அருணம்பலம் முதலான உரையாசிரியப் பெருமக்களும் உரை எழுதிப் பதிப்பித்துள்ளனர்.

முல்லைப்பாட்டு

(1927) முல்லைப்பாட்டிற்கு மட்டும் உ.வே. சா அவர்கள் உரை எழுதியுள்ளார். 1903 இல் மறைமலையடிகள் அவர்களுடைய முதற்பதிப்பாக முல்லைப்பாட்டு வெளிவந்துள்ளது. தவிர, வை.மு. கோ. கனகசபாபதி முதலியார், க.ப. சந்தோஷம், பொ.வே. சோமசுந்தரனார் முதலானோர் எழுதிய உரைகளும் வெளிவந்துள்ளன.

மதுரைக் காஞ்சி

மதுரைக் காஞ்சிக்குப் பொ.வே. சோமசுந்தரனார் அவர்கள் எழுதிய உரை மட்டும் கழக வெளியீடாக வெளிவந்துள்ளது (முதற்பதிப்பு 1956).

நெடுநல்வாடை

நெடுநல்வாடைக்கு வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியார் பதிப்பும் (1931) பொ. வே. சோமசுந்தரனார் அவர்கள் எழுதிய கழக வெளியீடும் வெளிவந்துள்ளன.

குறிஞ்சிப்பாட்டு

கழக வெளியீடான பொ.வே. சோமசுந்தரனார் உரை மட்டும் (1956) வந்துள்ளது.

பட்டினப்பாலை

பட்டினப்பாலைக்கு வை.மு. கோ (1933, 1938) உரையும், மறைமலையடிகள் எழுதிய கழக உரையும் (1956), ரா. இராகவையங்காரின் முதற்பதிப்பு 1951 இலும், சாமி சிதம்பரனாரின் முதற்பதிப்பு 1967 இலும், பொ.வே. சோமசுந்தரனார் உரை என இதுகாறும் ஐந்து உரையாசிரியர்களுடைய பதிப்புகள் வெளிவந்துள்ளன.

மலைபடுகடாம்

மலைபடுகடாத்திற்குச் சோமசுந்தரனார் உரை மட்டும் கழக வெளியீடாக வந்துள்ளது.

எட்டுத்தொகை நூல்களின் பிற பதிப்புகள் - நற்றிணை

பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயரின் முதற்பதிப்புக்குப்பின் வெளிவந்த மறுபதிப்புகள் பற்றிய விவரம்.

முதற்பதிப்பு 1952 இல் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடாக (சென்னை) பின்னத்தூரார் வெளியிட்டார். அடுத்த பதிப்பினை 1956 இல் வெளியிட்டார். இவரே 'நற்றிணை நானூறு' என்ற பதிப்பு நூலினைச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீட்டில் மூன்றாம் பதிப்பாக 1962 இல் வெளியிட்டார். இவருடைய பதிப்புக்குப்பின் 'நற்றிணை மூலம்' என்ற நூலினை எஸ். ராஜம் அவர்கள் (என். சி. பி. எச். வெளியீடு) மர்ரே பதிப்பாக 1957 இல் வெளியிட்டார். இப்பதிப்புக்குப்பின் இரண்டாம் பதிப்பாக 1981 இல் வெளிவந்தது. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் நற்றிணைப் பதிப்புகளை இரு பகுதிகளாக 1966 இல் அருணா பப்ளிகேஷன்ஸ் மூலம் சென்னையில் வெளியிட்டார். அடுத்து எளிய பதிப்புரையான புலியூர்க்கேசிகனின் 'நற்றிணை தெளிவுரை' (பாரிநிலையம், சென்னை) முதற்பதிப்பாக 1967 இல் வெளிவந்தது.

## குறுந்தொகை

திரு. சௌரிப்பெருமாள் அரங்கனாரின் உரைக்குப்பின் எண்ணிலடங்கா உரையாசிரியர்களும் உரை எழுதியுள்ளனர். அடுத்து 1920 இல் கா.ரா. நமச்சிவாய முதலியார் பதிப்பு வெளிவந்தது. 1930 இல் முதற்பதிப்பாக இராமரத்தினம் ஐயர் பதிப்பும், 1933 இல் சோ. அருணாசல தேசிகரின் குறுந்தொகை மூலமும் வெளிவந்துள்ளன. உ.வே. சா அவர்கள். தமது முதிர்ந்த அனுபவத்தின் கனியாக 1937 இல் பதிப்பித்த குறுந்தொகைப் பதிப்பும் வரலாற்றில் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுள்ளது. மறுபதிப்பாக (ஆறாம் பதிப்பு) 1962 இல் வெளிவந்துள்ளது. பொ.வே. சோமசுந்தரனாரின் உரை, கழக வெளியீட்டில் முதற்பதிப்பாக 1955 இலும் அடுத்து 1965, 1972 இலும் வெளிவந்துள்ளது. 1957 இல் மர்ரே பதிப்பு என். சி. பி. எச் மூலம் வெளிவந்துள்ளது. 'குறுந்தொகைக் காட்சிகள் மூலமும் விளக்கமும்' என்ற நூலினை 1958 இல் சக்திதாசன்சுப்பிரமணியன் அவர்கள் வெளியிட்டுள்ளார். அதே ஆண்டில் (1958) மூன்றாம் பதிப்பாக ரா. இராகவையங்கார் அவர்கள் குறுந்தொகை விளக்கத்தை அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடாக வெளியிட்டுள்ளார். இறுதியாக 1985 இல் மூன்று உரையாசிரியர்களுடைய உரைகளும் பல்கின. இப்பதிப்பு பற்றிய விவரத்தினையும், பதிப்பாசிரியர்களைப் பற்றியும் 'சங்க இலக்கியப் பட்டியல்' வாயிலாக அறிந்து கொள்ளலாம்.

## ஐங்குறுநூறு

உ.வே. சாவின் முதற்பதிப்புக்குப்பின் இரண்டாம் பதிப்பாக 1920 இல் வெளிவந்தது. இவருடைய பதிப்புக்குப்பின் ஔவை.சு. துரைசாமிப் பிள்ளை அவர்களுடைய பதிப்பானது மூன்று தொகுதிகளாக 1957 இல் வெளிவந்தது. இம் மூன்று தொகுதிகளுக்கு முன் 1938 இல் ஐங்குறுநூற்றின் முதல் நூறு பாடல்கள் வெளிவந்துள்ளன. இறுதியில் ஔவை. சு. துரைசாமிப்பிள்ளையவர்கள் எல்லாவற்றையும் ஒருசேரத் தொகுத்து 1958 இல் அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடாக வெளியிட்டுள்ளார். அடுத்து பொ.வே. சோமசுந்தரனாரின் கழக உரை 1961, 1966 ஆம் ஆண்டுகளில் வெளிவந்துள்ளது. மூலப்பதிப்புகளாக (என்.சி.பி.எச் வெளியீடு) 1957, 1981 இல் மர்ரே பதிப்பாக வெளிவந்துள்ளது. புலியூர்க்கேசிகனின் தெளிவுரையும் சில தொகுதிகளாக வெவ்வேறு ஆண்டுகளில் வெளிவந்துள்ளது.

## பதிற்றுப்பத்து

உவே. சாவின் முதற்பதிப்புக்குப்பின் வந்த மறுபதிப்புகள் 1920, 1941, 1945, 1949, 1957 ஆகிய ஆண்டுகளில் வெளிவந்துள்ளன. இவ்ருடைய பதிப்பினை அடுத்து ஔவை.சு. துரைசாமிப்பிள்ளை அவர்களுடைய பதிப்புகள் 1950, 1955, 1958, 1963, 1968 இல் வெளிவந்துள்ளன. உரையின்றி மூலப் பதிப்பாக 1957, 1981 இல் மர்ரே பதிப்பகத்தார் என்.சி.பி.எச் வெளியீடாக வெளியிட்டுள்ளனர். பழைய உரை குறிப்புரையாக பதிற்றுப்பத்துக்கு யாழ்ப்பாணம் பண்டிதர் சு. அருணம்பலவனார் வகுத்த ஆராய்ச்சியுரையுடன் அமைந்த பதிப்பு 1960 இல் யாழ்ப்பாணத்தில் வெளியிடப்பெற்றது. அடுத்து இவரே இரண்டாம் பாகமாக 1963 இல் வெளியிட்டுள்ளார். புலியூர்க்கேசிகனின் தெளிவுரையும் 1974 ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

## பரிபாடல்

டாக்டர் உவே. சாவின் மறுபதிப்பு 1935 இலும் வெளிவந்துள்ளது. சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக வெளியீடாக (1957, 1964, 1969) பொ.வே. சோமசுந்தரனார் உரை வெளிவந்துள்ளது. 1971 இல் புலியூர்க்கேசிகனின் தெளிவுரையைச் சென்னைப் பாரிநிலையத்தார் வெளியிட்டுள்ளனர். அடுத்து 'மர்ரே பதிப்பு' 1957, 1981 இல் வெளிவந்துள்ளது.

## கலித்தொகை

எட்டுத்தொகை நூல் வரிசைகளுள் முதன்முதல் பதிக்கப் பெற்ற நூல் கலித்தொகையேயாகும். சி.வை. தமோதரனார் அவர்களுடைய பதிப்பில் நச்சினார்க்கினியர் உரையும் உள்ளது. இவருடைய பதிப்பினைக் தொடர்ந்து இ.வை. அனந்தராமையரவருடைய பதிப்பு (1925) மூன்று தொகுதிகளாக வெளிவந்துள்ளது. முதல் தொகுதியில் பாலைக்கலியும் குறிஞ்சிக்கலியும் (1925) இரண்டாம் தொகுதியில் மருதக்கலியும் முல்லைக்கலியும் (1925) என இரு தொகுதிகளாக வெளியிட்டார். நெய்தற்கலியை மட்டும் 1931 இல் தனியாகப் பதிப்பித்து வெளியிட்ட இவர் 1930 இல் மூலத்தையும் பதிப்பித்துள்ளார். இவருடைய பதிப்பினை முழுமையாகத் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தார் 1984 இல் வெளியிட்டுள்ளனர். இவருடைய பதிப்பில் மூலமும் உரையும் காணப்படுகின்றன. மேலும் ஐயரவர்கள் பல்கிய மேற்கோள்களை அடிக்குறிப்பாகக்

காட்டியுள்ளார். இவ்வடிக்குறிப்புகள் புலவர்க்கு விருந்தாகவும், பயில்வோர்க்கும் ஆய்வறிஞர்க்கும் கைவிளக்காகவும் அமைந்துள்ளன. காழி சிவ. கண்ணுசாமி, தமிழ்மலை இளவழகனாரின் முதற்பதிப்பு 1938 இல் பாகனேரி காசி விசுவநாதன் செட்டியார் வெளியீடாக வெளிவந்துள்ளது. இவருடைய மறுபதிப்புகள் பின்வரும் ஆண்டுகளில் வெளிவந்துள்ளன. *1943, 1949, 1955, 1958, 1962, 1967. 1937* இல் கை.ஆ.கனகசபாபதி முதலியார் அவர்கள் பர்லைக்கலியினை வெளியிட்டுள்ளார். 1958 இல் 'கலித்தொகை மூலமும் விளக்கமும்' என்ற உரையினைத் திரு. சக்திதாசன் அவர்கள் பதிப்பித்து வெளியிட்டுள்ளார். பின்னர் மலிவுப்பதிப்புகளும் வெளி வந்துள்ளன. சைவசித்தாந்தக் கழக வெளியீட்டில் பொ.வே. சோமசுந்தரனாரின் உரை 1969, 1970 இலும் வெளிவந்துள்ளது.

## அகநானூறு

ரா. இராகவையங்கார் அவர்கள் அகநானூற்றினைப் பதிப்பிக்க வேண்டுமென்ற அவாவுடன், பழைய ஏடுகளைப் பரிசோதித்து மயிலாப்பூர்க் கம்பர் விலாசம், இராஜகோபாலய்யங்கார் மூலம் மூலத்தை மட்டும் பதிப்பித்து வெளியிட்டார். இவர் பின்னர் *1923, 1933* ஆம் 'ஆண்டுகளில் உரையுடன் மயிலைக் கம்பர் விலாசம் இராஜகோபாலய்யங்கார் மூலம் பதிப்பித்தார். அகநானூற்றின் ஒரு கூறாகிய களிற்றியானைநிரையை உரையுடன் 1926 இல் பதிப்பித்தார். இவருடைய பதிப்பிற்குப்பின் உரையாசிரியர்களாகிய ந.மு. வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு வேங்கடாசலம்பிள்ளை ஆகிய இருவரும் அகநானூற்றினை களிற்றியானை நிரை (1943), மணிமிடைபவளம், நித்திலக்கோவை (1944) எனும் ஒவ்வொன்றையும் தனித்தனியாகத் தமிழ் வெளியீட்டுக் கழகம் மூலம் பதிப்பித்துள்ளனர். கடைசியாகப் புலியூர்க் கேசிகனின் எளிய தெளிவுரையும் மூன்று தொகுதிகளாக வெவ்வேறு ஆண்டுகளில் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. அவற்றின் பதிப்பு விவரம் வருமாறு:

1. அகநானூறு - களிற்றியானைநிரை தெளிவுரை - *1960, 1963, 1971*
2. அகநானூறு - மணிமிடைபவளம் தெளிவுரை - *1960, 1964, 1970*
3. அக்நானூறு - நித்திலக்கோவை - *1962, 1970*

(இவை மூன்றும் சென்னைப் பாரி நிலையத்தாரின் வெளியீடுகளாகும்.)

## புறநானூறு

உ.வே. சா அவர்களுடைய புறநானூற்றின் மறுபதிப்புகள் வருமாறு: 1923, 1935, 1950, 1956, 1963, 1971. புறநானூற்றினை உரையுடன் வழங்கிய இவர் 1936 இல் மூலம் மட்டும் வெளியிட்டுள்ளார். ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை அவர்கள் புறநானூற்றினை இருபகுதிகளாக 1947 இல் பதிப்பித்துள்ளார். இவருடைய மறுபதிப்பு 1952 இல் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக நூலாக வெளிவந்துள்ளது. பொ.வே. சோமசுந்தரனாரின் கழக உரை 1955 இலும், புலியூர் கேசிகனின் எளிய உரை 1958, 1959 இலும், மர்ரே பதிப்பாக 1958, 1981 ஆண்டுகளிலும் வெளிவந்துள்ளது.

இதுகாறும் சங்க இலக்கியத்துக்கு எழுந்த பல்வேறு பதிப்புகளைப் பார்த்தோம். பதிப்பாசிரியர் அனைவருடைய பதிப்பு நெறிகளையும் தொகுத்து ஆராயும் போது பழம்பதிப்புகளின் கூறுகளை உணர முடியும். விரிவஞ்சியும், காலச் சுருக்கத்தைக் கருதியும் இங்கு ஒரு சில பதிப்பாசிரியர்களுடைய நெறிமுறைகள் ஆராயப் பெறுகின்றன. நற்றிணையின் பதிப்புகள் குறித்து ஆராய்ந்து வரும் த.கோ. ப அவர்கள் நற்றிணையில் அமைந்துள்ள பதிப்பு நெறிகளாகப் பின்வரும் 11 நெறிகளைக் குறிப்பிடுவர்.

1. தலைப்பு : பாட்டு எண், திணை - கூற்று.
2. மூலம் :
3. ஆசிரியர் பெயர் :
4. பழங்குறிப்பு : *———————* ஆசிரியர் பெயர்
5. பொருள்கோள்முறை :
6. மரபு தழுவிய பொழிப்புரை :
7. கருத்துரை :
8. அருஞ்சொற்பொருள் :
9. சிறப்புக்குறிப்பு : இறைச்சி, உள்ளுறை, பாடத் தேர்வுக் குறிப்புகள்.
10. மேற்கோளாட்சி :
11. ஒப்புமை :

## நற்றிணை

பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (1915) அவர்கள் எட்டுத்தொகை நூல்களுள் குறுந்தொகை, நற்றிணை உரை, அகநானூறு போன்ற நூல்களை வெளிப்படுத்த வேண்டுமென்று பெருமுயற்சி எடுத்தார். ஆனால் நற்றிணை ஒன்றுதான் அவரால்

பதிப்பிக்க முடிந்தது. பதிப்பிக்கும் பொழுது பல தமிழறிஞர்களுடைய உதவியும் நாடினார். அவருக்குக் கிடைத்த ஏட்டுப் பிரதிகளில் 234 ஆவது பாடலும், 385 ஆவது பாடலின் பின்குறிப்பும் அவருக்குக் கிடைக்கவில்லை.

## குறுந்தொகை

சௌரிப் பெருமாளரங்கன் (1915) குறுந்தொகையைப் பதிப்பிக்கும் பொழுது, தமக்குத் துணையாக அருந்தொகையுதவிய பெருஞ்செல்வர்கள் பற்றித் தம் நூலின் கண் 'உதவியுரைத்தல்' என்னும் தலைப்பின்கீழ் மிக விரிவாகக் கூறியுள்ளார். இந்நூலுள் பல மாறுபாடுகளும் செய்துள்ளார். அவற்றையெல்லாம் 'எஞ்சியவைகளும் பிறவும்' என்னும் தலைப்பின்கீழ்த் தெரிவித்துள்ளார். அவற்றுள் இடக்கர்ச் சொல்லாகிய குஃறொடரன் மொழி இந்நூலில் ஒன்பது இடங்களில் வருவதைக் குறிப்பிட்டு அவற்றை நீக்கி வேறு பாடங்களில் பதிப்பித்துள்ளார்.

முதற்பதிப்பாக விளங்கும் இவருடைய பதிப்பிலும் குறுந்தொகைப் பாடல்கள், இறையனார் அகப்பொருள் உரையிலும், தொல்காப்பியப் பொருளதிகார உரையிலும் எங்கெல்லாம் மேற்கோளாகக் காட்டப் பெற்றுள்ளன என்கின்ற விரிவான பட்டியலையும், பதிப்பாசிரியர் தொகுத்துத் தருவது பிற்கால ஆய்வாளருக்கும் பெரும்பயனாய் அமைகின்றது. டாக்டர் உ.வே. சா பதிப்புகளுக்கு முன்னரே சிறந்த பதிப்புக்குரிய சிறப்புகள் பலவற்றை இப்பதிப்பு பெற்று விளங்குவது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

## உ.வே. சா

பொதுவாக உ.வே. சா அவர்கள் விசேட உரையில் அரிய சொற்களுக்குப் பொருள்விளக்கம் தருதல், உரையாசிரியர் தரும் பொருள் விளக்கங்களை எடுத்துரைத்தல், பதவுரையில் விளக்கம் பெறாத செய்யுள் விகாரங்களை எடுத்துரைத்தல், உவமைகள், அடைகள், பிரதிபேதங்கள் முதலானவற்றை விசேட உரையில் எடுத்துரைத்துள்ளார். அவர் விசேட உரையில் கையாண்ட ஒரு சிலவற்றை மட்டும் இங்குக் காண்போம்.

சான்றாக 'கருவி மாமழை' (குறுந். 42) என்ற தொடரில் அமையும் 'கருவி' என்ற சொல்லிற்குத் 'தொகுதி' என்ற பொருள் பதவுரையில் தரப் பெற்றுள்ளது. இத்தொடரை விசேடவுரையில் குறிப்பிடும்போது (கருவிமாமழை) மின், இடி முதலாகிய

தொகுதியை உடைய பெரிய மழை என்று விளக்குகிறார். இது புறநானூற்று உரையை (159 : 19) ஒட்டி அமைந்தது.

கெட்டிடத்து- கெட்டஇடம் கெட்டிடமாயிற்று-: தொகுத்தல் விகாரம் (குறுந். வி.ரை) பக்: 97[1]

## பாடபேதம்

'பலர்புகு வாயிலடைப்பக் கடவுநர்' குறுந் (118-3 அடி) அடையக் கடவுநர் (பி.பேதம்) எனப் பிரதி பேதமாக வருவதையும் விசேடவுரையில் சுட்டிக் காட்டியுள்ளார். வாயில் அடையக்கடவுநர் என்பது பாடமாயின் வாயிலின்கண் உள்ளாரை ஒருவர் விடாமல் முற்றவும் ஆராய்வாராய் "வருபவர்கள் உளீரோ" என்று கேட்பவும் தலைவர் வந்திலரென்று பொருள் கொள்க" என்று உரைத்துள்ளார். (பக். 240)[2]

உ.வே. சாவின் முதற் பதிப்பில் இடம் பெற்றுப் பிற்பதிப்பில் இடம் பெறாதவை:

குறுந். 129. மாக்கடல் நடுவன் 'எலுவசிறாஅர்' எனும்பர்டல் முழுவதும் 'தலைவன் பாங்கற்குரைத்தது' கோப்பெருஞ்சோழன் பாடியது. (பக். 258)[3]

## ஐங்குறுநூறு

உ.வே. சாவின் மறுபதிப்பு 1920 இல் வெளிவந்தது. முதற்பதிப்புக்கும் இரண்டாம் பதிப்பிற்கும் ஒரு சில வேறுபாடுகள்தான் காணப்படுகின்றன. பதிப்புப் பற்றிய செய்திகளை உ.வே. சா அவர்கள் நூலின் முகவுரையிலே அழகுற எடுத்துரைப்பதைக் காணலாம். பழைய கையெழுத்துப் பிரதிகளில் அறிந்த பிரதி பேதங்களும், அரும்பதவகராதியில் பழைய நூலாராய்ச்சிக்கு இன்றியமையாத சில குறிப்புகளும் இப்பதிப்பிற் சேர்க்கப் பெற்றுள்ளன. "சில சில இடத்து மூலம் மட்டும் தனியேயுள்ள பிரதிகளின் பாடம் வேறாகவும் இந்நூற் பழைய உரையாசிரியர் கொண்ட பாடம் வேறாகவும், மேற்கோளாக எடுத்துக் காட்டியிருக்கும் நச்சினார்க்கினியார் முதலியோர் கொண்ட பாடம் வேறாகவும், அவ்வப் பிரதிகளிற் காணப்பட்டன. அவற்றையெல்லாம் ஒருங்கே தொகுத்துப் பிரதிபேதமாக அவ்வப்

1. உ.வே. சாமிநாதையர், குறுந்தொகை, பக் 97.
2. ,, ,, பக். 240
3. ,, ,, பக். 258

பக்கங்களின் இறுதியிற் பதிப்பிக்கப்பட்டுள்ளன. பிரதிகளிலுள்ளவாறே பதிப்பித்தமையால், அவற்றுட் சில பாட பேதங்களுக்குப் பொருள்கள் புலப்படவில்லை"[4]

## ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை

அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பதிப்பாகிய இவருடைய பதிப்பில் ஒவ்வொரு திணைக்குரிய ஆசிரியர் வரலாறும், சிறப்பிடம் பெற்ற கருப்பொருள்களைப் பற்றிய உலகியல் விஞ்ஞானம், தத்துவம் முதலிய கூறுகளோடு விரவிய ஆராய்ச்சியும் ஆங்காங்கு இந்நூலின்கண் சேர்த்துள்ளார். மேலும் அவ்வப் பாடல்களின் கீழ் பழைய உரை, உள்ளுறை உவமம், பாடவேறுபாடு என முறையாக அமைத்துள்ளார். எடுத்தாண்ட மேற்கோள் செய்யுளின் விவரத்தைப் பற்றி அந்தந்தப் பக்கத்தின் கீழே குறித்துக் காட்டியுள்ளார். உ.வே. சா அவர்கள் சுட்டிக்காட்டிய பாட வேறுபாட்டினையே தம் நூலிலும் சுட்டிக் காட்டியுள்ளார்.

மொத்தத்தில் உ.வே. சா பதிப்பிற்குப் பின் ஔவை.சு. துரைசாமிப்பிள்ளை அவர்களுடைய பதிப்பானது செம்மைப் பதிப்பாகவும், திருத்திய பதிப்பாகவும் காணப்படுகிறது. மேலும் சங்க இலக்கியத்தை ஆராய விழைவோருக்கு இவருடைய பதிப்பு ஒரு கைவிளக்காக அமையும். உ.வே. சா அவர்களுடைய பதிப்பில் 490 ஆம் பாடலில் விடுபட்ட இரண்டு மூன்று வரிகள் யாவும் ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை அவர்களுடைய பதிப்பிலும், கழக வெளியீட்டிலும் முழுமை பெற்றுள்ளன.

## கழக வெளியீடு :- பொ. வே. சோமசுந்தரனார்.

இவருடைய பதிப்பு முறையை நோக்கும் போது துறைகளுக்குச் சிறந்த விளக்கமும், பழைய உரையின் கீழ்த் தெளிவான சொற்பொருளும், இவற்றை விளக்கும் விரிந்த விளக்கவுரையும், இலக்கணக் குறிப்புகளும் காணலாம்.

---

4. ,, ஐங்குறுநூறு, பக். 5

பாடவேறுபாடு

| பாடல் வரி | உ.வே. சா. பதிப்பு | கழகப்பதிப்பு |
|---|---|---|
| 36:5 | பயலை | பசலை |
| 37:2 | பயந்து | பசந்து |
| 38:2 | தன்சொ லுணர்ந்தோர் | தன் சொல் லுணர்ந்தோர் |
| 70:5 | பேஎ, யனையமியாஞ்சேய் பயந்தனமே. | பேஎயனையமியாஞ்சேய் பயந்தனமே. |
| | (பா.பே) பே எயனை யம்யாஞ்சே பயந்தனை சென்மே | (பா.பே) பே எயனையம் யாஞ்சேய் பயந்தனைசென்மே |
| 68:1 | கணைக்காலாம்ப | கணைக்காலாம்பல் |
| 83 | வரைந்த அனுமைக் கண்ணே | வரைந்தணிமைக் கண்ணே. |
| 85:3 | முரநி | – - - – |
| | (பா.பே) ஊரநின் | (பா.பே) மூரநின் |
| 90:2 | மாண்குண | மாண்குணம் |
| 93:1 | நல்லேற்றினமேயல் | |
| | நல்லேறினமேயல் (பா.பே) | நல்லேறின்மேயல். |
| 96:1 | அணிநடையெருமை | – - - - |
| | அணிநிறவெருமை | அணிநிறவெருமை |
| 97:4 | பொய்கைப்பூவினு | பொய்கைப் பூவினும் |

| எண் | நூற் பெயர் | பதிப்பாசிரியர் | வெளியீட்டகம்/பதிப்பகம்/அச்சகம்/பதிப்பு/ஆண்டு |
|---|---|---|---|
| | **நற்றிணை** | | |
| 1. | நற்றிணை உரையுடன் | பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர் | பின்னத்தூர். அ.நாராயணசாமி ஐயர்,I,1915. |
| 2 | நற்றிணை உரையுடன் | பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர். | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, I, 1952,II,1956 |
| 3. | நற்றிணை நானூறு | பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர் | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, III, 1962 |
| 4. | நற்றிணை | பொ.வே.சோமசுந்தரனார் ஆய்வுரை | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, மறுபதிப்பு,IV, 1967 |
| 5. | நற்றிணை (இருபகுதிகள்) | ஔவை. சு.துரைசாமிப்பிள்ளை | அருணா பப்ளிகேஷன்ஸ், சென்னை, 1966 |
| 6. | நற்றிணை மூலம் | எஸ்.ராஜம் | மர்ரே ஆண்டு கம்பெனி, சென்னை, I,1957; II 1981 |
| 7. | நற்றிணை தெளிவுரை | புலியூர்க்கேசிகன் | பாரி நிலையம்,சென்னை,I,1967 |
| | **குறுந்தொகை** | | |
| 1. | குறுந்தொகை | சௌரிப் பெருமாளரங்கன் | வித்தியாரத்திநாகரம் பிரஸ்,I,1915 |
| 2. | குறுந்தொகை | கா.ரா.நமச்சிவாய முதலியார் | குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ்,I,1920 |

| | | | |
|---|---|---|---|
| 3. | குறுந்தொகை | இராமரத்தின ஐயர் | கலாநிலையம், புரசவாக்கம்,I,1930 |
| 4. | குறுந்தொகை மூலம் | சோ.அருணரசல தேசிகர் | சோ.அருணாசல தேசிகர்,1933 |
| 5. | குறுந்தொகை உரையுடன் | மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே.சாமிநாதையர் | டாக்டர் சாமிநாதையர்,I;1937,II;1947,IV 1962 |
| 6. | குறுந்தொகை உரையுடன் | பொ. வே. சோமசுந்தரனரர் | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை,I,1955, மறுபதிப்பு,1965,1972 |
| 7. | குறுந்தொகை மூலம் | எஸ்.ராஜம் | மர்ரே அண்டு கம்பெனி, சென்னை,I,1957, II 1981 |
| 8. | குறுந்தொகை விளக்கம் | ரா.இராகவையங்கார் | அண்ணாமலைப்பல்கலைக் கழகம், III 1958 |
| 9. | குறுந்தொகை தெளிவுரை | புலியூர்க்கேசிகன் | பாரிநிலையம், சென்னை,I 1965 |
| 10. | எளிய சொற்களில் இனிய குறுந்தொகை | மு.ரா.பெருமாள் முதலியார் | பழனியப்பா பிரதர்ஸ்,II,1970 |
| 11. | குறுந்தொகை மூலமும் உரையும் | மு.சண்முகம்பிள்ளை | தமிழ்ப்பல்கலைக் கழகம்,I 1985 |
| 12. | குறுந்தொகைப் பெருஞ் செல்வம் | சாமி சிதம்பரனார் | இலக்கியநிலையம், சௌராஷ்டிரா நகர், சென்னை, I 1985 |
| 13. | குறுந்தொகைக்காட்சிகள் மூலமும் விளக்கமும் | சக்திதாசன் சுப்பிரமணியன் | தமிழகம்,சென்னை,I,1958 |

## ஐங்குறுநூறு

| | | | |
|---|---|---|---|
| 1. | ஐங்குறுநூறு | மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே.சாமிநாதையர் | டாக்டர் சாமிநாதையர், I, 1903, II, 1920, III, 1944 |
| 2. | ஐங்குறுநூறு முதலாவது நூறு | ஔவை. சு.துரைசாமிப்பிள்ளை | கா.கோவிந்தன், திருவத்திபுரம் 1938 |
| 3. | முதல் தொகுதி | ஔவை. சு.துரைசாமிப்பிள்ளை | அண்ணாமலைப்பல்கலைக் கழகம், சிதம்பரம் 1957 |
| 4. | இரண்டாம் தொகுதி | ஔவை. சு.துரைசாமிப்பிள்ளை | அண்ணாமலைப்பல்கலைக் கழகம், சிதம்பரம் 1957 |
| 5. | மூன்றாம் தொகுதி | ஔவை. சு.துரைசாமிப்பிள்ளை | அண்ணாமலைப்பல்கலைக் கழகம், சிதம்பரம் 1957 |
| 6. | நான்காம் தொகுதி | ஔவை. சு.துரைசாமிப்பிள்ளை | அண்ணாமலைப்பல்கலைக் கழகம், சிதம்பரம் 1958 |
| 7. | ஐங்குறுநூறு உரையுடன் | பொ.வே.சோமசுந்தரனார் | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை 1961 மறுபதிப்பு 1966 |
| 8. | ஐங்குறுநூறு | எஸ்.ராஜம் | மர்ரே அண்டு கம்பெனி, சென்னை I 1957 II 1981 |

## பதிற்றுப்பத்து

| | | | |
|---|---|---|---|
| 1. | பதிற்றுப்பத்து பழைய உரையுடன் | மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே. சாமிநாதையர் | டாக்டர் சாமிநாதையர் I 1904 |
| | பதிற்றுப்பத்து பழைய உரையுடன் | மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே.சாமிநாதையர் | டாக்டர் சாமிநாதையர் II 1920, III 1941 IV 1945 V 1949 VI 1957 |
| 2. | பதிற்றுப்பத்து மூலமும் விளக்க உரையும் | ஔவை. சு.துரைசாமிப்பிள்ளை | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை I 1950 மறுபதிப்பு 1955 1958 1963 1968 |
| 3. | பதிற்றுப்பத்து மூலம் | எஸ்.ராஜம் | மர்ரே அண்டு கம்பெனி சென்னை I 1957 II 1981 |
| 4. | பதிற்றுப்பத்து ஆராய்ச்சி உரை | பண்டிதர் சு.அருளம்பலம் | யாழ்ப்பாணத்துக் காரைநகர் அ.சிவானந்தநாதன் வெளியீடு I 1960 |
| 5. | பதிற்றுப்பத்து ஆராய்ச்சி உரை இரண்டாம் பாகம் | பண்டிதர் சு.அருளம்பலம் | யாழ்ப்பாணத்துக் காரைநகர் அ.சிவானந்தநாதன் வெளியீடு 1963 |
| 6. | பதிற்றுப்பத்து | புலியூர்க்கேசிகன் | பாரிநிலையம், சென்னை I 1974 |

## பரிபாடல்

| | | | |
|---|---|---|---|
| 1. | பரிபாடல் பரிமேலழகர் உரையுடன் | மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே. சாமிநாதையர் | டாக்டர் சாமிநாதையர் I 1918 மறுபதிப்பு 1935 IV 1956 |
| 2. | பரிபாடல் மூலமும் உரையும் | பொ.வே.சோமசுந்தரனார் | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை I 1957 மறுபதிப்பு 1964 1969 |
| 3. | பரிபாடல் மூலம் | எஸ்.ராஜம் | மர்ரே அண்டு கம்பெனி சென்னை I 1957 II 1981 |
| 4. | பரிபாடல் தெளிவுரை | புலியூர்க்கேசிகன் | பாரிநிலையம் சென்னை I 1971 |

## கலித்தொகை

| | | | |
|---|---|---|---|
| 1. | கலித்தொகை (உரையுடன்) | ராவ்பகதூர் சி.வை.தாமோதரம்பிள்ளை | ராவ்பகதூர் சி.வை.தாமோதரம்பிள்ளை I 1887 |
| 2. | கலித்தொகை (இருதொகுதி) | | |
| | 1.பாலைக்கலி, குறிஞ்சிக்கலி | இ.வை. அனந்தராமையர் | இ.வை. அனந்தராமையர் I 1925 |
| | மருதக்கலி, முல்லைக்கலி | இ.வை. அனந்தராமையர் | இ.வை. அனந்தராமையர் I 1925 |
| 3. | மருதக்கலி! நெய்தற்கலி | இ.வை. அனந்தராமையர் | இ.வை. அனந்தராமையர் 1931 |
| 4. | கலித்தொகை மூலம் | இ.வை. அனந்தராமையர் | இ.வை. அனந்தராமையர் I 1930 |
| 5. | கலித்தொகை உரையுடன் | காழி.சிவ.கண்ணுசாமி, தமிழ்மலை இளவழகனார் | காசி.விசுவநாதன் செட்டியார் பாகனேரி I 1938 மறுபதிப்பு 1943 III 1949 IV 1955 V 1958 VI 1962 VII 1967 |
| 6. | பாலைக்கலி | தை.ஆ.கனகசபாபதி முதலியார் | பன்னூற் கழகம், குயப்பேட்டை சென்னை 1937 |
| 7. | கலித்தொகை மூலமும் விளக்கமும் | சக்திதாசன் சுப்பிரமணியன் | ரமா பப்ளிகேஷன்ஸ், சென்னை 1958 |
| 8. | கலித்தொகை | டாக்டர் மா.இராசமாணிக்கனார் | வள்ளுவர் பண்ணை 1958 |

| | | | |
|---|---|---|---|
| 9. | கலித்தொகை மூலம் | எஸ்.ராஜம் | மர்ரே அண்டு கம்பெனி சென்னை I 1957 II 1981 |
| 10. | கலித்தொகை விளக்கவுரை | பொ.வே.சோமசுந்தரனார் | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை I 1969 II 1970 |
| 11. | கலித்தொகை தெளிவுரை | புலியூர்க்கேசிகன் | தேனருவிப் பதிப்பகம் சென்னை I 1958 II 1965 |
| | கலித்தொகை தெளிவுரை | புலியூர்க்கேசிகன் | பாரிநிலையம் III 1971 |
| 12. | கலித்தொகை (முழுமையுடன்) மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | இ.வை. அனந்தராமையர் | தமிழ்ப்பல்கலைக் கழகம் தஞ்சாவூர் மறுபதிப்பு 1984 |

## அகநானூறு

| | | | |
|---|---|---|---|
| 1. | அகநானூறு | சேதுஸமஸ்தானம் மகாவித்துவான் பாஷா கவிசேகரர் ரா.இராகவையங்கார் | கம்பர்விலாசம் இராஜகோபாலய்யங்கார் I 1920 II 1923 III 1933 |
| 2. | அகநானூறு - களிற்றி யானை நிரை | கம்பர்விலாசம் இராஜகோபாலய்யங்கார் | கம்பர்விலாசம் இராஜகோபாலய்யங்கார் 1926 |
| 3. | அகநானூறு - களிற்றி யானைநிரை | உரையாசிரியர்: ந.மு.வெங்கடசாமி நாட்டார் கரந்தைக் கவியரசு வேங்கடாசலம்பிள்ளை | தமிழ் வெளியீட்டுக்கழகம், I 1943 |

| | | | |
|---|---|---|---|
| 4. | அகநானூறு - மணிமிடை பவளம் | உரையாசிரியர்: ந.மு.வெங்கடசாமி நாட்டார் கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை | தமிழ் வெளியீட்டுக்கழகம், I 1944 மறுபதிப்பு 1959 V 1964 |
| 5. | அகநானூறு - நித்திலக் கோவை | உரையாசிரியர்: ந.மு.வெங்கடசாமி நாட்டார் கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை. | தமிழ் வெளியீட்டுக்கழகம், I 1944 V 1963 |
| 6. | அகநானூறு மூலம் | எஸ்.ராஜம் | மர்ரே அண்டு கம்பெனி சென்னை I 1958 II 1981 |
| 7. | அகநானூறு களிற்றியானை தெளிவுரை | புலியூர்க்கேசிகன் | பாரிநிலையம் சென்னை I 1960 II 1963 III 1971 |
| 8. | அகநானூறு-மணிமிடை பவளம் | புலியூர்க்கேசிகன் | பாரிநிலையம் சென்னை I 1960 II 1964 III 1970 |
| 9. | அகநானூறு-நித்திலக் கோவை | புலியூர்க்கேசிகன் | பாரிநிலையம் சென்னை I 1961 II 1970 |
| 10. | அகநானூறு உரையுடன் | பொ.வே.சோமசுந்தரனார் | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை I 1970 |
| 11. | அகநானூறு-களிற்றி யானை 1-50 | பொ.வெ. சோம சுந்தரனர்ர் | கைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை I 1966 |
| 12. | அகநானூறு 121 - 300 | பொ.வே.சோமசுந்தரனார் | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை I 1970 |

### புறநானூறு

| | | | |
|---|---|---|---|
| 1. | புறநானூறு பழைய உரையுடன் | மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே.சாமிநாதையர் | டாக்டர் சாமிநாதையர் I 1894 II 1923 III 1935 IV 1950 V 1956 |
| | புறநானூறு பழைய உரையுடன் | மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே.சாமிநாதையர் | டாக்டர் சாமிநாதையர் VI 1963 VII 1971 |
| 2. | புறநானூறு உரையுடன் (இருபகுதி) 1 - 200 | ஒளவை.சு.துரைசாமிப்பிள்ளை | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் I 1947, மறுபதிப்பு 1952 1967 |
| 3. | புறநானூறு உரையுடன் (இருபகுதி) 201-400 | ஒளவை.சு.துரைசாமிப்பிள்ளை | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை 1962 |
| 4. | புறநானூறு மூலம் | டாக்டர் உ.வே.சா. | டாக்டர் உ.வே.சாமிநாதையர் I 1936 |
| 5. | புறநானூறு | பொ.வே.சோமசுந்தரனார் | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை-1955 |
| 6. | புறநானூறு மூலம் | எஸ்.ராஜம் | மர்ரே அண்டு கம்பெனி I 1958 II 1981 |
| 7. | புறநானூறு-தெளிவுரை | புலியூர்க்கேசிகன் | கேசிகன் பதிப்பகம் சென்னை I 1958 மறுபதிப்பு 1950 |

### பத்துப்பாட்டு (முழுவதும்)

| | | | |
|---|---|---|---|
| 1. | பத்துப்பாட்டு (முழுமையுடன்) நச்சினார்க்கினியர் உரையுடன் | டாக்டர் உ.வே.சாமிநாதையர் | டாக்டர் உ.வே.சா. I 1889 II 1918 III 1931 1958 |
| 2. | பத்துப்பாட்டு மூலம் | டாக்டர் உ.வே.சாமிநாதையர் | டாக்டர் உ.வே.சா. I 1931 |

| | | | |
|---|---|---|---|
| 3. | பத்துப்பாட்டு உரையுடன் (இருபகுதி) | பொ.வே.சோமசுந்தரனார் | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை I 1966 மறுபதிப்பு 1962 1966 1968 1971 |
| 4. | பத்துப்பாட்டு உரையுடன் | வை.மு.கோபாலகிருஷ்ணமா மாசாரியார் | வை.மு.கோபாலகிருஷ்ணமாசாரியார் கம்பெனி சென்னை-5. 1961 |
| 5. | பத்துப்பாட்டு மூலம் | எஸ்.ராஜம் | மர்ரே அண்டு கம்பெனி I 1957 II 1981 |
| 6. | Pathuppattu Ten Tamil Idylls | T.V. Chelliah | S.S.W.P.S. Madras (கழகம்) I 1946 II 1962 |

### திருமுருகாற்றுப்படை

| | | | |
|---|---|---|---|
| 1. | திருமுருகாற்றுப்படை | சு. அருளம்பலவனார் | யாழ்ப்பாணம் 1937 |
| 2. | திருமுருகாற்றுப்படை | ஆறுமுகநாவலர் | விக்டோரியா அச்சுக்கூடம் 1917 மறுபதிப்பு 1947 |
| 3. | திருமுருகாற்றுப்படை மூலம் | அ.மகாதேவ செட்டியார் | ஸ்ரீசாது இரத்தினசற்குரு புஸ்தகசாலை சென்னை 1924 |
| 4. | திருமுருகாற்றுப்படை மூலமும் பொருட்சுருக்கமும் பதவுரையும் குறிப்பும் | தை.ஆ.கனகசபாபதி முதலியார் | கே.பழனியாண்டிப்பிள்ளை கம்பெனி சென்னை I 1937 |
| 5. | திருமுருகாற்றுப்படை | சரவணப்பெருமாளையர் | விக்டோரியா அச்சுக்கூடம் சென்னை 1902 |
| 6. | திருமுருகாற்றுப்படை | பொ.வே.சோமசுந்தரனார் | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை I 1955 |

| | | | |
|---|---|---|---|
| 7. | திருமுருகாற்றுப்படை மூலமும் உரையும் | எஸ்.வையாபுரிப்பிள்ளை | சைவசித்தாந்த மகாசமாஜம் சென்னை IV 1946 |
| 8. | திருமுருகாற்றுப்படை ஆராய்ச்சியிரையுடன் | வை.மு.கோபாலகிருஷ்ணமாச சாரியார் | ஆனந்த பார்வதி அச்சகம் சென்னை 1951 |
| 9. | திருமுருகாற்றுப்படை உரைக்கொத்து | தொகுப்பு கே.எம்.வேங்கடராமைய்யா | திருப்பனந்தாள் காசிபடம் I 1959 |
| 10. | திருமுருகாற்றுப்படை சிற்றாராய்ச்சி | எம்.ஆறுமுகம்பிள்ளை | 1927 |
| 11. | திருமுருகாற்றுப்படை (வழிகாட்டி) | கி.வா.ஜகந்நாதன் | அல்லயன்ஸ் கம்பெனி சென்னை 1947 |
| 12. | திருமுருகாற்றுப்படை | சுப்பராய முதலியார் | பாரதி விலாச அச்சுக்கூடம்,பரிதாபி |
| 13. | திருமுருகாற்றுப்படை | மு.ரா.சாமி | மூவர் பதிப்பகம் காரைக்குடி 1966 |
| 14: | திருமுருகாற்றுப்படை மூலமும் தெளிவுரையும் | இரா.இராதாகிருஷ்ணன் | வள்ளலார் ஞானசபை, புதுக்கோட்டை I N.D |
| 15. | உதயசூரியன் | புலியூர்க்கேசிகன் | மல்லிகைப்பதிப்பகம்,தியாகராயநகர்,சென்னை,I 1960 |
| 16. | திருமுருகாற்றுப்படை விளக்கம் | கி.வா.ஜகந்நாதன் | அமுத நிலையம்,சென்னை,1970 |

### பொருநராற்றுப்படை

| | | | |
|---|---|---|---|
| 1. | பொருநராற்றுப்படை | மகாதேவ முதலியார் | லோகநாதன் & பிரதர்ஸ் I 1907 |

| | | | |
|---|---|---|---|
| 2. | பொருநராற்றுப்படை | பொ.வே.சோமசுந்தரனார் | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை I 1955 |

## சிறுபாணாற்றுப்படை

| | | | |
|---|---|---|---|
| 1. | சிறுபாணாற்றுப்படை விளக்கம் | வி.கந்தசுவாமி முதலியார் | ஒற்றுமை ஆபீஸ், சென்னை 1947 |
| 2. | சிறுபாணாற்றுப்படை விளக்கம் | வை.மு.கோபாலகிருஷ்ண மாசாரியார் | வை.மு.கோ்பாலகிருஷ்ணமாசாரியார் 1932 |
| 3. | சிறுபாணாற்றுப்படை விளக்கம் | பொ.வே.சோமசுந்தரனார் | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை I 1955 |
| 4. | சிறுபாணாற்றுப்படை விளக்கம் | மு.பி.பாலசுப்பிரமணியன் | முத்துநிலையம், அய்யாபுரம், நெல்லை I 1964 |

## பெரும்பாணாற்றுப்படை

| | | | |
|---|---|---|---|
| 1. | பெரும்பாணாற்றுப்படை | வை.மு.கோபாலகிருஷ்ணமாச சாரியார் | வை.மு.கோபாலகிருஷ்ணமாசாரியார் |
| 2. | பெரும்பாணாற்றுப்படை ஆராய்ச்சி | ரா.இராகவையங்கார் | அண்ணாமலைப்பல்கலைக்கழகம் சிதம்பரம் I 1949 |
| 3. | பெரும்பாணாற்றுப்படை | அருளம்பலம் | யாழ்ப்பாணம் 1937 |
| 4. | பெரும்பாணாற்றுப்படை | பொ.வே.சோமசுந்தரனார் | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை I 1955 |

## முல்லைப்பாட்டு

| | | | |
|---|---|---|---|
| 1. | முல்லைப்பாட்டு | மறைமலையடிகள் | மறைமலையடிகள் பல்லாவரம் I 1903 IV 1931 |
| 2. | முல்லைப்பாட்டு மூலமும் உரையும் | உ.வே.சா. | கேசரி அச்சுக்கூடம் I 1927 |
| 3. | முல்லைப்பாட்டு | வை.மு.கோபாலகிருஷ்ணமாசாரியார் | வை.மு.கோபாலகிருஷ்ணமாசாரியார் I 1929 |
| 4. | முல்லைப்பாட்டு நச்சினார்க்கினியர் உரையுடன் | க.ப.சந்தோஷம் நடராஜபிள்ளை | சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் சென்னை I 1930 மறுபதிப்பு 1947 |
| 5. | முல்லைப்பாட்டு | இளவழகனார் | இளவழகனார், வாலாஜாபேட்டை 1939 |
| 6. | முல்லைப்பாட்டு மூலமும் பொருட்சுருக்கமும் | தை.ஆ.கனகசபாபதி முதலியார் | தை.ஆ.கனகசபாபதி முதலியார் 1943 |
| 7. | முல்லைப்பாட்டு மதுரைக்காஞ்சி | பொ.வே.சோமசுந்தரனார் | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை I 1955 |

## மதுரைக்காஞ்சி

| | | | |
|---|---|---|---|
| 1. | மதுரைக்காஞ்சி | பொ.வே.சோமசுந்தரனார் | சைவசித்தாந்த நூற்பதிப்பு கழகம் சென்னை I 1956 |

### நெடுநல்வாடை

| | | | |
|---|---|---|---|
| 1. | நெடுநல்வாடை | வை.மு.கோபால கிருஷ்ணமாசாரியார் | வை.மு.கோபாலகிருஷ்ணமாசாரியார் 1931 |
| 2. | நெடுநல்வாடை | பொ.வே.சோமசுந்தரனார் | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் I 1956 |

### குறிஞ்சிப்பாட்டு

| | | | |
|---|---|---|---|
| 1. | குறிஞ்சிப்பாட்டு | பொ.வே.சோமசுந்தரனார் | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் I 1956 |

### பட்டினப்பாலை

| | | | |
|---|---|---|---|
| 1. | பட்டினப்பாலை ஆராய்ச்சி | மறைமலையடிகள் | சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் சென்னை I 1906 II 1919 மறுபதிப்பு - 1930 1956 1957 |
| 2. | பட்டினப்பாலை | வை.மு.கோபாலகிருஷ்ண மாசாரியார் | வை.மு.கோபாலகிருஷ்ணமாசாரியர் I 1933 மறுபதிப்பு 1938 |
| 3. | பட்டினப்பாலை ஆராய்ச்சியும் உரையும் | ரா.இராகவையங்கார் | அண்ணாமலை நகர் I 1951 |
| 4. | பட்டினப்பாலை | பொ.வே.சோமசுந்தரனார் | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை I 1930 |
| 5. | பட்டினப்பாலை | சாமிசிதம்பரனார் | இலக்கியநிலையம் சௌராஷ்டிரநகர் சென்னை I 1967 |

### மலைபடுகடாம்

| | | | |
|---|---|---|---|
| 1. | மலைபடுகடாம் | பொ.வே.சோமசுந்தரனார் | வைசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை I 1956 |

# ஆறுமுகநாவலர் பதிப்பு நெறிமுறைகள்

சி. இலட்சுமணன்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பதிப்பாசிரியர்களில் ஆறுமுக நாவலர் அவர்கள் குறிப்பிடத்தக்கவராவார். இவர் சைவ சமயப்பற்றுடையவராகவும், தமிழ் ஆர்வலராகவும் விளங்கியமைக்கு அவரது பதிப்புகள் சான்று பகருகின்றன. நாவலரவர்கள் பதிப்பாசிரியர் என்பதோடமையாமல் நூலாசிரியராகவும் உரையாசிரியராகவும் விளங்கியமை குறிக்கத் தக்கது.

## நாவலர் பதிப்பித்த நூல்கள்

ஆறுமுக நாவலரவர்கள் பரிசோதித்தும், புத்துரையாத்தும் புதிதாய் எழுதியும் பதிப்பித்த நூல்கள்[1] ஏறத்தாழ அறுபத்துமூன்று எனத் தெரியவருகிறது. அவற்றுள் நிகண்டு, இலக்கிய இலக்கண நூல்கள், திரட்டுகள், நீதி நூல்கள், போன்றவை அடங்கும். அப்பதிப்புகளைத் தொகுப்புப் பதிப்பு, சுருக்கப்பதிப்பு, குறிப்பெதிர் பதிப்பு என மூன்று வகைக்குள் அடக்கலாம். தொகுப்புப் பதிப்பாவது ஒருவருடைய அல்லது பலருடைய படைப்புகளிலிருந்து சில பகுதிகளைத் தொகுத்துத் தருவதாகும். அகத்தியர் அருளிய தேவாரத்திரட்டு, தாயுமானவ சுவாமிகள் திருப்பாடல் திரட்டு, நீதிநூல் திரட்டு என்பன தொகுப்புப் பதிப்புகளாகும். ஒரு நூலினது மூலத்தை மட்டும் அல்லது நூற்பொதி கருத்துகளைப் பக்க அளவால் சுருக்கி வெளியிடுதல் சுருக்கப் பதிப்பாகும். இலக்கணச் சுருக்கம், இலக்கண வினாவிடை, பால பாடம் போன்றவற்றைச் சுருக்கப் பதிப்பிற்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

அருஞ்சொற்பொருள், இலக்கணக் குறிப்பு பாடவேறுபாடு போன்றவற்றை அடிக்குறிப்பாகத் தந்து நிற்பவை குறிப்பெதிர் பதிப்புகளாகும். சேது புராணம், கந்த புராணம், திருக்குறள்,

1. பதிப்பித்த நூல் விவரம் பின் இணைப்பில் காண்க

சூடாமணி போன்ற இவர்தம் பெரும்பான்மை நூல்கள் குறிப்பெதிர் பதிப்புகளேயாகும்.

## பதிப்பு நெறிமுறைகள்

மேற்குறிப்பிட்ட பதிப்புகளில் காணப்படும் பதிப்பு நெறிமுறைகளைச் சுருக்கமாகக் கூற முயல்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## பதிப்பாசிரியர் நோக்கம்

எந்தவொரு பதிப்பாசிரியரும் தமக்கெனச் சில பதிப்பு நோக்கங்களைக் கொண்டிருப்பர். அத்தகு நோக்கங்கள் அவர்தம் பதிப்புகள் சிறப்புற ஏதுவாகும். பழம் பதிப்பாசிரியர்கள் தத்தமக்கெனப் பல பதிப்பு நோக்கங்களைக் கொண்டிருந்தனர். அந்த அடிப்படையில் நாவலரவர்களுடைய பதிப்பு நோக்கங்களை அவருடைய பதிப்புகளினின்று காணலாம்.

அ. ஓலைச்சுவடியிலுள்ள நூல்களை அச்சில் கொணரவேண்டும் என்பது அவரது நோக்கங்களுள் ஒன்றாகும்.

> "ஏட்டிலே உள்ள நூல்களை எல்லாரும் எளிதில் பெறும்படி அச்சிற் பதிப்பித்தல் வேண்டும் என்னும் ஆசையும் இவருக்கு உண்டாயிருந்தது."[2]

என்ற கூற்றிலிருந்து மேற்கருத்து நன்கு விளக்கம் பெறும்.

ஆ. அடி மாற்றம், சொற்களைத் திரித்தல் போன்ற எவ்வித மாற்றமுமின்றி நூலாசிரியர் கருத்தறிந்து மூல பாடத்தைத் தந்து திருத்தமான பதிப்பைச் செவ்விய வடிவமைப்புடன் கொணர்தல் அவரது அடுத்த நோக்கமாகும். இக் கருத்தைப் பின்வரும் கூற்று அரண் செய்யும்.

> "இராச கோபால பிள்ளை திருத்தி யச்சிற் பதிப்பித்த புத்தகத்தைப் பாராதீர். ஏனெனில் அவர் முதனூற் பகுத்தறியாதவராகையால் வில்லிபுத்தூ ராழ்வார் செய்த பாரதத்தைப் பெரியோர் வாக்கை அழிக்கப்படக் கூடாதென்று சிறிதும் அஞ்சாது சிவ பரமாயிருந்த பாடல்கள் அநேகத்தைத் தள்ளியும் சில அடிகளை மாற்றியும் சில சொற்களைத் திரித்தும் மனம் போனவாறே அச்சிற் பதிப்பித்தார். ஆதலால் அதனை நீக்கி வில்லிபுத்தூராழ்வார் பாடினபடியே

---

2. ஆறுமுக நாவலர் சரித்திரம் - பக்.23

ஆறுமுக நாவலர் அச்சிற் பதிப்பித்திருக்கும் புத்தகம் ஒன்று சம்பாதித்துப் பாரும். பாரும். உமது ஐயந் தீரும் தீரும்".[3]

இ. பிழையற்ற பதிப்பைக் கொணர்வதில் பெருங்கவனம் செலுத்தியுள்ளார். குறிப்பாக அச்சுப் பிழைகளைக் களைவதை நோக்கமாகக் கொண்டுள்ளார் என்பது அவர் தம் பதிப்புகளைப் பார்ப்பவர் நன்கறிவர்.

'இலக்கண வழு இல்லாமலும் இலக்கிய மரபு குன்றாமலும் மிகவும் எச்சரிக்கையுடனும், நிதானத்துடனும் அச்சிட முனைவாராம்'[4] என்னும் ம.சு.சம்பந்தன் அவர்களின் கூற்றும் ஈண்டு சுட்டிக்காட்டத் தக்கது.

## நூல் அமைப்பு

எந்தவொரு நூல் பதிப்பிற்கும் நூலமைப்பு மிக முக்கியமானதாகும். நாவலர்தம் நூற்பதிப்பு தலைப்புப் பக்கம், உள்ளுறை, இணைப்பு, பக்க அமைப்பு, கட்டமைப்பு என்னும் நிலைகளில் நோக்கப் பெறுகின்றது.

தலைப்புப்பக்கத்தில் நூலின் தலைப்பு, நூலாசிரியர், பதிப்பிக்கத் தூண்டியவர், பதிப்பாசிரியர், வெளியீட்டாளர், அச்சகம், பதிப்பு பற்றிய விவரம், பதிப்பித்த காலம் (தமிழ் ஆண்டு, மாதம்) பதிப்புரிமை[5] போன்றவை குறிப்பிடப்பட்டுள்ளன. நூலின் தலைப்பு தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருப்பினும் பெரும்பாலும் நீண்ட தொடராகவே உள்ளது.

இதற்குச் சான்றாக,

'பெரியபுராணம் என்று வழங்குகிற திருத்தொண்டர் புராணம்'
'தமிழ் வேதமாகிய திருக்குறள் மூலமும் பரிமேலழகருரையும்'

என்பனவற்றைக் காணலாம். இவற்றிலிருந்து நூலின் தலைப்பு தெளிவாகவும் விளக்கமாகவும் இருக்க வேண்டுமென்பதில் நாவலர் மிகவும் கவனம் செலுத்தியுள்ளார் என்பது தெரிகிறது. சில பதிப்புகளில் நூலாசிரியர் பெயர் உரையாசிரியர் பெயர், அவர்தம் சிறப்புணர்த்தும் அடைமொழிகளோடு கொடுக்கப்பெற்றுள்ளது.

---

3. ஆறுமுக நாவலர் பிரபந்தத்திரட்டு - பக்.134

4. அச்சும் பதிப்பும் பக்.241.

5. நாவலர் பதிப்புகள் அனைத்தும் பதிப்புரிமை பெற்றது.

'தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் அருளிச்செய்தது'[6]
'வடநூற்கடலை நிலைகண்டுணர்ந்த சேனாவரையருரை'[7]

நூலைப் பதிப்பிக்கக் கட்டளையிட்டவர் அல்லது வேண்டுகோள் விடுத்தவர் பெயர் குறிப்பிடப் பெற்றுள்ளது.

'திருவாவடுதுறை ஆதீனத்துச்சுப்பிரமணிய சுவாமிகள் கட்டளைப்படி'[8] 'இராமநாதபுரம் சமஸ்தானம் ஸ்ரீ பொன்னுசாமித் தேவரவர்கள் வேண்டுகோளின்படி'[9]

இவற்றால் பதிப்பாசிரியரின் தலையாய கடமையாகிய நன்றியறிதல் திறன் வெளிப்படுகிறது எனலாம்.

பதிப்பாசிரியர் பெயரோடு பல்வேறு பிரதிகளை ஒப்புநோக்கிய நிலை, நூலில் செய்துள்ள முக்கிய மாற்றங்கள் என்பனவும் சுட்டப் பெற்றுள்ளன.

'ஆறுமுக நாவலரவர்களால் பல பிரதிருபங்களைக் கொண்டு பரிசோதித்தபடி'[10]
'ஆறுமுகநாவலரவர்கள் திருத்தியும், விளக்கியுங் கூட்டியும் புதுக்கியது'[11]

இவை நூலின் தரத்தைச் சுட்டுவனவாக அமைந்துள்ளன.

வெளியீட்டாளர், நூல் அச்சாகிய அச்சகத்தின் பெயர் தலைப்புப் பக்கத்தின் கீழ்த் தரப்பெற்றுள்ளன.

'சிதம்பர சைவப் பிரகாச வித்தியாசாலைத் தருமபரி பாலகர்களால் வெளியிடப்பெற்றது'[12].
'சென்னப் பட்டணம் வித்தியாநுபாலன யந்திர சாலையில் அச்சிற் பதிப்பிக்கப்பட்டது.[13]

நாவலர் பதிப்புகளில் பெரும்பான்மை நூல்கள் வித்தியாநுபாலன அச்சகத்தில் அச்சடிக்கப்பட்டனவாகத் தெரிகிறது.

---

6. திருக்குறள்.
7. தொல்காப்பியச் சொல்லதிகாரம்
8. இலக்கணக் கொத்து
9. திருக்குறள்.
10. தொல். சொல்லதிகாரம்
11. நன்னூற் காண்டிகையுரை
12. " 13. சேதுபுராணம்.

உள்ளுறை என்று நாம் இன்று வழங்குவது ‘சூசி பத்திரம்’ எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

> பெரியபுராணப் பதிப்பில் புராணம் பக்கம் என்ற அமைப்பிலும் ஒவ்வொரு சருக்கத்தின் உட்தலைப்பு பக்கம் என்ற அமைப்பிலும் உள்ளுறை அமைக்கப் பெற்றுள்ளது.'[14]

முகவுரை, சிறப்புப் பாயிரம், நூலாசிரியர் வரலாறு, நூல் பற்றிய சிறப்புச் செய்திகள் போன்றவை நூலின் முன்னும், சூத்திர முதற்குறிப்பகராதி, பிழைதிருத்தம் போன்றவை நூலின் பின்னும் இணைப்பாகத் தரப்பெற்றுள்ளன[15]. பிழைதிருத்தம் என்பது, திருத்தம் என்ற அமைப்பில் தரப்பெற்றுள்ளது.

பக்க அமைப்பு பார்ப்பதற்கு அழகாகவும், தெளிவாகவும், படிப்பதற்கு ஏதுவாகவும் உள்ளன. தக்க இடைவெளியிடுதல், பத்தி பத்தியாகச் செய்திகளை அமைத்தல், சில வரிகளை உள்ளடக்கி அமைத்தல், நூற்பா போன்றவற்றைப் பக்கத்தின் மத்தியில் அமைத்தல் என்பன பக்க அமைப்பில் சிறப்பாகக் குறிக்கத் தக்கனவாம்.

தரமான காகிதத்தில் பல்வேறு வடிவங்களில்[16] பகுதித் தையலுடனும் (*Section Stitching*), சிறந்த கட்டுமானத்துடனும் நூலின் கட்டமைப்பு அமைந்துள்ளது.

## அச்சுப்பணி

பதிப்புப் பணியில் அச்சுப்பணி சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. “நூலை எழுதுவது ஒருவகையான ஆற்றலேயாயினும் அதன் பிரதியை அச்சிற்குத் தருகின்ற வகையில் ஒழுங்குபடுத்துவது வேறொரு வகையான ஆற்றலாகும்”[17]. எந்தவொரு சிறந்த பதிப்பாக இருந்தாலும் அச்சுப்பணியைச் சரிவரக் கவனிக்கவில்லையாயின் நூலின் தரத்தையே அது குறைத்துவிடும். நாவலர்தம் பதிப்புகளில் அச்சுவேறுபாடு, அச்சுப்படி திருத்துதல் போன்றவற்றிற்குச் சிறப்பிடம் தந்துள்ளார். இயல்தலைப்பு, உள்தலைப்பு, நூற்பா, உரை, அடிக்குறிப்பு என இவை ஒவ்வொன்றிற்கும் வெவ்வேறு புள்ளிகளில் அச்சுகளைத் தருவதில் கவனம் செலுத்தியுள்ளார்.

---

14. திருமணச் சருக்கம் - திருமணச் சிறப்பு

15. பெரியபுராணப்பதிப்பு

16. கிரவுன் 1/8, திம்மி 1/8 போன்ற பல்வேறு வடிவம்

17. பதிப்புப் பார்வைகள் பக்.60

ஆறுமுக நாவலரவர்கள் பதிப்பித்த நூல்களில் அச்சுப்பிழைகள் இல்லை என்று எல்லோரும் பாராட்டுமளவுக்கு நூலைப் பதிப்பித்துள்ளார். இதிலிருந்து அச்சுப்படி திருத்துதலுக்கு எவ்வளவு முக்கியத்துவம் அளித்துள்ளார் என்பது புலனாகும். நாவலரவர்கள் எதையும் பிழையில்லாமல் செய்யவேண்டும் என்ற எண்ணமுடையவர். இதற்குத் தமிழ்ப் புலமை என்னும் கட்டுரையில் நாவலரவர்கள் கூறும் கீழ்வரும் கூற்று தக்க சான்றாகும்.

"தமிழ் கற்கப் புகுஞ் சைவ சமயிகள் முன்னர்ப் பாலபாடங்களைப் படித்துக் கொண்டு இலக்கணச் சுருக்கத்தைக் கற்றறிந்து இயன்ற அளவு பிழையில்லாமல் எழுதவும் பேசவும் பழகுக"[18].

எவ்வளவு கூர்ந்து கவனித்தபின்னும் கண்ணுக்குத் தப்பிய அச்சுப் பிழைகளை நூலின் இறுதியில் பிழைதிருத்தம் என்ற பகுதியில் சுட்டிக் காட்டி அப்பிழைகளைக் களைந்து விடுவார். பிழை மலிந்த எந்த நூலையும் கற்றவர் உலகம் ஏற்றுக் கொள்ளாது என்பதை நன்கு அறிந்தவர். அச்சுப் பணிகளைத் திறம்படச் செய்திட அவர் சொந்தமாக நிறுவிய வித்தியாநுபாலன அச்சகம் பெரிதும் துணைநின்றிருக்கும் என்பதில் ஐயமில்லை.

ஒப்பு நோக்கல்

பல்வேறு சுவடிகளை ஒப்புநோக்கி வேறுபாடுகளைக் குறித்து முழுமையாக்கும் பணியானது பதிப்புப் பணியில் மிக முக்கியமானதொன்றாகும்.

பல ஏடுகளை ஒப்பிட்டு நோக்கி அவற்றின் வம்சாவளியை ஊகித்து ஒழுங்குபடுத்தி அவற்றில் மூலத்தோடு பெரிதும் ஒத்த ஓர் ஏட்டைத் தேர்ந்தெடுத்துப் பதிப்பித்தல் அல்லது பல ஏடுகளையும் ஒப்பிட்டுப் பிழைகளைந்து சரியான பாடத்தை நிறுவுதல் என்ற இடர்ப்பாடு மிகுந்த பணிநூலைப் பதிப்பித்தற்கு முன்னோடியாக அமையும் பணி[19]

என்பார் டாக்டர் காசி இராசன். நாவலரவர்கள் எந்தப் பதிப்புப் பணியை மேற்கொண்டாலும் பல்வேறு பிரதிகளை ஒப்புநோக்கியே பின்னரே அச்சிடுவார் என்பது ஈண்டு குறிக்கத்தக்கது.

பிரதிகளின் ஆதாரமில்லாமல் தாமாக ஒன்றையும் இவர் திருத்துவதில்லை என்பது முக்கியமானது'

---

18. பிரபந்தத்திரட்டு பக்.28

19. காப்பியப்பதிப்புகள். பக்.3.

இவர் பதிப்பித்த நூல்களில் தலைப்புப் பக்கத்தில் 'யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுகநாவலரவர்களால் பல பிரதிருபங்களைக் கொண்டு பரிசோதித்து அச்சிற் பதிப்பிக்கப்பட்டது' என்னும் குறிப்பைக் காணலாம். ஆனால் எந்தெந்தப் பிரதிகளை ஒப்புநோக்கினார் என்று அவர் எவ்விடத்தும் தெரிவிக்கவில்லை.

பதிப்புரை

நாவலரவர்கள் மேற்கொண்ட எந்த நூற்பதிப்பிலும் பதிப்புரை தந்ததாகத் தெரியவில்லை. எனவே இவர்தம் பதிப்பு முறைகள், பதிப்புக்கொள்கை, முந்தைய பதிப்புகள் பற்றிய விவரம், பதிப்பில் செய்துள்ள மாற்றம் ஆகிய எதையும் இவர் கூற்றாக அறிய இயலவில்லை.

முகவுரை

பதிப்புப் பணியில் முகவுரை எழுதுவது இன்றியமையாதது எனலாம். இது, நூல் பற்றிய கருத்துகளை அறிமுக நிலையில் அறிந்துகொள்ள மிகவும் துணை செய்யும்.

> 'டாக்டர் உ.வே.சா.காலத்துப் பதிப்பாசிரியர் சிலர் முகவுரை எழுதுவதில்லை. யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலரை இவ்வகையில் குறிப்பிடலாம்'

என்பார் டாக்டர் இரா. காசிராசன். ஆயினும் பெரியபுராணம், கந்தபுராணம் போன்ற நூற்பதிப்புகளில் இவர் முகவுரை வரைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. நூலின் முகவுரையில் நூலைப் பற்றிய செய்திகளைக் கூறுகிறார். பதிப்பு பற்றிய சில விவரங்களை ஈண்டுக்குறிப்பதுமுண்டு.

பெரியபுராணப்பதிப்பு முகவுரையில் சைவர் யார்? ஓதி உணர்தற்குரிய நூல்கள், பெரியபுராணத்தின் சிறப்பு போன்றவற்றைக் குறிப்பிடுகிறார். இறுதியாகச் சந்தி விகாரங்களின்றி அச்சிற் பதிப்பித்ததைப் பற்றி நாவலரவர்கள் கூறுவதைக் கீழே காணலாம்.

> ''நிறைந்த கல்வியுடைய வித்வான்களும் குறைந்த கல்வியுடைய பிறரும் ஆகிய யாவரும் எக்காலத்தும் எளிதில் வாசித்து உணரும் பொருட்டும் கல்வியில்லாத ஆடவர்களும் பெண்களும் பிறரைக் கொண்டு வாசிப்பித்து உணரும் பொருட்டும் .............
> பெரும்பான்மையும் இயற்சொற்களும் சிறுபான்மை ஆவசியமாகிய திரிசொற்களும் வடசொற்களும் பிரயோகிக்கப்படும் கத்திய ரூபமாகச் செய்து வாசிப்பவர்களுக்கு எளிதில் பொருள்விளங்கும்படி பெரும்பான்மையும் சந்தி விகாரங்களின்றி அச்சிற் பதிப்பித்தேன்''[20]

---

20. பெரியபுராணம் - முகவுரை

கந்தபுராண முகவுரையில் வசன நடையில் பதிப்பித்தது குறித்துக் கூறுவதையும் காணலாம்.

> "நம்முடைய சைவ சமய நூல்களை எல்லாருக்கும் எளிதின் உபயோகமாகும் பொருட்டு வெளிப்படையாகிய வசன நடையிற் செய்து அச்சிற்பதிப்பித்து வெளிப்படுத்தின் அது பெரும்புண்ணியமாகும் என்று துணிந்து சில வருடத்துக்கு முன்னே பெரிய புராணத்தை அப்படியே செய்தேன். அது அநேகருக்குப் பெரும்பயன் விளைத்ததைக் கண்டறிந்தமையால் கந்தபுராணத்தையும் அப்படியே செய்தேன்"[21]

ஆகவே பதிப்புரையில் கூறவேண்டிய கருத்துகளை முகவுரையில் தருவதால் இவர் பதிப்புரை தராது விடுவித்திருக்கலாம்.

## அடிக்குறிப்புகள்

நாவலரவர்கள் தம் பதிப்பில் தாம் கூறவிரும்பிய கருத்துகளை அடிக் குறிப்பாகத் தந்துள்ளார். திருக்குறள் பதிப்பில் 260 அடிக்குறிப்புகளும் ஏனையவற்றில் மிகக் குறைந்த எண்ணிக்கையில் அடிக்குறிப்புகளும் உள்ளன. அவற்றில் சிலவற்றைக் கீழே காணலாம்.

| | (அடிக்குறிப்புகள்) |
|---|---|
| சூடாமணி நிகண்டு- | 9 |
| பெரியபுராணம்- | 4 |
| கந்தபுராணம்- | 6 |
| சேதுபுராணம்- | 36 |
| தொல்.சொல்.சேனா- | 11 |
| இலக்கணக்கொத்து- | 3 |
| தொல்முதற்சூத்திரவிருத்தி- | 1 |

அடிக்குறிப்புகளைச் சுட்டுவதற்குக் கீழ்க்கண்ட குறியீடுகளையே பயன்படுத்தியுள்ளார்.

✹ ≠ ʆ + ⊙ எ = □

நாவலரவர்கள் காட்டும் அடிக்குறிப்புகள் பல்வேறு கோணங்களில் பகுப்பாய்வு செய்ய இடம் தந்து நிற்கின்றன. அருஞ்சொற்பொருள் தரல், விளக்கம் அளித்தல், இடப்பெயர்களைச் சுட்டல், பிற பிரதிகளில் இல்லாதவற்றைச் சுட்டல், பிறநூல் சுட்டல்,

---

21. கந்தபுராணம் முகவுரை

மேற்கோள் பாடல்களின் நூற்பெயர் சுட்டல், இலக்கணக்குறிப்பு தரல், வடமொழிக்கருத்துரைத்தல், சிறப்புப் பெயர் காட்டல், புராணக் கதைக் கூறுகளைக் காட்டல், மேற்கோள் தொடரை முழுமை செய்தல், பாடவேறுபாடு காட்டல் என்பன குறிப்படத்தக்கவை.

## அ. அருஞ்சொற்பொருள் தரல்

அரிய சொற்களுக்கு அடிக்குறிப்பில் பொருள் தருவதைப் பதிப்பு நெறியாகக் கொண்டுள்ளார். மூலத்தை மட்டும் பதிப்பித்துள்ள நூல்களில் இத்தகைய அடிக்குறிப்புகள் அதிகமாகவும், உரையுடன் கூடிய பதிப்புகளில் அருகியும் காணப்படுகின்றன.

இலச்சினை - முத்திரை[22]
பரிவருத்தனம் - பண்டமாற்றம்[23]

## ஆ. விளக்கம் அளித்தல்

சொற்களுக்குத் தொடர்நிலையில் உரை தந்து உரையில் பயின்ற சொற்களுக்கு விளக்கம் தருவதையும், சொற்களைப் பிரித்துப் பொருள் தந்து மேலும் விளக்கம் கொடுப்பதையும் நெறியாகவும் கொண்டுள்ளார். சான்றாக, 'ஓரிட மேவல்'[24] என்னும் சொல்லுக்கு இருவகையான சமவாயமுஞ் சையோகமுமாம் என உரைதந்து அதில் பயின்றுள்ள சமவாயம், சையோகம் என்னும் இரண்டு சொற்களுக்கும் முறையே ஒற்றுமை, கூட்டம் என்று விளக்கமளிக்கின்றார்.

இதே போன்று பஞ்சவடி[25] என்னும் சொல்லுக்கு மயிரினாலே அகலமாகச் செய்யப்பட்டு மார்பிலே பூணூலாகத் தரிக்கப்படும் வடமாம் எனப் பொருள் விளக்கம் தந்து மேற்படி சொல்லைப் பஞ்சம், வடி என இரண்டாகப் பிரித்து முறையே விரிவு, வடம் என்று விளக்கமளிக்கின்றார்.

## இ. இடப்பெயர்களைச் சுட்டல்

இலக்கியங்களில் இடம்பெற்ற இடப்பெயர்கள் தற்பொழுது என்ன பெயரில் வழங்கி வருகின்றன என்பதையும் அடிக்குறிப்பில் சுட்டுகின்றார்.

22. பெரியபுராணம் பக்.132

23. சேது புராணம் பக்.11

24. இலக்கணக் கொத்து பக்.50

25. பெரிய புராணம் பக்.102

இலாடர் தம் விடயம் - இலாட தேசம்[26]
வாட்போக்கி - இரத்தினகிரி[27]
குடமுக்கு - கும்பகோணம்[28]

என்பன போன்று இடவியல் விளக்கமளிப்பதும் குறிப்படத் தக்கது.

### ஈ. தொகை விளக்கம் தரல்

பழம் பதிப்பாசிரியர்கள் தொகை விளக்கம் அளிப்பதற்குச் சிறப்பிடம் தருவர். இவை பதிப்பாசிரியரின் பரந்துபட்ட அறிவைப் புலப்படுத்தும். இவ்வடிப்படையில் நாவலர் பெருமானும் தொகை விளக்கம் தரும் நெறியை அடிக்குறிப்பில் கையாண்டுள்ளார்.

சான்றாக, 'இராசதானிகள் ஐந்து[29] என்பதற்குச் சோழராஜாக்களுக்குரிய ராஜதானிகள் ஐந்தாவன காவிரிப்பூம்பட்டினம், கருவூர், திருவாரூர், உறையூர், திருச்சேய் நாலூர் என்பவைகளாம்' எனக் குறிப்பிடுகின்றார்.

ஆறுதிருமுகம்[30] என்பதற்கு ஐந்து முகத்தோடு அதோ முகமொன்று கூட்டி ஆறுமுகமாகக் கொள்க என விளக்கமளிக்கின்றார்.

### உ. பிற பிரதிகளில் இல்லாதவற்றைச் சுட்டல்

பல்வேறு பிரதிகளை ஒப்புநோக்குகின்ற சூழலில் பிற பிரதிகளில் இல்லாத பாடல்களை இவை இவை இல்லையென்று அடிக்குறிப்பில் சுட்டும் நெறிமுறையைக் கொண்டுள்ளார்.

சாக்கியநாயனார் புராணத்தில் "இந்நியதி பரிவோடும், கல்லாலே யெறிந்துதவு........" எனத் தொடங்கும் செய்யுள்கள் சில பிரதிகளில் இல்லை[31] என்றும், திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் புராணத்தில் "திருச்சின்னம் பணிமாற........" எனத் தொடங்கும் செய்யுள் சில பிரதிகளில் இல்லை[32] என்றும் குறிப்பிடுவார்.

---

26. சேதுபுராணம் பக்.180

27 " 28 பெரிய புராணம் பக்.20

29. பெரிய புராணம் பக்.4

30. கந்த புராணம் பக்.41

31. பெரிய புராணம் பக்.48

32. பெரிய புராணம் பக்.365

ஊ. பிறநூல் மேற்கோள் காட்டல்

இவ்வமைப்பு கற்போர் மேலும் விளக்கம் பெறவும் கல்விக்குத் தூண்டு கோலாகவும் அமையும்.

மக்கட் சுட்டு: 'மக்கட் சுட்டென்பது அன்மொழித் தொகையன்றெனவும் இருபெயரொட்டாகுபெயரெனவும் சிவஞான முனிவர் கூறினார். தொல்காப்பியச் சூத்திர விருத்தியிற் காண்க'[33]

வெறு முயற்சி: 'நல்வினை தீவினை யிரண்டிலும் படா முயற்சி' இலக்கணக் கொத்து வினையியல் பதினேழாஞ் சூத்திரவுரையிற் காண்க'.

எ. 1) மேற்கோள் பாடல்களின் நூற்பெயர் முதலானவை சுட்டல்

மேற்கோள் பாடல்கள் இடம் பெற்ற நூல், அதிகாரம், பாடல் எண் முதலானவற்றை அடிக்குறிப்பில் தருகின்ற நெறிமுறையையும் இவர் கையாண்டுள்ளார்.

உறற்பால-தீண்டாவிடுதலரிது[34] என்ற மேற்கோள் பாடல் அடிக்கு அடிக்குறிப்பாக

நாலடியார் பழவினை என்றும், நீரிற் பலகான் மூழ்கல்[35] என்ற மேற்கோள் பாடல் அடிக்கு அடிக்குறிப்பாக வெண்பாமாலை வாகைப்படலம் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

எ. 2) மேற்கோள் தொடரை முழுமை செய்தல்

உரைகளில் எடுத்தாளப்படும் மேற்கோள் பாடல்களின் தொடருக்குரிய முழுமையான பாடலை அடிக்குறிப்பில் தருகின்ற நெறிமுறையை நாவலர் தம் பதிப்புகளில் கையாண்டுள்ளார். 'நீர்பலகால் மூழ்கல்' என்னும் மேற்கோள் தொடருக்குக் கீழ்க் காணும் பாடல் முழுமையும் தந்துள்ளமை தக்க சான்றாகும்.

'நீர்பலகான் முழ்கி நிலத்தசைஇத் தோலுடையாச்
சோர்சடை தாழச் சுடரோம்பி-யூரடையார்
கானகத்த கொண்டுகட வுள்விரும் தோம்பல்
வானகத் துய்க்கும் வழி'[36]

---

33. தொல். சொல்லதிகாரம் பக்.3

34. திருக்குறள் பக்.11

35 36. திருக்குறள் பக்.11

ஏ. இலக்கணக் குறிப்பு தரல்

உரையாசிரியர் மரபில் நின்று சில இடங்களில் இவர் இலக்கணக் குறிப்பு தருதலும் உண்டு.

உவர்த்து - குறிப்பு வினைமுற்று[37]
சேய்நாலூர் - சேய் ஞாலூர் எனப் போலியாயிற்று[38]

என்பன மேற்கருத்திற்குச் சான்றாகும்.

ஐ. வடமொழி கருத்துரைத்தல்

மூலநூல் அல்லது உரை நூல்களில் வரும் சொல்லுக்கு வடமொழிச் சொல் தருதல், வடமொழி இலக்கணக் கருத்துரைத்தல் போன்ற நெறிமுறைகளையும் கையாணடுள்ளார். இவை நாவலர் பெருமானின் வடமொழி இலக்கணப்புலமையைத் தெளிவாகக் காட்டுகின்றன. இவற்றிற்குப் பின்வருவன சான்றாகும்.

தன்வயத்தனாதல் - சுவதந்திரத்துவம்[39]
தூயவுடம்பினனாதல் - விசுத்த தேகம்[40]

அவாய் நிலை: ஒரு சொல் மற்றொரு சொல்லை வருவித்து முடிப்பதனை வடநூலார் அத்தியாகாரமென்பர்.[41]

உடம்பொடு புணர்த்தல்: உடம்பொடு புணர்த்தல் என்பது ஓர் உத்தி. இதனை வடநூலார் நிபாத மென்பார்.[42]

ஒ. சிறப்புப்பெயர் காட்டல்

இலக்கியங்களில் இடம்பெறும் சிறப்புப் பெயர்களை அடிக்குறிப்பில் தருவதுமுண்டு. அப்படித் தரும்பொழுது பெரும்பாலும் வடசொல் மிகுந்து அவற்றிற்குரிய விளக்கத்தைத் தருதலைக் காணலாம்.

தூல சென்னியன் - தூலசிரன்[43]

---

37.சேது புராணம் பக்.208

38. கந்த புராணம் பக்.83

39 ° 40 திருக்குறள் பக்.5

41.திருக்குறள் பக்.7

42.திருக்குறள் பக்.11

43.சேதுபுராணம் பக்.42

ஊன் விருப்பினான் - ருத்திராஷன்[44]
வயிரதந்தன் - வச்சிர தமிஷ்டிரன்[45]

ஒ. புராணக் கதைக் கூறுகளைக் காட்டல்

சமயச் சார்புடைய புராணக் கதைக்கூறுகளையும் நாவலர்தம் பதிப்புகளில் காட்டுவதைக் காணலாம். இதனைப் பின்வரும் பகுதி காட்டும்.

வானோர் தலைவன்

திரிமூர்த்தி பரன் சிவபிரானேயாக ஈண்டு விட்டுணுவைக்கூறியது என்னை யெனின் அநிருத்தன் முதலிய மூவர்க்கும் அதிபதி என்பதே இதன் கருத்தென்க. சிவனுக்கு உருத்திர விட்டுணு பிரமர் போல அவர்களுக்கும் அழித்தல், காத்தல், படைத்தல்களில் அதிகாரம் பெற்ற வியூரகர்கள் உண்டென்று வாயுசங்கிதை முதலியவற்றிற் கூறப்பட்டது. பிரமாவுக்கு விராட்டு, காலன், புருஷன் என்று மூவரும் விட்டுணுவுக்குச் சங்கரிடணன், பிர்த்தியும்நன், அநிருத்தன் என்னும் மூவரும் உருத்திரனுக்கு அரன், மிருடன், பவன் என்னும்மூவரும் வியூரகர்களென்றறிக

ஔ. பாடவேறுபாடு காட்டல்

ஆறுமுக நாவலர் தாம் பதிப்பித்த நூல்களுள் சூடாமணி நிகண்டு, திருவிளையாடற் புராணம் ஆகிய இரண்டு நூல்களுக்கே பாடவேறுபாடுகள் தந்துள்ளார். சூடாமணி நிகண்டுப் பதிப்பில் 9 பாடங்களையும், திருவிளையாடற் புராணப் பதிப்பில் 30 பாடங்களையும் நாவலரவர்கள் குறிப்பிட்டுள்ளார். பாடவேறுபாடு, சுவடி வேறுபாடு, பிரதிபேதம் என்று அவற்றைக் குறிப்பிடவில்லை. பாடம் என்றே அடிக்குறிப்பில் தந்துள்ளார். பல்வேறு பிரதிகளைப் பரிசோதித்து வெளியிடுவதாகக் குறிக்கப் பட்டிருப்பதிலிருந்து பாடவேறுபாடுகள் இருந்திருக்கும் என்பதில் ஐயமில்லை. இருப்பினும் அவற்றைத் தராது விடுத்திருப்பதற்கு இரண்டு காரணங்களைக் கூறலாம். பாட வேறுபாடுகளைக் காட்டுவதற்கு இன்றியமையாமை தரவில்லை என்பதொன்று. பதிப்பாசிரியர் எந்தப்பொருள் ஏற்றதென்று துணிந்தாரோ அந்தப்பாடமே அவருக்குச் சிறப்புடைத்து என்று கருதிய காலச்சூழல் மற்றொன்று. நாவலரவர்கள் கொண்ட பாடங்களை

44. சேதுபுராணம் பக்.73

45. சேதுபுராணம் பக்.238

இனங்காண வேண்டுமாயின் அவர் பதிப்போடு பிற பதிப்புகளை ஒப்புநோக்கவேண்டும். அத்தகு முயற்சியினாலே அவரது மூலபாடத் திறனாய்வை ஒருவாறு ஊகிக்கலாம். கீழ்க்கண்டவை அவர் காட்டும் பாடங்களில் சிலவாம்.

'ஆவரிப் பிறவி தன்னிலவர் கதிக்கரையைச் சார்வர்'
கதிக்கரசராவர்'[46]

குவித்துள மெய்மொழி- கர்ணங் குணமூன்று
மொன்றித்தன் கொடிய பாவம் - கொடிய பாசம்.[47]
ஆசாவிகாரமய மாயினேனைப் பொருட்படுத்தி
'மலமாயினேனான'[48]

ஈகை பொன்குடை யீங்கை - இண்டை[49]
உறழ்வென்ப் புணர்வு காலஞ்செறிவிடை
யீடொப்பைம்பேர்-உணர்வு[50]

தனிச்சிறப்பு

நாவலர் பதிப்பு நெறிமுறைகளில் கீழ்க்கண்டவை அவற்றின் சிறப்பு கருதிச் சிந்திக்கப் பெறுகின்றது. எண் தரல், சந்தி விகாரம், நிறுத்தக்குறியீடுகள், சொற்களைப் பிரித்தல், உள் தலைப்பு தரல், விளக்கமளித்தல் போன்றவை குறிப்படத்தக்கவை. இதே போன்று நாவலர் பதிப்புகளில் நன்னூல், திருக்குறள் இவற்றின் தனித்தன்மைகளும் ஈண்டு பேசப்படுகின்றன.

நூற்பா போன்றவற்றிற்கு எண் தரல் பொது இயல்பே. இருப்பினும் நாவலர் எண் தருவதில் முக்கிய கவனம் செலுத்தியுள்ளமை குறிக்கத் தக்கது. குறிப்பாக எடுத்துக் காட்டுகளுக்கு எண் தரல், நிகண்டுப் பதிப்பில் எண் தரும் முறை குறிப்பிடத்தக்கவை.

சூடாமணி நிகண்டுப் பதிப்பில் ஒரு சொல்லுக்கு எத்தனை பொருள் உள்ளனவோ அதற்குரிய எண்ணையும் தந்துள்ளனர். சான்றாக,

---

46.திருவிளையாடற் புராணம் பக்.46

47. திருவிளையாடற் புராணம் பக்.46

48. திருவிளையாடற் புராணம் பக்.294

49.சூடாமணி நிகண்டு பக்.74

50. சூடாமணி நிகண்டு பக்.74

'பகவனென்பது - சிவன், திருமால், பிரமன், அருகன், புத்தன் 5'

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதில் பகவனென்ற சொல்லுக்கு ஐந்து பொருள்கள் உள்ளன என்பதை எளிதில் இனங்காண முடிகிறது.

நாவலர் எல்லா இடங்களிலும் தமிழ் எண்களையே தருகின்றார். எண்கள் தமிழ் முறைப்படி இல்லாமல் ஆங்கில முறைப்படி உள்ளது.[51] நாவலரவர்கள் எண் தரும் பாங்கினைக் கீழ்க்கண்டவாறு பகுக்கலாம்.

1. நூற்பாவின் தொடக்கத்தில் (இடப்பக்கம்) எண் தருதல்
2. நூற்பாவின் இறுதியில் (வலப்பக்கம்) எண் தருதல்
3. தலைப்புக்கு எண் தருதல்
    உள் தலைப்புக்கு எண் தருதல்
    இயல் தலைப்புக்கு எண் தருதல்
4. தொகை வருமிடங்களில் எண் தருதல்
5. எடுத்துக்காட்டுக்கு வரிசை எண் தருதல்

## சந்தி விகாரம்

கற்றவர்களும் மற்றவர்களும் எளிதாக வாசிக்கும் பொருட்டுச் சொற்களை ஏற்ற முறையில் பிரித்தும் சந்தி விகாரங்களின்றியும் அச்சிற் பதிப்பித்துள்ளார். இது குறித்து நாவலரவர்களே பெரிய புராணம் ம்கவுரையில் குறிப்பிட்டுள்ளார்.

## நிறுத்தக்குறியீடுகள்

ஆங்கில முறையைப் பின்பற்றி இடம் நோக்கி நிறுத்தக் குறியீடுகளை நாவலர் தம் பதிப்புகளில் பயன்படுத்தியுள்ளார்[52]. தமிழில் நிறுத்தக்குறியீடுகளை இடமறிந்து முதன்முதலில் பயன்படுத்தியவர் இவரே என்று சொல்லப்படுகிறது.

## உள்தலைப்பு தருதல்

எந்தவொரு கருத்தையும் ஒரு தலைப்பின் கீழ்க் கொண்டு வருவது இவரது பதிப்பின் சிறப்பம்சமாகக் கருதலாம். நூற்பா, தொகுப்புரைகள் போன்றவற்றிற்குக் குறிப்பாகத் தலைப்பு

---

51. (உளஎ) - உ0எ (ளயஅ) - கக அ (ளய) - கக0

52. அச்சும் பதிப்பும் பக்.241.

தந்துள்ளார். நூற்பாவிற்குத் தலைப்பு தரும்போது அவற்றை அடைப்புக் குறிக்குள் தந்து பதிப்பாசிரியரால் இவை தரப்பெற்றவை என இனங்காட்டுவார்.[53] இதைப்பதிப்புப்பணியின் அறமாகக் கூறலாம். பெரிய புராணப் பதிப்பில் காணப்படும் சூசனம் தலைப்புடன் தரப்பெற்றுள்ளது. தலைப்புகள் நறுக்குத் தெறித்தாற் போல் உள்ளது.

எடுத்துக் காட்டாகத் தில்லைவாழந்தணர் புராணத்தின் சூசனத்திற்குத் தரப்பெற்ற தலைப்புகள்

1. சிதம்பரத்தினது மகிமை
2. தில்லைவாழந்தணவர்களது மகிமை
3. வேதவுணர்ச்சி
4. சைவாகம வுணர்ச்சி

## நன்னூல், திருக்குறள் பதிப்புகள்

இவ்விரு நூல் பதிப்புகளிலும் சில தனித்தன்மைகளைக் காணலாம். நன்னூல் காண்டிகைஉரைப்பதிப்பில் ஒவ்வொரு நூற்பாவுக்கும் தலைப்புகள் கொடுத்துள்ளார். தலைப்புகள் ஒரு சொல்லில் அமையாமல் தொடர்நிலையில் தெளிவாக உள்ளன. எடுத்துக் காட்டாக,

'உரையினது பொதுவிலக்கணம் காண்டிகையுரை இன்னதென்பது
நூலென்னும் பெயர்க்காரணம்!

என்பனவற்றைக் கூறலாம். தலைப்பு பதிப்பாசிரியரால் கொடுக்கப்பட்டது என்பதை இனங்காணப் பகர அடைப்புக்குறிக்குள் கொடுக்கப்பட்டுள்ளன. இதைப் பதிப்புப் பணியின் அறமாகக் கூறலாம். மேற்படி தலைப்புகளைத் தொகுத்து அகர வரிசைப்படுத்தினால் அதுவே சிறந்த பொருளடைவு அகராதியாக இருக்கும் எனலாம். ஒவ்வொரு பாடப்பகுதி முடிந்ததும் பரிட்சை வினாக்கள் தரப்பட்டுள்ளன. இவை தற்கால கல்வியியல் முறையில் திட்டமிட்டுக் கற்றல் என்னும் கொள்கைக்கு ஏற்புடையதாய் உள்ளது. இதே போன்று நூலின் இறுதியில் 60 அப்பியாசங்களை (பயிற்சிகள்) அமைத்துள்ளார். நாவலர் பதிப்பின் தனித்தன்மையாக இதனைக்கூறலாம். இலக்கணவமைதி, பகுபத முடிபு, சொல்லிலக்கண சூசி, உபாத்தியாயருக்கு அறிவித்தல், மாணாக்கர்களுக்கு அறிவித்தல் போன்றவற்றை நூலின் பின் இணைப்பில் அமைத்துள்ளமை சிறப்பாகக் குறிப்பிடத் தக்கதாகும்.

---

53. நன்னூற் காண்டிகைப் பதிப்பு காண்க

நாவலரின் திருக்குறள் பதிப்பும் சிறப்பாகக் கூறத்தக்கது. இப்பதிப்பிற்குத் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம்பிள்ளை, தியாகராசச் செட்டியார், தெய்வநாயகம் பிள்ளை, சுப்புராயச் செட்டியார் போன்றோர் சிறப்புப் பாயிரம் நல்கியுள்ளனர். சிறப்புப் பாயிரத்தில் நூல், நூலாசிரியர், பதிப்பாசிரியர் பெருமைகள் பேசப்படுகின்றன.

> 'பதிப்பாசிரியர் நூலாசிரியர் மீது மேலாதிக்கம் செலுத்துபவரல்லர் நூலாசிரியருக்கு உதவி செய்பவரே'[54]

என்னும் கோட்பாட்டை வலியுறுத்துமளவுக்கு இப்பதிப்பில் பதிப்பாசிரியர் பணி அமைந்துள்ளது. அவர் காட்டியுள்ள அடிக்குறிப்புகளே இதற்குத் தக்க சான்று பகரும். தொகை விளக்கம் அளித்தல், மேற்கோள் பாடல் இடம் பெற்ற நூல், அதிகாரம், பாடல் எண் போன்றவற்றைத் தரல்; வடமொழித் தொடர் தரல், வடமொழிக் கருத்துரைத்தல், வரலாற்றுக் குறிப்பு தரல், அருஞ்சொற்பொருள் தரல், சைவ சித்தாந்தக் கருத்தும் புராண வரலாறும் தரல், இலக்கண விளக்கமளித்தல் போன்றவை இப்பதிப்பில் பகுப்பாய்வுக்கு இடம் தந்து நிற்கும் அடிக்குறிப்புகளாகும். இத்தகைய அடிக்குறிப்புகள் பதிப்பாசிரியரின் பரந்துபட்ட அறிவையும், இலக்கணப் புலமையையும், வடமொழி அறிவையும் தெளிவுறக் காட்டுகிறதெனில் அது மிகையாகாது. நூலின் இறுதியில் திருவள்ளுவ மாலை கொடுக்கப்பட்டுள்ளது. அதில் இடம் பெற்றுள்ள ஒவ்வொரு பாடலுக்கும் பாடியவர் பெயரைத் தலைப்பாகக் கொடுத்து அப்பாடல்களுக்கு உரையும் வரைந்து பதிப்பித்துள்ளமை சுட்டிக்காட்டத் தக்கதாகும்.

### அகராதி அமைத்தல்

நூற்பா முதற் குறிப்பாகராதி போன்று பல்வேறு அகராதிகளின் இணைப்புகள் பதிப்பு நெறிமுறைகளில் ஒன்றாக இன்று கருதப்படுகிறது. அவ்வடிப்படையில் நாவலர் அவர்களும் புராண அகராதி[55], பாவியலதிகாரவகராதி[56], திருக்குறள் அகராதி[57], (செய்யுள் முதற்குறிப்பகராதி) சருக்க வகராதி[58] என்பனவற்றைத் தமது பதிப்புகளில் இணைத்துள்ளார்.

---

54.பதிப்புப் பார்வைகள் பக்.62

55. பெரியபுராணப் பதிப்பு

56 ° 57 திருக்குறள் பதிப்பு

58. சேதுபுராணப் பதிப்பு

அருஞ்சொற் பொருளாகராதி, நூற்பா சொல்லடைவு அகராதி, உதாரண மேற்கோள் அகராதி, உரைப்பொருளடைவு அகராதி போன்றவற்றின் முக்கியமின்மை கருதி அக்காலச் சூழவில் நாவலரவர்கள் தராது விடுத்திருக்கலாம்.

முடிவுரை

நாவலர்தம் பதிப்பு நெறிமுறைகள் அவரது பதிப்புகளுக்குச் சிறப்பு தருவனவாயும், படிப்பார்க்கு அவரது பரந்துபட்ட அறிவைக் காட்டுவனவாயும் அமைந்துள்ளன. நாவலர் பதிப்புகளை ஆய்வுப் பதிப்புகள் என்று கூறுவதைவிட விளக்கப்பதிப்புகள் என்று கூறுதற்கு அவர்தம் பதிப்பு நெறிமுறைகள் துணை புரிகின்றன.

## ஆறுமுக நாவலரவர்கள் பதிப்பித்த நூல்கள்

(அகர வரிசையில்)

1. அகத்தியர் அருளிய தேவாரத்திரட்டு
2. அன்னம் பட்டீயம்
3. இலக்கணக்கொத்து
4. இலக்கணச் சுருக்கம்
5. இலக்கண விளக்கச் சூறாவளி
6. இலக்கண வினாவிடை
7. இலங்கை பூமி சாஸ்திரம்
8. ஏரெழுபது
9. கந்தபுராண வசனம்
10. கந்தபுராணம் பகுதி 1-2
11. கொலை மறுத்தல்
12. கோயிற்புராணம் (புதிய உரை)
13. சிதம்பர மான்மியம்
14. சிவஞானபோதமும் வார்த்திகமென்னும்பொழிப்புரையும்
15. சிவஞான போதச் சிற்றுரை
16. சிவராத்திரி புராணம்
17. சிவசேத்திராலய மஹோத்ஸவ உண்மை விளக்கம்
18. சிவாலய தரிசன விதி
19. சுப்பிரமணிய போதகம்
20. சூடாமணி நிகண்டு மூ. உரை
21. சேதுபுராணம்
22. சைவ சமய நெறி
23. சைவ தூஷண பரிகாரம்

24. சைவ வினாவிடை
25. சௌந்தரிய லகரி உரை
26. ஞானக்கும்மி
27. தருக்க சங்கிரகம்
28. தருக்க சங்கிரக தீபிகை
29. தனிப்பாமாலை
30. தாயுமானவ சுவாமிகள் திருப்பாடல் திரட்டு
31. திருக்குறள் மூ.பரிமேலழகர் உரை
32. திருக்கை வழக்கம்
33. திருக்கோவையார் மூலம்
34. திருக்கோவையார் நச்.உரை
35. திருச்செந்தூர் நிரோட்டக யமக வந்தாதி
36. திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் புராணம்
37. திருத்தொண்டர்புராணம்
38. திருமுருகாற்றுப்படை
39. திருவாசகம் - மூலம்
40. திருவிளையாடற்புராணம் - மூலம்
41. திருவிளையாடற்புராணம் வசனம்
42. தெய்வயானையம்மை திருமணப்படலம்
43. தொல்காப்பியம் சூத்திர விருத்தி
44. தொல்காப்பியம் சொல். சேனா. உரை
45. நன்னூல் - காண்டிகை உரை
46. நன்னூல் - விருத்தியுரை
47. நீதிநூல்திரட்டு மூலமும் உரையும்
48. நைடத உரை
49. பதினோராந்திருமுறை
50. பாலபாடம் - 4 தொகுதிகள்
51. பிரபந்தத் திரட்டு
52. பிரயோக விவேகம்
53. புட்பவிதி
54. பெரியபுராணம் வசனம்
55. போலியருட்பா மறுப்பு
56. மார்க்கண்டேயர்
57. யாழ்ப்பாணச் சமயநிலை
58. வக்கிர தண்டம்
59. வாக்குண்டாம்
60. விநாயக கவசம்

# பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையின் பதிப்புமுறைகள்

மு. சண்முகம் பிள்ளை

## தமிழ்நூற்பதிப்பின் நிலை

*தமிழ்நூற்பதிப்பு வளர்ச்சியின் பல்வேறு படி நிலைகளையெல்லாம் தாம் பதிப்பித்த நூல்களில் கையாண்டு, பதிப்புத்துறைக்குக் கலங்கரை விளக்கமாகத் திகழ்ந்தவர் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை. 1946 ஆம் ஆண்டில் பேராசிரியர் வெளியிட்ட 'திராவிட மொழிகளில் ஆராய்ச்சி' என்னும் நூலில் அந்நாளில் தமிழ்நூற்பதிப்புகள் வெளிவந்த நிலையைப் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.*

"பொதுப்பட நமது பதிப்புகள் குறித்து ஒரு சில விஷயங்களைக் குறிப்பிட விரும்புகிறேன். மேலை நாட்டினர் ஆராய்ச்சிக் குறிப்புகளுடன் நூல்களைப் பதிப்பிப்பதோடு நம் பதிப்பாளர்களின் முயற்சியைச் சிறிதேனும் ஒப்பிடுவதற்கில்லை. ஓலைச்சுவடிகள் கிடைத்தபோதிலும் அவற்றைப் பயன்படுத்திக் கொள்வதில்லை. அவசியம் வேண்டும் முன்னுரையோ, செய்யுள் முதற்குறிப்பகராதி சொல்லகராதி, பொருளகராதி முதலியனவோ பல பதிப்புகளில் காணப்படமாட்டா. ஓலைச்சுவடிகளை ஒப்புநோக்குவதன் மூலம் கிடைக்கும் பாட பேதங்களையும் குறிப்பிடுவதில்லை. இவை பெருத்த குறைபாடுகள் ஆகும். ஆராய்ச்சிக் குறிப்புகளுடன் நூல்களைப் பதிப்பித்தல் வேண்டும். மொழி யாராய்ச்சிக்கும், நூல்களின் காலத்தை நிர்ணயிப்பதற்கும், இலக்கியத்துறையில் பல்வேறு காலங்களைத் துணிவதற்கும், அகராதி தயாரிப்பதற்கும் மற்றும் அடிப்படை விஷயங்களை அறிவதற்கும் இவை பயன்படும் என்பது மனம் கொள்ளத்தக்கது."

(திராவிட. பக். 62)

## சென்ற நூற்றாண்டு நிலைமை

இந்த நூற்றாண்டின் இடைப்பகுதி நிலை இதுவாயின் சென்ற நூற்றாண்டின் நிலை எப்படியிருந்திருக்கும்? எவ்வளவோ குறைபாடுடையதாகத்தான் இருந்தது. பழம் பதிப்பாசிரியர்களில் பெரும்பாலாரும் தமக்குக் கிடைத்த இரண்டொரு சுவடிகளை வைத்துக்கொண்டு நூல்களைப் பதிப்பித்தனர். அவர்கள் செய்வதெல்லாம் அச்சுவடிகளில் கண்ட

> 'கரலிகித வழுக்களைக் களைந்து திருத்தியும், புதுக்கியும், அச்சிட்டமைதான்.

பல பிரதிகளைத்தேடி ஒப்பிட்டுப் பதிப்பித்த பதிப்பு முன்னோடிகளில் முதற்கண் குறிப்பிடத்தக்கவர் ராவ் பகதூர் சி.வை. தாமோதரம் பிள்ளையாவர். தன்னந்தனியராய்ப் பண்டைத் தமிழ்ச்செல்வப் புதையலைத் தமிழ் மக்களுக்கு அகழ்ந்தெடுத்துதவும் பெருமுயற்சியை அவர் மேற்கொண்டார்.

தாமோதரம் பிள்ளையைப் போலவே அந்நாளில் உ.வே. சாமிநாதையரும் சிந்தாமணிப் பதிப்பு முயற்சியில் பல ஏடுகளைப் பரிசோதித்துப் போராடிக் கொண்டிருந்தார். இதனைக் கருத்திற் கொண்டே தாமோதரம் பிள்ளை ஓரிடத்து,

> "எனக்கு ஸ்ரீமத் சாமிநாதையரும் அவருக்கு நானுமே சாட்சி"

என்று குறிப்பிட்டிருக்கிறார்.

## பேராசிரியர் பெற்ற தெளிவு

பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை தமக்கு முன்னும் தம் காலத்தும் தமிழ் பதிப்பாசிரியர்களின் பதிப்புமுறைகளை எல்லாம் நன்கு உணர்ந்திருந்தார். மேனாட்டு நூற்பதிப்பு முறைகள் எந்தெந்த வகையில் வளர்ந்து வந்துள்ளன என்பதை நுணுகிக் கண்டார். எனவே எந்தெந்த நூல்களை எவ்வெவ்வகையில் பதிப்பிக்க வேண்டும் என்பதனைப் பேராசிரியர் நன்கு உணர்ந்திருந்தார். பேராசிரியர் பதிப்பித்துள்ள நூல்களை நோக்கின் அவருடைய பதிப்புமுறைகள் நன்கு தெரியவரும்.

## பேராசிரியரின் பதிப்புகள்: நிகண்டுகள்

பேராசிரியர் அகராதிப் பணியில் பெரிதும் ஈடுபட்டிருந்த காலத்தும் வெளிவராத நூல்களைச் சுவடிகளிலிருந்து பதிப்பிக்கும் பணியையும் மேற்கொண்டார். அகராதியோடு நெருங்கிய

தொடர்புடைய நிகண்டுகளை ஒன்றன் பின் ஒன்றாகப் பதிப்பிக்கவேண்டும் என்று திட்டமிட்டு உழைத்து வரலானார். 'தமிழகராதியின் ஆதார நூற்றொகுதி என்னும் வரிசையில் நாமதீப நிகண்டு, அரும்பொருள் விளக்க நிகண்டு, பொதிகை நிகண்டு, கயாதர நிகண்டு என்னும் நான்கு நூல்களை வெளியிட்டார். சொற்பொருள் விளக்கம் தரும் நிகண்டுகளை எம்முறையில் பதிப்பிக்கவேண்டும் என்பதற்கு இப்பதிப்புகள் எடுத்துக் காட்டாக விளங்குகின்றன.

## சிற்றிலக்கியம்

சிற்றிலக்கியங்கள் பலவற்றைத் தொடர்ந்து வெளியிட்டு வந்துள்ளார். இவ்வகையில் பதிப்பித்த நூல்கள் வருமாறு: அருள் முருகாற்றுப்படை, இராஜராஜ தேவர் உலா, குருகூர்ப் பள்ளு, கொடைல் விடு தூது, சாத்தூர் நொண்டி, திருக்குறுங்குடி அழகிய நம்பி உலா, திருப்பணி மாலைகள் (தென்திருப்பேரை, திருக்கோளூர்) தினகரவெண்பா, துகில்விடுதூது, தெய்வச்சிலையார் விறலிவிடு தூது, நெல் விடு தூது, பணவிடு தூது, பூகோள விலாசம், மதுரைக் கோவை, முப்பந்தொட்டியுலா, இராமப்பய்யன் அம்மானை, இரவிக் குட்டிப் பிள்ளைப் போர்.

இவற்றுள் பெரும்பாலன திரு. வி. க. நடத்திவந்த 'நவசக்தி' இதழில் 'நவசக்திமாலை' என்னும் தொடரில் வெளிவந்தன. செந்தமிழ்ப் பத்திரிகையிலும் திருக்குருகூர் திருஞான 'முத்திரைக்கோவை சார்பிலும் சிற்சில நூல்கள் வெளிவந்தன. தம் செலவிலும் சில நூல்களைப் பதிப்பித்தார்.

ஒவ்வொரு பிரபந்தம் பற்றிய செய்திகளை விளக்கும் முகவுரையுடன் பாட வேறுபாடுகளை அடிக்குறிப்பில் காட்டியுள்ளார். விளங்காத இடங்களில் தாம் சேர்த்துள்ள எழுத்துக்களை இருதலைப் பகரத்துள்[ ] அமைத்துள்ளார். நூற்பொருளகராதி, சொல்லகராதி முதலிய அகராதிகளையும் அவ்வந்நூலுக்கு ஏற்பச் சேர்த்துள்ளார்.

## இலக்கண நூல்கள்

இவர் வெளியிட்ட இலக்கண நூல்கள் களவியற் காரிகையும், தொல்காப்பியப் பொருளதிகார இளம்பூரணர் உரையும், நவநீதப் பாட்டியிலும் ஆகும். இவற்றுள் களவியற் காரிகை முதலும் முடிவுமில்லாத ஒரு குறைநூல். கிடைத்த அளவில் நோக்கியதில் இந்நூற் பகுதி மிகவும்

பயன்படக்கூடியதாயிருந்தது. கிலமான ஒரே பிரதியை வைத்துக்கொண்டு வெகு சிரமப்பட்டு ஒருவாறு செப்பஞ் செய்து பதிப்பித்தார். நூற்பெயரும் புலப்படா நிலையில் நூலின் அமைப்பைக் கொண்டு 'களவியற் காரிகை' என்னும் பெயரை இவரே படைத்துக் கொண்டார். இந்த நூலை அதற்குரிய பழைய உரையுடன் தந்ததோடு சூத்திரவகராதி, மேற்கோள் அகராதி, மேற்கோட் செய்யுட்களின் அகராதி, மேற்கோள் நூல்களைப் பற்றிய குறிப்பு ஆகியவற்றையும் சேர்த்திருப்பது காணலாம்.

நவநீதப் பாட்டியலைப் புத்துரையுடனும் பல்வேறு விளக்க அகராதிகளுடனும் தந்துள்ளார்.

தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் இளம்பூரணர் உரைப்பதிப்பு இவர்களால் முற்றுவிக்கப்பெற்றது. முதல் இரண்டு இயல்களின் உரைகளை வ.உ. சிதம்பரம் பிள்ளை வெளியிட்டுக் குறையாக நின்றதானு வ. உ. சியின் வேண்டுகோளை ஏற்றுப் பின் ஏழு இயல்களையும் பதிப்பித்து முற்றுவித்த பெருமை பேராசிரியர் வையாபுரிப்பிள்ளைவர்களையே சாரும். தமிழ்நாட்டில் கிடைத்த ஒரேயொரு ஏட்டின் துணையால் இந்தப் பதிப்பை எத்துணைச் சிரமமெடுத்து உருவாக்கியுள்ளார் என்பது அப்பதிப்பினை நோக்குவார்க்கு நன்கு புலனாகும்.

## புறத்திரட்டு

பேராசிரியர் சுவடியிலிருந்து பதிப்பித்த நூல்களுளெல்லாம் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது புறத்திரட்டு. இந்நூலில் சங்கச் செய்யுட்கள் முதலாகக் கம்பனின் இராமவதாரம் வரையிலுமுள்ள பற்பல நூற்பாடல்கள் இடம்பெற்றுள்ளன. பல பிரதிகளை ஒப்பு நோக்கி இதனை அவர்கள் பதிப்பித்துள்ள அருமைப்பாட்டினை அப் பதிப்பினை நோக்குவார் நன்கு உணர்வர். இத்திரட்டு நூலிலே நாரத சரிதை, சாந்தி புராணம், தகடூர் யாத்திரை, முத்தொள்ளாயிரம் முதலிய எத்தனையோ மறைந்துபோன நூல்களின் பாடல்கள் அமைந்திருக்கக் காணலாம். பாட வேறுபாடுகளை ஒவ்வொரு பக்கத்தும் அடிக்குறிப்பாகத் தந்துள்ளார். இந்நூலுக்கு அவர்கள் எழுதியுள்ள முகவுரை தமிழிலுள்ள தொகை நூல்களைப் பற்றிய வரலாறு ஆகும். அனுபந்தங்களாகத் தரப்பட்டுள்ள செய்யுள் முதற்குறிப்பு அகராதி முதலிய பல்வேறு அகராதிகளும் இப்பதிப்பின் சிறப்பிற்குக் கட்டியங் கூறுவனவாம்.

பலநூல்களின் மறுபதிப்பு

ஏற்கனவே வெளிவந்த நூல்களைப் பிரதிகளின் துணைக்கொண்டு மீண்டும் ஆராய்ந்து வெளியிட்ட பதிப்புகளும் பலவாம். அவர்கள் திருவனந்தபுரத்திலே வக்கீல் தொழில் புரிந்து வந்த காலத்தில் 1922 ஆம் ஆண்டு வெளியிட்ட பேராசிரியர் சுந்தரம் பிள்ளை இயற்றிய 'மனோன்மணீயம்' நூலின் மறுபதிப்பு அந்நூலுக்கு ஒரு புதுப்பொலிவினைத் தந்துள்ளது.

சென்னைப் பல்கலைக்கழகப் பணிகளின்போது வெளிவந்தவை. திருமுருகாற்றுப்படை, திருமந்திரம், தொல்காப்பியப் பொருளதிகாரம் - நச்சினார்க்கினியம், சங்க இலக்கியம், சீவகசிந்தாமணி, பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் திரிகடுகம், சிறுபஞ்சமூலம், நான்மணிக்கடிகை, இன்னாநாற்பது, இனியவை நாற்பது என்பனவாம்.

இவற்றுள் சங்க இலக்கியம் ஆசிரியர் அகரவரிசையில் அவரவர் பாடிய பாடல்களை எல்லாம் ஒருங்கு தொகுத்துத் தரும் பெரும் பதிப்பு. பாட்டு தொகைநூல்களை எல்லாம் ஒரு சேர உள்ளடக்கிய இப்பதிப்பு சங்கநூற் பயிற்சியாளர்களுக்குக் கிடைத்த ஓர் அரும்புதையலாகும். இந்நூலுக்கு விளக்கமாக அமைந்த பல்வேறு அகராதிகளும் அட்டவணைகளும் கற்பார்க்குக் கைவிளக்கமாய் முன்னிற்கின்றன.

சீவக சிந்தாமணிப் பதிப்புகளில் டாக்டர் ஐயரவர்கள் தம் காலத்துப் பதிப்பித்த பதிப்புகளில் பற்பல திருத்தங்களை மூலபாடத்திற் செய்து அவற்றைச் செப்பஞ் செய்து வந்துள்ளமையை அவர்தம் பதிப்புரைகளால் அறியலாகும். அந்நூலின் மேலும் திருத்தம் பெற வேண்டிய பகுதிகள் பலவாக இருந்தன. பேராசிரியர் தமக்குக் கிடைத்த ஏடுகளின் துணைக்கொண்டு திருந்திய மூலப்பதிப்பை வெளியிட்டார். சீர்முறையில் பாடல்கள் அச்சிடப்படாமலிருந்த குறையையும் இப்பதிப்பில் நிறைவு செய்துள்ளார். இதன் முகவுரையில்,

> "ஆராய்ச்சிக்கு முடிவில்லை. முயற்சி மிகுந்தோறும் பிரதிகளின் உதவி பல்குந்தோறும் திருத்தங்கள் ஏற்பட்டுக் கொண்டிருத்தல் இயல்புதான். தமிழ்க்கல்வி மேன்மேலும் பரவ வேண்டுமாயின் பிழைகளைப் பிழைஎன உணர்தல் வேண்டும். அவற்றைப் பொதிந்து வைத்தலைக் காட்டினும் தமிழன்னைக்குச் செய்யும் பெருந்தீங்கு ஒன்றும் இல்லை"

என்று ஓரிடத்தில் குறிப்பிட்டுள்ளார். ஆகவே, ஒரு நூலுக்கு மேலும் புதிய பிரதிகள் கிட்டுமாயின் அவற்றுடன் ஒப்பு நோக்கி ஆராய்தல் மிகவும் அவசியமாகும் என்பது அவர்கள் கருத்து.

## பிறருடன் சேர்ந்து பதிப்பித்தவை

தம் பதிப்புப் பணியில் ஏனையருடன் கலந்தும் அவர்தம் உதவியைப்பெற்றும் பதிப்பித்த நூல்களுள் 'திருமந்திரம்' சமாஜப்பதிப்பு முதலாவதாகக் குறிப்பிடத்தக்கது. பேராசிரியர் எஸ். அனவரத விநாயகம் பிள்ளையும், பெ. நா. அப்புஸ்வாமி ஐயரும் திருமந்திர ஏடுகளை ஒப்பு நோக்குவதில் உதவி புரிந்தனர். ஆய்வில் கண்ட பாட வேறுபாடுகளை இப்பதிப்பில் அடிக்குறிப்பில் தந்துள்ளார்.

திருமுருகாற்றுப் படைக்கு எளிய நடையில் உரையெழுதி சமாஜத்தின் வழி வெளியிட்டார். பாராயணமுஞ் செய்பவர்கள் சொற்களின் வடிவை உணரும்வண்ணம் அடைமொழி முதலியன விளங்க இப்பதிப்பில் பிரித்துத் தந்துள்ளமையும் குறிப்பிடத்தக்கது. இந்நூலுக்கு உரைகாணும்போது பெ. நா. அப்புஸ்வாமி ஐயரும் துணையாக இருந்தார்.

## கம்பராமாயணப் பதிப்பு

கம்பராமாயண ஆய்வில் பேராசிரியர் தாம் வக்கீல் தொழில்புரிந்து வந்த காலத்திலிருந்தே ஈடுபட்டு வந்துள்ளார். கம்பராமாயண முற்பதிப்புகள் பலவும் தொகுத்துவைத்து அவற்றின் போக்கினைக் கண்டது ஒருபுறம். இராமாயணச் சுவடிகள் பலவற்றைத் தேடித் தொகுத்தும் வைத்தார். ஏனைய பணிகளுக்கிடையில் இராமாயண ஆய்விலும் ஈடுபட்டு வந்தார். திருவாளர்கள் கா. நமச்சிவாய முதலியார், இலக்கணவிளக்க பரம்பரைச் சோமசுந்தரதேசிகர், மு. இராகவையங்கார், பெ. நா. அப்புஸ்வாமி ஐயர் ஆகியவர்களும் அவர்களுடைய கம்பராமாயணச் சுவடி ஆய்வுக்கு உதவியதுண்டு. இவர்களோடு நீண்ட காலமாக உடன் இருந்த உதவியவர் பெ. நா. அப்புஸ்வாமி ஐயரே. அவர், தாம் ஆய்ந்துகண்ட பாடவேறுபாடுகள், மிகைச் செய்யுட்கள், இடைச் செருகல் முதலியவற்றைக் காட்டிப் பாலகண்டத்தின் முதல் ஏழு படலங்களை 1937-ல் வெளியிட்டார். இப்பதிப்புக் குறித்து முன்னுரையில் அவர்கள் தெரிவித்த கருத்துக்கள் இந்நூற்பதிப்பில் அவர்கள் கொண்டிருந்த நோக்கத்தை வெளிப்படுத்தும்.

"இப்பதிப்பில் நூதன முறைகள் சில கையாளப்பட்டுள்ளன.

1. பால காண்டத்தின் ஆரம்பத்தில் நூற்குப் புறம்பாகக் காணப்படும் தனியன் முதலிய செய்யுட்கள் ஒருமுறை தழுவாது முன்பின்னாகப் பிரதிகளிற் காணப்பட்டன. அவற்றை ஒரு முறைப்படுத்து இப்பதிப்பில் தந்துள்ளமை காணலாம்.

2. படலச் செய்யுளின் எண் தொடக்கத்தில் தமிழிலும் நூற் செய்யுளின் தொடர்ந்த எண் செய்யுளின் இறுதியில் ஆங்கிலத்திலும் தரப்பட்டுள்ளன.

3. அடிக்குறிப்பில் இருதலைப் பகரக் குறியுள்[ ] காணப்படும் தமிழ் எண் படலச் செய்யுளின் எண்ணைக் குறிப்பது.

4. இத்தமிழ் எண்ணை அடுத்துள்ள ஒற்றையுடுக்குறி அச்செய்யுள் ஒன்றிரண்டு பிரதிகளிற் காணப்பெறவில்லை என்பதையும், இரட்டையுடுக்குறிகள் அது பல பிரதிகளிற் காணப்பெறவில்லை என்பதையும் குறிப்பன.

5. அடிக்குறிப்பிற் பாட பேதங்களுக்கு முன்னுள்ள எண்கள் செய்யுளின் சீர்களைக் குறிப்பன. சீரொன்றிற்கே பாடங்களிருப்பின் அவற்றைக் கோலன் (:) அடையாளமிட்டுப் பிரித்துக் காட்டியிருக்கிறது.

6. நூலகத்துச் சேர்க்கும் தகுதியற்ற மிகைச் செய்யுளை எச்செய்யுளின் பின் அது காணப்படுகிறதோ அச்செய்யுட்குரிய தொடரெண்ணோடு (a) முதலியவற்றைச் சேர்த்துக் அடிக்குறிப்பிலே கொடுக்கப்பட்டுள்ளது.

7. செய்யுட் கிரமத்திலுள்ள வேறுபாடும் படலக் கிரமத்திலுள்ள வேறுபாடும் பிறவும் உரிய விடங்களில் அடிக்குறிப்பிற் காட்டப்பட்டுள்ளன. பாட பேதங்களாகத் தரப்பட்டுள்ளனவற்றிற் பல பாடமாகவே கொள்ளத் தக்கனவாயிருக்கும். எழுத்துப் பிழைகளென்று எளிதிலறியக்கூடியவற்றையும் உண்மையான பாடங்களை அறுதியிடுவதற்கு உதவுமாதலின் பாடபேதமாகவே காட்டியிருக்கின்றது.

உலக மகாகவிகளுள் ஒருவரெனப் போற்றத் தகும் கம்பநாடரது செய்யுட்களின் உண்மைப் பாடங்களை வரையறை செய்வதில் எத்துணை இடர்ப்பாடுகள் உள்ளன வென்பதை இப்பதிப்பு விசதமாக்கவல்லது.

பல பிரதிகளை ஒப்பிட்டுப் பெற்ற பாடங்களுடன் பதிப்புக்கள் வெளிவரவேண்டுவது இன்றியமையாதது. இங்ஙனமே ஒவ்வொரு பிரதேசத்திலும் வழங்கி வந்த பிரதிகளின் படியே வெளியிடும் பதிப்புக்களும் அவசியமாக வேண்டற்பாலனவாம். இவ்விரண்டு வகைப் பதிப்புக்களும் நூற்பாடங்களையும் பாடபேதங்களையும் பலமுறை ஆராய்ச்சி செய்து உண்மைப்பாடம் காணுதற்கு இன்றியமையாக் கருவிகளாகும்''.

## ஆராய்ச்சிப்பதிப்பு

*பல பிரதிகள் கிட்டும் கம்பராமாயணத்திற்குப் பாடவேறுபாடுகளுடன் கூடிய பதிப்புகள் வரவேண்டும் என்பது அவர்களுடைய கருத்து. இவற்றின் அடிப்படையில் சீரான உண்மையான கம்பன் பதிப்புகள் கொண்டுவர இவை துணையாம் என்ற அளவிலேயே அவற்றைக் கொண்டார். ஆனால் கம்பனுக்கு இத்தகைய பதிப்புகளிலும் மேலாக 'ஆராய்ச்சிப் பதிப்பு' உருவாக வேண்டும் என்றே அவர்கள் விரும்பிப் பலகாலும் சிந்தித்து வந்தனர். 1950 ஆம் ஆண்டு காரைக்குடிக் கம்பன் கழகத்திலே நிகழ்ந்த கம்பன் விழாவில் கம்பன் ஆராய்ச்சிப் பதிப்பின் அவசியத்தை வலியுறுத்திப் பேருரை நிகழ்த்தினார். இவ்வுரையில் ஆராய்ச்சிப் பதிப்புப் பணி எவ்வாறு உருவாக வேண்டும் என்பதைத் தெளிவுபடுத்தியுள்ளார். இவ்வுரை பேராசிரியரின் பதிப்புமுறைக்கோட்பாடுகளை விளக்குவதாதலின் அவர்கள் தந்துள்ள விளக்கத்தை அவருடைய வாக்கிலேயே காண்போம்.*

" குறைபாடுகள் நீங்கிய ஆராய்ச்சிப் பதிப்பில், நாம் மேற்கொள்ள வேண்டும் முறைகளைக் குறித்து இனி நோக்குவோம்.

முதலாவது நாம் செய்யவேண்டுவது, அச்சுப் பதிப்புக்கள் அனைத்தையும், ஏட்டுப் பிரதிகளிற் கிடைக்கக் கூடியனவற்றையும் ஒருங்கு தொகுத்தலாம். எட்டுப் பிரதிகள் சேகரிப்பது பற்றி நாம் ஞாபகத்தில் வைக்கவேண்டுவது ஒன்று உண்டு. தமிழ் நாட்டிலுள்ள ஒவ்வொரு பிரதேசத்திற்கும் உரிய ஏடுகளை பெறுவதில் நாம் முயல வேண்டும். தமிழ்நாடு என்று சொல்வதில் திருவிதாங்கூர், இலங்கை, யாழ்ப்பாணம் முதலிய இடங்களையும் சேர்த்துத்தான் சொல்லுகிறேன். இங்ஙனம் பிரதேச வாரியாகச் சேர்க்கும் ஏடுகளில் காலத்தால் மிகப்பழமையானவை நமக்குப் பெரிதும் பயன்தருவன ஆகலாம். ஆகவே இங்கு கூறியதை ஞாபகத்தில் வைத்து ஏடுகள் சேகரிக்க நாம் முயலுதல் வேண்டும்.

அடுத்தபடியாக இந்த ஏடுகளைப் பொருத்தமான நியதிகளைக்

கையாண்டு வகைப்படுத்தி வைத்தல் வேண்டும். ஓர் ஊரிலுள்ளாரை எடுத்துக் கொண்டால் இன்னஇன்ன மரபை, இன்னஇன்னக் குடும்பத்தை, இன்ன இன்ன நிலையைச் சார்ந்தவர்கள் என்று பிரித்து உணருகிறோமல்லவா? அதுபோல, இவ்வாறு வகைப்படுத்துதலில் மிக்க கவனம் செலுத்தல் வேண்டும். மேல் நாட்டுப் பதிப்பாளர்கள் மேற்கொண்டுள்ள முறை நமக்கு மிகவும் பயன்படுவதாகும். ஷேக்ஸ்பியரை குறித்தும், சாஸரைக் குறித்தும் இவர்கள் மூல பாடத்தை நிர்ணயிப்பதற்குக் கையெழுத்துப் பிரதிகள் முதலியவற்றை வகைப்படுத்திப் பயன்படுத்தியுள்ள முறையே இங்கு நான் கருதுவது. இரண்டொரு நூல்களை உதாரணமாகக் குறிப்பிடலாம். ஷேக்ஸ்பியர் பதிப்பு பற்றி ஜான்சன் எழுதியுள்ள முகவுரை நன்கு கற்றுத் தெளிதற்குரியது. இதுபோலவே கிரெக் **(W.W. Greg)** என்னும் ஆசிரியர் இயற்றியுள்ள **The Calculus of Varients** என்ற நூலும் நமது முயற்சிக்குப் பெரிதும் பயன்படுவதாகும். நமது நாட்டிலும் மகாபாரதப் பதிப்புப் பற்றி ஆசிரியர் வி. எஸ். ஸுக்தாங்கர் எழுதிய முன்னுரை நமக்கு ஒரு சிறந்த வழிகாட்டி. சமீபத்தில் பர்த்ருஹரியின் சதகத் திரையம் சுமார் 300 பிரதிகளுக்குமேல் ஒப்பிட்டு நோக்கிப் பதிப்பிக்கப்பட்டுள்ளமை நம்மிற் பலரும் அறிந்திருக்கலாம். இப்பதிப்புமுறையும் ஒருவாறு நமக்குப் பயன்படக்கூடியதே.

பின்பு, ஏட்டுப் பாடங்கள் பரிசோதிக்கப்படுதல் வேண்டும். இவ்வாறு பரிசோதிப்பதற்கு ஏடுகளை வாசிப்பதில் தக்க பயிற்சியுடையவர்களே உரியர். பயிற்சியற்றவர்கள் ஏடு வாசிப்பதால் பெரும் பிழைகள் நேரிடுதல் கூடும். பயிற்சி என்ற அளவில் ஏடுகளைச் செய்யுளோசை, பொருள் முதலியவற்றைக் கவனியாதபடி வாசித்தல் மட்டும் அன்று. அது போதுமானதல்ல. செய்யுளிலக்கணம் முதலியவற்றிலும் தக்க பயிற்சியுடையாரே இதற்கு உதவக் கூடியவர்கள். இத்தகுதியுள்ள ஒரு சிலர் ஏடுகளை வைத்துக் கொண்டு பாடபேதங்களையெல்லாம் குறித்துத் தொகுத்தல் அவசியமாகும். இப்பாட பேதங்களும் இன்ன இன்ன பிரதிகளில் உள்ளன என்று பிரதிகளின் பெயர்களுடன் குறிக்கப்படுதல் வேண்டும்.

பாடபேதங்கள் அனைத்தையும் இடைச் செருகல்கள் அனைத்தையும் நாம் ஆராய்ச்சிப்பதிப்பில் கொடுத்துவிடுவது அவசியமாகும். நாம் மேற்கொள்ள வேண்டும் பாடங்கள் எவை என்பதைத் திட்டமாக வரையறுத்துணர்தல் வேண்டும். பிற பாடங்களையும் அவை பற்றிய விவரணங்களையும், ஆராய்ச்சிகளையும், ஆராய்ச்சிக்குறிப்பு என்ற தனிப்பகுதியில்

சேர்த்துவிடுதல் வேண்டும். இப்போது அச்சில் வழங்கும் செய்யுட்கள் பிரதிகளின் உதவியாலும் பிறவகை ஆராய்ச்சியாலும் இடைச்செருகல் என உணரப் படுமாயின் அவற்றை உரிய இடங்களில் அடிக்குறிப்பாகக் கொடுத்துவிடுதல் நலம். அதிகப்படியாயுள்ள ஏனைச் செய்யுட்களும் பாட பேதங்களும் ஆராய்ச்சிக் குறிப்புக்களும் ஒவ்வொரு காண்டத்திற்கும் இறுதியிலே ஒரு சேரக் கொடுத்துவிடலாம். எனவே, நூற்பகுதி ஒன்று ஆராய்ச்சிக் குறிப்புப் பகுதி ஒன்று என இரண்டு பகுதிகள் இப்பதிப்பில் அமைக்கலாம் என்று கருதப்படுகிறது.

ஒரு விஷயம் நாம் மனங்கொள்ளுதற்குரியது. கம்பன் மேற்கொண்ட பாடம் ஒன்றேயாகத்தான் இருக்க வேண்டும். அவனது இராமாயண மூலப் பிரதியும் ஒன்றேயாகத்தான் இருத்தல் கூடும். அதனின்றும் பிறந்தனவே தமிழ் நாட்டிலுள்ள ஏனைப் பிரதிகள் அனைத்தும். ஆகவே அவனது மூலபாடத்தை நிச்சயிப்பதுதான் நமது பெரு முயற்சி. இதை விடுத்துச் 'சிறந்த' பாடத்தைக் காணுவோம் என்று முயலுதல் அறிஞர்கள் சிலருக்கு உகந்ததாயிருப்பினும், கம்பனது உண்மையான பாடத்தைக் காணுவதாகாது. ஆனால் பல இடங்களில் சிறந்த பாடமும் மூல பாடமும் ஒன்றாகவே அமைதலும் கூடும். இங்கே கூறும் முயற்சியைக் கடைபோக முற்றுவித்தல் மிக அருமையாயிருப்பினும் அதுவே செய்யத்தக்கது. அதுவே கம்பனை நமக்கு உள்ளபடி உணர்த்துவது. இப்பணியைச் செய்து முடித்தற்கு அருமை என்று கருதி நாம் கைவிடுதல் தகாது. வள்ளுவர்,

> அருமை யுடைத்தென்று அசாவாமை வேண்டும்
> பெருமை முயற்சி தரும்.

என்றனர். அவரது பொன்மொழியே நமக்கு வழிகாட்டி அமைதல் வேண்டும்.

மேற்கூறியபடி தெரிந்த உண்மையான மூலபாடத்தை நூற்பகுதியில் அமைத்தலோடு இப்பகுதியிலுள்ள செய்யுட்களை ஓசை கெடாதபடி சந்திபிரித்தலும், பொருள் விளக்கத்திற்கு வேண்டும் குறியீடுகளை அமைத்தலும் இப்பதிப்பில் நாம் கையாள வேண்டும் முறைகளுள் சிலவாகும். மேலும், நூற்பகுதியின் அடிக்குறிப்பில் பட்சர்ந்தரமாகக் கையாளக் கூடிய பாடபேதங்களுள் முக்கியமானவற்றைக் கொடுத்துவிடுவதும் பயன்படுவதாகலாம். மிக இன்றியமையாததான குறிப்புரையும் அடிக்குறிப்பாகச் சேர்க்க எண்ணியுள்ளோம்.

ஒவ்வொரு காண்டத்தின் முன்பும், கம்பன் அமைத்துள்ளவாறு நயம் தோன்ற எழுதிய கதைச்சுருக்கமும், ஒவ்வொரு படலத்தின் முன்பும் அப்படலத்திற்குரிய கதைச் சுருக்கமும், படலப் பொருளின் விவரணமும் சேர்ப்பது வாசகர்களுக்குப் பயன்படலாம் என்றுதான் தோன்றுகிறது. அன்றியும் ஒவ்வொரு படலத்திலும் உரிய இடங்களில் தலைப்புக்கள் கொடுத்துக் கதைத்தொடர்ச்சியை எளிதில் அறிந்து கொள்ளுமாறு செய்தலும் அவசியமாகும். இங்குக் கூறிய அம்சங்களெல்லாம், பாடபேத ஆராய்ச்சி செய்யும் அறிஞர்களைக் கருதியல்ல. பொது மக்களுக்கும் இப்பதிப்புச் சிறிதளவேனும் பயன்படுதல் வேண்டும் என்று கருதியே இவற்றை அமைக்கக் கருதியுள்ளோம்.

ஆராய்ச்சிக் குறிப்புப் பகுதிக்குப் பின்பு அனுபந்தப்பகுதி ஒன்று அமைக்கப்படும். அதில் அபிதான விளக்கம், செய்யுள் முதற்குறிப்பு முதலிய அகராதிகள் சேர்க்கப்படுவதாம். இறுதியாக வால்மீகி கூறியுள்ளபடி இராமாயணக்கதைச் சுருக்கமும் காணப்படும்.

இப்பதிப்பிற்குப் பூர்வாங்கமாக ஒரு விரிந்த முன்னுரை அமைக்க வேண்டுவது மிகவும் இன்றியமையாததாம். அதில் இப்பதிப்பிற்கு உதவிய ஏட்டுப் பிரதிகளின் விவரங்கள் ஏட்டுப் பிரதிகளின் இனப் பாகுபாடுகள், ஏட்டுப்பிரதிகளின் வகைகளில் ஒன்றற் கொன்றுள்ள தொடர்பு, முற்பதிப்புகளின் விவரங்கள், மூலபாடத்தைக் கண்டுபிடித்தற்குக் கையாண்ட முறைகள், கதைவேறுபாடுகளின் விவரங்கள், வரலாறுகள், மிகைச் செய்யுட்கள், சில பிரதிகளில் காணாதொழிந்த செய்யுட்கள், பாட ஆராய்ச்சியிலுள்ள இடையூறுகள், இடைச் செருகல்களின் விசாரணை, உத்தேசப் பாடங்கள் இவை முதலிய பொருள்கள் பற்றி விரிவாக ஆராய்ந்து எழுத எண்ணியுள்ளேன்"

மேலும் சொல்தொடர் முதலியவற்றின் அகராதி, மேற்கோளொடு கூடிய நூற்பொருள் அகராதி, கம்பன் அகராதி முதலிய அகராதிகளும் அமைக்கப்பெறவேண்டும் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

## பதிப்புச் சிந்தனைகள்

இவ்வாறே பேராசிரியரால் பதிப்பிக்கப்பெற்ற பிற நூல்கள் சிலவற்றிலும் தாம் மேற்கொண்ட பதிப்பு நியமங்களைத் தெரிவித்திருக்கிறார். நூல்களின் தன்மை, பொருள் நிலைகளுக்கு ஏற்ற வண்ணம் பதிப்பு முறையிலும் சிற்சில மாறுபாடுகள் செய்து கொள்வது அவசியமாகும்.

பேராசிரியர் தம் வாழ்வின் இறுதி நாளில் பதிப்பித்த நூல் ஸ்ரீதிவ்யப் பிரபந்தம்-முதலாயிரம் ஆகும். இதனை இலக்கண அறிவு இசையறிவு இல்லாதோரும் படிக்கும் வகையில் சந்தி பிரித்துப் பொருட்போக்கிற்கு இயைபுடைய குறியீடுகள் அமைத்துள்ளார். இந்தப் பதிப்பில் அவர்கள் கொண்டுள்ள நியமங்கள் பற்றித் தந்துள்ள விளக்கங்களும் அவர்களுடைய பதிப்புச் சிந்தனைகளை நமக்குத் தெரிவிக்கின்றன.

## பேராசிரியர் அறிவுறுத்தும் பதிப்பு முறை

பல்வேறு இடங்களிலும் அவர்கள் எழுதியுள்ள பற்பல குறிப்புகளையும் ஒருங்கு வைத்து நோக்குவோமானால் பின்வருவன அவருடைய பதிப்பு முறைகளைப் புலப்படுத்தும்.

1) ஒரு நூலுக்குக் கிட்டும் பிரதிகள் எல்லாவற்றையும் தேடி ஒருங்கு தொகுத்தல்.

2) முன்பு அச்சில் வந்துள்ள நூலை மீண்டும் பதிப்பிப்பதாயின் அந்நூலுக்குரிய எல்லாப் பதிப்புக்களையும் தொகுத்தல் வேண்டும். மேலும் அந்நூலுக்குக் கிட்டும் சுவடிகளையும் பயன்படுத்தல் வேண்டும்.

3) முதன்முதல் சுவடியிலிருந்து வெளியிடப் பெறும் புதிய நூலாயின் கிட்டும் ஏட்டுச் சுவடிகளைப் பரிசோதித்து ஒன்றற்கொன்றுள்ள இயைபுகளைக் கொண்டு இனவாரி பாகுபடுத்த வேண்டும்.

4) பழமையான ஒரு சுவடியைப் பிரதி செய்து வைத்துக் கொண்டு ஏனைய சுவடிகளை அதனுடன் ஒப்பு நோக்கிப் பாட வேறுபாடுகளைக் குறித்தல் வேண்டும்.

5) அதன்பின் பாடலின் ஓசைக்கும் பொருளுக்கும் ஏற்புடைய பாடத்தைத் தேர்ந்து மூலபாடத்தில் அமைத்து ஏனைவற்றைப் பாடவேறுபாடுகளாகத் தருதல் வேண்டும்.

6) பழையவுரையுடன் கூடிய நூலாயின் பாட நிச்சயத்திற்கு அவ்வுரைப் பகுதியும் துணை செய்யும்.

7) எடுத்துக்கொண்ட நூல்தொடர்பான பிறநூல்களையும் ஆராய்ந்து பார்த்து நூற் பொருளைத் தெளிவு செய்து கொள்ள வேண்டும்.

*8.* சமயச் சார்பு பற்றிய நூலாயின் அவ்வச் சமய வல்லுநர்களை அடுத்து விளங்காத பகுதிகளைத் தெளிவு படுத்திக் கொள்ள வேண்டும்

*9.* நூற்பொருளுக்கு ஏற்புடைத்தான பல்வேறு அகராதிகளும் அமைத்தல் வேண்டும்.

*10.* நூல் முழுமைக்கும் சொல்லடைவு, பொருளடைவு, செய்து கொடுத்தல் பல்வேறு ஆய்வுகளுக்கும் பயனுடையதாக அமையும்.

## பதிப்புக்கடமை தவறலாகாது

இவ்வாறாகப் பல்வேறு வகையாலும் பரிசோதித்து வெளியிடப்பெறும் பதிப்பே பயனுடையதாகும். இங்ஙனமன்றித் தம் மனம் போனபடி பாடங்களைத் திருத்தியும், மாற்றியும் பதிப்பிடுபவர்களைப் பதிப்புக் கடமை தவறியவர்கள் என்றே கொள்ளவேண்டும். இத்தகையாருடைய பதிப்புகள் தவறானவை, கண்டிக்கத்தக்கவை என்பது பேராசிரியர் அவர்களின் கருத்து.

> "சில பதிப்பாளர்கள் தங்கள் கடமையினின்றும் வழுவியிருப்பது வருந்தத்தக்கது ஆகும். அவசியமின்றியே பதிப்புகளில் அவர்கள் திருத்தங்கள் செய்துள்ளனர். இதனால் அவர்களுடைய பிரசுரங்கள் நம்பிக்கைக்கு இடமளிப்பதாக அமையவில்லை வடமொழிச் சொற்களை நீக்கிவிட்டு மொழியைத் தூய்மைப்படுத்துவதாக நினைத்துக்கொண்டு பல இடங்களில் ஆசிரியர் கையாண்டுள்ள சொற்களை மாற்றிப் பதிப்பித்துவிடுகிறார்கள். 'நூற்றொகை விளக்கம்' 'பிரதாப முதலியார் சரித்திரம்' ஆகிய நூல்கள் இவ்வாறு பதிப்பிக்கப்பட்டுள்ளன. மனம் போனவாறு பதிப்பாளர்கள் நூல்களை மாற்றிப் பதிப்பித்திருப்பதை நாம் எத்துணை கண்டித்தாலும் தகும்"
>
> *(திராவிட. பக். 61-62)*

சென்ற நூற்றாண்டில் சுகாத்தியர் என்னும் ஒரு பாதிரியார் திருக்குறளில் எதுகை மோனை சரியாகயில்லை என்று குறளைத்திருத்திப் பதிப்பித்தார். அந்நாளில் பெருவித்துவான்களாக விளங்கிய திரிசிரபுரம் தியாகராசச் செட்டியார் மதுரைத் தமிழ்ச்சங்கம் நிறுவிய பாண்டித்துரைத்தேவர் முதலியோர் இதனைப் பெரிதும் கண்டித்தனர். திருக்குறள் அறத்துப்பாலுக்கு மணக்குடவர் உரையைப் பதிப்பித்த பதிப்பாசிரியர் ஒருவர் "சிருஷ்டி, திதி,

சங்காரம் என்னும் முத்தொழிலையும் செய்து" அந்நூலைப் பதிப்பித்ததாகக் குறிப்பிட்டுள்ளார். நூலின் உண்மை நிலையைப் பாதுகாத்து உலகத்திற்குத் தரவேண்டுமேயன்றித் தாமாகப் புதியது படைத்தலும் இருந்தவற்றை மாற்றுவதும் தகாத செயலாகும். பண்டை நூல் முதலாக எந்த நூலாயினும் ஓர் ஆசிரியரின் நூலை அவர் படைத்த வண்ணமே பதிப்பித்து வெளியிடுதலே பதிப்பாசிரியரின் தனிப் பெருங்கடமையாகும்.

# சரசுவதிமகால் பதிப்புகள்

வீ. சொக்கலிங்கம்

"வைய மீன்றதொன் மக்க ளுளத்தினைக்
கையி னாலுரை காலம் இரிந்திடப்
பைய நாவை யசைத்த பழந்தமிழ்"

அதனைக் கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு முன்தோன்றிய மூத்தகுடி மக்கள் நாளடைவில் பனையோலைகளில் எழுதிப் பயன்படுத்திப் பாதுகாத்து வந்தனர். அவ்வாறு எழுத்தாணியால் எழுதப்பட்ட ஓலைச்சுவடிகள் எண்ணிலடங்கா. அவைகளில் பல செல்லின் வாய்ப்பட்டும், தீக்கிரையாகியும், தண்ணீரால் அடித்துச் செல்லப்பட்டும், ஒடிந்தும், மடிந்தும், மக்கியும், அறியாமையால் அடுப்பெரித்தும், பயனற்றுப் போனவையும் போக எஞ்சிய ஓலைச்சுவடிகள் உலகமெங்கும் கோயில்களிலும், மடங்களிலும், நூலகங்களிலும், அறிஞர் பெருமக்கள் இல்லங்களிலும் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. எனினும் சரியான பாதுகாப்பு முறை இன்மையால் காலப்போக்கில் அவையும் சிதைந்து கொண்டே வருகின்றன.

இவைகளுள் சில சுவடிகளே அச்சு நூலாக வெளிவந்து பலருக்கும் பயன்பட்டு வருகின்றன. பல சுவடிகள், காண்பார் அறிவார் இன்றியும், பதிப்பிக்கப் பொருள் வசதி இன்றியும், பதிப்பிக்கத் தக்கவர் இன்றியும், அச்சேறாமல் பயன்படாமல் உள்ளன.

சுவடிகளின் மதிப்பினை உணர்ந்த அறிஞர் பெருமக்கள் அவ்வப்போது, பரந்துகிடக்கின்ற சுவடிகளைச் சேகரித்தும், ஓரிடத்தில் சேமித்தும் வைத்தனர். அவ்வாறு தொன்றுதொட்டு சேகரித்து வைக்கப்பட்ட தஞ்சைச் சரசுவதிமகால் நூல் நிலையத்தில், மன்னர் இரண்டாம் சரபோஜி சத்திரபதி அவர்கள், இயன்ற அளவு தாமும் சுவடிகளை மொழி, சமய வேறுபாடின்றிச்

சேகரித்து வைத்து, அவைகட்கு , இரங்கூனிலிருந்து தேக்கு மரங்களைக் கப்பலில் வரவழைத்து, வானளாவியது போல, அண்ணாந்து பார்க்கத் தக்கதாக, 16, 32 கதவுகளை உடையனவாக நிலையான நிலைப்பேழைகளைச் செய்து வைத்துப் பாதுகாத்தார்கள். இவ்வாறு சிறப்புற்ற நூலகத்தின் பெயர் சரசுவதிபண்டார் எனப்படும் சரசுவதி (நூல்) பண்டாரம் என்றிருந்தது. பின்னர், "தஞ்சாவூர் மாமன்னர் சரபோஜியின் சரசுவதிமகால்" எனப்பெயர் பெற்றது. அது மக்களால் 'சரசுவதிமகால்' என்று அழைக்கப்படுகிறது.

தஞ்சை மாவட்டத்தில் மிகப்பெரிய சைவ ஆதீனமாகிய திருவாவடுதுறையாதீனத்தில் சேகரித்து வைக்கப்பட்டுள்ள சுவடி நிலையத்திற்கும் 'சரசுவதிமகால்' என்ற பெயர் வழங்கி வருகின்றது.

தஞ்சை மாமன்னர் சரபோஜியின் சரசுவதிமகால் நூலகம் தற்போது, தஞ்சை மாமன்னர் சரபோஜியின் சரசுவதிமகால் நூலகச் சங்கத்தாரால் இயங்கி வருகின்றது. இந்நூலகத்தில் தமிழ், சமஸ்கிருதம், கன்னடம், தெலுங்கு, மராத்தி, மலையாளம் முதலான மொழிகளில் சுவடிகள் உள்ளன. அவைகள் தமிழ், தேவநாகரி, நந்திநாகரி, கிரந்தம் முதலான எழுத்துக்களில் உள்ளன.

ஓலைச்சுவடிகளேயன்றிப் பிற்காலத்தில் வந்த காகிதங்களில் எழுதப்பட்ட காகிதச்சுவடிகளும் ஏராளம் உள்ளன. மேலும், மராத்தி மொழியின் சுருக்கெழுத்தான 'மோடி' எனும் பெயருடைய எழுத்துக்களால் எழுதப்பட்ட காகித ஆவணங்கள் நிறைய உள்ளன. அவைகளுள் மூட்டைகளாக உள்ளவை 850.

கி.பி. 1798ல் மன்னர் சரபோஜி பட்டத்திற்கு வருவதற்கு முன், இந்நூலகத்தில் சேகரித்து வைக்கப்பட்ட சுவடிகள் பலவற்றுள்ளும் 'அரவக்கிரந்தம்' என்றழைக்கப்பட்ட தமிழ் இலக்கியச் சுவடிகள் 633 இருந்தன. அப்போது மருத்துவச் சுவடிகள் இல்லை. சரபோஜிமன்னர் காலத்திலிருந்து மருத்துவச் சுவடிகள் சேகரிக்கப்பட்டன. மன்னர் மருத்துவத்தில் ஈடுபாடு கொண்டு, மருத்துவம் கற்று, தானே மருத்துவராகவும் இருந்துள்ளார். அவர் உருவாக்கிய மருத்துவசாலை 'தன்வந்திரிமகால்' மூலம் 'சரபேந்திர வைத்தியம்' என்ற பெயரால் அனுபவ வைத்திய நூல்கள் தோன்றின.

சரபோஜி பட்டத்திற்கு வந்த பிறகு கி.பி. 1801ல் அப்போதிருந்த 633 சுவடிகளும் பட்டியலில் பதிவு செய்யப்பட்டு அட்டவணையும் செய்யப்பட்டன. அவர் காலத்திலேயே, கி.பி. 1830-ல் பின்னர் சேர்ந்த சுவடிகளும் சேர்ந்து 719 சுவடிகள் அட்டவணை பெற்றன. அப்போது தோன்றிய வைத்தியச் சுவடிகள் 117ம் அட்டவணை பெற்றன.

பின்னர் மன்னர் சிவாஜி காலத்தில் கி. பி. 1857ல் தமிழில் இலக்கியம் 719ம், மருத்துவம் 118ம் ஆக மொத்தம் 837 சுவடிகள் இருந்தன.

இந்த நூற்றாண்டில் கி.பி.1925ல் தமிழறிஞர் சைவப்புலவர் எல்.உலகநாதப்பிள்ளை அவர்களால் தமிழ் இலக்கியம் 719ம் இரண்டு தொகுதிகளாகவும், மருத்துவம் 119ம் மூன்றாம் தொகுதியாகவும், சுவடி (நூல்) விவர அட்டவணை தயாரிக்கப்பட்டன.

பின்னர், சுவடிகளைச் சேகரிக்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. அதன்படி இந்நூலகத்தில் இடம்பெற்றுள்ள சுவடிகள்:

| மொழி | ஓலை | காகிதம் | கூடுதல் |
|---|---|---|---|
| 1. தமிழ் | 2606 | 25 | 2631 |
| 2. சமஸ்கிருதம் | 19084 | 17586 | 36670 |
| 3. மராத்தி | | 2954 | 2954 |
| 4. தெலுங்கு | 776 | | 776 |

இவைகளுள் இதுவரை அச்சேறிய சுவடிகள்: தமிழ் 123, சமஸ்கிருதம் 80, மராத்தி 31, தெலுங்கு 17, விவர அட்டவணை உள்பட மொத்தம் 251. ஆங்கிலத்தில் 3.

இவைகளுள் நிகண்டு, இலக்கண நூல்கள், சமய நூல்கள், சித்தாந்த நூல்கள், பேரிலக்கிய நூல்கள், சிற்றிலக்கிய நூல்கள், இசை நூல்கள், மருத்துவ நூல்கள், சோதிட நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள், தமிழ்ச்சுவடிகளின் விவர அட்டவணைகள், அகரவரிசைப்பட்டியல், பருவ இதழ்கள், கட்டுரைகள், விளக்கப்பதிப்புகள், மறுபதிப்புகள், தொகுப்பு நூல்கள் முதலியன அடங்கும்.

கி. பி. 1939ம் ஆண்டு இம்மகாலிலுள்ள சுவடிகளுள் அடங்கியுள்ள அரிய பெரிய செய்திகளை வெளியிடும் நோக்கோடு,

ஆண்டுக்கு மூன்று என்ற கணக்கில் பருவ இதழ் தொடங்கப்பட்டது. இன்றுவரை தொடர்ந்து வருகிறது. இதில், சிறிய தமிழ்ச் சுவடிகள் அச்சாகின்றன.

பின்னர் இங்குள்ள வடமொழிச்சுவடியினின்று முதன்முதலாக "முத்ராராட்சச நாடகம்" என்ற நூல் அச்சேறியது 1948ம் ஆண்டு. இதனை அடுத்து 1949ம் ஆண்டு, தமிழில் முதன்முதலாக ஓலைச்சுவடியினின்றும் அச்சான நூல் 'சரபேந்திர வைத்திய முறைகள் - குன்மரோக சிகிச்சை'. திருவாளர். வாசுதேவசாஸ்திரி அவர்களும், திரு. டாக்டர் வெங்கட்ராஜன் அவர்களும் இணைந்து பதிப்பித்தனர்.

இதனைத் தொடர்ந்து தமிழில் அதே ஆண்டு 'சரபேந்திர வைத்திய முறைகள்- கர்ப்பிணி பாலரோக சிகிச்சை- அச்சேறியது. 1950-ம் ஆண்டுஷி நயன ரோக சிகிச்சை, இராமையன் அம்மானை, பெருந்தேவனார் பாரதம், திருப்பெருந்துறை சிவயோக நாயகி பிள்ளைத்தமிழ், தரங்கை வீரவேலாயுதசாமி பிள்ளைத்தமிழ், சத்தியஞான பண்டாரம் பிள்ளைத்தமிழ் ஆகிய மூன்று பிள்ளைத்தமிழ் நூல்கள், மாடுகள் குதிரைகள் பறவைகள் வைத்தியம், மூன்று தமிழ் நாடகங்கள் ஆகியவை அச்சாயின. 1951-ம் ஆண்டு கொங்கணர் சரக்கு வைப்பு, பாண்டு காமாலை சிகிச்சை, காச சுவாச சிகிச்சை, சிரோரோக சிகிச்சை, நீரிழிவு சிகிச்சை ஆகியவை அச்சேறின. 1952-ம் ஆண்டு ஆனந்த கந்தம், விரணரோக சிகிச்சை, நம்மாழ்வார் திருத்தாலாட்டு, திருச்சிற்றம்பலக் கோவையார், திருவாய்மொழி வாசகமாலை ஆகியவை அச்சிடப்பட்டன.

1953-ல் நாலடியார் உரைவளம் 1, 2 பாகங்கள், சுரரோக சிகிச்சை, வாதரோக சிகிச்சை ஆகியனவும், 1956-ல் க்ஷயம் உளமாந்தை சிகிச்சை, விஷரோக சிகிச்சை ஆகியனவும், 1957-ல் சரபேந்திர வைத்திய ரத்னாவளியும், 1958-ல் மலையருவி, அகத்தியர் 2000 முதல் இரண்டு பாகங்கள், சரபேந்திர வைத்தியம் விரேசன முறையும் அதிசார சிகிச்சையும் ஆகியனவும் அச்சாயின.

கூர்மபுராணம் முதற்பகுதி 1961-லும், 1962-ல் தொல்காப்பியம் சொல்லதிகாரம் நச்சினார்க்கினியம், சன்னிரோக சிகிச்சை, நாற்கவிராச நம்பியகப்பொருள் விளக்கம், ஞானசாரம் ஆகியவையும், 1963-ம் ஆண்டு, கூர்மபுராணம் இரண்டாம் பகுதி, பித்தரோக சிகிச்சை, அகத்தியர் 2000 மூன்றாம் பாகம், திருநெறிவிளக்கம், தத்துவ விளக்கம் ஆகியவையும் அச்சிடப்பட்டன.

1964-ல் சங்கற்ப நிராகரணம், 1965-ல் சூலை, குட்டரோக சிகிச்சை, 1966-ல் போகர் நிகண்டு அட்டவணை, 1967-ல் புல்லையந்தாதி, தனிப்பாடற்றிரட்டு முதல் பகுதி, அருணகிரி அந்தாதி, தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியம், 1968-ல் மருதூரந்தாதி, குடந்தை அந்தாதி, 1969-ல் வண்ணத்திரட்டு, செண்டலங்காரன் விறலிவிடுதூது, காலச்சக்கரம், தனிப்பாடற்றிரட்டு 2ம் பகுதி, சித்தாந்த நிச்சயம், 1970 சிவஞானதீபம், தியாகேசர் குறவஞ்சி, வராகர் ஒராசாத்திரம், 1971-ல் கும்பகோணப்புராணம் (சொக்கப்பப்புலவர் எழுதியது), கொடுந்தமிழ், இலக்கண விளக்கம் - எழுத்து, சொல்,பொருள் ஆகியவை அச்சேறின.

சரபேந்திர சித்தமருத்துவச்சுடர், இலக்கண விளக்கம் பொருளதிகாரம் அகத்திணையியல் - I & II ஆகியவை 1972ம் ஆண்டும், இலக்கணக்கொத்து, பிரயோகவிவேகம், இலக்கண விளக்கம் - பொருள்- அணியியல் ஆகியவை 1973-ம் ஆண்டும், செந்தமிழ், போஜன குதூகலம், இலக்கண விளக்கம்-பொருள்-செய்யுளியல், பாட்டியல், குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ் ஆகியன 1974ம் ஆண்டும், ஆசிரிய நிகண்டு 1975ம் ஆண்டும், திருப்பெருந்துறைப் புராணம், கஞ்சனம்மானை ஆகியவை 1976ம் ஆண்டும், சிவப்பிரகாச விகாசம், ஆத்திசூடிப்புராணம் ஆகியவை 1977ம் ஆண்டும், வீரையன் அம்மானை, திருநல்லூர்ப்புராணம் ஆகியவை 1979ம் ஆண்டும் பதிப்பிக்கப்பட்டன.

1980ம் ஆண்டு ஐந்து தமிழிசை நாட்டிய நாடகங்கள், பார்சுவநாதர் அம்மானை ஆகியவையும், 1981ம் ஆண்டு இராமர் அம்மானை, வைத்தியத் திரட்டு, சீவகசிந்தாமணி அம்மானை, ஆகியவையும், 1982ம் ஆண்டு சமாதிலிங்கப் பிரதிட்டையும், 1983ம் ஆண்டு ததீசிப்புராணம், குசலவன் கதை ஆகியனவும், 1985ம் ஆண்டு திருநெல்லைப் பரசமயகோளரியார் பிள்ளைத்தமிழ், குமார சாமீயம், மயநூல், சோமயாகப்பெருங்காவியம், தருமநெறிநீதிகள், நாராயண சதகம், காமாட்சி தவசு, நாசிகேதுபுராணம், அருணாசலர்மீது வண்ணம், வீராகமம், அகத்தியர் 1200, சதாசிவத்தியானம், அதிரூபவதிகலியாணம், நீதிநூல், தமிழிசைப்பாடல்களும் நாட்டியப்பதங்களும் ஆகியவையும் அச்சுவாகனமேறின.

4448 வியாதிகள், அரிச்சந்திரநாடகம் ஆகியவை 1985-லும், அனுபவ வைத்திய முறைகள், சகாதேவ நிமித்தசூடாமணி, திருக்குறள் பழைய உரை, சிறுத்தொண்டர்

நாடகம், அருணாசலபுராணம், வடிவேல் சதகம், சித்திர புத்திரர் அம்மானை, அகத்தியர் 110ல் லோகமாரணம், அதிரியர் அம்மானை, நளச்சக்கரவர்த்தி கதை, துரோபதை அம்மானை, பலஜாதிகவிளக்கம், மாலை—தொகுப்பு ஆகியவை 1986-லும் அச்சிடப்பட்டுள்ளன. பின்னரும் அச்சாகிக்கொண்டிருக்கின்றன. இவைகளேயன்றித் தமிழ்ச்சுவடிகளின் விவர அட்டவணைகளும் அச்சாகியுள்ளன.

சிறுசிறு நூல்களாக இருப்பவைகளைப் பருவ இதழில் கொஞ்சம் கொஞ்சமாக வெளியிட்டு நூலாக்கும் வழக்கம் இருக்கிறது. அப்படி நூலானவை தஞ்சை வெள்ளைப்பிள்ளையார் குறவஞ்சி, முருகர் கதம்பம், வலைவீசு புராணம், சிவகாமி அம்மை அகவல், சுமிருதிசந்திரிகை, கமலாலய அம்மன் பிள்ளைத்தமிழ், திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ், காஞ்சிமன்னன் அம்மானை, திருச்சோற்றுத் துறைத் தலபுராணம், திருவையாற்றுப்புராணம், குயில்ராமாயணம், சரபபுராணம், வள்ளலார் பிரபந்தங்கள், நண்ணாவூர் சங்கமேசுவரர் விறலிவிடுதூது, வென்றது யார் முதலியன.

இவற்றுள் தஞ்சை வெள்ளைப்பிள்ளையார் குறவஞ்சி, நண்ணாவூர் சங்கமேசுவரர் விறலிவிடுதூது மறுபதிப்பாகி விற்பனையாயின. வள்ளலார் பிரபந்தங்கள், சுமிருதிசந்திரிகை, திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ், சரபபுராணம் முதலியன தனிநூலாக வந்து விற்பனையாயின. முருகர் கதம்பம் போன்றவை மறுபதிப்பாகாமல் இருக்கின்றன. வலைவீசு புராணம் என்ற நூல் தனிநூலாகாமல் பருவ இதழிலேயே மறைந்துகிடக்கிறது. இவற்றுள் பல தற்போது கிடைப்பதரிதாயுள்ளன.

இந்நாட்டில் அச்சகங்கள் தோன்றுவதற்கு முன்பே, கற்களைக்கொண்டு உருவாக்கிய அச்சுக்களைக் கொண்டு, கையால் தயாரிக்கப்பட்ட காகிதங்களில், பல நூல்களை முதன்முதலில் அச்சேற்றிய பெருமை இரண்டாம் சரபோஜியையே சாரும். அவ்வாறு உருவாக்கப்பட்ட குமாரசம்பவ சம்பு முதலான நூல்கள் மகாலில் இடம்பெற்றுள்ளன.

இதன்பின்னர் எழுந்த முன் குறிப்பிடப்பட்ட பதிப்புகளில் ஒருசிலவற்றின் சிறப்புக்களைக் காண்போம். இம்மகாலில் இடம் பெற்றுள்ள சுவடி "ஆசிரியநிகண்டு". நிகண்டு நூல்களுள் மிக எளிய நடையில் அமைந்தது இது. ஊற்றங்கால் ஆண்டிப்புலவர் இயற்றியது. பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தத்தாலானது. அதனால், "ஆசிரியநிகண்டு" எனப்பெயர்

பெற்றது. இந்தத் தலைப்பில் இரண்டு தொகுதிகளையுடைய சுவடி ஒன்று மட்டுமே சரசுவதிமகாலில் இருந்தது. சென்னை, மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே. சாமிநாதய்யர் அவர்கள் நூலகத்தில், தொடர் எண் 345, 941 ஆகிய இரண்டு சுவடிப்படிகளையும் பெற்று, இதன் முதல்எட்டுத்தொகுதிகளையும் வெளியிடலானேன். இவற்றுள்:

மகால் சுவடியில் 2 தொகுதிகள்: 94 செய்யுட்கள்
உ.வே. சா சுவடியில் 2 தொகுதிகள்: 87 செய்யுட்கள்
உ.வே. சா சுவடியில் 8 தொகுதிகள்: 202 செய்யுட்கள்

இருந்தன.

இவற்றைக்கொண்டு பாடவேறுபாடுகள் கண்டு, என்னென்ன வகையில் பாடவேறுபாடுகள் உள்ளன என்பதைப் பட்டியலிட்டுத் தந்துள்ளேன். இதுவரை தெரியவந்துள்ள நிகண்டு நூல்களின் பட்டியலூம் தந்துள்ளேன். இந்நூலின் பதிப்புச்சிறப்பு, மற்ற நிகண்டுகளின் ஒப்புமைகள் பெற்றுள்ளது. செய்யுள் முதற்குறிப்பகரமுதலி, பெயர் அகரமுதலி ஆகியவையும் இதில் உள்ளன. இதன் எஞ்சிய மூன்று தொகுதிகளையும் வெளியிட வேட்கைகொண்டு, பல இடங்களிலும் தேடிய வேளையில், போளுவாம்பட்டி, திருவாளர் இராமசாமிக்கவுண்டர் அவர்களிடமிருந்து பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை அவர்களின் கையெழுத்துப் பிரதி ஒன்று கிடைத்தது. அதனைச் சரசுவதிமகாலில் சேர்த்துள்ளேன். அத்துடன் பேரூராதீனத்தில் முழுச்சுவடியும் இருக்கக்கண்டு, அவற்றைப்பெற்று, மேற்கண்டவாறே ஒப்புமை, பாடவேறுபாடுகள், செய்யுள் அகராதி, பெயர் அகராதிகளுடன் வெளியிட்டுள்ளேன். இச்சுவடியுடன் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகச் சுவடியையும் பார்வையிடும் வாய்ப்பைப் பெற்றேன் என்பதையும் ஈண்டுக் குறிப்பிடுகின்றேன்.

அடுத்து, நாலடியார் உரைவளம் பதுமனார் உரை, தருமர் உரை, விளக்க உரை ஆகியவைகளுடன் 200, 200 பாடல்களாக இரண்டு பாகங்களாக அச்சாகியுள்ளது. இதன் சிறப்பாவது: நாலடியார் பாடல், தருமர் உரை, பதுமனார் உரை, விளக்கஉரை, பொழிப்புரை, மேற்கோள் பகுதிகள், ஒப்புமைப்பகுதிகள், விசேடக்குறிப்புகள் இடம் பெற்றுள்ளன.

வடமொழியிலுள்ள சில்பசாத்திர நூல்களைத், தமிழில் மொழிபெயர்த்து வெளியிடும் பணியினை 1957-ம் ஆண்டு

சென்னை மாநில அரசு இச்சரசுவதி மகால் நூலகத்தாரிடம் அளித்தது.

இப்பணியினை மேற்கொண்ட மகால், வடமொழியில் கிரந்த எழுத்துக்களிலும், அதன் தமிழ் மொழி பெயர்ப்பினை உரைபோல விளக்கமாகவும் பதிப்பித்துத் தந்தது. அவ்வாறு வெளிவந்த நூல் சாரசுவதீய சித்ரகர்ம சாத்திரம், பிராம்மிய சித்திர கர்ம சாத்திரம், காசியபசில்பம், சில்பரத்தினம், சகலாதிகாரம், மயமதம் முதலியன. இவ்வாறு தமிழில் நூல்களைத் தரும் உதவியினை மகால் செய்து வந்தது. இது ஸ்தபதியார்கட்கு மிக மிகப் பயன்பட்டு வந்தது. இன்றளவும், இந்நூல்களில் கூறப்பட்டுள்ள, தெய்வப் படிமங்களின் அமைப்பு, அவைகளின் அளவுகள், கோயில்களின் அமைப்புகள் முதலியன மக்களுக்குப் பயன்பட்டு வருகின்றன.

இதனைப்போன்று சிறந்ததோர் நூல் 'ஸ்ரீ தத்துவநிதி' என்பது மூன்று பாகங்களாக வெளிவந்துள்ளது. மைசூர் மாமன்னர், ராஜஸ்ரீ கிருஷ்ணராஜ மகாராஜா அவர்களால் இயற்றப்பட்டது. இதிகாசங்கள், புராணங்கள், ஆகமங்கள், தந்திரங்கள் முதலானவற்றிலிருந்து தொகுத்து, தேவதைகளின் உருவங்கள் தியானங்கள் இவற்றைப் பற்றியும், சக்தி நிதி, விஷ்ணு தத்துவ நிதி, சிவ தத்துவ நிதி, பிரம்ம தத்துவநிதி முதலான ஒன்பது நிதிகளைக் கொண்டது. இதுவும், கிரந்த எழுத்தில் மூலமும், தமிழுரையும் ஆக வெளிவந்துள்ளது.

திருவாய்மொழி வாசக மாலை எனும் நூல்,மணிப்பிரவாள நடையில் சுவடியாக இருக்கிறது. அதனைச் சமஸ்கிருத மேற்கோள்களுடனும், பழைய தமிழ்ச் சொற்களுடனும் அவைகளின் குறிப்புகளுடனும் பதிப்பித்துள்ளனர். இது திருவாய்மொழியின் ஓர் பழைய விரிவுரை. முதற்பாட்டிலேயே மற்ற பாட்டுக்களின் கருத்துக்கள் எல்லாம் அடங்கியுள்ளன. இதனைச்சுமார் 400, 500 ஆண்டுகட்கு முன்னரே கோனேரிதாஸ்யை என்ற பெண்பாற்புலவர் செய்துள்ளார்.

இரத்தினப் பரிட்சை எனும் நூலில், மகரிஷிகள், புராணங்களிலும் சுமிருதிகளிலும், சிற்ப நூல்களிலும், வைத்திய நூல்களிலும், வடமொழியில் கூறியுள்ளவற்றைத் தொகுத்து, மிகத் தெளிவான தமிழ் மொழிபெயர்ப்புடன் அச்சிட்டுத் தந்துள்ளனர்.

இவ்வாறே, பூர்வ பாராசரியம், ஆனந்தகந்தம், இராஜமிருகாங்கம் நாடீசக்ரம், அசுவசாத்திரம், கஜசாத்திரம், பாணினீய தாதுபாடம் முதலானவைகளைத் தமிழில் மொழிபெயர்த்துப் பதிப்பித்துள்ளனர்.

பான்ஸ்லே வமிச சரித்திரம்:

தஞ்சைப் பெரிய கோயிலில், தஞ்சை மகாராட்டிர மன்னர் சரபோஜியின் காலத்தில் வெட்டப்பட்ட அவர்தம் மன்னர் பரம்பரையினை விளக்குவதாக மராத்தி மொழியில் அமைந்த கல்வெட்டொன்று பெரிய அளவில் உள்ளது. அதனைத் தமிழில் மொழிபெயர்த்துப் பதிப்பித்துள்ளனர். இராக ஆலாபனைகளும் டாயங்களும் என்ற இசைநூலையும், பரதார்ணவம், நாட்டிய சாத்திர சங்கிரகம், பின்னல் கோலாட்டம், நாட்டியத்திற்கான சாஹித்திய வகைகள் முதலான நூல்களைத் தமிழேயன்றி ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்துத் தந்துள்ளனர்.

சமய சித்தாந்த நூல்களை வெளியிடும்போது விளக்கவுரை தெளிவுரை எழுதி வெளியிட்டுள்ளனர்.

சிறுசிறு நூல்களாக உள்ளவற்றை இரண்டு, மூன்று நூல்களாகச் சேர்த்துப் பதிப்பித்துள்ளனர். மூன்று பிள்ளைத்தமிழ் என்ற தலைப்பில் சிவயோக நாயகி பிள்ளைத்தமிழ், தரங்கை வீர வேலாயுதசாமி பிள்ளைத்தமிழ், சத்தியஞான பண்டாரம் பிள்ளைத்தமிழ் என்ற மூன்றினையும் சேர்த்து ஒரே நூலாக வெளியிட்டுள்ளனர். பாண்டிகேளீவிலாச நாடகம், புரூரவச் சக்கரவர்த்தி நாடகம், மதன சுந்தரப்பிரசாத சந்தான விலாச நாடகம் என்ற மூன்று தொன்மையான நாடகங்களை 'மூன்று நாடகங்கள்' என்ற பெயரால் வெளியிட்டுள்ளனர்.

முருகர் கதம்பம் என்ற நூலில், முருகன் புகழ்பாடும் வருமுருகாற்றுப்படை, கதிர்காமவேலவன் தோத்திரம், செந்தில் வேலவன் தோத்திரம், பழனி வேலவன் தோத்திரம், பழனி மாலை, கந்தர் காதல், திருச்செங்கோட்டகவல் ஆகிய ஏழுநூல்கள் அடங்கியுள்ளன.

வண்ணத்திரட்டு என்ற நூலில் பல்வேறு புலவர்களால் பாடப்பட்ட 23 வண்ணப்பாடல்கள் அடங்கியுள்ளன. தனிப் பாடற்றிரட்டு இரண்டு பாகங்களாக அச்சாகியுள்ளன. இதன் விளக்கம் யாவரும் அறிந்ததே.

நான் பதிப்பாசிரியராக இருந்து வெளியிட்ட ( குறவஞ்சி, பிள்ளைத்தமிழ், தூது, அம்மானை முதலான சிற்றிலக்கிய நூல்களுள்) தஞ்சை வெள்ளைப்பிள்ளையார் குறவஞ்சியில் இதுவரை தெரியவந்த குறவஞ்சி நூல்களின் பட்டியலும், கமலாலய அம்மன் பிள்ளைத்தமிழ், பரசமய கோளரியார் பிள்ளைத்தமிழ் நூல்களில் பிள்ளைத்தமிழ் நூல்களின் பட்டியலும், நண்ணாலூர் சங்கமேசுவரர் விறலிவிடுதூது நூலில் தூதுப்பட்டியலும், தூரோபதை அம்மானையில் அம்மானைப் பட்டியலும் தந்துள்ளேன். இது பயன்தரத்தக்கது.

சுமிருதி சந்திரிகை எனும் நூல் வடமொழியிலுள்ள 18 சுமிருதிகள் கூறும் பல்வேறு நியதிகளைத் தமிழில் கூறுவது. இது விரிவான முகவுரையுடன் அச்சாகியுள்ளது.

வீரமாமுனிவர் என்ற ஜோசப் பெஸ்கியால் இலத்தீன் மொழியில் இயற்றப்பட்ட பேச்சுவழக்குத் தமிழ் இலக்கணத்திற்கு ஜார்ஜ் வில்லியம் கோன் செய்த ஆங்கில மொழிபெயர்ப்பு நூலின் மறுபதிப்பும் அச்சாகியுள்ளது. இது கொடுந்தமிழ் எனும் பெயருடையது. செந்தமிழ் என்ற நூலும் அவ்வாறே.

இனி மருத்துவ நூல்கள் நிறைய அச்சாகியுள்ளன. முதன்முதலாக அச்சான சரபேந்திர வைத்திய முறைகள் குன்மரோக சிகிச்சை எனும் நூல் மன்னர் சரபோஜியின் மருத்துவச் சாலையில் உபயோகிக்கப்பட்ட அனுபவ சித்தமானமுறைகள் அடங்கியது. வயிற்றில் உண்டாகும் எல்லா நோய்களுக்கும் அனுபவ சித்தமான மருத்துவ முறைகளைக் கொண்டது. இது குணபாடம் சுத்திமுறை ஆகியவற்றுடன் கூடியதோடல்லாமல், தமிழ், தெலுங்கு, ஹிந்தி, சமஸ்கிருதம், ஆங்கிலம், இலத்தீன் முதலான மொழிகளில் பெயரகராதியுடனும் கூடியது. ஆயுர்வேத வைத்திய முறையின் தத்துவங்களும் விளக்கங்களும் இதில் இடம் பெற்றுள்ளன. இந்த வரிசையில் கர்ப்பிணி பாலரோக சிகிச்சை, நயனரோக சிகிச்சை, நீரிழிவு சிகிச்சை, விரணரோக சிகிச்சை, பாண்டுகாமாலை சிகிச்சை, சுவாச காச சிகிச்சை, சிரோரோக சிகிச்சை, சுரரோக சிகிச்சை, வாதரோக சிகிச்சை, க்ஷயம் உளமாந்தை, விஷ வைத்தியம், விரேசன முறையும் அதிசார சிகிச்சையும், பித்த ரோக சிகிச்சை, சன்னிரோக சிகிச்சை, சூலை, குட்டம், மூலம், பித்தம் முதலான ரோகங்களுக்கு மருந்துகள் ஆகியவையும் அச்சாகியுள்ளன. சரபேந்திர வைத்திய ரத்தினாவளி என்ற நூல், மன்னர் சரபோஜி தன் சொந்த உபயோகத்திற்காக தன்வந்திரி மகாலில் பரிசோதித்த அனுபவ சித்தமான மருத்துவ முறைகளைக் கொண்டது. இது மராத்தியினின்றும்

மொழிபெயர்க்கப்பட்டு விரிவான முகவுரையுடனும், அட்டவணை அனுபந்தத்துடனும் அச்சாகியுள்ளது. மருத்துவத்தில் மக்களுக்குப் பெரிதும் பயன்பட்டுவரும் நூல்கள்: மாடுகள் குதிரைகள் இலக்கணமும் வைத்தியமும், போகர்நிகண்டு அட்டவணை, அகத்தியர் 2000, கொங்கணர் சரக்குவைப்பு, தன்வந்திரிவைத்தியம் முதலியன.

சோதிட நூல்களைப் பொறுத்தமட்டில் வராகர் ஓராசாத்திரம், காலச் சக்கரம் ஆகிய இரண்டு நூல்களும், பழைய உரை, விரிவான தெளிவுரை, முன்னுரை காலச்சக்கர தசை முறைப்படி பலன் கூறும் விதம் ஆகியவற்றுடன் அச்சாகியுள்ளன.

சரசுவதிமகால் வெளியீடுகள், வியாபாரமுறையில் பதிப்பிக்கப்படுபவை அல்ல. அரசு பொருளுதவியுடன் அடக்கவிலையில் வெளியிடப்படுபவை. மக்கள் படித்துப் பயன்பெறவேண்டும் என்ற உயர்நோக்குடன் அச்சிடப்படுகின்றன. சுவடிகள் நாளடைவில் உருவிழந்து போகக்கூடும். அவ்வாறு பயனற்றுப் போகுமுன்னமே பதிப்பிக்கப்படல் வேண்டும் என்ற குறிக்கோளும் கருதத் தக்கது.

பொதுவாகவும், சிறப்பாகவும் கூறுமிடத்து, மக்கள் நூல்களைக் கற்று வல்லுநர்களாகவேண்டும் என்ற நோக்கோடு இங்கு நூல்கள் வெளியிடப்படுகின்றன; மக்களும் பயனடைந்து வருகின்றனர்.

# இலக்கணச்சுவடிக்ளின் ஆய்வுப்பதிப்பு

தி.வே. கோபாலையர்

முன்னுரை

சென்ற நூற்றாண்டின் தொடக்கத்திலேயே அச்சுப்பொறி தமிழகத்தில் அறிமுகமானபிறகும் சென்ற நூற்றாண்டின் இடைப்பகுதி தொட்டே ஏட்டுச்சுவடியிலிருந்த இலக்கண நூல்கள் பலவும் அச்சிடப்பெறுவவாயின. மழவை மகாலிங்கஐயர், ஆறுமுக நாவலர், தாமோதரம் பிள்ளை முதலிய சான்றோர் பலரால் சென்ற நூற்றாண்டில் அச்சிடப்பெற்ற இலக்கண நூல்கள் பலவும் ஏனைய பலராலும் பின்னர் அச்சிடப்பெறவே, ஒவ்வொரிலக்கண நூலும் இக்காலத்துப் பல பதிப்புக்களைப் பெற்றுள்ளது. அப்பதிப்புக்களுள் ஆய்வுப்பதிப்பு என்ற சிறப்பிற்குரிய பதிப்புக்கள் மிகச் சிலவே.

சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த தமிழறிஞர் பலரும் தாமே ஏட்டில் எழுதுவதிலும், ஏட்டில் எழுதப்பெற்றவற்றை வாசிப்பதிலும் வல்லவராயிருந்தனர். சிறார்கள் கூடப் பனையோலையைப் பதப்படுத்தி அதன்கண் எழுதப்பழகினர். ஒரே சுவடியைப் பலரும் பெயர்த்து எழுதிக்கொண்டு பாடங்கேட்கும் நிலையே பெரும்பாலும் இருந்தது. இச்சுவடிகளை மூன்று திறத்தனவாகப் பகுக்கலாம். அறிவு குறைந்த நிலையிலுள்ள மாணாக்கர் ஆசிரியரிடம் பாடம் கேட்பதற்காக எழுதிவைத்த சுவடிகள் சில. சுவடியில் எழுதுவது எளிய செயல் அன்று ஆதலின், சுவடியில் எழுதுதலில் பழகியவர் தேவைப்பட்டவருக்குக் கூலிக்காக எழுதிக்கொடுத்த சுவடிகள் சில. கற்று வல்ல சான்றோர்தாம் பின் ஆராய்ச்சி செய்வதற்காகத் தமக்குக் கிட்டிய புதிதில் மேம்போக்கான பிழைகளை நீக்கிச் சுவடிகளில் வரைந்து வைக்க அங்ஙனம் அமைந்த சுவடிகள் சில. பிழைகள்களையப்படாமல் இருந்த மூலச்சுவடியைப் பார்த்து மாணாக்கர் பலரும் படியெடுத்த காலத்து அவர்களுடைய

அயர்வாலும், எழுத்தைத் தெளிவாகப் புரிந்து கொள்ள இயலாமையினாலும் ஏற்பட்ட வழுக்களைக் கொண்ட சுவடிகளே பெரும்பான்மையவாம். அவற்றுள் மாணாக்கருக்கு ஆசிரியர் பாடம் சொல்லியபொழுது அவர் குறிப்பிட்ட அருஞ்செய்திகள் சுவடிகளில் மாணாக்கரால் குறித்துக் கொள்ளப்பட அவையும் மூலத்தின் கூறுகளாக மயங்கிக் கொள்ளப்படும் நிலையும் உண்டு.

இத்தகைய நிலைகளை உடைய சுவடிகள் பலவற்றையும் ஒப்பு நோக்கித் தம்மால் இயன்ற அளவு வழுக்களைக் களைந்து சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த சான்றோர் இலக்கண நூல்கள் பலவற்றை அச்சேற்றினர். சுவடிகளில் மெய்யெழுத்துக்கள் புள்ளியிடப்படமாட்டா; ஒரே கொம்பே நெடிலுக்கும் குறிலுக்கும் பயன்படுத்தப்பட்டது. இடையின ரகரத்திற்கும் உயிர் மெய் நெடில்கள் சில பெறும் ஒலிகளுக்கும் வேறுபாடு புலப்படுத்தப்படவில்லை. சுவடிகளில் இந்நிலையில் பொனபினனே-பேரன்பினனே என்பதனைப் போனபின்னே எனவும், கொதை கொளவாமன்-கோதை கேரளவர்மன் என்பதனைக் கோதை கொள்வர்மன் எனவும் பிறழ உணர்ந்து பதிப்பித்தற்கண் தவறு ஏற்படுதல் இயல்பே. ஏட்டுச்சுவடிகளில் நூற்பா எண்ணையடுத்து நூற்பா, அந் நூற்பாப் பாயிரம் அதன் பதவுரை அல்லது பொழிப்புரை விசேடவுரை, எடுத்துக் காட்டுக்கள் முதலிய யாவும் தொடர்ந்து எழுதப்பெற்றிருக்கும். நிறுத்தக்குறிகள் இடம்பெற மாட்டா; எடுத்துக்காட்டுப் பாடலுக்கும் உரைநடைக்கும் வேறுபாடு புலப்படாது. மேலும் சென்ற நூற்றாண்டின் முற்பகுதி இடைப்பகுதிகளில் மக்களிடையே சங்க இலக்கியம் சிலப்பதிகாரம் முதலிய பழைய செய்யுள்கள் பற்றி அறிவு மங்கியிருந்ததால் சங்க இலக்கியம் முதலியவற்றிலிருந்து குறிப்பிடப்பட்ட மேற்கோள்கள் சிற்சில இடங்களில் பிழைபட எழுதப்பட்டிருத்தலும் கூடும். இவ்வளவு குறைபாடுகளையும் தம்மகத்துக் கொண்ட ஏட்டுச்சுவடிகளைக்கொண்டு முதன்முதல் இலக்கண நூல்களைப் பதிப்பித்த சான்றோர் பலரும் அரும்பாடு பட்டிருக்கிறார்கள். ஏட்டுச் சுவடிகளில் தாமே எழுதிப் பழகிய அப்பெரியோர்கள் ஏட்டில் எழுதிப் பழகாத நம்மைவிட ஏட்டுச் சுவடிகளை விரைந்து பிழையற வாசிப்பதில் வல்லவராயிருந்தமை தேற்றம். ஒற்றைக் கொம்பு இரட்டைக் கொம்பு வரைய வேண்டிய இடங்களில் வரைந்து மெய்யெழுத்துக்களுக்குப் புள்ளியிட்டு நெடில்களுக்கு வரையப்படும் கால்களுக்கும் இடையின ரகரத்திற்கும் வேற்றுமை காட்டி, ஒவ்வொரு செய்தி முடிந்த பின்னரும் முற்றுப்புள்ளியிட்டு முதலில் பதிப்பிக்கப்பெற்ற இலக்கணநூல்களில் உரை, எடுத்துக்காட்டு, பாடல்கள் முதலியன தனித்தனியே பிரித்துப்

பதிப்பிக்கப்படவில்லை எனினும் ஏட்டுச்சுவடிகளான் அல்லலுற்ற கற்சிறாருக்குத் தொல்லையின்றி எளிதில் செய்திகளை வாசித்தறியும் அளவிற்கு அப்பதிப்புக்கள் பெரிதும் பயன்படுவவாயின.

பொதுவாக ஏடுகளிலோ காகிதங்களிலோ எழுதுபவர் விரைவாக எழுதப்பழகுதல் வேண்டும். அங்ஙனம் எழுதும்போது எழுத்துக்களின் வடிவு அளவு தெளிவு என்பனவற்றை உட்கொண்டு எழுதுதல் வேண்டும். வடிவாவது-ஒவ்வொரெழுத்துக்கும் சான்றோர் வகுத்துள்ள வடிவம். அளவாவது பல எழுத்துக்களைத் தொடர்ந்து எழுதும்போது ஒரெழுத்து சிறியதாகவும் பிறிதோரெழுத்து பெரியதாகவும் அமையாமல் யாவும் ஒரு சீரான அளவினவாக இருத்தல். தெளிவாவது விரைந்து எழுதும்போது ஒரெழுத்து பிறிதோரெழுத்தோடு சேர்ந்து வடிவில் வேற்றுமை தோற்றி வாசிப்பவருக்கு இஃது எந்த எழுத்தோ என்று மயங்கும் நிலையைத் தாராமல் ஐயுறவு இன்றி வாசிப்பதற்கு ஏற்பத் தெளிவாக அமைந்திருத்தல். எழுதும்போது வடிவு அளவு தெளிவு விரைவு என்ற நான்கும் உள்ளத்துக் கொள்ளப்படல் வேண்டும். எனினும் இறுதியில் கூறப்பட்டுள்ள விரைவு நிகழும்போது ஏனைய மூன்றும் நெகிழ்க்கப்படுகின்றன.

இந்நிலை ஏட்டுச் சுவடிகள் பலவற்றில் காண்கிறோம். நல்ல காகிதத்தில் மை நிரப்பப் பெற்ற எழுதுகோலால் எழுதும்போதே இக்காலத்தும் பலர் எழுதும் செய்திகளைப் பிழையறப் படித்து உணர இயலாத நிலையில் அவர்தம் எழுத்தமைப்பு உள்ளமை வெளிப்படை. பெரிதும் பழக்கத்தில்லாத இலக்கண நூல்களைச் சிறிதளவே கல்வி பயின்றவர் பொருள் விளங்காமலே பிறிதொரு சுவடியைப் பார்த்துப் படியெடுத்த சுவடியைப் பிழையறுத்து உள்ளவாறு உணர்தற்கண் உள்ள உழைப்பு அளவிடற்பாலதன்று. சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த சான்றோர் பலரும் தாமும் ஏட்டுச் சுவடியில் எழுதிப் பழகிய காரணத்தால்தான் பழுதுபட்ட சுவடிகளைக் கூட ஒரளவு உணர்ந்து பதிப்பித்தற்கண் ஆற்றல் பெற்றிருந்தனர். அவர்கள் தம்மால் உண்மை நிலை காண இயலவில்லை என்று விடுத்த பகுதிகள் இன்றும் உண்மை நிலை காணப் பெறாத நிலையிலேயே உள்ளன. இதற்கு எடுத்துக் காட்டாகப் பரிபாடல் முதற்பாடலில் உள்ள அராகங்களையும் வீரசோழியத்தில் உள்ள எட்டாரைச் சக்கரத்தையும் குறிப்பிடலாம்.

பத்திப்பிரிப்பு எதுவும் இன்றிப் பதிப்பிக்கப்பட்ட பதிப்புக்களை அடுத்துத் தேவையான இடங்களிலெல்லாம் பத்திகளைப் பிரித்தும், உரைநடை மேற்கோள்களையும், செய்யுள் மேற்கோள்களையும் வேறுபிரித்துக் காட்டியும், சுருக்கமான முன்னுரை வரைந்தும் இலக்கண நூல்களைப் பதிப்பிக்கத் தொடங்கினர்.

இலக்கண நூலுக்கு விரிவான பதிப்புரை, நூலாசிரியர் வரலாறு, உரையாசிரியர் வரலாறு, நூற்சிறப்பு, உரைநயம் முதலியவற்றை முதற்கண் வரைந்து நூற்பாக்களுக்குத் தலைப்பிட்டு, நூற்பா உரைப்பாயிரம், பதவுரை அல்லது பொழிப்புரை, எடுத்துக்காட்டு, பிறர் கருத்தை மறுத்தல் போல்வனவற்றைத் தனித்தனிப் பத்திகளில் அமைத்து, எடுத்துக்காட்டுப் பாடல்கள் எந்த நூல்களைச் சேர்ந்தன என்பதனைக் குறிப்பிட்டு மறுக்கப்பட்ட கருத்து யாருடையது, அஃது எங்குள்ளது என்பதனை அடிக்குறிப்பில் தந்து, இறுதியில் விளங்கா மேற்கோள் அகராதி முதலிய பிற்சேர்க்கைகளுடன் நன்னூல்-சங்கரநமசிவாயருரையின் இரண்டாம் பதிப்பு சிறந்த எடுத்துக் காட்டாகத் திகழ்கிறது.

ஐயரவர்கள் பதிப்பித்த இலக்கண நூல்கள் புறப்பொருள் வெண்பாமாலை, நன்னூல் மயிலைநாதர் உரை, நன்னூல் சங்கர நமசிவாயர் உரை, தமிழ் நெறி விளக்கம் என்பனவேயாகும். இவை ஏனைய இலக்கண நூல்களை யாங்கனம் பதிப்பித்தல் வேண்டும் என்பதற்கு முன்னோடியாக உள்ளன. இன்று பெரும்பாலான தமிழ் இலக்கண நூல்கள் பதிப்பில் வந்துவிட்டன. தொல்காப்பியம் மூன்று அதிகாரங்களுக்கும் பல பதிப்புக்கள் வந்துள்ளன. அவற்றுள், சுன்னாகம் கணேசையர் பதிப்பு மிகச் சிறந்த பதிப்பு என்று சான்றோர் பலரும் கொள்வர். அவருடைய பதிப்பில் எடுத்துக்காட்டுச் சொற்றொடர்கள் வந்துள்ள பாடல்கள் பலவும் எவ்வெந் நூலைச் சார்ந்தவை என்பது பெரும்பாலும் சுட்டப்பட்டுள்ளது. எனினும் ஐயர் பதிப்பை ஒத்த நிறைவு அதன்கண் இல்லை என்றே கருத வேண்டியுள்ளோம். ஒரு சில எடுத்துக் காட்டுக்களைக் காண்போம்.

1. 'ஒகார இறுதிக்கு ஒன்னே சாரியை' தொ. எ. 180

சிறுபான்மை இன் சாரியை வரும் என்று கொள்க. 'ஒன்றாக நின்ற கோவினை அடக்க வந்த' எனவரும்... ஒன்னாது நின்ற, கோவினை அடர்க்கவந்து' சிந். 316 அடி 2-3 என்பதே உண்மையான பாடம். இதனை ஐயர் அவர்கள் சிந்தாமணிப்பதிப்பில் பிரயோக விளக்கம் என்ற தலைப்பில் குறிப்பிட்டுள்ளார்.

2. 'மின்னும் பின்னும் பன்னும் கன்னும்'
அந்நாற் சொல்லும் தொழிற்பெயர் இயல'

-தொ. எ. 345.3

இந்நூற்பா உரையுள், வரலாறு குறிப்பிடும் இடத்து 'மின்னுச் செய்விளக்கத்துப் பின்னுப் பிணியவிழ்ந்த' எனவும், மின் என்பது மன்னுதற் றொழிலும், 'மின்னு நிமிர்ந்தன்ன' என மின்னெனப் படுவதோர் பொருளும் உணர்த்தும் எனவும் செய்திகள் காணப்படுகின்றன.

மேற்கோள் குறிக்குள் அமைக்கப்பட்டுள்ள 'மின்னுக்....யவிழ்ந்த', 'மின்னு நிமிர்ந்தன்ன' என்ற தொடர்கள் எவ்வெந்நூலைச் சார்ந்தன என்ற செய்தி குறிப்பிடப்படவில்லை.

இவற்றுள் 'மின்னுநிமிர்ந்தன்ன' என்ற தொடர் புறநானூறு 57 ஆம் பாடல் எட்டாம் அடியில் உள்ளது.

'மின்னுச்செய் விளக்கத்து'என்ற தொடர் கலித்தொகை 41ஆம் பாடலின் 6ஆவது ஆடியில் 'கொடிவிடுபு இருளிய மின்னுச் செய்விளக்கத்து' என அமைந்துள்ளது.

'பின்னும் பிணியவிழ்ந்த' என்ற தொடர் யாப்பருங்கலக்காரிகை 41ஆம் காரிகை உரையுள், பகர மெய் வருக்க மோனைக்கு எடுத்துக்காட்டாகக் குறிக்கப்பட்டுள்ள 'பகலே பல்பூங்கானல்' என்ற பாடலின் மூன்றாவது அடியாகிய 'பின்னுப்பிணியவிழ்ந்த நன்னெடுங்கூந்தல்' என்பதன்கண் உள்ளது. வெவ்வேறிடங்களிலுள்ள இரண்டு தொடர்களையும் இணைத்து, 'மின்னுச் செய்விளக்கத்துப் பின்னுப்பிணியவிழ்ந்த' என்று ஒரே மேற்கோள் குறிக்குள் நாற்சீர்கொண்ட செய்யுளடிபோல அமைந்திருத்தலை அப்பதிப்பிலும் காண்கிறோம்.

3. கதழ்வும் துனையும் விரைவின் பொருள' தொ.சொ. 315

இதன்பொருள்:- 'துனைபரி நிவக்கும் புள்ளின்மான' எனவும்... விரைவாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு-என்று பதிப்பிக்கப்பட்டுள்ளது.

'துனைபறை நிவக்கும் புள்ளினம் மான' -மலைபடுகடாம் அடி 55 என்பதே உண்மையான பாடம்.

4. 'பேநா முருமென வருஉம் கிளவி
யாமுறை மூன்று மச்சப்பொருள' தொ. சொ. 365

........ நா நல்லார்' எனவும் .... அச்சமாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு என்று பதிப்பிக்கப்பட்டுள்ளது.

நூற்பாவும் சொற்பிரிப்பின்றிச் சந்தி சேர்த்தே பதிப்பிக்கப்பட்டநிலையில் உரிச்சொல் பேம், நாம், உரும் என்பன நூற்பாவைக் கண்டவுடனேயே அறியும் நிலையில் இல்லை. எடுத்துக்காட்டாகிய 'நாநல்லார்' என்பதும் மயக்கம் தருவதாகவே உள்ளது.

எடுத்துக்காட்டு 'நாமநல்லவரா' அகம். 72 அடி 14 என்பதாகும். இதனைச் சொல்லதிகார நச்சினார்க்கினியர் உரையாலும் தெளியலாம்.

5. 'இனிதுறு கிளவியும் துனியுறு கிளவியும்
உவம மருங்கில் தோன்றும் என்ப'-தொ.பொ. 303.

துனியுறு கிளவிக்குக் 'கராத்தின் வெய்யவெந்தோள்' (ஐந். ஐம். 24) என்பது எடுத்துக்காட்டாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. கராம்-முதலை என்ற அடிக்குறிப்பும் காணப்படுகிறது. சுவடிகளில் காரம் என்பதும் கராம் என்பதும் ஒரே வடிவில் எழுதப்படும் எனினும், இப்பாடலின் ஈற்றடியாகிய இதனை ஈற்றயலடியாகிய 'சார்தற்குச் சந்தனச் சாந் தாயினேம் இப்பருவம்' என்பதனோடு கொண்டு நோக்க, 'காரத்தின் வெய்ய எந்தோள்' என்பதே உண்மைப் பாடமாகக் கொள்ளத் தக்கமை புலப்படும்.

6. 'வேறுபட வந்த உவமத் தோற்றம்
கூறிய மருங்கின் கொள்வழிக் கொளாஅல்'-தொ.பொ. 307.

இந்நூற்பா உரையுள் 'வையங்காவலர்' என்ற எட்டாம் புறப்பாடல் இடம் பெறுகிறது. சந்திரனைச் சேரமன்னனோடு ஒப்பிடுவதாகப் பேராசிரியர் கொள்ளும் இப்பாடலில் சந்திரன் விலங்கு செலல் மண்டிலம் என்று குறிக்கப்படவேண்டுவதாகும். சூரியனைச் சேரமன்னனோடு ஒப்பிடுவதாகக் கொள்ளும் புறநானூற்று உரைக்குரிய 'வீங்கு செலல் மண்டிலம்' என்ற பாடத்தை இங்கும் கொண்டுள்ளமை பொருந்துவதன்று. பல்லாண்டுக்காலம் பண்டிதத் தேர்வுக்குப் பாடம் சொல்லிய பேரறிஞராகிய கணேசையர் பதிப்பின்கண்ணும் மேற்கோள் செய்யுள்களைச் சுட்டுமிடத்து இத்தகைய தவறுகள் நிகழ்கின்றன என்பதைச் சுட்டுவதன் வாயிலாக இலக்கணச்சுவடிகளில் ஆய்வுப்பதிப்பினைக் கொண்டு வருபவர்கள் மிகுந்த எச்சரிக்கையுடன் மேற்கோள் எடுத்துக்காட்டு என்ற நிலையில் வரும் பாடலடிகளைக் கவனிக்கவேண்டும் என்பதனை உணர்கிறோம்.

நச்சினார்க்கினியர் தொல்காப்பியம், கலித்தொகை, பத்துப்பாட்டு, சீவகசிந்தாமணி என்பனவற்றிற்கு உரைவரைந்த

சான்றோராவர். தொல்காப்பிய உரைக்கு ஏனைய மூன்று நூல்களுக்கும் வரைந்த உரை உதவும். அவர் இலக்கியத்தில் வரைந்த உரைக்கும், இலக்கணத்தில் வரைந்த உரைக்கும் வேறுபாடு இருக்குமாயின், இலக்கண உரையில் அப்பகுதி வருமிடத்து அவ்வேறுபாட்டை அடிக்குறிப்பில் சுட்டுதல் ஆய்வுப் பதிப்புக்கு இன்றியமையாததாகும்.

*1.* நச்சினார்க்கினியர் முல்லை. குறிஞ்சி முதலிய பெயர்கள் உரிப்பொருள் அடியாக ஏற்பட்டவை என்னும் கருத்தினர். அதற்கேற்ப 'மாயோன்மேய' தொ.பொ.5. என்ற நூற்பாவுரையுள்,

> இனி முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற முறை என்னையெனின். இவ்வொழுக்கமெல்லாம் இல்லறம் பற்றிய ஒழுக்கமாதலின், கற்பொடு பொருந்திக் கணவன் சொற்பிழையாது இல்லிருந்து நல்லறம் செய்தல் மகளிரது இயற்கை முல்லையாதலின் அதுமுற்கூறப்பட்டது. எனவே முல்லை என்ற சொற்குப் பொருள் இருத்தலாயிற்று; 'முல்லை சான்ற முல்லையம்புறவின்' என்பனவாகலின். புணர்தலின்றி இல்லறம் நிகழாமையின் புணர்தற்பொருட்டாகிய குறிஞ்சியை அதன்பின் வைத்தார். இதற்கு உதாரணம் சிறந்தது. 'கருங்காற் குறிஞ்சிசான்ற வெற்பணிந்து என்பது கரு'

என்று வரும் பகுதியைச் சற்று நோக்கவேண்டும். தாம் கொண்ட கொள்கையை நிறுவுவதற்கு உரிய மேற்கோள் தரும் இடம் இது.

> முல்லைசான்ற புறவணிந்து ஒருசார்-மதுரை-அடி 285
> கருங்கால் குறிஞ்சி சான்ற வெற்பணிந்து-மதுரை-அடி 300
> மருதஞ்சான்ற தண்பனை சாற்றி ஒருசார்-மதுரை-அடி 270
> நெய்தல் சான்ற வளம்பல பயின்று-மதுரை- அடி 325

என்ற மதுரைக் காஞ்சியடிகளில் நச்சினார்க்கினியர் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற நான்கு சொற்களுக்கும் இருத்தல், புணர்ச்சி, ஊடல், இரங்கல் என்ற பொருள்களே தந்திருப்பதனை நோக்க, 'இதற்கு உதாரணம் 'கருங்காற் குறிஞ்சி சான்ற வெற்பணிந்து' என்பது என்பதே நச்சினார்க்கினியர் கருத்தாகிய பாடமாக இருத்தல் வேண்டும். 'இறந்தது,கரு' என்ற இரு சொற்களும் ஏடெழுதியோர் பின்னர்ச் சேர்த்த சொற்களாதல் வேண்டும். தொல்காப்பியத்துக் காணப்படும் பொருளும், மதுரைக் காஞ்சியில் காணப்படும் பொருளும் வேறுவேறாயிருப்பதனை ஐயரவர்கள் மதுரைக் காஞ்சி 300ஆம் அடி உரையின் அடிக்குறிப்பாகத் தந்திருக்கவும், பொருளதிகார நச்சினார்க்கினியத்தின் பதிப்பாசிரியராகிய கணேசையர் அவர்கள் இதுபற்றி எதனையும் குறிப்பிடாமலும்

'கருங்காற்குறிஞ்சி சான்றவெற் பணிந்து' என்பதன் இருப்பிடம் குறிப்பிடாமலும் விடுத்தமை வியப்பாக உள்ளது.

2. 'வரைதல் வேண்டித் தோழி செப்பிய
புரைதீர் கிளவி புல்லிய எதிரும்'- தொ. பொ. 107

புரைதீர் கிளவி-தலைவன் உயர்விற்கு ஓயாது இயற்பழித்து உரைக்கும் கிளவி. அது 'பாடுகம் வாவாழி தோழி' என்னும் குறிஞ்சிக்கலியுள் (கலி 41)

'இலங்கும் அருவித்தே......பொய்த்தான்மலை' எனத் தோழி இயற்பழித்த வாய்பாட்டான் வரைவு கடாவ, அதனை உடம்பட்டுப் பழித்தற்கு உடம்படாதான் 'பொய்த்தற்குரியனோ.....தீத்தோன்றியற்று' எனத் தலைவி இயற்படமொழிந்து எதிர்மறுத்தவாறு காண்க என்பது நச்சினார்க்கினியர் உரை.

கலித்தொகை உரையுள் தலைவி இயற்பழித்ததாகவும் தோழி இயற்படமொழிந்ததாகவும் நச்சினார்க்கினியர் உரை செய்துள்ளார். இதுபற்றித் தொல்காப்பிய உரையுள் அடிக்குறிப்பும் எதுவும் இல்லை. நச்சினார்க்கினியர் உய்த்துக் கொண்டுணர்தல் என்ற உத்திவகையான் இருவகையாகப் பொருள் செய்தல் பொருளதிகாரத்திலேயே,

'மாய்பெருஞ்சிறப்பின் புதல்வன் பெயரத்
தாய்தப வருஉம் தலைப்பெயல் நிலையும்'-தொ.பொ. 79
வருத்த மிகுதி சுட்டுங் காலை
உரித்தென மொழிப வாழ்க்கையுள் இரக்கம்'-தொ. பொ. 226 .
உண்டற்குரிய அல்லாப்பொருளை
உண்டனபோலக் கூறலும் மரபே'-தொ. பொ. 213.
'சுரமென மொழிதலும் வரைநிலை இன்றே'-தொ. பொ. 216.

என்றாற் போலக் காணப்படுதலின், வரைதல் வேண்டித் தோழி செப்பிய புரைதீர் கிளவி புல்லிய எதிரும்' என்ற தொடருக்கு 'வரைதல் வேண்டி (தலைவி) செப்பிய புரைதீர் கிளவிக்குத் தோழி புல்லிய எதிரும்' என்றும் பொருள் கொண்டு தலைவி இயற்பழிக்கத் தோழி இயற்பட மொழிதற்கண்ணும் தலைவியின் கூற்று நிகழும் என்று குறிப்பிடப்பட்ட தொடர் நெகிழ்க்கப்பட்டிருக்கலாம் போலும். பெரும்புலவர்கள் பதிப்பித்த பதிப்புக்களில்கூட விடுபட்டுள்ள இத்தகைய அடிக்குறிப்புகள் இலக்கணச் சுவடிகளின் ஆய்வுப் பதிப்புக்கு இன்றியமையாதவை என்பதனை உணர்கிறோம்.

இனி, இந்நூற்றாண்டில் வெளிவந்த இலக்கணப் பதிப்புக்கள் முற்பட்ட காலப் பதிப்புக்களைவிடச் செப்பம் மிகுதியும் நிறைந்தவை. இப்பதிப்புக்களில் காணப்படும் நிறுத்தக் குறியீடுகள் பெரிதும் பொருள் தெளிவை நல்குகின்றன. எனினும் சிற்சில இடங்களில் நிறுத்தக் குறியீடுகள் பிறழ இடப்படுவதனால் பொருள் மயக்கம் தருதலையும் காண்கிறோம்.

யா, பிடா, தளா என்ற பெயர்கள் யாஅங்கோடு, பிடாஅங்கோடு, தளா அங்கோடு என்றாற் போல வல்லெழுத்து மிகாது மெல்லெழுத்துமிக்கு முடியும் என்று கூற

> 'வல்லெழுத்து மிகினும் மானமில்லை'-தொ. எ. 230. . இஃது
> எய்தியது இகந்துபடாமல் காத்தது, அகரத்தோடு
> மெல்லெழுத்தேயன்றி வல்லெழுத்தும் பெறும் என்றலின் என்று
> நூற்பாவுக்குப் பாயிரம் வரைந்து யா அங்கோடு முதலாக
> எடுத்துக் காட்டும் தந்த நச்சினார்க்கினியர் 'மானமில்லை.
> என்றதனால் இம்மூன்றற்கும் உருபிற்குச் சென்ற சாரியை (எ.
> 173) பொருட்கண் சென்றுழி இயைபுவல்லெழுத்து வீழ்க்க
> யாவின் கோடு, பிடாவின் கோடு, தளாவின் கோடு எனவரும்.
> சாரியை பெறவே அகரம் வீழ்ந்தது. இன்னும் இதனானே யா
> அத்துக்கோடு என அத்துப் பெறுதலும் கொள்க'

என்று குறிப்பிட்டார்.

யா, பிடா, தளா என்பன ஓரெழுத்து மொழியும் குறியதன்முன்னர்வரும் ஆகார ஈற்று மொழியுமாகும்.

> 'வேற்றுமைக் கண்ணும் அதனோரற்றே' தொ. எ. 225
> 'குறியதன் முன்னரும் ஓரெழுத்து மொழிக்கும்
> அறியத் தோன்றும் அகரக்கிளவி'-தொ. எ. 226.

என்ற நூற்பாக்களால் யா, பிடா, தளா என்பன அகரமும் வல்லெழுத்தும் பெற்றுப் புணரும் எனினும் மெல்லெழுத்துப் பெற்றுப்புணர்தல் பெரும்பான்மை. இந்த யா,பிடா தளா என்பன பற்றிய நூற்பாக்களைக் 'குறியதன் முன்னரும்'என்ற நூற்பாவை அடுத்து வைத்தலே முறை. அங்ஙனம் வையாமல் இரா, நிலா என்பன பற்றிய நூற்பாக்களை அடுத்து அமைத்து இவை பற்றிய நூற்பாக்களைத் தொல்காப்பியனார் பின்னரே அமைத்துள்ளார். இதனை ஒரு காரணமாகக் கொண்டு, இரா, நிலா என்பன இராவிற் கொண்டான், நிலாவிற்கொண்டான் என உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்த்தலை ஈண்டுக் குறிப்பிடுகிறார்.

இந்நூற்பா உரையுள் 'அகரமும் வல்லெழுத்தும் பெறுதலின், யாமரக்கிளவி என்பதனைக் குறியதன் முன்வரும் என்பதனை பின்னாவையாததனால், இராவிற் கொண்டான். நிலாவிற் கொண்டான் என உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க-எனச் சொற்றொடர் அமைக்கப்பட்டிருத்தல் வேண்டும்.

கணேசையர் அவர்கள் பதிப்பில் 'இன்னும் இதனானே யாஅத்துக் கோடு, பிடாஅத்துக் கோடு, தளா அத்துக்கோடு என அத்துப் பெறுதலும் கொள்க,அகரமும் வல்லெழுத்தும் பெறுதலின் என்று ஒரு பத்தி அமைக்கப்பெற்று 'யாமரக்கிளவி என்பதனைக் 'குறியதன் முன்னரும்.....வீழ்க்க ... 'என்று காணப்படுகிறது. இத்தகைய நிறுத்தக் குறியீடுகளும் பத்திப்பிரிவும் பொருள் மயக்கம் தருவதனைக் காணலாம்.

நிறுத்தக் குறியீடுகள் செம்மையாக அமையின் பொருள் தெளிவினைத் தருகின்றமை போலவே தவறாக அமையின் பொருள் மயக்கம் தரும் என்பதற்கு இலக்கணத் தொடர்பான ஓரிரெடுத்துக் காட்டுக்களைக் காண்போம்.

கலித்தொகையின் அனந்தராமையர் பதிப்பு சான்றோர் பலரும் போற்றும் தகுதியுடையது.

1. இது நான்குறுப்பான் வந்ததேனும், தேவபாணியான் வருதலின் முதனிலை ஒத்தாழிசையாகாது. 'ஏனை ஒன்றே, தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே என்பதனால் தேவர்ப் பராயிற்றேனும் வண்ணகமுமாகாது எண்ணும் சின்னமும் இழத்தலின் ஆகலின் இஃது எண்ணிடையிட்டுச் சின்னம் குன்றிய கொச்சக ஒருபோகுமாயிற்று.

'இது நான்குறுப்பான் வந்ததேனும்; தேவபாணியான் வருதலின் முதனிலை ஒத்தாழிசையாகாது; 'ஏனை ஒன்றே, தேவர்ப்பராஅய முன்னிலைக் கண்ணே' என்பதனான். என்றே இப்பகுதி நிறுத்தக்குறியீடு அமைக்கப்படல் வேண்டும். இது முதனிலை ஒத்தாழிசை ஆகாமைக்குக் காரணம் 'ஏனை ஒன்றே, தேவர்ப்பராஅய முன்னிலைக் கண்ணே என்பது'. 'ஏனை.......கண்ணே' என்பது தேவர்ப் பரா அவுதற்குக் காரணம் அன்று. ஆதலின் நிறுத்தக்குறியீடு தவறிய வழிப்பொருள் புலப்பாட்டில் மயக்கம் உண்டாதல் தேற்றம்.

'இது ஏனை ஒன்று எனப்பட்ட தேவபாணி ஒத்தாழிசையாகலான் உறுப்பு ஒன்றியும் முதனிலை

ஒத்தாழிசையாகாது. 'தொ. பொ. 461. என்ற பேராசிரியர் உரையும் இதற்கு அரண் செய்யும்.

கலி 52ஆம் பாடலின் நச்சினார்க்கினியர் உரை ஈற்றில் அமைந்ததோர் இலக்கணக்குறிப்பை நோக்குவோம்.

'புதுவை போலும் நின்வரவும் இவள்
வதுவைநாண் ஒடுக்கமும் காண்குவல்யானே'-கலி 52-24-25

உரை:- அதற்குக் காரணம் என்னெனின், அப்பொழுது நீ புதியாய்போல வரும் நின் வரவையும் இவன் கல்யாணத்தில் தோன்றிய நாணால் ஒடுங்கியிருக்கும் ஒடுக்கத்தையும் யான் காண்பேனாதலால் என்றார். ஏகாரம் பிரிநிலை.

இவர்கள் முன்னர்க் களவொழுக்கம் ஒழுகியவாறும் அக்காலத்து அவன் புதியனாக நடித்தவாறும் இவள் ஒடுங்கியிருந்தவாறும் பிறர் அறியர்ராகலின், இத்தாழிசைகள் 'பொழுதும் அறம் காப்பும் என்றிவற்றின்' என்னும் பொருளியற் சூத்திரத்திற்கூறிய காப்பின் வழுவுணர்த்தியன"

'ஏகாரம் பிரிநிலை, இவர்கள்.... அறியாராகலின் ஏகாரம் பிரிநிலை என்பதற்குரிய காரணத்தை இவன்அறியராகலின் என்ற சொற்றொடர் உணர்த்தின ஆதலின் ஏகாரம் பிரிநிலை என்பதனை அடுத்துக் காற்புள்ளியும், 'இவன்.......... அறியாராகலின்'என்பதை அடுத்து முற்றுப் புள்ளியும் இடப்பட்டு இவை உரைப்பகுதியை அடுத்த பத்தியாக அமைதல் வேண்டும். இத்தாழிசைகள்....வழுவுணர்த்தின என்பது தனிச் செய்தியாதலின் அது தனிப் பத்தியாக இருத்தல் வேண்டும்.

பொருள் புலப்பாட்டிற்கு ஏற்ப நிறுத்தக் குறிகள் வழாது அமைக்கப்பட வேண்டுவதன் இன்றியமையாமை இது காறும் விளக்கப்பட்டது.

இனி மிகுதியும் பழக்கத்திலில்லாத வீரசோழிய நூல் பதிப்புப் பற்றி ஒரு சில நோக்குவோம். பெரும்பான்மையான சுவடிகள் ஒரே சுவடியின் படிகள் ஆதலின் ஒரே வகைப்பட்ட பிழைகள் சுவடிகள் பலவற்றில் காணப்படுகின்றன. 22ஆம் காரிகை முதலடி 'ஈறாம் லகரம் மதவந் தெதிர்ந்திடில்'

லகர ஒற்றிற்று நிலைமொழிப் பதத்தின்பின்னர் வருமொழி முதல் மகார நகாரங்கள் வந்து புணர்ந்தால் அந்த லாகரமானது னகாரமாம். என்பது உரை.

'லகார இறுதி னகார இயற்றே'-தொ. எ. 332 .
னகார இறுதி வல்லெழுத் தியையின்
றகார மாகும் வேற்றுமைப் பொருட்கே'-தொ. எ. 332 .
'மெல்லெழுத்தியையின் னகாரமாகும்'-தொ. எ. 336 .

என்பதே விதியாகலின் -காரிகையின் முதலடி 'ஈறாம் லகாரம் மந வந்து எதிர்ந்திடில்'என்றே இருத்தல் வேண்டும். சுவடிகளில் இங்ஙனம் இல்லையே என்பது கருதித் தவறான பாடத்தைத் கொள்ளுதல் ஆராய்ச்சிப் பதிப்பு ஆகாது. காரணம் காட்டித் திருத்தம் செய்வதில் தவறு இல்லை.

58ம் காரிகை, இக்காரிகையில் ஷகரம் ககரமாதலும், க்ஷ இரு ககரமாதலும், ஷ ஒரோவழி கெடுதலும் ஒரோவழி யகரமாகவும் வகரம்ாகவும் ககரமாகவும் ஆதலும் கூறப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| பரிஷ்காரம் | பரிக்காரம் | ஷ் கெட்டு க் வந்தது |
| தக்ஷன் | த்க்கன் | க்ஷ் கெட்டு இரு ககர ஒற்று வந்தன |
| ஹரன் | அரன் | ஹ் என்ற ஒற்று நீங்கியது. |
| வைதேஹி | வைதேவி | ஹ் வ் ஆயிற்று |
| மஹிதலம் | மயிதலம் | ஹ் ய் ஆயிற்று |
| மஹிமை | மகிமை | ஹ் க் ஆயிற்று |

'முதலொற்று இரட்டிற்கும் முப்பத் தொன்றெய்திடின் முன்பின் இஃது' 'முப்பானுறு மூன்றதனுக்கு லோபமும் கவ்வும் அறைவர்களே' என்று பதிப்பில் உள்ளது.

உவே. சா. நூல்நிலையச் சுவடியில் இக்காரிகையின் முதலடி, 'முதலொற்று இரட்டிக்கும் முப்பத்தொன்றெய்திடில், முப்பத்தொன்றே' என்று உள்ளது.

உரையில் 35 ஆம் எழுத்தாகிய க்ஷ என்பதும் குறிக்கப் பெற்றிருத்தலானும் அதனைக் கூறாதுவிடுத்தல் குன்றக் கூறலாமாகலானும் காரிகை 'முதலொற்றி ரட்டிக்கும் முப்பத் தொன்றைந் தெய்தின் முப்பத்தொன்றே' என்று முதலடியைக் கொண்டிருத்தல் வேண்டும். ஹ் - வ் ஆதலுக்கு எடுத்துக்காட்டு உள்ளதால் - ஈற்றடியில் - யவ்வொரு என்பது யவவொடு என்றே இருத்தல் வேண்டும். அதற்கேற்பக் காரிகையின் ஈற்றடி 'முப்பானுறுமூன்றதனுக் குலோபமும் யவவொடு கவ்வு மறைவாறே' எனக் காரிகை யாப்பிற்கு ஏற்ப அமைந்ததாதல் வேண்டும்.

சுவடிகளில் முழுமையாகக் காணப்படாவிடினும் உரை, எடுத்துக்காட்டு இவற்றை நோக்கிக் காரணம் காட்டிக் காரிகையைச் செப்பம் செய்து கோடல் தவறில்லை. இதுவும் ஆராய்ச்சிப் பதிப்புக்கு ஏற்றதே.

தேற்றுதல் என்ற சொல் தெளிவித்தல் பொருளிலும், தெற்றுதல் என்ற சொல் மாறுபடுதல் பிழை செய்தல் முதலிய பொருள்களிலும் வருவதனைக் காண்கிறோம். எனவே பிழைசெய்தல் என்ற பொருளைக் குறிக்குமிடத்து இருப்பது பிழையாகும். சுவடிகளில் தெற்றுதல், தேற்றுதல் இரண்டும் ஒரே வடிவினவாக எழுதப்பட்டிருத்தலின் பொருள் நோக்கத் தெற்றுதல் என்ற சொல்லையே கோடல் வேண்டும். எனவே 82 ஆம் காரிகையில்

'ஈரெட்டு மூவைந்து மாமுடல் தேற்றவும், ஈற்றுவண்ணம்
தே ரிட்டு மூன்றா முடலொடு தேற்றவும்
என்ற பகுதியில் ஈரிடத்தும் தெற்றவும் எனவே பாடம்
கொள்ளப்படல்வேண்டும்.

காரிகை எண். 101.

'பிண்டம் மேய பெருஞ் சோற்று நிலையும் வென்றோர் விளக்கமும்
தோற்றோர் தேய்வும்
குன்றாச் சிறப்பின் கொற்ற வள்ளையும் ' - தொ. பொ. 63.3
என்பதனை உட்கொண்டு.

'நிரவும் வழிவொடு சோற்றுநிலை கொற்றவர் மெலிவு' என்ற அடி அமைக்கப்பட்டுள்ளது.
'கொற்றவள்ளையாவது பகைவர்நாடு அழிதற்கிரங்கித் தோற்றோனை விளங்கக் கூறும் வள்ளைப்பாட்டாகும் (நச்)
தொல்காப்பிய அடிகளை நோக்க 101 ஆம் காரிகையின் மூன்றாமடி 'நிரவும் அழிவோடு தோற்றுநிலை தோற்றவர் மெலிவு' என்றே இருத்தல் வேண்டும். இத்தகைய சிறுபிழைகள் ஏடெழுதுவோரால் ஏற்பட்டிருத்தல் இயல்பு ஆதலின், இத்தகைய பிழைகளைக் காரணம் காட்டி நீக்குதற்கண் தவறு இல்லை. 116 ஆம் காரிகை உரை

அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவிற்கு. உறுப்பாகிய தரவு அளவடியான் வரும். பிறபாவின் தரவிற்கு அடிவரையறை இல்லை.

யாப்பருங்கலக் காரிகைச் செய்தியை ஒட்டி அளவடியான் என்பது ஆறடியான் என்றே இருத்தல் வேண்டும். எடுத்துக்காட்டுப் பாடல்கள் மூன்றும் ஆறடித்தரவு உடையனவாயிருத்தலும் இத்திருத்தத்துக்கு அரண் செய்யும்.

யாப்பருங்கலக் காரிகைக்குப் பின்னர்த் தோன்றிய வீரசோழியச் செய்யுளியலில் 'இருமூன்றடியே, தரங்கக்கும் வண்ணகக்கும் தரவாவது' - காரிகை 42

இங்ஙனம் வீரசோழிய எடுத்துக்காட்டுப் பாடல்கள் பல பெருந்தொகையில் காணப்படும் திருந்திய பாடங்களால் திருத்திக் கொள்ளப்படும் நிலையில் உள்ளன. ஒரு சில நோக்குவோம்.

*118 ஆம் காரிகை உரை*

திருந்திலைய இலங்குவேல் திகழ்தண்தார்க் கதக்கண்ணன்
விரிந்திலங்கும் அவிர்பைம்பூண் தடமார்பன் வியன்களத்து
முருந்திறைஞ்சு முத்திற்கு முட்டியெல்லாம் தனித்தனியே
அருந்திறல்மா மாமன்னர்க்(கு) அழுவனவும் போன்றனவே.
முரிந்திறைஞ்சு முத்துதிர்க்கும் முடியெல்லாம் தனித்தனியே -
பெருந்தொகைப் பாடம்

அடலமுங் கழற்செவ்வேல் அலங்குதார்ச் செம்பியன்றன்
கெடலருங் கிளர்வேங்கை எழுதத்தம் உயிரோம்பாது
உடல்சமத்துக் குத்தெரிந்த ஒன்னாப்பல் லரசர் தம்
கடகஞ்சேர் திரள்முன்கை இற்றோட வைசினவே

அடல்வணங்கு அழற்செவ்வேல் அலங்குதார்ச் செம்பயன்றன்
கெடலருங் கிளர்வேங்கை எழுதித்தம் உயிரோம்பாது
உடல்சமத்துக் குருத்தெழுந்த ஒன்றாப்பல்லரசர் தம்
கடகஞ்சேர் திரள்முன்கை கயிற்றோடும் வைகினவே

-பெருந்தொகையின் பாடம்

அருமொழிதன் கோயில் அடலாரசர் பிண்டித்
திருமகட்குக் கொடிகள் தேய்த்த -பருமணிகள்
ஒத்த தமுதனைய ஒண்ணுதலார் மென்மலராம்
பாதத்தி னூன்றும் பரல்
திருமருட் கொடிகள் தேய்த்த - பெருந்தொகையின் பாடம்

இங்ஙனம் பிற நூல்களால் திருந்தக்கூடிய பாடங்கள் வீரசோழியத்தில் பல உள.

115 ஆம் காரிகை உரை எடுத்துக்காட்டு

இந்திரன் ஏறக் களிறிந் தனரே, முந்திதழ்ப் பூவின் முடிசூ டினரே
மந்திரக் கோடி மனத்தளித்தனரே, சுந்தரக் கோபுரச் சுருதிவாய்
மையரே
முந்திதழ்ப் பூவின் முடிசூட்டினரே, மந்திரக் கோடி
மணத்தளித்தனரே, சுந்திர சோழச் சுருதிவாய்மையரே

என்ற பாடங்கள் ஏடெழுதுவோரால் பிறழப் படித்து முன்கண்டவாறு எழுதப்பட்டிருத்தல் கூடும். சோழ என்பதனைக் கோபுர எனப் பிறழ உணர்தல் எழுத் தமைப்பைப் படிக்கும்போது ஏற்படக்கூடியதே.

இங்ஙனமே வீரசோழியப் பொருட்படலத்து உரையில் காணப்படும் குறிஞ்சி நடையியல் என்ற நீண்ட பாடலிலுள்ள செய்திகள் பிறழ்ந்து இருத்தலும் குறிஞ்சி நடையியற்செய்திகள் நெய்தல் நடையியற் செய்திகளோடு மயங்கியிருத்தலும் கூர்ந்து நோக்கின் புலப்படும். ஆய்வுப் பதிப்பில் இவற்றை முறைப்படுததி அமைக்க வேண்டுதலும் ஒரு கடப்பாடாகும். சுவடிகளில் காணப்படாவிடினும் பொருள் பொருத்தம் நோக்கி மாற்றிப் பதிப்பித்தலும் இன்றியமையாதது என்பதற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டு. இங்ஙனமே 119 ஆம் காரிகை உரையுள் காணப்படும் கூன் பற்றிய செய்திகள் யாவும் கூன்பற்றிக் குறிப்பிடும் 120 ஆம் காரிகை உரையுள் இடம் பெறல் வேண்டும்.

முடிப்புரை

பெரும்பான்மையவாகிய இலக்கண நூல்கள் ஓரளவு செப்பம் செய்யப் பெற்றுப் பதிப்பிக்கப்பட்டுள்ளன. சங்க இலக்கியம், சிலப்பதிகாரம், சிந்தாமணி, பெருங்கதை, மணிமேகலை முதலிய சிறந்த இலக்கியங்களும் நல்ல பதிப்புக்களைப் பெற்றுள்ளன. இலக்கணச் சுவடிகளின் ஆய்வுப் பதிப்புக்கு இவையாவும் துணை செய்வன.

பழைய ஏட்டுச் சுவடிகளை மட்டும் கருத்தில் கொண்டு ஆய்வுப்பதிப்பினைக் கொண்டுவருதல் பொருத்தமாகத் தெரியவில்லை. நூற்செய்திகள், எடுத்துக்காட்டுக்கள், மேற்கோள்கள் முதலியன காணப்படும் பிற நூல்களின் துணையையும் முழுமையாகக் கோடல் வேண்டும். சுவடிகளில் வெளிப்படையாக நமக்கு பிழை என்று புலப்படும்

பாடவேறுபாடுகளைக் குறிக்கவேண்டிய தேவை இல்லை. தெளிவையும் எளிமையையும் கருதிச் சொற்றொடர்களைத் தேவையான அளவு பிரித்தே குறிப்பிடுதல் வேண்டும். சுருங்கக் கூறின் இலக்கண ஆய்வுப்பதிப்புக்கு உரியவை.

1. விரிவான பதிப்புரையில் அப்பதிப்பின் தேவையும் அதற்கு மேற்கொள்ளப்பட்ட வழிமுறைகளும் பயன்பட்ட நூல்கள் பற்றிய செய்திகளும் இடம்பெறல்வேண்டும்.

2. அடுத்து ஆசிரியர் வரலாறு, உரையாசிரியர் வரலாறு, உரைநயங்கள் என்பன பெரும்பாலும் அகச் சான்றுகள் கொண்டு வரையப்படல்வேண்டும்.

3. நூலாராய்ச்சி என்ற தலைப்பில் பழைய பாடங்களை விடுத்துப் புதிய பாடங்கள் கொள்ளப்பட்ட காரணங்களும், அந்நூல் உரை இவற்றால் அறியப்படும் சிறப்பான செய்திகளும் இடம்பெறல் வேண்டும்.

4. நூற்பாக்களுக்குச் சுருக்கமாகவும் தெளிவாகவும் தலைப்பு அமைத்தல்வேண்டும்.

5. நூற்பாவை அடுத்து நூற்பாப் பாயிரம், பதவுரை அல்லது பொழிப்புரை எடுத்துக்காட்டு விளக்கவுரை முதலியன தனித்தனிப் பத்திகளில் பொருத்தமான நிறுத்தக் குறியீடுகளுடன் அமைக்கப்படல் வேண்டும்.

6. எடுத்துக்காட்டுப் பாடல்கள் இயன்றவரை இடம் சுட்டப்படல்வேண்டும். அவை எந்நூலைச் சேர்ந்தன முன்பது புலப்படாதவிடத்து அவை எடுத்துக்காட்டப் பட்டுள்ள பிறநூல்கள் பற்றிய குறிப்பு உளவாயின் அவை அடிக்குறிப்பில் இடம் பெறல்வேண்டும்.

7. பெயர் சுட்டப்படாமல் மறுக்கப்பட்ட கருத்துக்கள் யாருடையன, அவை எங்கு உள்ளன என்பனவும், அடிக்குறிப்பில் இடம் பெறல் வேண்டும்

8. நூற்பா அகரவரிசை,எடுத்துக்காட்டுப் பாடல்கள் அகரவரிசை, எடுத்துக்காட்டுச் சொற்கள் சொற்றொடர்கள் அகரவரிசை மேற்கோள் அகரவரிசை முதலியன எஞ்சாது நூல் இறுதியில்காணப்படல் வேண்டும்.

9. தேவைப்படும் என்று கருதப்படின் ஒவ்வொரு நூற்பாவை அடுத்தும் அதன் விளக்கமும் அதனை ஒத்த பிறநூல்களின் நூற்பாக்களும் குறிப்பிடலாம். அளவு பல்கும் என்ற கருத்தால் இவை நீக்கப் படுதலும் கூடும்.

10. நூல் நல்ல காகிதத்தில் தெளிவான எழுத்துக்களைக் கொண்டு, நூற்பா உரை அடிக்குறிப்பு இவற்றுக்குத் தனித்தனி எழுத்துக்களைப் பயன்படுத்தி அச்சிடப் படல் வேண்டும்.

பெரும்பாலும் இவை யாவும் நிறைவுறப் பெற்ற உ.வே.சா. அவர்களின் நன்னூல் சங்கரநமசிவாயர் உரை இரண்டாம் பதிப்பு, இலக்கணச் சுவடிகளின் ஆய்வுப் பதிப்புக்கு முன்னோடியாகக் கொள்ளத்தகும். பழுத்த புலமையும், நிறைந்த ஆர்வமும், சலியாத உழைப்பும் பதிப்பும் சிறப்புற உதவும் என்பது வெளிப்படை.

குறிப்பு

இக்கட்டுரையில் மிகச் சிறந்த சான்றோருடைய பதிப்புக்களிலும், அருகித் தவறு காணப்படுகின்றன என்று சுட்டியுள்ள செய்திகள் அவர்களிடத்து எளியேன் கொண்டுள்ள பெரு மதிப்பால் குறிப்பிடப் பட்டனவேயன்றி அவர்கள்பால் குறைகண்டு கூறியனவாகக் கொள்ளற்பாலன வல்ல. ஆய்வுப்பதிப்புக்களில் அருகித் தவறு நேரும் இடங்கள் எவ்வெவ்வாறு அமையலாம் என்பதற்கே அவை எடுத்துக்காட்டாகக் கொள்ளற்பாலன. இதுகாறும் சிறந்த பதிப்புக்களை நமக்கு வழங்கியுள்ள சான்றோர் பலருக்கும் எளியேனுடைய தலைதாழ்ந்த வணக்கம் என்றும் உரித்து.

# கலைஇலக்கணப் பதிப்புமுறைகள்

அ. நா. பெருமாள்

மனித இனத்தின் வாழ்வியல் வரலாற்று ஆவணமாகச் சுவடிகளைக் கருதலாம். தாளும், மையும் பயன்பாட்டுக்கு வருவதற்கு முன்னால் சுவடிகளே மனித எண்ணங்களின் பாதுகாவல் சாதனங்களாகப் பயன்படுத்தப் பெற்று வந்துள்ளன. மனிதனின் எண்ணங்களும் உணர்ச்சிகளும் இலக்கியங்களாகவும், கலைகளாகவும் உருவெடுத்துக் காலங்காலமாக மனித வாழ்வுடன் கூடி உறவாடி வருகின்றன. அவை பண்பாட்டு மூலங்களாக அன்றிலிருந்து இன்றுவரை கல்லிலும், சுவரிலும், சுவடியிலும், தாள்களிலும் பாதுகாக்கப் பெற்று வருகின்றன.

சுவடியுருவில் இருப்பவை விரைவில் பல்வேறு காரணங்களால் அழிந்து மறைந்து விடக்கூடியவை. அதனால் அவற்றை அழியவிடாது பாதுகாக்க வேண்டிய கடமை அறிவுடைய மனிதர் அனைவருக்கும் உள்ளது. முன்னேற்ற அறிவியல் சாதனங்கள் மலிந்த இக்காலத்தில் பண்டைக் காலச் சுவடிகளில் இருப்பதை எளிதாகவும், பிழையின்றியும் மாற்றி அமைக்க முடியும். அந்த முயற்சியில் பலர் ஈடுபட்டு அப்பணியைச் சீரும் சிறப்புமாக்ச் செய்து வருவது பாரட்டுக்குரியதாகும். சுவடியில் இருப்பதைப் பெயர்த்து எழுதும்போது பலவிதமான சிக்கல்கள் ஏற்படுவதைக் காணலாம். இவற்றைச் 'சுவடிப்பதிப்புச் சிக்கல்கள்' என்று கூறலாம்.

தமிழ்ச் சுவடிகளில் இலக்கியம், கலை இலக்கியம், இலக்கணம், கலை இலக்கணம் போன்ற பல்வேறு தன்மை உள்ள நூல்கள் கிடைக்கின்றன. அவற்றைப் பதிக்க முற்படும் போது சிக்கல்கள் சில நிலைகளில் வேறுபடுவதைப் பார்க்கமுடிகின்றது. பழங் காலத்திலிருந்தே தமிழ்மக்கள் இசை, நடனம், நாடகம், ஓவியம், சிற்பம் போன்ற கலைகளில் திறம்பட்டு விளங்கியுள்ளனர். அவற்றுள் இசைக்கும், நாடகத்துக்கும் இலக்கியங்கள் உள்ளன.

ஆனால் அனைத்துக் கலைகளுக்கும் இலக்கணங்கள் உண்டு. அவற்றைச் சுவடியில் எழுதிப் பாதுகாத்து வந்துள்ளனர். அத்தகைய கலைஇலக்கணச் சுவடிகளை முறையாகப் பதிப்பிக்க முயலும்போது ஏற்படும் சிக்கலைப் பற்றிச் சிந்திக்கலாம்.

பொதுவாகக் கலைஇலக்கண நூற்கள் விதிகளை, விளக்கங்களைச் சூத்திர அமைப்பிலோ அல்லது பாக்களின் அமைப்பிலோ தருவதைக் காண முடிகின்றது. பொதுவாக எல்லா விதமான கலைஇலக்கண நூற்களையும் பதிப்பிக்கும்போது ஏற்படும் சிக்கல்கள் ஒரே விதமாக இருப்பதைக் கண்டு உணரலாம். ஆகையால் இம்மாதிரியான ஒரு நூலைப் பதிப்பிக்கும்போது ஏற்படும் அனுபவங்களே பொது நிலை உடையனவாகக் கருதப்படும்.

வாத்திய மரபு என்ற சுவடி இசைக்கலையின் அங்கமாக தாளங்களைப் பற்றி விளக்கும் ஒரு கலைஇலக்கண நூலாகும். இதை 1987 ஆம் ஆண்டு பதிப்பித்து வெளியிட முயன்றபோது எற்பட்ட சிக்கல்களை விளக்கமாகக் காணலாம். பொதுவாக ஒரே தலைப்பில் கிடைக்கும் பல சுவடிப்படிகளை ஒத்துப் பார்த்துப் பதிப்பிக்க வேண்டியது முறை. சிறப்புமிக்க சுவடி நூற் பதிப்பாசிரியர்கள் அனைவரும் அவ்வாறே செய்துள்ளார்கள். ஆனால் ஒரு படியே கிடைத்த சுவடிகளைப் பதிப்பிக்காமல் விடமுடியாத சூழ்நிலை ஏற்படும் போது ஐயப்பாடுகளும் சிக்கல்களும் மிகுதியாகின்றன. சில தீர்க்கமுடியாத நிலையில் பதிப்பாசிரியரைத் திக்குமுக்காடச் செய்கின்றன. காலத்தால்தான் அவற்றைத் தீர்வு கண்டு சரி செய்ய இயலும்.

வாத்திய மரபு சுவடியை ஒரு தனி நூல் என்று உறுதியாகக் கருதமுடியவில்லை. பொதுவாகப் பழந்தமிழ் நூற்கள் ஒரே வகையான பாக்களில் அமைந்திருப்பதைக் காணலாம். வாத்திய மரபு தாள விதிகளைச் சூத்திரங்கள், நேரிசை வெண்பாக்கள், கலி வெண்பாக்கள், பஃறொடை வெண்பாக்கள் ஆகியவற்றால் கூறியுள்ளது. சில விளக்கப் பகுதிகள் ஆசிரிய விருத்தங்களாகவும் தரப் பெற்றுள்ளன. இடையிடையே இறைவணக்கப் பாடல்களும் வெண்பாக்களாகப் பாடப் பெற்றுள்ளன.

மதுரைச் சொக்கநாதரையும், சுசீந்திரம் தாணுமாலயனையும் வாழ்த்தியுள்ள பாடல்கள் உள்ளன. இதிலிருந்து ஒரு உண்மையைக் காணமுடியலாம். வாத்திய மரபில் கூறப்பட்டுள்ள கருத்துக்களையும் பெரும்பாலான பாக்களின் அமைப்பையும் கொண்டு நோக்கினால் இது கி.பி. 12 ஆம் நூற்றாண்டிற்கு முன்னதாக எழுதப் பெற்றதாகத் தோன்றுகிறது.

ஆனால் சில பாடல்கள் பிற்காலத்தைச் சேர்ந்தவை என்பதாகவும் தெரிகிறது. ஆகையினால் இந்த நூலைப் பெயர்த்து எழுதியோர் தங்கள் விருப்பத்திற்கு ஏற்றவாறு இடைச் செருகல் வேலை செய்துள்ளனர் என்று கருத இடமுள்ளது.

மூலச் சுவடியை மதுரையில் உள்ள ஒருவரும், பின்னர்ச் சுசீந்திரத்தைச் சேர்ந்த இன்னொருவரும் படியெடுத்திருக்கலாம் என்று இறைவணக்கப் பாடல் வேறுபாட்டால் ஓரளவு அறிய முடிகின்றது. பின்னவர் தான் வணங்கிய தாணுமாலயக் கடவுளைப் பற்றியும் தான் வாழ்ந்த சுசீந்திரம் பற்றியும் சற்று அதிகமாகவே குறிப்பிட்டுள்ளார். நூல் தோன்றிய இடத்தைப் பற்றியோ, நூலாசிரியர் பற்றியோ எந்தக் குறிப்பும் தரப்படவில்லை. ஆனால் சுசீந்திரத்தில் வாழ்ந்த "கிவிந்தைப் பரஞ்சோதி" (பா.71) என்னும் தோற்கருவி வாசிக்கும் இசைக்கலைஞரைப் பற்றிய குறிப்பு தரப்படுகின்றது. இந்தக் கலைஞரோ அல்லது இவரைச் சேர்ந்தவரோ இந்தச் சுவடியைப் பெயர்த்து எழுதியிருக்கலாம் என்று தோன்றுகிறது.

சுவடியின் முற்பகுதியில் கலிவெண்பாவில் நூற்றெட்டு தாளங்களின் பெயரும் அவற்றுக்குரிய மாத்திரைக் கணக்கும் தரப்பெற்றுள்ளன. பிற்பகுதியில் இரண்டாவது முறையாகத் தாளங்களின் பெயர்களும் அவற்றிற்குரிய மாத்திரை அளவும் நூற்றெட்டு சூத்திரங்களாகக் கூறப் பெற்றுள்ளன. இவற்றைப் பார்த்தால் இருவேறு இசைநூல்களில் உள்ளவை ஒரே சுவடியில் எழுதப் பெற்றிருக்குமோ என்று கருதத்தோன்றுகிறது. இரண்டும் மிகப் பழமையான நூல்களிலிருந்து எடுக்கப்பட்டிருக்க வேண்டும் என்பது தெளிவு. சூத்திர அமைப்பும் கலிவெண்பா அமைப்பும் அவ்வாறு கருத இடம் தருகின்றன. "நாரதன் பாணி மேவி யிதையுரைப்பேன் விண்டு" (பா. 1) என்று காப்புச்செய்யுளில் ஆசிரியர் கூறியிருப்பதினால் அடியார்க்குநல்லார் குறிப்பிடும் "தேவ விருடி நாரதன் செய்த பஞ்ச பாரதீயம்" என்ற இசை நூலைத் தழுவி வாத்தியமரபு எழுதப்பெற்றிருக்க வேண்டும் என்று கூறலாம்.

வாத்திய மரபு சுவடியில் தெய்வசிகாமணி கவுண்டரால் பதிப்பிக்கப் பெற்றுள்ள பஞ்ச மரபு நூலில் இசை மரபுப்பகுதியின் உட்பிரிவான வங்கிய மரபின் இருபத்தெட்டு இருபத்திமூன்று எண்ணுள்ள பாடல்கள் முறையே 238, 240 எண்களுள்ள பாட்டல்களாக இடம் பெற்றுள்ளன. இதைக் காணின் பஞ்சமரபிற்கும் வாத்தியமரபிற்கும் ஏதோ ஓர் நிலையில் தொடர்பு இருந்துள்ளதாகத் தோன்றுகிறது. வாத்திய மரபில்

தாளசமுத்திரம் என்ற பகுதி உள்ளது. இதே பெயரில் தஞ்சை சரஸ்வதி மஹால் நூலகம் ஒரு நூலை வெளியிட்டுள்ளது. அதிலுள்ள வெண்பாக்களில் சில பலவிதமான பாடபேதங்களுடன் வாத்திய மரபில் காணப்படுகின்றன. அதற்கு எடுத்துக்காட்டாக இரு நூல்களிலும் காணப்படும் ஒரு செய்யுளைக் குறிப்பிட்டு வேறுபாட்டுத் தன்மையைக் காண முயலலாம்.

*வாத்திய மரபுப் பாடல் : 13*

திண்மை பெரிய திருவடி நாயன்கை
வண்மை யிருங்கோள் வளநாடன் - மண்மகிழ்ந்து
சொன்ன மூலபரத சூடா மணியுரைத்தான்
தாள சமுத்திர நூல்

*தாள சமுத்திரம் பாடல் : 2*

திண்மை பெரிய திருவடி நாயன்மங்கை
வண்மை இருங்கேள் வளநாடன் - மண்மகள்சேர்
தோள்துணை வன் பரத சூடாமணி யுரைத்தான்
தாள சமுத்திர நூல் தான்

இரு பாக்களிலும் உள்ள சொல் வேறுபாட்டையும் பொருள் வேறுபாட்டையும் நன்கு அறியலாம். தாள சமுத்திரப் பாடல் வெண்பாவிற்குரிய இலக்கணத்தைச் சரியாகக் கடைபிடிக்காது தளைதட்டிப் போவதைக் காணலாம். வாத்திய மரபிலுள்ள இறுதி இரண்டு அடிகளிலும் எதுகை சரியாக அமையவில்லை. இருப்பினும் பொருள் தெளிவாக அமைந்து காணப்படுகிறது. இவற்றுள் எது சரியானது என்பதை அறிய வேண்டியது பதிப்பாசிரியரின் கடமை. இதே போன்று வாத்திய மரபிலுள்ள 12 ஆவது பாடலும் தாள சமுத்திரத்திலுள்ள 3 ஆவது பாடலும் ஒன்றாக அமைந்து சீரமைப்பிலும் தளை இணைப்பிலும் வேறுபட்டுத் திகைப்பைத் தருகின்றன.

வாத்திய மரபில் சில பாடல்களுக்குச் சுவடியிலேயே யாரோ ஒருவரால் உரைவிளக்கம் தரப்பெற்றுள்ளது. அது பிற்காலத்தில் எழுதப்பெற்றிருக்கலாம் என்று தெரிகிறது. இந்த உரைநடை விளக்கப் பகுதியில் பல வழுக்கள் காணப்படுகின்றன. முற்கால உரைநடையின் போக்கை நன்கு அறிந்தவர்களால்தான் இந்தச் சுவடியை நன்கு படிக்க இயலும். மேலும் தாளங்களின் மாத்திரை அளவு குறியீட்டு முறையில் தரப்பெற்றுள்ளது. இந்தக் குறியீடுகள் எந்த எண்ணைக் குறிப்பிடுகின்றன என்பதை

அறிந்தவர்களால்தான் இவற்றுக்குச் சரியான விளக்கம் தரமுடியும். பழைய இசையைப் பற்றிய அறிவு உடையவர்களுக்கே இது நன்கு தெரியும். ஆகையினால் இத்தகைய சுவடிகளைச் சரியான முறையில் பதிப்பித்து வெளியிடுவதற்குக் கலை அறிவு உடையவர்களின் உதவி தேவைப்படுகிறது.

இதிலிருந்து ஓர் உண்மை புலனாகிறது. கலை இலக்கணச் சுவடிகளைச் சரியான முறையில் பொருள் விளக்கத்துடன் பதிப்பிக்க வேண்டுமானால் பதிப்பாசிரியருக்குச் சுவடி படித்தல், தமிழ் இலக்கிய இலக்கண அறிவு போன்றவை சிறப்பாக அமைந்திருக்க வேண்டும் இல்லையானால் பிழைபாடுகள், மயக்கங்கள் ஏற்படக்கூடும். பதிப்பு நூலின் பயன் குன்றும்.கலைகள் பற்றிய நுட்பமான அறிவு சுவடிப் பதிப்பாளருக்கு இல்லையாயின் அத்தகைய அறிவு உடையவர்களின் உதவியை நாடிப் பெற்ற பின்னரே நூலைப் பதிப்பித்து வெளியிடவேண்டும்.

வாத்திய மரபில் 6 ஆவது பாடலாக இடம் பெற்றுள்ள கலிவெண்பாவிற்குச் சுவடியில் விளக்க உரை தரப்பெற்றுள்ளது. அதில் சச்சபுடம் என்னும் தாளத்திற்கு மாத்திரை அளவு குறியீடுகளாகக் கொடுக்கப்படுகின்றன. அந்தக் குறியீட்டு அளவுகளைக் கூட்டிப் பார்த்தால் பத்து மாத்திரை என்ற அளவு வருகிறது. இது இசைப்பயிற்சியாளர்களின் கணக்குப்படி தவறாகும். உண்மையில் சச்சபுடத்திற்கு 8 மாத்திரைதான் உண்டு. சுவடி எழுதியவர் ஒரு “குரு” வின் குறியீட்டைத் தவறுதலாகக் கூட்டி எழுதியுள்ளார். இத்தகைய தவறுகளைத் தாளப் பயிற்சி யுடையவர்களால்தான் சரியாகக் கண்டுபிடிக்க முடியும்.

வாத்திய மரபில் பழந்தமிழர் இசைமரபில் ஏற்றவாறு தாளங்களின் மாத்திரை அளவு தரப்பட்டுள்ளது. அதைத் தாள சமுத்திரம் சச்சபுட வெண்பா, தாளமும் அனுபவமும் ஆகிய தாள இலக்கண நூல்களோடு ஒப்பிட்டுக் காணும் போது சில வேறுபாடுகள் தோன்றுகின்றன. எடுத்துக்காட்டாக அபிநந்தம் என்னும் தாளத்துக்கு மேற்கூறிய நூல்களில் முறையே 5, 4, 6, 5 என்ற மாத்திரை அளவு வேறுபாடுகளுடன் தரப்பெற்றுள்ளன. இத்தகைய தவறு எவ்வாறு நேரிட்டது என்பதை ஆராய்ந்து அறிய வேண்டிய நிலை உள்ளது. சுவடி எழுதியோரின் தவறு என்று கருதினால் அது பிழைபட்டுப் போகவும் இடமுள்ளது.

இசைபாடும் திறமையுடையோர் இதற்குரிய காரணத்தை விளக்க முயன்றனர். பாடுவோரின் கற்பனை ஆற்றலும் கலைத்திறனும் இணையும்போது பண்களை விளக்கமாகப் பாடவும், தாளத்தின் போக்கை மாற்றி வேறு அளவுக்குள் பாடலை

அடக்கவும் முடியும். அதனால் தாள எண்ணிக்கை கூடலாம். பண்களை வேறுபடுத்தியும் பாடல்களைப் பாடலாம். ஆனால் ஒரு பண்ணுக்கு இன்னஇன்ன சுரங்கள் என்பதும் ஒரு தாளத்துக்கு இவ்வளவு மாத்திரை என்பதும் மாறக்கூடாதவை. இவை கணிதவியல் போன்று மாறாத் தன்மையுடன் அமைவன. காலத்தாலும் இடத்தாலும் மாறுமானால் கலையின் கட்டுக்கோப்பு தளர்ந்து அதன் சிறப்பு மெலிந்துவிடும். இத்தகைய கலை பாதிப்பு ஏற்படாதவாறு கலைஞர்களும் அறிஞர்களும் கலைகளைக் கண்ணுங் கருத்துமாகக் காத்து வந்ததினால்தான் அவை நாட்டில் பண்பாட்டுச் செல்வங்களாக நின்று நிலவுகின்றன. தாள நூல்கள் தரும் கணக்கில் சில தாளங்களின் மாத்திரை அளவு மாறியுள்ளதைப் பற்றி நன்கு சிந்திக்க வேண்டும். இசைக் கலைஞர் இந்தச் சிக்கலை விடுவிக்க முயல்வது நன்று.

சுவடியைப் பதிப்பிக்கும்போது ஏடு பெயர்த்து எழுதியவரின் குறிப்பு சரியான முறையில் கவனிக்கப்படவேண்டும். வாத்திய மரபு சுவடியில் அவ்வாறு வந்துள்ள ஒரு குறிப்பைப் பற்றிச் சிந்திக்கலாம். அது இவ்வாறு அமைகிறது.

> "இதில் ஒன்று முதல் எழுபத்து மூன்று வரையிலும் ஒன்று முதல் இருபத்து ஆறு வரையிலும் இரண்டு பாகமாக இருந்ததை இப்போது புதிதாய்க் கீழே லெக்கமிட்டிருக்கிறது. இதிலே காப்பு உள்பட நூறு ஏடு உள்ளதில் அதில் 31-ம், 32-ம், 42-ம், 57-ம் ஏடுகள் காணாததால் வெள்ளேடு சேர்த்திருக்கிறது"

இந்தக் குறிப்பிலிருந்து சில செய்திகளை அறியமுடியும். வாத்தியமரபு நூல் இரண்டு பாகமாக இருந்துள்ளது. அவற்றை இணைத்து ஒரு நூலாக இந்த ஏட்டில் தரப்பட்டுள்ளது. நூறு ஏடுகள் உள்ள சுவடியில் *31, 32, 42, 57* ஆகிய வரிசை எண்களையுடைய ஏடுகள் கிடைக்கப்பெறவில்லை. ஆகையால் பின்னர்க் கிடைப்பின் அவற்றை எழுதுவதற்கு வசதியாக அந்த இடங்களில் வெள்ளேடு அல்லது வெற்றேடு இணைத்துள்ளதாக ஏடு பெயர்த்து எழுதியவர் குறிப்பு தருகிறார். வாத்திய மரபு நூல் முதலில் காப்பு ஒரு ஏடு, முதற்பாகம் 73 ஏடுகள், இரண்டாம் பாகம் 26 ஏடுகள் என மொத்தம் 100 ஏடுகளில் எழுதப்பட்டிருந்ததை இந்தக் குறிப்பின் வாயிலாக அறியலாம். நூலின் அமைப்பைத் தெரிந்து கொள்வதற்கு இந்தக்குறிப்பு ஓரளவு உதவும். காணாமல் போன 4 ஏட்டுப் பகுதிகளும் இன்னும் கிடைக்கவில்லை என்பது வருந்தத்தக்கது. இந்தக் குறிப்புடன் நூல் பகுதி தொடங்குகிறது.

வெள்ளேடு என்பது வெற்றேடு என்ற பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளது. அதில் எழுத்துக்கள் இன்றி

வெறுமையாக இருப்பதினால் அது வெள்ளை வண்ணமாக இருக்கும். ஆகையினால் அதனை வெள்ளேடு என்று கூறியுள்ளனர். குமரி மாவட்ட மக்களிடம் "வெள்ளோலை வாசித்துவிட்டு போகிறான்" என்று கூறுவது வழக்கத்தில் உள்ளது. இதன் பொருள் இல்லாததை அல்லது பொய்யானதைச் சொல்லியுள்ளான் என்பது ஆகும். இத்தொடர் எழுதப்படாமல் இருக்கும் ஏடு வெள்ளேடு என்பதைச் செவ்வனே விளக்கிக்காட்டுவதாக அமைவதை அறியலாம்.

இவ்வாறு பலவற்றை நன்கு சிந்தித்துக் கலை இலக்கண நூல்களைச் சுவடியிலிருந்து பதிப்பிக்க வேண்டும். அவ்வாறு செய்தால்தான் நூலின் பயனை முழுமையாகப் பெற இயலும். சுவடியியல் சிந்தனையாளர்களும் பதிப்பாசிரியர்களும் இவற்றைக் கருத்திற்கொண்டு தங்கள் பணியைச் சீராகவும் சிறப்பாகவும் செய்வார்கள் என்று நம்புவோம்.

# மருத்துவச்சுவடிகள் பதிப்பு நெறிமுறைகள்

வே. இரா. மாதவன்

முன்னுரை

உலகில் இயற்கையோடு இயைந்த வாழ்வின் காரணமாக ஆதி மனிதன், சிறந்த உணவுப் பொருள்களுடன் மருந்தாகப் பயன்படுபவனவற்றையும் அறிந்து ஏற்றுக் கொண்டு வாழ முற்பட்டிருக்கிறான். மனிதனின் இத்தகைய நுண்ணறிவே மருத்துவக் கலையின் அடிப்படையாகும். சுமேரியர், எகிப்தியர் சீனர், கிரேக்கர், உரோமானியர் போன்ற பழமை மிக்க நாட்டினரிடையே இக்கலை தோன்றி வளர்ந்து வந்துள்ளது. தமிழில் சித்த மருத்துவம் என்னும் சிறப்பு நிலையில் இக்கலை பயிலப்பட்டு வருகிறது. இக்கலையைப் பயின்று வந்த முன்னோர்கள் தாம் அறிந்த செய்திகளை நூல்களாக வடித்துக் காப்பாற்றி வந்துள்ளனர். இக்கலை வளர்ச்சிக்கு அடிப்படையாக அமைவன இம் மருத்துவ நூல்களே. தமிழில் இத்தகைய நூல்கள் பல இன்னும் ஓலைச் சுவடிகளிலேயே பாதுகாக்கப்பட்டுள்ளன. உலகெங்கும் கிடைக்கும் தமிழ் ஓலைச். சுவடிகளில் பெரும்பான்மை மருத்துவச் சுவடிகளாகவே இருப்பது இவண் குறிப்பிடத்தக்கதாகும். இவற்றுள் சில அச்சாகி வெளிவந்துள்ளன. பல அச்சிடப்படவேண்டியுள்ளன. இலக்கிய இலக்கணச் சுவடிகள் போலல்லாமல் இம்மருத்துவச் சுவடிகள் பதிப்பில் பல்வேறு சிக்கல்கள் தோன்றுகின்றன. சுவடிகளில் காணும் குறைபாடுகளும் அவற்றை எடுத்தெழுதிப் பதிப்பிப்பதில் எழும் சிக்கல்களையும் வெளிவந்துள்ள சில பதிப்புகளைக் கொண்டு நாம் நன்கு அறிய முடிகிறது. இத்தகைய சிக்கல்களை நுணுகி ஆராயும் முகமாகவே இக் கட்டுரை அமைகிறது.

சுவடிப்பதிப்பு நிலைகள்

தமிழ் மருத்துவச் சுவடிப்பதிப்பு இன்று பல்வேறு நிலைகளிலும் அமைகின்றது. எடுத்துக்காட்டாக,

1. சுவடி நூலகங்கள் தங்கள் நூலகச் சுவடிகளைப் பதிப்பித்தல்
2. அரசு நிறுவனங்கள் சுவடிகளைத் திரட்டி அவற்றைப் பதிப்பித்தல்
3. தனியார் சிலர் தங்களிடமுள்ளவற்றையும் நூலகங்களிலிருந்தும் பதிப்பித்தல்
4. பலரிடமிருந்தும் சுவடிகளைப் பெற்றுத் தனியார் பதிப்பகங்கள் அவற்றைப் பதிப்பித்தல்.

என இவ்வாறு அமைகின்றன. சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம், தஞ்சை சரசுவதி மகால் நூலகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தமிழ்ப் பல்கலைக் கழகம் போன்ற நிறுவனங்கள் இவண் குறிப்பிடத்தக்கன. இத்தகைய முயற்சிகள் பின்னால் தோன்றியிருப்பினும் சுமார் ஒரு நூற்றாண்டுக்கு முன்னரே தனியார் பலர் இத்தகைய பதிப்புகளைச் செய்துள்ளனர்.

பதிப்பாசிரியர்

முதன்மைப் பதிப்பாசிரியர், பொதுப் பதிப்பாசிரியர், பதிப்பாசிரியர், தொகுப்பாசிரியர், உரையாசிரியர் என வெவ்வேறு நிலைகளில் அண்மைக்காலப் பதிப்புகள் அமைகின்றன. ஆயின் அக்காலப் பதிப்புகளை நோக்குமிடத்து அந்நூல்களின் பதிப்பாசிரியர் யார் என்றே விளங்கவில்லை. எடுத்துக் காட்டாக,

அகஸ்திய மகாமுனிவர் அருளிச்செய்த
வைத்திய இரத்தினச் சுருக்கம் முந்நூற்றறுபது
இஃது -
மயிலம் சுப்பிரமணிய சுவாமிகளால்
பார்வையிடப்பட்டு
சென்னை - இட்டா பார்த்த சாரதி நாயுடு அவர்களாற்றமது
ஸ்ரீபத்மநாப விலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது

என இவ்வாறு ஒரு நூல் முகப்பு அமைகின்றது.

இதில், 'பார்த்தசாரதி நாயுடு' என்னும் பெயரே 'பெரிய எழுத்தில்' அமைகிறது. அதாவது அச்சகத்தாரின் பெயரே பெரிதாகக் காட்டப்படுகிறது. எனவே, பதிப்பாளர் அல்லது அச்சிடுபவர் முக்கிய இடம் பெற்றதாக அறிகிறோம். இந்நிலையைப் பல பதிப்புகளிலும் காணலாம். சென்னை. ... இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ் அண்மையில் வெளியிட்டுள்ள பதிப்புகளில்கூட இதே நிலையைக் காணலாம். இவ்வாறு பதிப்பாசிரியர் யார் என்று தெரியாத நிலையில், அவருடைய தகுதிகள் பற்றியும் நாம் அறுதியிட்டுக் கூற இயலவில்லை. அச்சகத்தாரே - பதிப்பாளரே அப்பதிப்பின் முழுப் பொறுப்பையும் ஏற்குமிடத்து, அவருக்கு அந்நூற்புலமையும் சுவடிப் பதிப்பு நெறிமுறைகளும் தெரிந்திருக்குமா என்பது ஐயமே. ஏனெனில் இத்தகைய நூல்கள் பலவற்றில் பாடல்கள் யாவும் சுவடியிலுள்ளவாறே அச்சிடப்பட்டுள்ளன. உரையோ, முன்னுரையோ, சுவடி பற்றிய செய்திகளோ பலவற்றில் இல்லை. எனவே இத்தகைய பதிப்புகளை ஆராய்வதில் பல இடர்ப்பாடுகள் உள்ளன. எனவே, பதிப்பாசிரியர் இவரென அறிந்த சில நூல்கள் மட்டுமே இங்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளப் பெறுகின்றன.

## பதிப்பு முன்னுரை

*1951-55* ஆம் ஆண்டுகளில் சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் ஒன்பது மருத்துவச் சுவடிப் பதிப்புகளை வெளியிட்டுள்ளது. இப் பதிப்புகள் ஒவ்வொன்றிலும் ஆங்கில முன்னுரையுடன் பதிப்பாசிரியர் அளித்துள்ள முன்னுரைகள் குறிப்பிடத்தக்கன. இவற்றுள் பதிப்பின் நோக்கம், பயன், ஒப்பீடு போன்ற செய்திகளுடன் மூல ஏடு பற்றியும் நூலாக்கம் பற்றியும் பொதுவான எண்ணங்களும் வெளிப்படுகின்றன.

## பதிப்பு முறை

இந்நூலகத்தின் இவ்வொன்பது பதிப்புகளும் சிறந்த மருத்துவ வல்லநர்களைக் கொண்டே பதிப்பிக்கப்பட்டுள்ளன. சுவடிகளில் உள்ளவற்றைப் பதிப்பிக்கும்போது நிகழ்ந்த வற்றையெல்லாம் அப்பதிப்பாசிரியர்களே சுட்டுகின்றனர். சுவடியில் உள்ளவற்றை அவ்வாறே பதிப்பித்தல், பொருள் கொள்ளத்தக்கவாறு மாற்றியமைத்துப் பதிப்பித்தல் என இரு வேறுபட்ட நிலைகளிலும் இந்நூல்கள் அமைந்துள்ளன.

இப்பதிப்புகளுக்கு மூல ஏடாக விளங்கும் ஓலைச் சுவடிகளைப் பற்றியும் அவற்றைப் பதிப்பித்துள்ள முறையினையும் பதிப்பாசிரியர்கள் சுட்டுகின்றனர். காட்டாக,

"ஆறுதமிழ் ஏடுகளின் ஆதாரங்களிலிருந்தும் இந்நூல் உருவாகியுள்ளது. இதில் இவ்வேடுகளிலுள்ள விஷயங்கள் சாராம்சம் மாறாமல் வியாதியின் தரவாரியாக மாற்றியமைக்கப்பட்டிருக்கின்றன"[1]..

என்பன போன்ற முன்னுரைகள் நூலமைப்பை விளக்குகின்றன.

சில பதிப்பாசிரியர்கள் தாம் பதிப்பிக்கும் நூலின் நடை, பொருள் ஆழம் போன்றவற்றையும் ஆய்ந்து அந்நூலில் காணப்படும் மருத்துவ முறைகளைப் பற்றிய தங்கள் எண்ணங்களையும் எச்சரிக்கைகளையும் குறிப்பிட் டுள்ளனர். எடுத்துக்காட்டாக,

"இந்நூல் எளிய நடையில் பெரிதும் கற்றுணராதவர்கள் படித்தறியும்படி எழுதி இருப்பதால் நாட்டு மக்களும் நாட்டு மருத்துவரும் தாமே படித்து நற்பயனைப் பெறலாம்[2]."

என்றும்

"இந்நூலில் பல விஷயங்கள் கற்றறிந்தவராலும் கருத்துணர முடியாதபடி எழுதப்பட்டிருப்பதை நாம் மிக்க முயற்சி செய்தும் திருத்த முடியவில்லை. பல வாக்கியங்களிலும் சொற்களிலும் இலக்கண ரீதியான பல ஏற்றத்தாழ்வுகளும் காணப்படுகின்றன. அவ்விடங் களிலும் நமக்கு ஐயந்தரும் வேறிடங்களிலும் (?) இவ்விதமான சந்தேகக்குறி இடப்பட்டிருப்பதைப் பார்த்து, படிக்கும் அறிஞர்கள் கூடுமானால் அவற்றை ஏற்றவாறு திருத்திப் படிப்பாராக[3]."

என்றும்

பிழைகளைக் கண்டுபிடித்து அவற்றை நீக்க முயன்றிருக்கிறேன். ஆயினும் இம்மாதிரியான நூல்களில் எழுத்து மாறுபாட்டால் சாதாரணமாக ஏற்படும் பல பிழைகள் இன்னும் கண்டு பிடிக்காமல் இருக்கலாம்[4]".

---

1. டாக்டர் ஐ. எம். அசிசுபீன், மாட்டு வாகடமும் மாட்டு அங்க அடையாளமும், முன்னுரை.
2. டாக்டர் சி. என். குப்புசாமி, அனுபவ வைத்தியமுறை, முன்னுரை.
3. பண்டிட்.எம்.துரைசாமி அய்யங்கார், பிள்ளைப்பிணி வாகடம், முன்னுரை,
4. டாக்டர் . ஐ.எம்.அசிசுபீன் , மாட்டு வாகடமும் மாட்டு அங்க அடையாளமும், முன்னுரை.

என்றும் குறிப்பிட்டு இருப்பதிலிருந்து பதிப்பாசிரியர் மொழி நடையிலும் பொருள் கொள்வதிலும் கொண்ட கவனம் தெளிவாகிறது.

இவ்வாறே நூலில் கூறப்படும் சில அகச்செய்திகளைக் குறித்தும் பதிப்பாசிரியர்கள் தம் கருத்துரைகளை வழங்கியுள்ளனர். எடுத்துக்காட்டாக,

> சிகிச்சைக்காகக் கூறப்படும் மருந்துகளில் பல சாதாரணமாய்க் கடைகளிலும் காடுகளிலும் கிடைக்கக் கூடியவை. ஆனால், சில மருந்துகள் என்னவென்று புரியக் கூடாதனவாயிருக்கின்றன. மேலும் சில வியாதிகளுக்குக் கூறப்படும் சிகிச்சை முறைகள் நவீன விஞ்ஞான ரீதிக்கு ஒவ்வாதவாயிருக்கின்றன. உண்மையைக் கூறுமிடத்து, சில வியாதிகளுக்குக் கூறப்படும் சிகிச்சை முறைகள் வியாதியால் ஏற்படும் தீங்கைவிட அதிகத் தீங்கை விளைவிப்பனவாக இருக்கின்றன[5].

என்றும்,

> இக்காலத்து மக்களின் உடல்நிலை மிகவும் குன்றியுள்ளதால் இந்நூலில் கூறியுள்ள மருந்துகளின் அளவு பொருந்தாதாகையால், மருத்துவர்கள் அவற்றை வழங்குங்கால், நோயின் வன்மையையும் நோயாளியின் உடல் வன்மையையும் அறிந்து அளவிட்டு மருந்துகளை வழங்க வேண்டும்[6].

எனவும் இப்பதிப்பாசிரியர்கள் தம் கருத்துக்களை வழங்கியிருக்கக் காணலாம்.

### ஒப்பீடு

பதிப்பின் போது தொடர்புள்ள வேறு மருத்துவ நூல்களையும் கருத்தில் கொண்டு அவற்றுடன் ஒப்பிட்டு அறிந்தும் சில நூல்கள் பதிப்பிக்கப்பட்டுள்ளன. காட்டாக,

> இந்நூலின் பெயரையும் இதிலுள்ள அநேகம் செய்யுட்களையும் வேறுபல அம்சங்களையும் நாம் நுட்பமாகப் படித்து வந்ததில் பாலவாகடத் திரட்டு என்னும் வைத்திய நூல் இதற்குப் பெரிதும் ஆதாரமாயிருந்திருக்க வேண்டுமென்று தெரிய வந்தது[7].

என்றும்,

---

5. டாக்டர் ஐ. எம். அசீசுபீன், மாட்டு வாகடமும் மாட்டு அங்க அடையாளமும், முன்னுரை.

6. டாக்டர் சி. என். குப்புசாமி, அனுபவ வைத்தியமுறை, முன்னுரை.

7. பண்டிட் எம். துரைசாமி அய்யங்கார், பிள்ளைப்பிணி வாகடம், முன்னுரை.

................ ஜெர்மன் ஆங்கிலம் முதலிய மொழிகளில் வெளியிடப்பட்டுள்ள ஹீடீராவும் அவரது சகாக்களும் எழுதிய 'கால்நடை மருத்துவ சாஸ்திர' புத்தகத்திற்கு இதை ஒப்பிடலாம்[8].

என்றும் பதிப்பாசிரியர்கள் குறித்திருப்பது அவர்களின் ஒப்பீட்டு நோக்கை வெளிப்படுத்துகின்றன. இத்தகைய குறிப்புகளை மருத்துவச் சுவடிப் பதிப்பின் போது கவனத்தில் கொள்வது நலமாகும்.

## சரசுவதி மகால் பதிப்புகள்

தஞ்சை மன்னர் சரபோஜி காலத்தில் அரண்மனையில் தன்வந்திரி மகால் என்றும் மருத்துவ ஆராய்ச்சி சாலை ஒன்றை அமைத்த மன்னர் பல மொழி மருத்துவ நிபுணர்களைக் கொண்டு ஆராய்ச்சி செய்து பல நோய்களுக்கு மருந்துகளைக் கண்டுபிடித்து, அம் மருத்துவ முறைகளைத் தமிழ்ப்புலவர்களைக் கொண்டு நூலாக வடித்துள்ளார். அத்தகைய நூல்கள் பலவும், இந்நூலகத்திலுள்ள வேறு சுவடிகள் பலவும் பதிப்பாகியுள்ளன. இப்பதிப்புகள் பலவற்றில் பிழைகள் மலிந்துள்ளன. தமிழ்ப்புலமையும் மருத்துவப் புலமையும் ஒருங்கே பெறாதவர்களைக் கொண்டு நூல் அமைவதும் அவற்றை அவ்வாறே பதிப்பிக்கச் செய்வதும் இப் பிழைகளுக்குப் பெருங்காரணமாகலாம். இப் பதிப்புகள் தனி ஆய்வுக்குரியன.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனப் பதிப்புகள்

இந்நிறுவனத்தில் 1979 ஆம் ஆண்டு சுவடியியல் பயிற்சி தொடங்கப்பட்ட பின்னர் பல சுவடிப்பதிப்புகள் வெளிவந்துள்ளன. மருத்துவச்சுவடிகள் பதிப்பு வரிசையில் கருவூரார் பலதிரட்டு, கண்மருத்துவம், வர்ம சூத்திரம், தன்வந்திரி குழந்தை வாகடம், மருந்து செய்முறைகள் போன்றன அச்சாகியுள்ளன. வேறு சில மருத்துவச் சுவடிப்பதிப்புகள் இந்நிறுவனத்தில் தட்டச்சு வடிவிலுள்ளன. மருத்துவச் சுவடிகளைப் பதிப்பிக்கும் பொழுது ஏற்படும் சிக்கல்களை இப்பதிப்புகள் நன்கு விளக்குகின்றன.

"கருவூரார் பலதிரட்டு" என்னும் பதிப்பில் பதிப்பாசிரியர் முகவுரை சிறப்புற அமைந்துள்ளது. சுவடியின் புறஅமைதி,

---

8. டாக்டர் ஐ. எம். அசீசுபீன், மாட்டு வாகடமும் மாட்டு அங்க அடையாளமும், முன்னுரை.

அகஅமைதி, எண்கள், குறிகள், சிறுதலைப்புகள், எழுத்தமைதி, நூலுள் செய்த ஒழுங்குகள், தலைப்பு தந்த விதம், உட்தலைப்பில் செய்த ஒழுங்கு, செய்யுளில் செய்த சீர்மை, மலிந்திருந்த பிழைகள், ஒப்பீட்டால் உணர்ந்தவை, ஊகித்து இட்டவை, பொருள் சுருக்கமும் சொல் விளக்கமும், ஐயங்கள் எனப் பல்வேறு தலைப்புகளில் பதிப்பாசிரியர் தாம் பதிப்பித்த முறைகளை விளக்குகிறார். பின்னர் நூலாசிரியர் வரலாறும் நூலறிமுகமும் நூலை நமக்கு நன்கு அறிமுகம் செய்கின்றன. நூல்பதிப்பில் சீர், அடி, வரி இவற்றை யெல்லாம் தனி தனியே பிரித்தும் அங்கங்கே பதவுரை, விளக்கவுரை எழுதிச் சேர்த்தும் பதிப்பித்துள்ளனர். இருப்பினும் பாடல்களைப் பதிப்பிப்பதில் சுவடியிலுள்ளவாறு பதிப்பித்தல் என்ற ஒரு முறையையும் கொண்டிருப்பது விளங்குகிறது. எடுத்துக் காட்டாக,

'பதறாமல்ச் சிதறாமல்ப் பண்பாய் மக்கள்[9]
'உரைத்திட்ட முப்பூவில்ச் சாரஞ் சேரில்'[10]
'சொல்வார்க ளுள்க் கருவை நூல்கள் தோறும்'[11]
'காட்டியே பாளரிட கண்ணில்த் தீட்டக்'[12]
'சூழப்பா புத்தோட்டில்த் தடவியாரத்'[13]

என இவ்வாறு நூல் முழுமையும் பதிப்பிக்கப்பட்டுள்ளதைக் காணலாம். மற்ற எழுத்து மாறுபாடுகளை மாற்றியமைத்துப் பதிப்பிக்குமிடத்து இத்தகைய பிழைகளையும் தவிர்க்கலாம்.

செய்யுள் வடிவிலுள்ள நூல்களில் ஒவ்வொரு செய்யுளுக்கும் அடியில் பொழிப்புரையும் விளக்கவுரையும் எழுதிச் சேர்த்துப் பதிப்பிப்பது பலரின் வழக்கமாக உள்ளது. நூற்றுக்கணக்கான பாடல்களைக் கொண்ட இந்நூல்களைப் படித்துப் புரிந்து கொள்வதில் மக்களுக்குப் பல நேரங்களில் சலிப்புணர்வே மிஞ்சுகிறது. எனவே இவற்றை எளிமைப்படுத்தி அமைப்பதும் பதிப்பாசிரியரின் கடமையாகிறது.

'கண் மருத்துவம்' என்னும் சுவடிப்பதிப்பில் தமிழில் கண்மருத்துவம் தொடர்பாகக் கிடைக்கக்கூடிய 14 சுவடிகளை அடிப்படையாகக் கொண்டும் சுமார் 300 சுவடிகளில் உள்ள

9. கருவூரார் பலதிரட்டு - பா. 1
10. கருவூரார் பலதிரட்டு - பா. 4
11. கருவூரார் பலதிரட்டுபா. 9
12. கருவூரார் பலதிரட்டுபா. 25
13. கருவூரார் பலதிரட்டுபா. 33

கண்மருத்துவச் செய்திகளைத் தொகுத்தும் பாடல்கள் பதிப்பிக்கப்பட்டுள்ளன. கண்மருத்துவம் பற்றிய ஒரே மாதிரியான செய்திகள் பல சுவடிகளில் முறை மாறியும் திரும்பத் திரும்பவும் அமைவதால் அவற்றை முறையாகத் தொகுத்து இப்பதிப்பு அமைக்கப்பட்டுள்ளது. பதிப்பாசிரியரின் பதிப்பு முன்னுரை (123 பக்கங்கள்) இதை நன்கு விளக்குகிறது. சுமார் ஆயிரம் பக்கங்களிலான இப்பதிப்பில் பொதுச் செய்திகள், கண் நோய்கள் தோன்றக் காரணங்கள், கண்நோய்களின் பெயர்கள், கருவிழி நோய்களும் - மருத்துவமும், வெள்ளை விழிநோய்களும் மருத்துவமும், இமைநோய்களும் - மருத்துவமும், குவளை நோய்களும் - மருத்துவமும், பொது நோய்களும் - மருத்துவமும், பொது மருந்து வகைகள் என இவ்வாறு 1780 பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

ஒவ்வொரு தலைப்புக்குமான பாடல்கள் தனித்தனியே தொகுக்கப்பட்டு ஒவ்வொரு தலைப்பில் முற்பகுதியில் அப்பாடல்களுக்கான உரை விளக்கங்கள் பதிப்பாசிரியரால் எழுதிச் சேர்க்கப்பட்டுள்ளன. பிற்பகுதியில், கண் மருத்துவத்தில் கூறப்பெறும் சுமார் 500 மருந்துப் பொருள்களின் குணங்களும் தனித் தனியே விளக்கியும் நோயும் மருந்தும், மருந்துப் பொருள்கள், பாடல் முதற்குறிப்பு, அருஞ்சொற்கள் போன்ற பட்டியல்களையும் கொண்டும் இப்பதிப்பு அமைந்துள்ளது. தமிழ் மருத்துவச் சுவடிப் பதிப்பில் இப்பதிப்பு முற்றிலும் புதிய முறையில் அமைந்துள்ளது.

'வர்ம சூத்திரம்' என்னும் சுவடிப் பதிப்பில் வர்மக்கலை பற்றிய ஒரு சுவடி மற்ற சுவடிகளுடன் ஒப்பிட்டு ஆராயப்பட்டு தக்க முன்னுரை, விளக்கங்களுடன், விளக்கப்படங்களுடன் பதிப்பிக்கப்பட்டுள்ளது. வர்மங்கள் பற்றிய விரிவான விளக்கங்கள் சுவடியில் இல்லாத நிலையில் அவற்றை எவ்வாறு விளக்கிப் பதிப்பிப்பது என்பதற்கு இப்பதிப்பு ஒரு சான்றாகும்.

'தன்வந்திரி குழந்தை வாகடம்' என்னும் பதிப்பு நிறுவனத்திலுள்ள ஒரு சுவடியைக் கொண்டு பதிப்பிக்கப் பட்டுள்ளது. இப்பதிப்பு ஓர் அரிய முயற்சி. ஆயிரம் நூல் தலைப்பு முதலாக நூல் முழுமையும் பிழைகள் பல மலிந்திருப்பதையும் காண முடிகிறது. சில செய்திகள் முன்னுக்குப்பின் முரணாகவும் அமைந்துள்ளன. எடுத்துக்காட்டாக, "முந்நூறு பாடல்களால் ஆனதே இந்நூல்"[13a]

---

13a. தன்வந்திரி குழந்தை வாகடம் - பக்.13

"நூலின் பெயரும் ஆசிரியராலேயே கூறப்படுகிறது"[14] "தன்வந்திரி குழந்தை வாகடம், சிமிட்டு ரத்தினச் சுருக்கம் 360 என்று தலைப்பு கொடுத்து எழுதப்பட்டுள்ள இச் சுவடியில் முந்நூற்று மூன்று பாடல்களே உள்ளன. நூல் முற்றிற்று என்ற தொடரோ, முடிந்ததற்கான வேறு அறிகுறிகளோ காணப்படவில்லை. ஆதலின் நூல் முற்றுப்பெறவில்லை என்றே துணிய முடிகிறது."[15]

"தன்வந்திரி குழந்தை வாகடம் சிமிட்டு ரத்தினச் சுருக்கம் 360 என்றே காணப்படுகிறது. இது ஏடு எழுதுவோரால் ஏற்பட்ட பிழையே என அறிய முடிகிறது. இத்தவற்றினை எடுத்துக்காட்டாகக் கொண்டு இப்பதிப்பில் செய்யப்பட்ட திருத்த முறைகள் சிலவற்றை எடுத்துக் காட்டலாம்"[16].

"பதிப்பிக்கும் நூலைச் சிறந்த முறையில் பொருள் விளங்கிப் பயன்படுத்தும் அளவிற்கு மக்களிடையே முழுமையாக்கித் தருவது பதிப்பாசிரியின் கடமையாகும் என்னும் கொள்கைகளை ஏற்றுக் கொண்டு நூல்தலைப்பு 'தன்வந்திரி குழந்தை வாகடம் சிமிட்டு இரத்தினச் சுருக்கம்' என்று திருத்தி அமைக்கப் பட்டது[17]."

என இவ்வாறு முன்னுரையில் குறிப்பிடப்படுகிறது. ஆயின் நூல் தொடங்கு மிடத்து, நூல் தலைப்பு "தன்வந்திரி குழந்தை வாகடம் இரத்தினச் சுருக்கம் முந்நூறு"[18] என்று அச்சிடப்பட்டுள்ளது. இங்கு 'சிமிட்டு' என்ற சொல் விடுப்பட்டுள்ளது. 'முந்நூறு' என்ற சொல் சேர்க்கப்பட்டுள்ளது.

நூல் 303 பாடல்களுடன் குறையாக அமைந்துள்ளபோது 'முந்நூறு' என்பது எவ்வாறு பெறப்பட்டது எனத் தெரியவில்லை. முழுமையாக நூல் கிடைத்திருப்பின் அதில் 360 பாடல்கள் இருந்திருக்கலாம். இதே போன்ற வேறு சுவடிகளும் ஒப்பிட்டு ஆராய்ந்திருப்பின் இவை விளக்கமாகியிருக்கும் என நம்பலாம். எப்படியாயினும் நூல் தலைப்பை நூல் முழுக்க ஒரே பெயராக

14. தன்வந்திரி குழந்தை வாகடம் - பக்.29
15. தன்வந்திரி குழந்தை வாகடம் - பக்.34
16. தன்வந்திரி குழந்தை வாகடம் - பக்.34
17. தன்வந்திரி குழந்தை வாகடம் - பக்.35
18. தன்வந்திரி குழந்தை வாகடம் - பக்.44

அமைத்துப் பதிப்பிப்பது பல இடர்ப்பாடுகளைத் தவிர்க்க ஏதுவாகும். மேலும் பாடல் பலவும் சுவடியிலுள்ளவாறே பிழைபட அச்சாகியுள்ளது.

"கேளுகருங் கறப்பனொரு செங்க றப்பன்
கேள்மகனே கருங்கிரந்தி செங்கி ரந்தி
தளெவிமன் கறப்பனது சிரசில் காணும்
தன்மையென்ற செவ்வாப்பு நிரேகங் காணும்

கேளுசெங் கிரந்திசெங் கரப்பன் இரண்டில்
செனைமிந்த நோயெல்லாம் செனிந்த வாறு
பானிதெல்லாந் தீருதற்கு மருந்து சொல்வேன்
வருணிப்பேன் யென்ணெய்தனை வளமாய்ப் பாரே"[19].

உத்தாமணி கற்பம்

"மானந்தச் செந்தூரம் வைத்துக் கொள்ள
மகிமையுத்தா மணிக்கர்ப்பம் வரையக்கேளு."[20]

என இவ்வாறு பல இடங்கள் அமைந்துள்ளன. இதில் கற்பம், கர்ப்பம் இவற்றிற்குள்ள பொருள் வேறுபாட்டை அறிந்து பதிப்பிக்க வேண்டியுள்ளது.

பா. 206, 207 ஆகியன கழிபட்சி - நிவர்த்தி என்ற தலைப்பில் பதிப்பிக்கப்பட்டுள்ளன. இதுவே கழிபட்சி தோஷம்[21] என்று குழந்தை நோய்கள் - குணமும் மருந்தும் பகுதியில் விளக்கப்பட்டுள்ளது. இதே போல 93,94 ஆம் பாடல்களின் தலைப்பு விறப்புள் தோஷம் என்று இருக்க, இதையே வறப்புள்தோஷம் (வரட்புள்)[22] எனப்பின்னால் விளக்கப்பட்டுள்ளது. இவற்றில் எந்தச் சொல் சரியானது என்று தெளிவாக விளங்கவில்லை. இது போன்றுள்ள பிழைகள் பல சுவடிப்பதிப்பில் கவனிக்கத்தக்கன. கிடைத்த ஒரு சுவடியை மட்டும் ஆதாரமாகக் கொண்டு பதிப்பித்திருப்பது இக்குறைகளுக்குக் காரணமாகலாம். இதே பெயரில் கிடைக்கும் வேறு சுவடிகளையும் ஒப்புநோக்கி ஆராய்ந்து பதிப்பிப்பின் இக்குறைகள் நீங்கலாம்.

---

19. தன்வந்திரி குழந்தை வாகடம் - பா. 45
20. தன்வந்திரி குழந்தை வாகடம் - பா. 69
21. தன்வந்திரி குழந்தை வாகடம் - பக். 113
22. தன்வந்திரி குழந்தை வாகடம் - பக். 112

"மருந்து செய்முறைகள்" என்னும் ஒரு பதிப்பில், கேரளப் பல்கலைக் கழகத்திலுள்ள கீழ்த்திசைச் சுவடி நூலகத்திலுள்ள 'மருந்து செய்முறை' என்னும் பெயரிலுள்ள' பல்வேறு சுவடிகளிலுள்ள செய்திகள் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. பல ஏட்டுப்பிரதிகளின் கலவையாக இவை அமைகின்றன. ஒரு குறிப்பிட்ட ஆசிரியர் அல்லது நூலின் செய்திகள் என இவற்றை அறிய இயலவில்லை. எனவே இவற்றை ஆராய்வதும் கடினமாகிறது.

இவ்வாறு மேலும் பல மருத்துவச் சுவடிப் பதிப்புகள் வெளிவர முயற்சிகள் நடைபெற்று வருகின்றன. இத்தகைய நூல் பதிப்புகள் மக்களின் அன்றாட வாழ்விற்கும் பயன்படத் தக்கன என்பதால் இவற்றில் அதிக கவனம் செலுத்த வேண்டியது அனைவரின் கடமையாகிறது. இத்தகைய சுவடிகளில் காணும் பொதுவான பிழைகளைத் தெளிந்தறிந்து அவற்றைச் சில நெறிமுறைகளோடு தவிர்த்துப் பதிப்பிப்பது மிகவும் நலம் பயப்பதாகும்.

போகர் பெயரால் வழங்கும் நூல்களை எல்லாம் திரட்டிப் (சுமார் 9,000 பாடல்கள்) பதிப்பித் துள்ள யோகி. சா.அ.அ.இராமய்யா அவர்கள் தம் பதிப்பு முன்னுரையில் கூறும் கருத்துகளையும் இவண் நோக்குவோம்.

போகர் 7,000 என்னும் நூலின் முன் வந்த பதிப்புகளில் உள்ள முதற் பாடல், போகரின் குருவாகிய காலங்கிநாதரைக் குறிக்கின்றது. ஆயின் பின் வந்த பதிப்புகளில் திருமூலரைக் குறிக்கின்றது என்பதைச் சுட்டிக்காட்டும் பதிப்பாசிரியர் இவ்வாறு அவரவர் மனம் போல மாற்றிப் பதிப்பித்தல் கூடாதென விளக்குகிறார். சுவடியிலுள்ள ஒரு எழுத்தையும் மாற்றிப் பதிப்பித்தல் கூடாதென்பது இவர் கருத்து.

"We like to confess that in editing these works the tendency was to learn on the more ancient works as they were less arrogant and did not tamper with the original. Later ediditions have a tendency to alter the original works. For example in Bogar's 7,000 verses in the most ancient edition the first verse of homage is to his great Master Kalangi Nather and later edition with a committee to boot substituted it with a verse of Thirumoolar. One advice I like to give to future editors is, Do not alter even a single letter of the siddha even if you happen to be a great Tamil scholar. Stick

on to every letter of the siddha as long as it makes sense which may be different from scholarly misinterpretation. Do comment upon the verses separately and make a show of your scholarship and interpretation but spare the verses of the siddhas from distrotion. We humans with our pigeon intellects cannot sit in judgement over the cosmic consciousness of the siddhas. What we have learnt is a handful of sand and what we have yet to learn from the siddhas is millions of tons of sand in the world. "] கற்றது கைமண் அளவு கல்லாதது உலகளவு[23]

யோகியாரின் கருத்தின்படி சுவடியிலுள்ள பெயர்களையோ கருத்துக்களையோ பதிப்பில் மாற்றுதல் கூடாதென்பதில் எவருக்கும் எவ்வித ஐயமும் இல்லை. ஆயின் சுவடியிலுள்ள எழுத்துப்பிழை இலக்கணப்பிழைகளைக் கூடத் திருத்திப் பதிப்பித்தல் கூடாது என்பது ஏற்புடையதாக இல்லை. சுவடியிலுள்ள முன்னோர் நூலை அழியாது பாதுகாத்து, யாவரும் பயன் பெற வேண்டும் என்பதே பதிப்பாசிரியரின் எண்ணமும் கடமையும் ஆகும். இந்நிலையில் சுவடியில் உள்ளவை அச்சுருப்பெறும் பொழுது இப்பிழைகளைக் களைந்தே பதிப்பித்தல் வேண்டும். இது நூலாசிரியருக்குப் பெருமை சேர்க்கும் செயலேயன்றிக் குறை சேர்ப்பதாக அமையாது.

தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் 33ஆம் வெளியீடாகிய 'போகர் வைத்தியம் 700' என்னும் நூல்பதிப்பில் இதன் பதிப்பாசிரியர்கள் இதனை விளக்கமாகவே சுட்டுகின்றனர்.

"பதிப்பாசிரியர்கள் பதிப்பிப்பதற்காக எடுத்துக்கொள்ளும் ஏட்டுச் சுவடி அந்நூலாசிரியர் சொந்தக் கையெழுத்துப் பிரதி **(Autograph)** அன்று. அவருடைய கையால் எழுதப்பட்டதையோ அல்லது அவர் கூறக்கூற அவருடைய மாணவரால் எழுதப்பட்டவையோ முதற்சுவடி எனலாம். இதனைப் பார்த்துப் படி எடுத்தல் படிகளைப் பார்த்துப் படி எடுத்தல் எனச் சுவடிகள் பல்கும். நூல் முதலிய பொருளிலும், மொழியிலும் புலமைமிக்கவர்கள் சுவடியை பெயர்த்தெழுதினால் பிழைகள் அதிகமாக உண்டாகாது. ஆனால் சுவடி எழுதியவர்கள் மிகக் குறுகிய காலத்தில் நிறைய எழுதிப் பொருளீட்டவேண்டிய தேவையால் பிழைமலிய எழுதியுள்ளனர். இவர்களின் நூற்பொருளறிவின்மை, மொழிப்புலமையின்மை காரணமாக தவறுகள் பல பிரிக்கமுடியாதவாறு புகுந்துவிடுகின்றன.

---

23. யோகி. சா. அ. அ. இராமய்யா, பாபாசி போகர் கண்ட யோகம் (கிரியா) இரண்டாம் பாகம், பக்கம் 6. 7.

இத்தறுகள் நூலாசிரியருடையவை அல்ல. சுவடி எழுதியவரால் நேர்ந்தவையே[24]

இதற்குச் சான்றாக யோகியார் பதிப்பித்த நூலிலிருந்தே ஒரு பாடலை இவர்கள் சுட்டுவர்.

''புகலுவேன் வாதியென்ற பேர்களுக்கு
போற்றியே மெய்ஞ்ஞானம் வரவேண்டும்
நிகலுகின்ற ஆதார மரிய வேண்டும்
நீக்கரிய காயத்தை நிருத்த வேண்டும்
புகலுகின்ற பராபரியை பூசிக்க வேண்டும்
பானமென்றால் தூசிக்காப் பருவம் வேண்டும்
மகலுகின்ற குருமுரையும் கைம்முரையும் வேண்டும்
மறுகட்டா லிதெல்லாம் வாதம் போச்சே''[25]

இதில் அரிய, நிருத்த, குருமுரை என்பனவற்றில் எழுத்துப்பிழைகள் உள்ளன. இவற்றைத் திருத்தி முறையே அறிய, நிறுத்த, குருமுறை கைம்முறை எனப்பதிப்பித்திருப்பின் பொருளுடையதாகும். மேலும் பராபரியை என்பதோடு பூசிக்க என்னும் சொல் இணையுங்கால் மெய்மிகுந்து பராபரியைப் பூசிக்க என இருத்தல் வேண்டும். இதேபோல முதலடியிலும் ஈற்றடியிலும் யாப்பிற்கு வேண்டிய அசைகளின்றிக் குறைந்துள்ளதையும் பதிப்பாசிரியர் சுட்டல் வேண்டும் என்பர். இக்கருத்துகள் முற்றிலும் ஏற்புடையன. மருத்துவச் சுவடிப் பதிப்பாசிரியர்கள் அறியத்தக்கன.

'போகர் 700' என்னும் நூலுக்கு இதுவரை எட்டு பதிப்புகள் வந்துள்ளன. அப்பதிப்புகள் அனைத்தையும் ஒப்பு நோக்கிப் பாடபேதங்களைக்குறித்து, பொழிப்புரையுடன் தமிழ்ப் பல்கலைக் கழகம் இந்நூலை வெளியிட்டுள்ளது. இதில், பாட வேறுபாடுகளை ஒவ்வொரு பக்கத்திலும் குறித்திருப்பதுடன், பிறபதிப்புகளில் முழுப் பாடல்களுமே வேறுபட்டிருப்பன வற்றையும், மிகையான பாடல்களையும், 'பாடவேறுபாட்டுப் பாடல்கள்' என்ற தலைப்பில் பிற்சேர்க்கையாக அமைத்துள்ளது பயனுடையதாகும். ஆயின், இப்பதிப்பு எந்த ஒரு ஓலைச்சுவடியையும் அடிப்படையாகக் கொண்டு பதிப்பிக்கப்

---

24. டாக்டர். சே.பிரேமா, புலவர்.ப.வெ.நாகராசன், போகர் வைத்தியம் 700, முன்னுரை. பக். 26-27.

25. போகர் சப்த காண்டம் பக்.3, 1வது காண்டம் பா. 7

பெறவில்லை. ஒப்பு நோக்க எடுத்துக் கொண்ட எட்டுப் பதிப்புகளில் ஒரு பதிப்பையும் அடிப்படையாகக் கொண்டதாகவும் கூறப் பெறவில்லை. இப்பதிப்பாசிரியர் தாம் சிறந்ததெனக் கருதிய பாடல்களை வெவ்வேறு பதிப்புகளிலிருந்து தேர்வு செய்து இப்பதிப்பினை அமைத்ததாகவே தோன்றுகிறது.

இவர் சரி என நினைத்த பாடல்களை மூலபாடமாகவும் அவற்றிற்கு மாறுபாடாக உள்ளனவற்றைப் பாடவேறுபாடாகவும் காட்டியுள்ளார். இதே நிலையை முன்பு உள்ள ஒவ்வொரு பதிப்பின் ஆசிரியரும் கொண்டிருக்கவும் வாய்ப்புகள் உள்ளன. மேலும் இதற்கு முன்னர் பதிப்பித்துள்ள ஆசிரியர் ஒவ்வொருவரும் அந்நூலின் மூலத்தைச் சுவடியிலிருந்து பதிப்பித்தனரா அல்லது இதே நிலையில் வேறு பதிப்புகளைப் பார்த்துப் பதிப்பித்தாரா என்பது தெரியவில்லை.

அத்துடன் அவ்வப் பதிப்பாசிரியர்கள் தம் மனநிலைக்கேற்பவும், கிடைத்த தகவல்களுக்கேற்பவும் பதிப்பித்து இருக்கக்கூடும். அதில் எழுத்துப் பிழைகளும், கவனமின்மையும் அச்சுப்பிழைகளும், இன்னபிற பிழைகளும் சேர்ந்திருக்கக் கூடும். எனவே, அப்பதிப்புகளில் உள்ளவற்றையெல்லாம் பாடவேறுபாடாகக் கொள்வது முழுவதும் பொருந்துமா என்பது ஐயமே. எனவே இயன்றவரை கிடைக்கும் ஓலைச் சுவடிகளை மூலமாகக் கொண்டே பதிப்புகளை அமைப்பது பயனுடையதாகும்.

இவ்வாறு குறிப்பிட்ட சில பதிப்புகளில் காணப்பெறும் பிழைகளைக் களைவதுடன் பொதுவாகக் காணப்பெறும் பிழைகளையும், தடுமாற்றங்களையும் பதிப்பாசிரியர் கவனிக்க வேண்டியுள்ளது. அவற்றில் சில வருமாறு:

### தலைப்பில் தடுமாற்றம்

மருத்துவச் சுவடிகள் பல நூற்பெயர்களினால் தடுமாற்றம் தருகின்றன. ஒரே நூல் பல நூலாசிரியர் பெயர்களில் கிடைக்கின்றன. அக, புறச் செய்திகளைக் கொண்டே இவற்றை ஒப்பிட்டு அறிய இயலும். ஒரே நூல் வேறு பெயரிலும் அச்சாகும் வாய்ப்புகளைக் கொண்டுள்ளன. எடுத்துக்காட்டாக, 'பிரமமுனி எண்ணூறு'[26] என்னும் பெயரில் அச்சான ஒரு நூலில் போகர் 700ல் உள்ள பாடல்களே உள்ளன. இதுவே முதல்பதிப்பு என்றும்,

26. பிரமமுனி எண்ணூறு, டாக்டர் இரா. தியாகராசன், அருள்மிகு பழனி தண்டாயுதபாணி தேவஸ்தான வெளியீடு - 1976

எண்ணூறில் நூறு பாடல்கள் இடையில் விடுபட்டுள்ளன என்றும் அந்நூலின் பதிப்பாசிரியர் குறித்துள்ளது தவறு என்பதைப் பேரா. ந. சேதுரகுநாதன் குறிப்பர்[27], இத்தகைய தடுமாற்றங்கள் இன்றும் பல சுவடிகளிலும் நூல்களிலும் காண்கிறோம்.

தமிழில் அகத்தியர், தேரையர், போகர், இராமதேவர் எனப் பதினெண் சித்தர் பெயர்களில் மருத்துவ நூல்கள் அமைகின்றன. பல சுவடிகளில், சுவடி எழுதப்பெற்ற காலம், பயன்படுத்தப் பெற்ற காலம் போன்றவை குறிக்கப்பெறவில்லை. எனவே, இந்நூல்களை இயற்றியது யார் என்றே தெரியவில்லை. "பதினெண்சித்தர் யாவர் என அறுதியிட்டுக் கூற இயலவில்லை[1]" என்றே சித்த மருத்துவ வல்லுநரும் குறிக்கின்றனர்.

> "அகத்தியர் போன்றோரால் இயற்றியதாக வழங்கப்படும் நூல்கள் அவர்களால் பாடப்பட்டவை அல்ல. இவை அச்சித்தரின் மருத்துவ முறைகளை, கொள்கைகளைப் பரம்பரையாக அறிந்தவர் பாடி வைத்தவை. அல்லது அவர்கள் பரம்பரையைச் சேர்ந்தவர் பாடி வைத்தவை. சுமார் நானூறு ஆண்டுகளுக்கு முன்பு அவை பாடப்பெற்றிருக்கலாம். ஆனால் சித்த மருத்துவ முறைகள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முற்பட்டவை. காலங் கணக்கிட முடியாத சித்தர் கண்டறிந்த உண்மைகள் அவை"[29]

என்பர் அறிஞர்.

புராண கால அகத்தியர் முதல் 19 ஆம் நூற்றாண்டு அகத்தியர் வரை 37க்கும் மேற்பட்ட அகத்தியர்கள் வாழ்ந்திருந்ததாகவும் கூறுகின்றனர்.[30] இதே போல தேரையர் என்பார் ஒருவர் எனவும், இருவர் எனவும், மூவர் எனவும் கருத்து வேறுபாடு நிலவுகிறது.[31]

இவ்வாறு சித்தர்கள் பற்றிய முறையான வரலாறுகளை அறிய இதுவரை வாய்ப்புகள் ஏதுமில்லை. நூலாசிரியர் பலருக்கு வரலாறு அறிய முடியாத இந்நிலையில் ஒரே நூல் வெவ்வேறு

---

27. ந. சேதுரகுநாதன், யூகிமுனிவர் பிடிவதாம் ஆயிரம், முகவுரை பக். 9, 10.

28. டாக்டர் க. சு. உத்தமராயன், தோற்றக்கிரம ஆராய்ச்சியும் சித்த மருத்துவ வரலாறும், பக். 315.

29. திரு. சாமி சிதம்பரனார், சித்தர்கள் கண்ட விஞ்ஞானம், தத்துவம், பக். 11.

30. அ. சிதம்பரனார், அகத்தியர் வரலாறு, பக். 42.

31. டாக்டர். ஆர். தியாகராசன், தேரையர் மகாகரிசல், மூலமும் உரையும், பக். 9.

ஆசிரியர் பெயரிலும் அமைந்திருப்பது மேலும் சிக்கல் தருவதாக அமைகின்றது. பல்வேறு சுவடிகளை ஒப்பிட்டறிந்து, நுணுகி ஆய்ந்து பதிப்பிப்பது பதிப்பாசிரியர் கடமையாகும்.

## நாடி நூல்களில் மருத்துவம்

அகத்தியர் நாடி, சப்தரிஷி நாடி, வசிட்டர் நாடி போன்ற பல நாடி நூல்கள் சோதிட அடிப்படையில் பலருக்கும் அவர்தம் முக்காலம் பற்றிய கருத்துக்களை வழங்குவதாக உள்ளன. ஆயின், இத்தகைய நூல்களில் கொடிய நோய் பலவற்றிற்கும் மருத்துவம் இருப்பதாகக் கூறப்படுகிறது. காட்டாக, பெங்களூரில் சித்த மருத்துவ ஆராய்ச்சி நிறுவனத்திலுள்ள டாக்டர். மாண்டயம் குமார் அவர்கள், தம் ஆராய்ச்சியின் போது கொடிய குட்ட நோய்களுக்கு நாடி நூல்களில் மருத்துவம் கண்டதாகக் கூறுகிறார்.

> "During the cours of the literary research under taken by the Siddha Medical Research Institute, it was possible to trace an age-old palm leaf manuscript giving a detailed account of such research work done by early Siddhars about 3000 B.C. This manuscript is in possession of Pandit S. Jayahari of Vellore, which is supposed to have been found at Podigai belonging to Courtalam range of hills. The entire text is an encyclopeadia of universal knowledge given out by sage Agastya, composed and recorded by his disciple Pulasthya [32]"

ஆயின் இத்தகைய நாடி நூல்களிலுள்ள பாடல்களில் யாப்பு மரபோ, பொருள் தெளிவோ காணப்பெறாத நிலையில் இவற்றை மருத்துவச் சுவடிகளுடன் ஒப்பிட்டு ஆராய்வது கடினமாக உள்ளது.

## மறைபொருள் விளக்கம்

மருத்துவச் சுவடிகளில் உள்ள பல சொற்கள் இக்கால வழக்கில் உள்ளவையே. இருப்பினும், சில சொற்கள் அருகிய வழக்காயும், மறைந்த வழக்காயும் காணப்பெறுகின்றன. சில பொருள்களின் மருத்துவப் பெயர்கள் மறைபொருளாகவும் (பரிபாஷை) கூறப்படுகின்றன. இவற்றிற்கான மறைபொருள்

32. Dr. Mandayam Kumar. Leprosy and Siddha Medical Science, Heritage of the Tamils-Siddha Medicine. PP. 430-431.

விளக்கங்களை அங்கங்கேயே கூறப்படுவதையும் பல சுவடிகளில் காணலாம். இருப்பினும், அவ்வாறு விளக்கங்கள் இல்லாதவிடத்து இவற்றின் பொருளறிவதில் மிகுந்த இடர்ப்பாடுகள் உள்ளன.

இதற்கான பரிபாஷை அகராதிகள் மேலும் பல தொகுக்கப்பெற வேண்டியுள்ளன. அனுபவ வைத்தியர்கள் தாம் அறிந்த இத்தகைய விளக்கங்களை வெளியிடச் செய்வதும் அனைவரின் தேவையாகிறது.

### யாப்பு நிலை

பெரும்பான்மையான மருத்துவ நூல்கள் பல விருத்த யாப்பிலும் சில வெண்பா யாப்பிலும் அமைந்துள்ளன. பல பாடல்கள் நல்ல யாப்புடன் சீர்மை பெற்றுள்ளன. இருப்பினும், சில விருத்தங்கள் 5 அல்லது 6 அடிகள் கொண்டும் முடிகின்றன. சில விருத்தங்கள் மூன்றடிகளிலேயே முடிவடைகின்றன. சில விருத்தங்களில் சீர் ஒழுங்கும் சரிவர இல்லை. நூல் முழுவதும் ஒரே யாப்போ ஒரே வாய்பாடு கொண்ட பாடல்களோ காண்பது அரிது. ஒரே பாடலிலும் கூட வாய்பாடு மாறியும் சீர்கள் அமைகின்றன. பல வெண்பாக்கள் தளை ஒழுங்கின்றி அமைந்துள்ளன. இவை யாவும் ஏடு எழுதியோர் செய்த பிழையென்றே கொண்டு கவனமாகத் திருத்தி அமைத்தல் வேண்டும்.

### பிரிக்க இயலாமை

மருத்துவச் சுவடிகளில் சூலை, குன்மம், தலைவலி, சுரம் எனப் பலப்பல நோய்களுக்கான மருத்துவ முறைகள் திரும்பத்திரும்பக் கூறப்படுகின்றன. இவற்றைத் தொகுத்து, ஒரு நோய்க்கான மருந்துகள் என அனைத்தையும் வரையறுத்துப் பதிப்பிப்பது என்பது அரிதாகிறது. உரைநடையிலான நூல்கள் தவிரப் பிறவற்றில் இவற்றைப் பிரித்துக் காண்பது இயலாது. ஏனெனில், பெரும்பாலான பாடல்கள் அந்தாதி யாப்பில் உள்ளன. ஒவ்வொரு பகுதியையும் தனித்தனியே பிரிப்பின் நூல் ஒழுங்கு இல்லாமற் போகும். மேலும், இவை பல காலங்களில் பலரால் எழுதப்பெற்ற நூல்கள் ஆனமையால் இவற்றை உள்ளவாறு அப்படியே பாடல் முறை மாறாது பதிப்பிக்க வேண்டியுள்ளது.

### மருத்துவமல்லாத செய்திகள்

அக்கால மருத்துவர்கள் மருத்துவத் துறையில் மட்டுமல்லாது யோகம், ஞானம், தத்துவம், ரசவாதம், மந்திரம்

போன்ற பல துறைகளிலும் வல்லவராயிருந்தனர். அவர்தம் மருத்துவ நூல்களே இதற்குச் சான்றாகின்றன. பல நூல்களில் மருத்துவச் செய்திகளுக்கு இணையாக இவையும் கலந்துள்ளன. அக்கால மருத்துவ முறையும் இவ்வாறே அஃமந்துள்ளது. எனவே, இந்நூல்களைப் பதிப்பிக்கும்போது மருத்துவத்துடன் இதுபோன்ற செய்திகளையும் அறிந்து, உணர்ந்து, தெளிந்தே பதிப்பிக்க வேண்டியுள்ளது.

## ஒரே மருந்து செய்முறைகள்

"அகத்தியர் குழம்பு", "அசுவகந்தி லேகியம்" போன்ற சில குறிப்பிட்ட மருந்துகளின் செய்முறைகளைப் பல ஏடுகளிலும் மாறி மாறிக் காண்கிறோம். முன்னரே பதிப்பாகியுள்ள மருந்து செய்முறைகளே மீண்டும் மீண்டும் பல சுவடிப் பதிப்பில் வர வாய்ப்புகள் உள்ளன. இதைப் பதிப்பாசிரியர் ஓரளவே சுட்ட இயலும். முறையான சித்த மருத்துவ நூல் அடைவுகளும், நூல்களும், வழிகாட்டிகளும் நம்மிடையே இன்று வழக்கில் இல்லாதவிடத்து இவற்றை முறையாக இனங்கண்டு அறிவித்தல் ஒவ்வொரு பதிப்பாசிரியருக்கும் இயலாததாகிறது. ஆசிரியர் தாம் எடுத்துக்கொண்ட சுவடியை எவ்வாறு பதிப்பித்துள்ளார், என்னென்ன செய்திகள் அந்நூலில் உள்ளன என்பதை ஆராய்வதே அறிஞர் கடனாகிறது. தவிர ஒரே மருந்து செய்முறைகள் வெவ்வேறு சுவடிகள் அல்லது பதிப்புகளை ஒப்பு நோக்கி ஆராய்தல் என்பது தனி ஆய்வாக அமைதல் வேண்டும்.

இவ்வாறு பல சிக்கல்களை மருத்துவச் சுவடிப்பதிப்பின் போது காண முடிகிறது. பொது நிலையில் இவற்றைப் பதிப்பிக்கும் பதிப்பாசிரியர்கள் சுவடிப் பதிப்பு நெறிமுறைகளோடு மேற்காணும் சில சிக்கல்களையும் உணர்ந்து அவற்றைக் களையும் வகையிலும் சில நெறிமுறைகளை வகுத்துக் கொள்ள வேண்டியுள்ளனர்.

## சில எண்ணங்கள்

1. பழைய பதிப்புகளில் காணப்படுவது போலல்லாமல், பதிப்பாசிரியர் தம் பதிப்பு முன்னுரையில் சுவடி பற்றிய செய்திகளையும் பதிப்பில் எழுந்த சிக்கல்களையும் விளக்குதல் வேண்டும்.

2. இயன்றவரை ஒவ்வொரு நூலையும் தனித்தனியே பதிப்பித்தல் வேண்டும்.

3. வெவ்வேறு ஆசிரியர் பெயர்களைக் கொண்ட ஒரே தலைப்பிலான சுவடிகளை ஒப்பிட்டு இனங்காணல் வேண்டும்.

4. பரிபாஷை அகராதிகளை விரிவாகத் தொகுத்தல் வேண்டும்.

5. சுவடிகளுக்கிடையே மாறுபட்டுக் கிடக்கும் பாடங்களைக் கொண்டு நல்ல, சரியான பாடம் நிறுவ வேண்டும்.

6. மரபின் துணை, அதிகப் பயன்பாடு போன்றவற்றைக் கொண்டு மூலபாடத்தை நிறுவ வேண்டும்.

7. சித்த மருத்துவ நூல்கள் எழுதப்பெற்ற காலத்தில் அச்சுப் பதிப்புகள் இல்லை. இவற்றின் பல தலைமுறைகளைக் கடந்துதான் அச்சுப் பதிப்புகள் வர முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. அக்கால கட்டத்தில் அச்சும் பதிப்பும் இருந்த நிலைக்கேற்ப அவை பதிப்பிக்கப்பட்டன. ஆயின், இன்றுள்ள முன்னேறிய நிலையில் சிறந்த, தெளிவான பதிப்பு நெறிமுறைகளுடன் இவற்றை மீண்டும் பதிப்பிப்பது இம் மருத்துவ முறைக்குச் செய்யும் நற்றொண்டாகும்.

8. அரசினர் இந்திய முறை மருத்துவக் கல்லூரி மாணவர்களுக்காகப் பாட புத்தகங்கள் பல பழைய சுவடிப் பதிப்பாகவே உள்ளன. பல ஆண்டுகளுக்கு முன் பதிப்பிக்கப்பட்ட அவற்றில் சுவடி விவரம் பற்றியோ, பதிப்பு விவரங்களோ இல்லை. இக்காலத் தேவைக்கு ஏற்ப இவற்றைத் திருத்தி ஒப்பிட்டு நல்ல பதிப்புகளாக அமைக்கலாம்.

9. சித்த மருத்துவச் சுவடிகளில் குறிப்பிட்ட நூல் அச்சானதா இல்லையா என்பதைக் காண்பது அரிதாகிறது. இதற்கென முறையான ஆய்வடங்கல்களோ, நூலோதிகளோ இன்னும் வெளிவரவில்லை. இவற்றை முறையாக அமைப்பின் பல சிக்கல்கள் தீரும்.

10. மருத்துவச் சுவடித் துறையில் முதன்முதலாக முனைவர் பட்ட ஆய்வினைச் செய்த பொழுதும், பல பதிப்புகளுக்காகவும், இக் கட்டுரையாளர் இரண்டாயிரத்திற்கும் மேற்பட்ட மருத்துவச் சுவடிகளை நேரடியாக ஆய்வு செய்ய வாய்ப்பேற்பட்டது.

## நிறைவுரை

தமிழ் மருத்துவ முறைகள் பல நூறு ஆண்டுகளாகப் பழக்கத்தில் உள்ளவை. இம்முறைகள் அழிந்துவிடாமல் போற்றப்படவேண்டும் என்பதற்காகவே பலரும் பல காலங்களில் ஓலைகளில் கைப்பட எழுதிப் பாதுகாத்து வந்துள்ளனர். அவற்றை இன்றைய நிலையில் பதிப்பிக்க ஒரு சிலரே முன்வருகின்றனர். அவர்களுக்குக் கிடைக்கும் வாய்ப்பும் வசதியும் மிகக் குறைவே. எனவே, வெளிவரும் மருத்துவச் சுவடிப் பதிப்புகளை வரவேற்பதும் பதிப்பாசிரியர்களுக்கு ஊக்கம் தருவதும் அறிஞர் கடமையாகும். இதே நிலையில், மருத்துவச் சுவடிகளைப் பதிப்பிக்கும் ஆய்வாளர்களும் சுவடிப்பதிப்பு நெறிமுறைகளோடு, தமிழ் இலக்கிய உணர்வும், மருத்துவப் புலமையும் தெளிவுற வாய்க்கப் பெற்று இவற்றைப் பதிப்பிக்க முற்படுவது சாலச் சிறந்ததாகும்.

## பயன்பட்ட நூல்கள்

1. அகத்தியர் வரலாறு, அ. சிதம்பரனார், கழக வெளியீடு, 1950.

2. அகஸ்திய மகாமுனிவர் அருளிச்செய்த வைத்திய இரத்தினச் சுருக்கம் முந்நூற்றறுபது, ஸ்ரீபத்மநாப விலாச அச்சுக்கூடம், சென்னை, 1905.

3. அனுபவ வைத்திய முறை - 4, (பதிப்.) டாக்டர் சி.என். குப்புசாமி, சென்ன அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலக வெளியீடு, 1952.

4. கண் மருத்துவம். (பதிப்.) வே. இரா. மாதவன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 113, 1982.

5. கருவூரார் பலதிரட்டு. (பதிப்.) இரா. நிர்மலாதேவி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 113, 1982.

6. சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் - தத்துவம். திரு. சாமி. சிதம்பரனார், இலக்கிய நிலையம், சென்ன-94, 1974.

7. தன்வந்திரி குழந்தை வாகடம் (பதிப்.) க. லலிதாம்பிகா, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-113. 1984.

8. தேரையர் மகா கரிசல் - மூலமும் உரையும். டாக்டர். ஆர். தியாகராசன், சித்த மருத்துவ ஆராய்ச்சி நிலையம், சென்னை, 1974.

9. தோற்றக்கிரம ஆராய்ச்சியும் சித்த மருத்துவ வரலாறும், டாக்டர் . க.சு. உத்தமராயன், தமிழ்நாடு அரசு வெளியீடு, சென்னை, 1978.

10. பாபாசி போகர் கண்ட யோகம் (கிரியா) - இரண்டாம் பாகம், யோகி சா. அ. அ. இராமய்யா. 1979.

11. பாபாசி போகர் கண்ட யோகம் (கிரியா) - மூன்றாம் நூல், யோகி. சா.அ.அ. இராமய்யா.

12. பிரமமுனி எண்ணூறு, டாக்டர். இரா. தியாகராசன், பழனி தண்டாயுதபாணி வெளியீட்டுக் குழு, 1976.

13. பிள்ளைப் பிணி வாகடம் - 1 (பதிப்.) பண்டிட் எம். துரைசாமி அய்யங்கார், சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலக வெளியீடு - 1952.

14. போகர் வைத்தியம் 700, டாக்டர். செ. பிரேமா, புலவர். ப.வெ. நாகராசன், தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர். 1985.

15. மருந்து செய்முறைகள், (பதிப்.) தி. லலிதா. உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை-113, 1984.

16. மாட்டு வாகடமும் மாட்டு அங்க அடையாளமும், (பதிப்.) டாக்டர். ஐ. எம். அசீசுபீன், சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலக வெளியீடு, 1954.

17. யூகி முனிவர் பிடிவாதம் ஆயிரம், ந. சேதுரகுநாதன், மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம், 1982.

18. வர்ம சூத்திரம், (பதிப்.) ஜான் செல்வராஜ், உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை-113.

19. *Heritage of the Tamils-Siddha Medicine, S.V. Subramanian and V.R. Madhavan, I.I.T.S., Madras-113, 1984.*

20. *Siddha Medical Manuscripts in Tamil, (Edi.) V.R. Madhavan, I.I.T.S., Madras-113. 1983.*

# சோதிடச்சுவடிகள் பதிப்புமுறை

சி. மூக்கரெட்டி

## அ. முன்னுரை

தமிழ் உயர்தனிச் செம்மொழி. முன்னைப் பழமைக்கும் பழமையாய்ப் பின்னைப் புதுமைக்கும் புதுமையாய் விளங்கும் மொழி. பலநூறு ஆண்டுக் காலமாக முறையே இலக்கண இலக்கிய வளம் பெற்றுத் தழைத்துள்ள மொழி. இம்மொழியில் உள்ள நூல்கள் இலக்கணம், இலக்கியம், காவியம், புராணம், சிற்றிலக்கியங்கள், சமயம், சாத்திரம், தோத்திரம், கணிதம், அறிவியல் எனப் பல வகையிற் பல்கியுள்ளன. இந்நூல்கள் எல்லாம் கடந்த நூற்றாண்டின் முக்கால் பகுதி வரை பெரும்பாலும் ஏட்டுச் சுவடியிலேயே எழுதப்பெற்று வந்தன. அக்காலத்தில் பக்தி இலக்கியங்கள், சமய சாத்திர நூல்கள், சிறு பிரபந்தங்கள் என்பனவற்றை மட்டும் தமிழ் மக்கள் உணர்ந்திருந்தனர். சங்க இலக்கியம் என்பதைப் பெயரளவில் அறிந்திருந்தனரேயன்றிப் பார்த்துப் படித்தவர்கள் இல்லை. தொல்காப்பியமும், திருக்குறளும் தனிச்சிறப்பால் உணரப்பெற்றன. எனினும் அவற்றின் தொன்மை மக்களால் அறியப்படவில்லை. இலக்கண இலக்கியங்களின் நிலையே இவ்வாறெனின் சோதிடக்கலையின் நிலை யாது என ஒருவாறு ஊகித்தறியலாம். பழமையான ஓலைச்சுவடிக ளெல்லாம் கவனிப் பாரற்றுச் செல்லரித்தும், மண்ணால் அழிக்கப்பட்டும், வெப்பத்தால் பொடிக் கப்பட்டும் காணப்படுகின்றன. கவனிப்பாரின்றி இவைகள் அழிவை நோக்கியுள்ளன. பழஞ் சுவடிகளையே மறந்துவிட்டோம்.

## ஆ) சுவடிப்பதிப்பின் இன்றியமையாமை

தமிழில் பல்லாயிரம் ஏட்டுச்சுவடிகள் இன்னும் பதிப்பிக்கப்படாமல் உள்ளன. இவை நம் நாட்டில் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம், சரசுவதி மகால் நூல் நிலையம்,

சென்னைக் கீழ்த்திசைச் சுவடிகள் நிலையம், தமிழ்நாடு ஆவணக் காப்பகம், சென்னை டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், மதுரைப் பல்கலைக்கழகம், மதுரைத் தமிழ்ச் சங்கம், தமிழகத்தில் உள்ள மடாலயங்கள், பழைய சமீன்தார் வழியினர், பழம் புலவர்களின் வாரிசுகளின் வீடுகள் ஆகிய இடங்களில் உள்ளன. ஒரு சில இடங்கள் தவிர மற்றைய இடங்களில் இந்தச் சுவடிகள் கவனிப்பின்றி நலிவுற்றும், சிதைந்தும் உள்ளன. விரைவில் அழிந்துவிடும் நிலையில் பல ஏடுகள் உள்ளன.

இவ்வளவு இடங்களில் உள்ள சுவடிகளைப் பற்றி முழுவிவரமும் தொகுத்து ஆய்ந்து வெளிக்கொணரப் பல நூற்றாண்டுகள் தேவைப்படும். ஆனால் இவைகளைப் படித்துப் பெயர்த்தெழுதும் ஆற்றல் உள்ளவர்கள் இப்போது ஒரு சிலரே உள்ளனர். அவர்களுக்குப் பிறகு இச்சுவடிகளைப் படிப்பவர்களே இல்லை என்ற நிலை வரின் நந்தமிழ்ச் செல்வங்கள் எல்லாம் செல்லுக்கும் மண்ணுக்கும் விருந்தாக நேரிடும். இதை நன்கு உணர்ந்தே உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் 'சுவடி இயல்' என்ற பிரிவை ஏற்படுத்தி ஆண்டுதோறும் சில நூல்களைப் பதிப்பிக்கின்றது. அன்றியும் தஞ்சையில் உள்ள தமிழ்ப்பல்கலைக் கழகத்தின் புலங்களில் சுவடிப்புலமும் ஒன்றாக அமைக்கப் பெற்றுள்ளது.

## இ. சோதிடச் சுவடிகளின் சிறப்பு நிலை

'சோதிடம்' என்பது காலத்தைப் பற்றி ஆராய்கின்ற நுண்கலையாகும். இக்கலை உணர்ச்சி அறிஞர்கட்கு மிக இன்றியமையாததாகும். அன்றியும் சோதிடம் என்பது கிரகங்களின் நிலையையும் நட்சத்திரங்களின் நிலையையும் கொண்டு மானிட உலக வியவகாரத்தைப் பற்றி முன்கூட்டியே அறிய முடியும் என்ற நம்பிக்கையை ஆதாரமாக உடையது. சோதிடச் சுவடிகளின் வானிலையை மையமாகக் கொண்டு மக்களின் எதிர்காலத்தை நிர்ணயம் செய்து கொள்ளப் பயன்படுகின்றன.

பூமியானது தன்னைத் தானே சுற்றிக்கொண்டு வருவதால் ஒவ்வொரு வேளையிலும் வானவீதியில் ஏதாவது ஒரு இராசி கிழக்குத் திக்கில் உதயமாகிக் கொண்டிருக்கும். அவ்விராசியை, அந்த வேளையின் 'இலக்கினம்' என்று கூறுவார்கள். சோதிடர்கள் ஒருவன் குணாகுணங்களை அவன் பிறந்த இலக்கினத்தையும் மற்றுமுள்ள கிரகங்கள், அவ்விராசியுடன் சம்பந்தப்பட் டிருப்பதையும் பொறுத்தே சொல்வதால் இலக்கினம்

சோதிடத்தில் மிக முக்கியமான அம்சங்களில் ஒன்றாகும். அது சாதகன் பிறந்த நாளின் அட்சரேகைக்கும் தீர்க்க ரேகைக்கும் தகுந்தபடி சிறிது வேறுபடும். பன்னிரண்டு இராசிகளையும் அவைகளிலுள்ள கிரகங்களையும் இலக்கினத்தையும் படத்தில் உள்ளவாறு எழுதிப் பயன்படுத்திக்கொள்ளலாம்.

அவை வருமாறு:-

| | | | |
|---|---|---|---|
| மீனம் | மேசம் | ரிசபம் | மிதுனம் |
| கும்பம் | இராசிச் | | கடகம் |
| மகரம் | சக்கரம் | | சிம்மம் |
| தனுசு | விருச்சிகம் | துலாம் | கன்னி |

ஒரு சாதகனுடைய தற்காலிகப் பலாபலன்களைச் சனியைக் கொண்டும், குருவைக் கொண்டு ஆண்டின் பலன்களையும், சூரியனைக் - கொண்டு மாதபலன்களையும், சந்திரனைக் கொண்டு நாட்பலன்களையும் காண்பார்கள்.

மேலும், இந்தியாவில் மணமகளுக்கேற்ற மணமகனையோ, மணமகனுக்கேற்ற மணமகளையோ தேர்ந்தெடுப்பதற்கும் அவர்களுடைய சாதகங்களை ஒத்திட்டுப் பார்ப்பது வழக்கம். இவற்றைத் தவிர வீடு கட்டல், விதைவிதைத்தல், படிக்க வைத்தல், மணம் செய்தல் முதலிய சுபகாரியங்களுக்கு நல்ல வேளைகளைத் தேர்ந்தெடுத்தலும் சோதிடத்தில் ஒரு பகுதியாகும். இஃதன்றி ஒரு நாட்டின் தட்ப வெப்ப நிலை, மழை விளைபொருள்கள் முதலியவற்றைக் கணிப்பதும், சோதிடத்தின் ஒரு பகுதியாகும். கிரகணம், சமாகமம், வால் நட்சத்திரம் முதலியன தோன்றும் நேரத்தைக் கணிப்பதும் இப்பகுதியில் அடங்கும். சாதகத்தின் மூலம் ஒருவனுக்கு உண்டாகும் நோய் முதலியவைகளையும் அவற்றிற்குப் பரிகாரங்களையும் சொல்வது சோதிடத்தின் மற்றொரு முக்கியமான அம்சமாகும்.

## ஈ) சோதிடக் கலையின் உட்பிரிவுகள்

சோதிடக் கலை என்பது ஒரு மாபெரும் கடலைப் போன்றது. அதன் ஆழத்தையும் அகலத்தையும் முழுவதும் உணர்ந்தவர்கள் உலகில் ஒரு சிலரே உள்ளனர். உலகெங்கிலும் சோதிடக் கலைக்கு இப்போது ஒரு வரவேற்பு இருக்கிறது. மேனாட்டினர் நம் பாரத நாட்டுச் சோதிடக் கலையில் அளவற்ற ஆர்வம் காட்டி வருகிறார்கள். காரணம் ஆயிரம் ஆயிரம்

ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்திருந்த நமது சோதிடப் பேராசிரியர்களின் வானநூல் புலமையேயாகும். ஆகையால் நமது சோதிடக் கலைக்கு மேனாடுகளில் பெரும் செல்வாக்கு ஏற்பட்டுள்ளது. நமது பழமையான சோதிட நூல்களின் (சுவடி) அடிப்படையில் மேனாட்டு ஆசிரியர்கள் பல புதிய நூல்களை எழுதி உள்ளனர்.

வடமொழியிலும் தமிழிலும் அருமையான சோதிட நூல்கள் ஏராளமாக உள்ளன. ப்ருஹத்ஜாதகம், சாராவளீ, ஜாதக தத்வம் முதலிய வடமொழி நூல்களும், சாதகாலங்காரம், குமாரசாமயம், வீமேசுர உள்ளமுடையான் போன்ற தமிழ் நூல்களும் மிகப் புகழ் பெற்றவை. இந்த நூல்கள் வானத்தில் உலாவித் திரியும் கோள்கள், மண்ணில் வாழும் மனிதன் மீது எத்தகைய ஆதிக்கம் செலுத்துகின்றன என்பதை விவரிக்கின்றன. வானவெளி என்பது பூமியைச் சுற்றி உள்ள ஒரு மாபெரும் வட்டம் ஆகும். அந்த வட்டத்தைப் பன்னிரெண்டு பகுதிகளாகப் பிரித்து இருக்கிறார்கள். இந்தப் பகுதிகளுக்குத்தான் 'இராசிகள்' என்று பெயர்.

சோதிடக் கலையை அறிந்துகொள்ள விரும்புபவர்கள் முதலில் இராசிகளின் பெயர்களைத் தெரிந்துகொள்ள வேண்டும். அவை வருமாறு.

1) மேஷம் 2) ரிஷபம் (இடபம்) 3) மிதுனம் 4) கடகம் 5) சிம்மம் 6) கன்னி 7) துலாம் 8) விருச்சிகம் 9) தனுசு 10) மகரம் 11) கும்பம் 12) மீனம்

இந்த பன்னிரெண்டு இராசிகளிலும் ஒன்பது கிரகங்கள் சஞ்சரிக்கின்றன. அந்தக் கிரகங்கள் வருமாறு;

1) சூரியன் 2) சந்திரன் 3) செவ்வாய் (அங்காரகன்), 4) புதன் 5) வியாழன் 6) வெள்ளி (சுக்கிரன்), 7) சனி 8) இராகு 9) கேது இதே போல வானவீதியில் எண்ணற்ற நட்சத்திரங்கள் இருக்கின்றன. ஆனால் அவற்றுள் இருபத்தேழு நட்சத்திரங்கள்தான் சோதிடக் கலைக்குப் பயன்படுபவை.அவை, 1) அசுவனி, 2) பரணி, 3) கிருத்திகை (கார்த்திகை), 4) ரோகிணி, 5) மிருகசீரிடம், 6) திருவாதிரை, 7) புனர்பூசம், 8) பூசம், 9) ஆயில்யம், 10) மகம், 11) பூரம், 12) உத்திரம், 13) அஸ்தம், 14) சித்திரை, 15) சுவாதி, 16) விசாகம், 17) அனுசம், 18) கேட்டை, 19) மூலம், 20) பூராடம், 21) உத்தராடம், 22) திருவோணம், 23) அவிட்டம், 24) சதயம், 25) பூரட்டாதி, 26) உத்திரட்டாதி, 27) ரேவதி

இந்த இருபத்தேழு நட்சத்திரங்களும் வான மண்டலத்தில் உள்ள 27 மைல்கற்களைப் போன்றவை. இவைகள் சோதிடக் கலையில் சாதகம் கணிப்பதில் பெரிதும் பயன்படுகின்றன.

சோதிடத்தின் மீது கணிக்கப்படுவது 'பஞ்சாங்கம்' எனப்படும். இது பஞ்ச அங்கங்களை உடையது. அதாவது 1) திதி, 2) வாரம், 3) நட்சத்திரம், 4) யோகம், 5) கரணம் என்பன அவை. இவற்றுள் 'வாரம்' என்பது ஞாயிற்றுக்கிழமை முதல் சனிக்கிழமை வரையிலான ஏழு கிழமைகள். 'திதி' என்பது வளர்பிறைப் பிரதமை முதல் பௌர்ணமி வரையிலான பதினைந்து நாட்களும், தேய்பிறைப் பிரதமை முதல் அமாவாசை வரையிலான பதினைந்து நாட்களும் ஆக மொத்தம் முப்பது நாட்கள். திதியிலிருந்து பிறந்ததுதான் 'தேதி'.

'நட்சத்திரம்' என்பது அசுவனி முதல் ரேவதி ஈறாக உள்ள இருபத்தேழு. 'யோகம்' என்பது விஷ்கம்பம் முதல் வைதிருதி முடிய உள்ள இருபத்தேழு. 'கரணம்' என்பது பவம் முதலாகக் கிமிசுதுக்கினம் ஈறாகவுள்ள பதினொன்று. திதியினால் அறியப்படுவது வானவெளியில் சூரியனுக்கும், சந்திரனுக்கும் உள்ள தொலைவு, திதியில் பாதி கரணம். வான வெளியில் ஒரு குறித்த இடத்திலிருந்து சூரியனும் சந்திரனும் செல்கிற மொத்த தூரத்தைக் குறிப்பது யோகம். வானவெளியில் சந்திரன் நிற்கும் இடத்தைக் குறிப்பது நட்சத்திரம்.இவைகளே சோதிடக் கலையின் அடிப்படை அம்சங்களாகும்.

## 2.சோதிடச் சுவடிகளைப் பதிப்பிக்கும்போது ஏற்படும் சிக்கல்களும் தீர்க்கும் வழிகளும்

சோதிடச் சுவடிகளைப் பதிப்பிப்பது எளிதான காரியமன்று. அதற்குத் தெளிந்த சாத்திர அனுபவ ஞானம் வேண்டும். பல சோதிட நூல்களைப் பயின்றிருக்க வேண்டும். அதன்மீது அளவிடற்கரிய ஆர்வம் இருக்க வேண்டும்.

முதலில் ஒரு சோதிட ஓலைச்சுவடி வெளியிடப் பெற வேண்டுமா? என்பதை நிர்ணயிப்பதற்கு முன்னர் அச்சுவடியின் ஏடுகளைப் படித்து, தற்கால எழுத்தில் பெயர்த்து எழுதிக் கொள்ளவேண்டும். இது சுலபமான வேலை அல்ல. எனினும் அவற்றைத் தற்கால எழுத்தில் பெயர்த்து எழுதிய பிறகே அவற்றின் மதிப்பை நாம் உணரமுடியும். அந்த மூல ஏடுகள் காலக்கிரமத்தில் மசி மங்கிப் பாழாகி விடக்கூடுமாதலால் விரைவில் அவற்றை ஆராய்ந்து பெயர்த்து எழுதுவதற்கான ஏற்பாடுகளைச் செய்யவேண்டும்.

அவ்வாறு எழுதப்பட்ட சோதிடச் சுவடிகளை முதலில் ஊன்றிப் படித்துப் பார்க்க வேண்டும். பல சொற்கள் உருமாறக் காணப்படும். இன்னும் சிலவற்றில எழுத்துப் பிழைகள் மலிந்து காணப்படும். அவற்றை எல்லாம் ஓரளவு திருத்தி எடுத்துக் கொண்டு சோதிட வல்லுநரிடம் காட்டித் திருத்தம் செய்துகொள்ள வேண்டும். பின்னர் சோதிட நூல்கள் பலவற்றை ஒப்பிட்டுத் திருத்தஞ்செய்ய வேண்டும்.

சோதிடச் சுவடிகள் படிப்பது பற்றியும் அவற்றில் உள்ள சிரமங்கள், நுணுக்கங்கள் பற்றியும் இங்குக் கூறுவோம். கடந்த நூற்றாண்டின் முக்கால் பகுதி வரை (கி.பி. 1875) தமிழ் நூல்கள் பெரும்பாலும் ஏட்டுச் சுவடியிலேயே எழுதப்பெற்று வந்தன. ஆசிரியர் சொல்ல மாணவர்கள் அதனை ஏட்டில் எழுதிவந்தனர். அவர்கள் செவிவழிக்கேட்டு எழுதியதால் பிழைகள் மலிந்து காணப்பட்டன. சிலர் இவற்றை அவசர அவசரமாகப் பதிப்பிக்கும்போது நூல்கள் பல பிழைகளுடன் காணப் படுகின்றன. சுவடியாக இருந்தால் இப்பிழைகளை ஒருவாறு ஊகிக்கலாம். ஆனால் அச்சில் வந்தபின் அவ்விதம் ஊகிக்கவும் இயலாது.

சுவடிகளைப் படித்துப் பெயர்த்தெழுவதில் உள்ள துன்பங்கள் மிகுதி; அவற்றைப் பற்றி டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்கள்,

> "இஃது கொம்பு, இது சுழி என்று வேறு பிரித்து அறிய முடியாது. மெய் எழுத்துக்களுக்குப் புள்ளியே இராது. ரகரத்துக்கும் காலுக்கும் வேற்றுமை தெரியாது. சாபம், சரபமாகத் தோற்றும். சரபம் சாபமாகத் தோற்றும். ஓரிடத்தில் 'சரடு' என வார்த்தையை நான் 'சாடு' என்று பல காலம் எண்ணி வந்தேன். 'தான்' என்பதைத் 'தரன்' என்று நினைத்தேன். இடையின ரகரத்திற்கும் வல்லின ற கரத்திற்கும் பேதம் தெரியாமல் மயங்கின இடங்கள் பல" எனக் குறிப்பிட்டுள்ளார்.

மேலும் இச்சுவடிகளில் பல 'எழுத்தும்' சொல்லும் மிகுந்தும், குறைந்தும் பிறழ்ந்தும், திரிந்தும் பலவாறு வேறுபட்டுக் கிலமுற்று இருப்பவை. அவைகளைப் பழைய பிரதிகள் பலவற்றையும் பலகால் ஒப்புநோக்கி இடையறாது பரிசோதனை செய்து அவைகளின் உண்மை வடிவத்தை உணரவேண்டும்.

பழந்தமிழ் நூல்கள் பெரும்பாலும் செய்யுள் அமைப்பிலேயே சுவடியில் அமைந்திருக்கின்றன. தமிழில் உரைநடை பல்கிப் பெருகியது வீரமாமுனிவர் காலத்துக்குப்

பிறகுதான். அப்போதெல்லாம் உரைநடை வெகு குறைவாகவே இருந்தது. எனவே பழந்தமிழ் நூல்கள் எல்லாம் கவிதை அமைப்பிலேயே இருந்தன. ஆசிரியர்கள் வாய் வழியாகக் கூற வேறொருவர் அவ்வப்போது பிரதி செய்து வருவர். இவ்வாறு பிரதி செய்பவர்கள் 'கற்றுச் சொல்லிகள்' என அழைக்கப்பட்டனர். அதே போல் மன்னர்களும், சமீன்தார்களும், பெருநிலக்கிழார்களும் தங்கள் பரம்பரைச் சொத்தாகிய தமிழ்ப் பெருநூல்களைத் தங்கள் தங்கள் குடும்பங்கள் விரிவடையும்போது பல கூலியாட்களை அமர்த்திப் பிரதி செய்து வந்தனர்.

இவ்விதம் கூலிக் கெழுதியவர்கள் சிறந்த அறிஞர்களாக இருக்கமுடியாது. இவர்கள் தங்களது வருமானத்தையன்றி, நூலின் தரத்தைப் பற்றியோ, நயத்தைப் பற்றியோ கவலைப்படாமல் கைக்கு வந்த வண்ணம் பிழைகள் மலியப் பிரதி செய்தனர். இதே போல் கற்றுச் சொல்லிகளும் பயில வந்தவர்கள் ஆதலினாலே அவர்களிடம் சிறந்த புலமை இல்லை. இவர்கள் எல்லாம் தாங்கள் கேட்டவண்ணம் பிரதி செய்கையில் வல்லினம், இடையினம், ஒற்றுகள், சந்திவிதிகள் இவைகள் எல்லாம் புரியாமல் பிரதி செய்தமையால் பல பிழைகள், பிரதி பேதங்கள் மலிந்து காணப்படுகின்றன.

இச்சோதிடச் சுவடிகளில் குறியீடுகள் எதுவும் இராமல், பாடல்கள் சீர் பிரித்து எழுதவும் பெறாமல், ஒரே சங்கிலித் தொடராகவே எழுதப்பெற்றிருக்கும். எனவே சுவடிகளில் உள்ள சந்தி, குறில், நெடில் , மெய், உயிர்மெய், கொம்பு, கால் இவற்றை உணர யாப்பியலும் இலக்கணமுமே கைகொடுத்து உதவுகின்றன. இவ்விலக்கண நூல்களைப் பயில்வதோடு, சோதிடக்கலை நூல்களையும் கற்றுச் சிறந்த புலமையும் இருந்தால்தான் முறையாகச் சரியான வடிவில் பிழையின்றிப் பதிப்பிக்க முடியும்.

### ஊ. பதிப்பாசிரியருக்கு வேண்டிய தகுதிகள்

பழமையான சோதிடச் சுவடிகளைப் பதிப்பிக்கும் ஆசிரியருக்குச் சில இன்றியமையாத தகுதிகள் தேவைப்படுகின்றன. அவையாவன:-

1) புராதனமான சோதிட நூல்கள், அவைகளின் உரைகள், விளக்கங்கள் எல்லாம் பண்டைய வடிவம் குன்றாது இருக்குமாறு பார்த்துக்கொள்ளவேண்டும்.

2) பிரதிகளில் இல்லாதவற்றைக் கூட்டியும் உள்ளவற்றை மாற்றியும் குறைத்தும், மனம்போனவாறே பதிப்பித்தல் கூடாது. இதில் ஆசிரியர் நேர்மையானவராக இருக்க வேண்டும்.

3) சோதிடச் சுவடிகளை ஆழ்ந்து படித்து ஒருவகையாகப் பொருள் கொண்டு, பிரதிகளில் இருந்தவாறே பதிப்பிக்க வேண்டும். ஆசிரியராக ஒன்றும் பதிப்பிக்கக்கூடாது. இதில் பிரதிகளில் சில விடங்களில் வடமொழிப் பதங்கள் கிரந்தவெழுத்துக்கள் எழுதப்பட்டிருப்பின் அவ்வாறே பதிப்பிக்க வேண்டும்.

4) நிறைந்த புலமை உண்மையைக் காணவேண்டும் என்ற ஆர்வம், இடை விடாத உழைப்பு, எதனை ஆராய்கிறோமோ அதன் மயமாய் நின்று தம்மை மறந்து ஒன்றும் இயல்பு, தமக்கு நன்றாகத் தெளிவு பிறக்கும்வரை மென்மேலும் முயற்சி, நேர்மை ஆகிய இத்துணைப் பண்புகளைப் பதிப்பாசிரியர் பெற்றிருக்க வேண்டும்.

5) பல காலமாக ஏடு எழுதுவோர் செய்த வழுக்கள் சுவடியில் ஏறியிருக்கும். செய்யுள் உருவமே தெரியாது. இடையில் வழக்கு ஒழிந்தமையால் பல பகுதிகளுக்கும் பொருளே தெரியாது. இவற்றையெல்லாம் நுணுகி ஆராய்ந்து உண்மை தெளிந்து வெளியிடும் தகுதி வேண்டும்.

6) சோதிடச் சுவடியின் பதிப்பில் முதலில் முகவுரை இருக்கவேண்டும். அந்நூலைப் பற்றிய செய்திகளும், ஆசிரியரைப்பற்றிய செய்தியும், ஏட்டுச்சுவடி கிடைத்த வரலாறும் அம்முகவுரையில் இருக்கவேண்டும்.

7) நூலின் மூலத்தைத் திருத்தமாய்ப் பதிப்பித்து அடியில் குறிப்புக்களும் ஒப்புமைப் பகுதிகளும், மேற்கோளாக வந்த இடத்தைப் பற்றிய குறிப்புக்களும் பாட பேதங்களும் அமைத்துக் கொடுக்க வேண்டும்.

8) ஆசிரியருக்கு விளங்காத பகுதிகளை 'இது விளங்கவில்லை' என்று சொல்வதிலும் பிரதிகளில் உள்ளவாறே பதிப்பிப்பதிலும் நேர்மை வேண்டும்.

9) சுவடிகள் பொடித்துப்போய் எழுத்துக்கள் இல்லாத விடத்துப் புள்ளிகள் (..........) எத்தனை எழுத்துக்களோ அத்தனை இடவேண்டும். ஆசிரியருக்குத் தோன்றும் எழுத்துக்களை அடைப்புக் குறிக்குள் ( ) பதிப்பிக்கவேண்டும்.

*10)* டாக்டர் உ.வே.சாமிநாதையருக்குப்பின் தமிழ்ச் சுவடிகளைப் பதிப்பிக்கின்ற குறிப்பாக,சோதிடச் சுவடிகளைப் பதிப்பிக்கின்ற நிலை குறைந்து விட்டது. காரணம் தமிழ்ச் சுவடிகளைப் படிப்பதற்கும், பதிப்பிப்பதற்கும் தகுதி யானவர்கள் இன்மையே. எனவே தற்காலத்தில் ஓலைச்சுவடிகளைப் படிப்பதற்கும் பதிப்பிப்பதற்கும் தகுதி பெற்ற ஆசிரியர்கள் வேண்டும். அத்துறையில் தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக்கழகம் ஓர் முன்னோடியாக இருக்கவேண்டும்.

## எ) பதிப்பிக்கப்பட்ட சோதிட நூல்கள்

இதுவரை சோதிடச் சுவடிகள் சில தனித்தனியே பிரதி செய்யப்பட்டு குறிப்புரை, முன்னுரை, சொற்பொரு ளகராதியுடன் பதிப்பிக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையத்தின் *(1)* காலச் சக்கரம் *(1969)* என்னும் நூலையும் *(2)* வராகர் ஓரா சாஸ்திரம் *(1981)* என்னும் நூலையும் கூறலாம். மேலும் அதற்கு முன்பே சென்னை அரசினர் கீழ்த் திசைச் சுவடிச்சாலை நூல் நிலையம் சில நூல்களை வெளியிட்டன. அவைகளின் விபரம் வருமாறு:-

| | | |
|---|---|---|
| சப்தரிஷி நாடி சோதிடம் | - மேஷ லக்னம் | - *1951* |
| ரிஷபம் லக்னம் | - *1953* | |
| மிதுனம் லக்னம | - *1954* | |
| கடகம் லக்னம் | - *1955* | |
| சிம்மம் லக்னம் | - *1956* | |
| கன்யா லக்னம் | - *1961* | |

இவ்வாறு பதிப்பிக்கப்பட்டுள்ள சோதிட நூற்கள் குறைவே. ஆகவே இன்னும் பதிப்பிக்கப்பட வேண்டிய சோதிடச் சுவடிகள் ஏராளமாக உள்ளன.

## ஏ) முடிவுரை

மேற்கூறியவற்றால் தமிழ் மக்களுக்குச் சுவடிச் செல்வமே தமிழ்ச் செல்வமாகும். கடல் கொண்டது போக, கண்கண்டதாக இப்போது கிடைக்கும் இன்பத் தமிழ்ச் சுவடிகள் எல்லாம் நிறைய உள்ளன. நீரிலும் நெருப்பிலும் இட்டது போக எஞ்சியுள்ளவற்றில் மிகச் சில சுவடிகள் நூல்களாக வந்துள்ளன. ஏனைய நூல்களையும் விரைவில் பதிப்பிக்க வேண்டும். வானவியிலும், கணிதவியலும் நிறைந்த சோதிடச் சுவடிகளைப் பதிப்பித்து வருங்காலத் தமிழ் மக்களுக்கு வழிகாட்டிகளாக விளங்குவோமாக.

## மேற்கோள் நூல்கள்

1) பாலசுப்பிரமணியன், டாக்டர் சி. சுவடியியல் பயிற்சி கையேடு, அணிந்துரை பக். X
2) இராமன், மு.கோ; சுவடியியல் பயிற்சி கையேடு,முன்னுரை, பக். 2
3) இராமன், மு.கோ; சுவடியியல் பயிற்சி கையேடு,முன்னுரை, பக். 2
4) தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையம், காலச்சக்கரம் முன்னுரை, பக். XIX
5) கலைக்களஞ்சியம், தொகுதி 5, பக். 260
6) கலைக்களஞ்சியம், தொகுதி 5, பக். 260
7) கலைக்களஞ்சியம், தொகுதி 5, பக். 261
8) தமிழ் வாணன், ஜோஸ்யம் கற்றுக் கொள்ளுங்கள், பக். 58 -59
9) சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூல்நிலையம்; சித்தாந்த விளக்கம், பக்.X
10) சாமிநாதையர், டாக்டர் உவே. சா., என் சரித்திரம், பக்கம். 353.

# ஓலைச்சுவடியாய்வில் கணிப்பொறியின் பயன்பாடுகள்

கா. செ.செல்லமுத்து

## 1.0 முன்னுரை

பன்மடங்கு அறிவியல் வளர்ச்சியையும் அதன் வழி எண்ணற்ற கண்டுபிடிப்புக்களையும் பெற்று விளங்குவது இருபதாம் நூற்றாண்டாகும். இன்றைய மானிட வாழ்க்கை அறிவியற் கருவிகளின் துணையைப் பெரிதும் சார்ந்துள்ளது. பதினெட்டாம் நூற்றாண்டில் தொழில் புரட்சி துவங்கியது. அதன் பயனாக இன்று பல்லாயிரக்கணக்கான கருவிக்ள் வடிவமைத்து உருவாக்கப்பட்டுள்ளன. அவை மானிட வாழ்க்கையின் மேன்மையிலும் பொருளாதார முன்னேற்றத்திலும் பெரும்பங்கு வகிப்பது கண்கூடான ஒன்றர்கும் அதேபோன்று மின்னணுவியல் புரட்சியின் அடிப்படையில் உருவாகியது கணிப்பொறிகளாகும். கடந்த 40 ஆண்டுகளில் அமைப்பிலும் செயற்பாட்டிலும் கணிப்பொறிகள் பல்லாயிரம் மடங்கு மேன்மை அடைந்து உள்ளன. கணிப்பொறி அறிவுசார்ந்த மானிட உள உழைப்பிற்கு மாற்றாக அமைந்த கருவியாகும். இன்று கணிப்பொறிகள் பயன்படுத்தப்படாத துறையே இல்லை என்று கூறுமளவிற்கு அவற்றின் பயன்பாடு பரந்தும் நிறைந்தும் உள்ளது. குறிப்பாகக் கூறுவோமாயின் கல்வி, ஆய்வு, தொழில், போக்குவரத்து, பாதுகாப்பு, தொலைத் தொடர்பு, மருத்துவம் முதலிய எண்ணற்ற துறைகள் அவற்றின் மேம்பாட்டிற்கும் திறனுக்கும் கணிப்பொறிகளைப் பெரிதும் நம்பியிருக்கின்றன என உறுதியாகக் கூறலாம்.

கணிப்பொறிகள் மற்ற அறிவியல் கருவிகளுக்கு இல்லாத ஒரு தனிச் சிறப்பினைப் பெற்று விளங்குகின்றன. பெருமளவில்

செய்திகளைப் பதிவு செய்தல், தேவையான செய்தியைத் தக்க நேரத்தில் எடுத்து வழங்குதல், ஒரு கணக்கிற்கு நுட்பமாகவும் துல்லியமாகவும் விடை காணல், ஒரே பணியைத் திரும்பத் திரும்பவும் சலிப்பின்றியும் செயற்படுத்துதல் முதலியன கணிப் பொறியின் சிறப்புப் பண்புகளாகக் கருதப்படும்.

கணிப்பொறியின் கருவியப் பகுதிகள் (*Hardware*) மட்டும் நமது பயன்பாட்டிற்கு உதவுவதில்லை. கணிப்பொறியை இயக்கவும் நமது பணிசார்ந்த சிக்கல்களுக்குத் தீர்வு காணக் கணிப்பொறிக்கு அறிவுறுத்தவும் வழியமைப்புகளின் (*Programs*) மூலம் கட்டளையிடுதல் அவசியமாகிறது. இதனையே கணிமம் (*Soft ware*) என்று குறிப்பிடுகிறோம்.

கணிப்பொறி பல துறைகளிலும் பெரிதும் பயனுடைய ஒரு கருவியாக விளங்குகிறது எனக்கூறினோம். அதே போன்று ஒரு மொழியைப் பற்றிய ஆய்விலும் கணிப்பொறிகள் பெரிதும் பயன்படுகின்றன. மொழியாய்வில் மொழியின் இலக்கணம் மற்றும் பொருள் சார்ந்த கூறுகளை ஆய்தல், இலக்கியங்களை ஆய்ந்தறிதல், இலக்கியங்களுக்கேற்ற சொல் மற்றும் பொருள் அடைவுகளைத் தயாரித்தல், எழுத்துக்களின் வரிவடிவங்களை ஆய்தல், அகராதிகளை உருவாக்குவதில் உதவுதல், உரை ஆய்வு செய்தல், அரிய சுவடி மற்றும் ஓலைச்சுவடிகளைப் பற்றி ஆய்ந்தறிதல், அட்டவணை யாக்கல், இலக்கியங்களின் காலம் மற்றும் ஆசிரியர் இன்னார் என்பதைக் கண்டறிதல் முதலியன ஆகும். ஓலைச் சுவடிகளைப் பற்றிய ஆய்வில் கீழ்க்கண்ட ஆய்வுநிலைகளில் கணிப்பொறியைச் சிறப்பாகப் பயன்படுத்தலாம்.

ஓலைச்சுவடிகளிலுள்ள உரையினை ஆய்ந்தறிதல், ஓலைச்சுவடிகளைப் பேணிப்பாதுகாத்தல், பல்லாயிரக்கணக்கான ஓலைச்சுவடிகளை ஆவணப் படுத்துதல், ஓலைச் சுவடிகளுக்கான அட்டவணையை உருவாக்குதல், ஓலைச் சுவடியின் உரைகளுக்கு சொல் மற்றும் பொருள் அடைவு தயாரித்தல், ஓலைச் சுவடியின் ஆசிரியர் மற்றும் காலத்தைக் கணித்தல் முதலியன ஆகும்.

### 1.1 ஓலைச் சுவடி உரைகளை ஆய்வு செய்தல்

கணிப்பொறி வழி உரையாய்வு என்பது அதிலமைந்துள்ள மொழிநடை, சொல் மற்றும் குறிப்பிட்ட சொற்றொடர்களின் பயன்பாடு, பிறமொழிச் சொற்கலப்பு முதலியவற்றை எளிதில்

ஆய்ந்து தெளிவதற்கேற்ற வழிமுறையாகும். இவ்வமைப்பில் ஓலைச்சுவடிகளிலுள்ள செய்திகள் கணிப்பொறியில் மின் காந்தப்பதிவாகப் பதிவு செய்யப்படுகின்றன. பதிவு செய்யப்பட்டுள்ள உரை கணிப்பொறியால் படித்தறியப்பட்டு உரையாய்வு செய்யப்படுகிறது. இதில் சொல் மற்றும் எழுத்துக்களின் நிகழ்வெண்ணிக்கை, பிறமொழிச்சொற் கலப்பு, சமூகப் பின்னணிக்கேற்ற சொல்லாட்சி, மொழியியல் மற்றும் இலக்கணப் பாங்குகள் குறித்த செய்திகள் ஆய்ந்தறியப் படுகின்றன. இவ்வகையான உரையாய்வுப் பணிகள் அப்பணியின் ஆசிரியர் மற்றும் சுவடி எழுதப்பட்ட காலம் முதலியவற்றைத் தெளிவாகக் கணித்து உணர்வதற்குப் பயன்படுகிறது.

## 1.2 ஓலைச்சுவடிகளைப் பேணிப் பாதுகாத்தலும் ஆவணப்படுத்துதலும்

அரிய மற்றும் ஓலைச்சுவடிகள் மூலமே பெரும் பான்மையான செய்திகளை இன்றைய சந்ததியினர் அறிந்துணரமுடிகிறது. ஓலைச் சுவடிகளைப் பேணிப்பாதுகாத்தல் மூலம் எதிர்காலச் சந்ததியினருக்கு மொழி, கலை, பண்பாடு, ஒரு குறிப்பிட்ட காலக் கட்டத்தின் சமூக மேன்மை முதலியவை குறித்த அரிய உண்மைகள் கிடைக்கச் செய்வதற்கு வாய்ப்பாக அமைகிறது. எனவே ஓலைச்சுவடிகளைப் பேணிப்பாதுகாத்தல் மிக முக்கியமான பணியாகும். ஓலைச்சுவடிகளை நன்கு பாதுகாக்காவிடில் அவற்றில் எழுதப்பட்டுள்ள கருத்துக்களை நாம் இழக்கவேண்டி நேரும். எனவே பல இரசாயன முறைகளின் மூலமும் நிழற்படப் படியெடுத்தல் *(Xeroxing & Microfilming)* மூலமும் ஆவணப்படுத்துதலும் பாதுகாத்தலும் செய்யப் படுகின்றன.

ஓலைச்சுவடிகளில் அமைந்துள்ள செய்திகளை நேரடியாகக் கணிப்பொறிக்குத் தட்டச்சு செய்து மின்காந்தப் பதிவகத்தில் பதிவு செய்ய இயலும். இதன் மூலம் பல்லாயிரக்கணக்கான பழம் ஓலைச்சுவடிகளிலுள்ள செய்திகள் எளிதில் தெரிவுசெய்து பயன்படுத்துவதற்கேற்ற வகையில் ஆவணப்படுத்தப்படுகின்றன. மேலும் இத்தகைய மின்காந்தப் பதிவுகளைக் கொண்டு கணிப்பொறி மூலம் ஓலைச்சுவடியிலுள்ள செய்திகளை ஆய்ந்தறியவும் பாதுகாக்கவும் வாய்ப்பேற்படுகிறது. இவையன்றி, தற்காலக் கணிப்பொறிகளில் ஓலைச்சுவடிகளைப் படப்பகுப்பாய்வு *(Image processing)* என்ற நவீன வசதியின் மூலம்

படங்களாகப் பதிவு செய்யவும் ஆய்வு செய்யவும் இயலும். இவ்வாறு கணிப்பொறியின் நினைவகத்தில் பதிவு செய்யப்பட்டுள்ள ஓலைச்சுவடியின் செய்திகளை நுண்பட மாகவோ, *com-computer. output micro film* முறையில் படமாகவோ அல்லது உரைகளை அச்சாக்கிப் பெறவோ இயலுமாதலால் பழம் ஓலைச் சுவடிகளையும் அதிலமைந்துள்ள உரைகளையும் பாதுகாத்தல் மிகவும் எளிதான பணியாகிறது.

கணிப்பொறி மூலம் ஓலைச்சுவடிகளைப் பற்றிய பல்லாயிரக்கணக்கான செய்திகளை எளிதில் தொகுக்க இயலும். உலகம் முழுவதும் கிடைக்கக்கூடிய ஓலைச்சுவடி உரைகளையும் அவை சார்ந்த நூல் அடைவுகளையும் பிற விவரங்களையும் கணிப்பொறி வழித் தொகுக்கலாம். பின்னர், பொருள் மற்றும் பாடத்தலைப்புக்களில் அவற்றை வகைப்படுத்த இயலும். ஆசிரியர், தலைப்பு, பொருள், உரையாசிரியர், முதலியனவற்றைக் கொண்டு செய்திகளைப் பகுத்தும் தேவைக்கேற்பத் தெரிவு செய்யவும் உரிய அட்டவணைகளை உருவாக்கலாம். இவ்வகையான கணிப்பொறி வழி அமைந்த ஓலைச்சுவடிச் செய்தியமைப்பு (*International Catalogue of Tamil P.L.Mss*) உலகம் முழுவதற்கும் பலரும் பயன்படுத்த ஏற்ற வகையில் செய்திகளைத் தந்துதவுகிறது.

## 1.3 ஓலைச்சுவடி உரைகளுக்குச் சொல்லடைவு மற்றும் பொருளடைவு தயாரித்தல்

குறிப்பாக மொழி பற்றிய ஆய்விலும் இலக்கிய ஆய்விலும் ஈடுபட்டுள்ள ஆய்வாளர்களுக்கு அதுகுறித்த சொல்லடைவு மற்றும் பொருளடைவுகள் பெரிதும் பயன்பட வல்லனவாகும். அதேபோன்று ஓலைச்சுவடிகளில் அமைந்துள்ள உரைகள் மற்றும் பாடல்களைக் கணிப்பொறிக்கு உள்ளீடாக்கி ஆய்வு செய்து சொல் மற்றும் பொருளடைவுகளை எளிதிலும் குறுகிய காலத்திலும் உருவாக்க இயலும். அவ்வாறு உருவாக்கப்படும் சொல் மற்றும் பொருள் அடைவுகள் அந்த ஓலைச்சுவடியிலுள்ள உரைகுறித்த மொழிநடை, சொற்புழக்கம், ஆசிரியப்பாங்கு, மொழிநடை, பயன்பட்ட காலம், உரையின் சமூகப்பின்னணி முதலியவற்றைத் தெளிவுற எடுத்து விளக்கும். இத்தகைய செய்திகள் ஒரு உரையின் ஆசிரியர் மற்றும் எழுதப்பட்ட காலம் முதலிய விவரங்களைக் கணித்துணர்வதற்குப் பயன்படுகின்றன. இவையன்றிச்சொல்

மற்றும் பொருள் அடைவுகள் மொழி ஆய்வாளர்களின் பல ஆய்வுகளுக்குப் பெரிதும் பயன்பாக அமைகின்றன.

## 1.4 ஓலைச்சுவடியின் ஆசிரியர் மற்றும் காலத்தைக் கணித்துணர்தல்

உலகிலுள்ள பல மொழிகளிலும் பல்லாயிரக்கணக்கான இலக்கியங்களும் அவைசார்ந்த பல நூல்களும் அரிய உரைகளும் எழுதப்பட்டுள்ளன. அவற்றில் பல நூல்கள் மற்றும் இலக்கியங்களுக்கு அவற்றின் காலம் மற்றும் ஆசிரியரின் பெயர் தெளிவாகத் தெரியாத நிலை உள்ளது. இத்தகைய சிக்கல்கள் இலக்கிய ஆய்வாளர்கள் மற்றும் வரலாற்று வல்லுநர்களுக் கிடையே தொடர்ந்த சர்ச்சைக்கும் ஆய்வுப்பொருளுக்கும் இடமாக அமைந்துள்ளன. கணிப்பொறியைக் கொண்டு வரையறுக்கப்பட்ட முறைமைகளையும் உள்ளீட்டுச் செய்திகளையும் பயன்படுத்தி இத்தகைய சிக்கல்களுக்கும் தீர்வு காணலாம். இதன் மூலம் ஆசிரியர் மற்றும் காலம் தெரியாத ஓலைச் சுவடிகளின் ஆசிரியரையும் காலத்தையும் கண்டறிதல் இயலும். இப்பணியானது முற்றிலும் அறிவியல் அடிப்படையிலும் கணிதக்கோட்பாட்டின் மூலம் பெறப்படும் புள்ளி விவரங்களையும் சார்ந்தமைகிறது.

ஓலைச்சுவடியாய்வில் சுவடிகளைப் பற்றிய பல விவரங்கள் தெளிவாகக் கிடைக்காமல் இருக்கலாம். கீழ்க்கண்ட பல சிக்கல்களுக்குக் கணிப்பொறி வழி விடை காணல் இயலும்.

1. ஓலைச்சுவடியின் ஆசிரியர் இன்னார் எனக் கண்டறிதல்.
2. ஓலைச்சுவடி எழுதப்பட்ட காலத்தைக் கணித்தல்.
3. ஓலைச்சுவடியின் ஆசிரியர் மற்றும் காலம் தெரியாத நிலையில் இரண்டையும் கணித்தல் .
4. ஒரே பணிக்குப் பல ஆசிரியர்கள் உரிமை கொண்டாடும் சிக்கல்கள்.
5. பல ஆசிரியர்களால் உருவாக்கப்பட்ட பணி.
6. ஒன்று அல்லது ஒன்றுக்குமேற்பட்ட ஆசிரியர்களால் பல காலக்கட்டங்களில் எழுதப்பட்ட தொகுப்பை ஆய்ந்து ஒவ்வொரு காலக்கட்டத்திலும் ஆசிரியர், அவ்வுரை எழுதப்பட்ட பின்னணி முதலியவற்றைக் கண்டறிதல்.
7. வெவ்வேறு பதிப்புக்கள் மற்றும் காலங்கள் பற்றிய கணிப்பு.

ஆசிரியர் மற்றும் ஓலைச்சுவடி எழுதப்பட்ட காலத்தை கணிப்பதில் கணிப்பொறியைப் பயன்படுத்துவதற்கான நெறிமுறைகள்:

1. பல்லாயிரம் வரிகள் கொண்ட ஓலைச்சுவடியிலுள்ள உரைகள் மற்றும் பாடல்களை இம்முறையின் மூலம் கணிப்பொறியைக் கொண்டு நுணுகி ஆய்ந்தறியலாம். இம்முறையில் சொற்களையும், சொற்றொடர்களையும் ஒப்பிட்டு நோக்குதல் குறிப்பிட்ட கருத்தாழம் மிக்க சொற்களை இனம் காணல், சொல் மற்றும்எழுத்துக்களின்புழக்கத்தைக் கணித்தல், மொழி நடையைக் கண்டு ஆய்தல் முதலியன அடங்கும். கணிப்பொறி இன்றி வழக்கமான ஆய்வின்வழி பல ஆயிரம் மடங்கு செய்திகளை மேற்கண்டவாறு ஆய்தல் முற்றிலும் இயலாத ஒன்றாகும்.

2. கணிப்பொறியைக் கொண்டு ஆசிரியர் பெயரோ, காலமோ தெரியாத ஓலைச்சுவடியின் உரை அல்லது பாடல்களுடன் சமகாலத்திய பிற பணிகள், யூகிக்கப்படும் ஆசிரியரின் பிற பணிகள் முதலியவற்றை ஒப்பிட்டு நோக்குதல்.

3. மொழிநடையில் ஒற்றுமை, வேறுபாடு, புள்ளியியல் கோட்பாட்டின் அடிப்படையில் கண்டறியப்பட்ட விவரங்கள், மொழியியல் சார்ந்த செய்திகள் இவற்றினைக் கொண்டு ஆசிரியர் இன்னார் என்பது பற்றியும் அல்லது ஓலைச் சுவடியின் காலம் இன்னது என்பது பற்றியும் தெளிவு பெறலாம்.

4. மேற்கண்ட புள்ளிவிவரங்கள் மட்டுமன்றித் தெளிவான சமன்பாடுகளையும் சூத்திரங்களையும் உருவாக்கி ஆசிரியரின் தனித்துவப்பாங்கு, திரும்பத் திரும்ப பயன்படுத்தப்படும் மொழிநடை முதலியவற்றைக் கொண்டும் பிறபணிகளிலிருந்து வேறுபடுத்தி நோக்கியும் ஆசிரியரின் பெயரைக் கண்டறியலாம்.

5. ஒரு குறிப்பிட்ட பணியானது ஆசிரியரால் பல காலங்களில் எழுதித் தொகுத்து வெளியிடப்பட்டதாக இருக்கலாம். இந்நிலையில் ஆசிரியருடைய அறிவு முதிர்ச்சிக்கேற்பவும், காலத்திற்கேற்பவும் மொழிநடை, தனித்துவப் பாங்கு, கருத்துச்செறிவு முதலிவற்றில் வேறுபாடு இருக்க வாய்ப்புண்டு. எனினும் உரைகள் முற்றிலும் கணிதக் கோட்பாட்டின் அடிப்படையில் கணிப் பொறியில் நுணுகி ஆய்வு

செய்யப் பெறுவதால் ஓரளவு ஒரே ஆசிரியர் எழுதிய வெவ்வேறு காலத்தைக் கண்டறிய இயலும்.

எடுத்துக்காட்டாகக் கூறின் மேலை நாடுகளின் பல இலக்கியங்களுக்கு ஆசிரியர் மற்றும் காலம் பற்றிய கணிப்புகள் கணிப்பொறிவழி மேற்கொள்ளப் பட்டுள்ளன. அமெரிக்க ஐக்கிய நாட்டின் அரசியல் அமைப்புச் சட்டத்தின் 77 கட்டுரைகளை மூன்று ஆசிரியர்கள் எழுதியதாகக் கருதப்படுகிறது. இதில் ஜான் ஜே என்பவர் ஐந்து கட்டுரைகளையும், அலெக்சாண்டர் கோல்டன் என்பவர் 43 கட்டுரைகளையும், ஜேம்ஸ் மாடிசன் என்பவர் 14 கட்டுரைகளையும், ஹேமில்டன் மற்றும் மாடிசன் சேர்ந்து 3 கட்டுரைகளையும் எழுதியுள்ளதாகத் தெளிவு பெறப்பட்டுள்ளது. ஆயினும் மீதமுள்ள 12 கட்டுரைகளை மாடிசன் அல்லது ஹேமில்டன் ஆகிய இருவரில் ஒருவர் மட்டுமே எழுதியிருக்க முடியும் என்ற கருத்து நிலவுகிறது. ஹேமில்டன் மறைவுக்குப்பின் மாடிசன் என்பவர் தான் மட்டுமே 12 கட்டுரைகளை எழுதியுள்ளதாக உரிமை கொண்டாடினார். ஹார்வார்டு பல்கலைக்கழகத்தின் பிரடரிக் மாஸ்ட்லர் என்பவரும் சிக்காகோ பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த டேவிட் வாலஸ் என்பவரும் இச்சிக்கலைக் கணிப்பொறி வழி ஆய்ந்து மாடிசன் என்பவர் மீதமுள்ள 12 கட்டுரைகளின் ஆசிரியர் எனத் தெளிவு பெற்றுள்ளனர்.

அதேபோன்று பைபிளின் பழைய ஏற்பாட்டின் ஒரு பகுதியைப்பற்றிய ஆசிரியர் யார் எனக் கணிப்பொறி வழி கண்டறியப்பட்டுள்ளது. இசைய்யா என்ற நூலின் முதல் 12 பகுதிகள் இசைய்யாவால் எழுதப்பட்டது என்றும் மீதமுள்ள 54 பகுதிகள் இசைய்யாவுடன் சேர்ந்து பல ஆசிரியர்களால் எழுதப்பட்டது என்றும் ஹீப்ருவிலுள்ள இஸ்ரேல் தொழில் நுட்பக் கழகத்தைச் சேர்ந்த திரு.ரட்டே கணிப்பொறியின் மூலமாக ஆய்ந்து முடிவு கண்டுள்ளார். அங்ஙனமே பைபிளின் புதிய ஏற்பாட்டிற்கான ஆசிரியர்களைப்பற்றியும் பிளாட்டோவின் ஏழாவது கடிதம் மற்றும் ஹோமருடைய பணிகள் முதலியவற்றிற்கும் இம்முறை பயன்படுத்தப் பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

## 1.5 கணிப்பொறிவழி ஓலைச்சுவடிகளுக்கான அட்டவணை தயாரித்தல்

ஓலைச்சுவடிகள் தொகுக்கப்படும்பொழுது அவற்றைப் பயன்படுத்து வதற்கேற்பப் பாடம் (subject) மற்றும் பொருள் தலைப்புக்களில் பகுத்து வகைப்படுத்துதல் அவசியமாகிறது. இவையன்றி ஓலைச் சுவடிகளில் உள்ள செய்திகளைத் தேவைக்கேற்பவும் குறிப்பிட்ட துறையின் பயன்பாட்டிற் கேற்பவும் அவற்றை வகைப்படுத்தல் வேண்டும். எனவே ஓலைச்சுவடிகளுக்கான அட்டவணையை உருவாக்குதல் மிகவும் அவசியமாகிறது. பாடம் மற்றும் பொருள் தலைப்புக்களில் வகைப்படுத்துவதுடன் ஆசிரியர், தலைப்பு, உரையாசிரியர் முதலியவற்றின் அடிப்படையிலும் செய்திகளைத் தெரிவு செய்வதற்கேற்ப ஓலைச்சுவடிகளின் அட்டவணை தயாரிக்கப் படுதல்வேண்டும். இதில் ஓலைச்சுவடியின் நூலடைவுச் செய்திகளை அகர நிரலாக்கலும் தொகுத்து வகைப்படுத்தலும் அட்டவணை உருவாக்குவதன் பணிநிலைகளாகும். இவற்றை மானிட முயற்சியால் செய்யும்பொழுது அகர நிரலாக்கலிலும் வகைப்படுத்தலிலும் பிழைகள் நிகழ வாய்ப்புண்டு. இதுவன்றி இப்பணியைச் செய்து முடிப்பதற்கு நெடுங்காலம் தேவைப்படுகிறது. கணிப்பொறியைக் கொண்டு ஓலைச் சுவடிகளின் அட்டவணைக்குரிய செய்திகளை மின்காந்த நினைவகத்தில் பதிவாக்கி அட்டவணை உருவாக்கும் பணியினை எளிதில் முடிக்கலாம். கணிப்பொறி வழியமைந்த ஓலைச்சுவடிகளுக்கான அட்டவணையை உருவாக்கும்பொழுது செய்திகளைத் தொகுக்கும் முறை செய்திகளைப் பதிவு செய்து அமைக்கும் பாங்கு இவற்றில் தக்க அணுகுமுறையைப் பின்பற்றுதல் மிகவும் அவசியமாகும்.

கணிப்பொறி வழியாக ஓலைச்சுவடிகளுக்கு அட்டவணை தயாரிக்கும் பணிக்கு எடுத்துக்காட்டாகத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் செய்து முடிக்கப்பட்டுள்ள அனைத்துலகத் தமிழ் ஓலைச்சுவடிகளின் அட்டவணையைக் கூறலாம். கணிப்பு மையம், நூலகம் மற்றும் ஓலைச்சுவடித் துறைகளின் கூட்டு முயற்சியால் உருவாக்கப்பட்டதே சுமார் 21,973 தமிழ் ஓலைச்சுவடிகளுக்குரிய கணிப்பொறிவழி அமைந்த அனைத்துலக ஓலைச்சுவடி அட்டவணையாகும். 1985 இல் மைய அரசு கல்வி மற்றும் பண்பாட்டுத்துறையின் ரூபாய் இரண்டு இலட்சம் நிதியுதவியுடன் இத்திட்டம் செயற்படுத்தி முடிக்கப்பட்டுள்ளது.

இத் திட்டத்தில் உலகம் முழுவதுமுள்ள சுமார் 39 நிறுவனங்களிலிருந்து ஓலைச் சுவடிகள் பற்றிய நூலடைவுச் செய்திகள் தொகுக்கப்பட்டுள்ளன. இதில் இங்கிலாந்து, ரஷ்யா, ஜெர்மனி, பிரான்சு, சுவீடன் முதலிய 12 மேலைநாடுகளின் நூலகங்களும் அடங்கும்.

## 1.5.1 கணிப்பொறி வழி அனைத்துலகத் தமிழ் ஓலைச்சுவடிகளுக்கான அட்டவணை தயாரிக்கும் திட்டம்

இத்திட்டத்தில் சுமார் 21,973 ஓலைச்சுவடிகளுக்குரிய பட்டியல்கள் ரோமன் வரிவடிவத்தில் கணிப்பொறிக்கு உள்ளீடு செய்யப்பட்டு மின்காந்த நினைவகத்தில் பதிவு செய்யப்பட்டு உள்ளன. இச்செய்திகள் அனைத்தும் கணிப்பொறி வழி உருவாக்கப்பட்டுள்ள வழியமைப்புகளைக் (*programs*) கொண்டு எளிதில் ஆய்வு செய்வதற்கும் எடுத்தாள்வதற்கும் ஏற்பப்பதிவு செய்யப்பட்டுள்ளன. இதில் கீழ்க்கண்டவாறு ஓலைச் சுவடிகள் பற்றிய நூலடைவுச் செய்திகள் பதிப்பாகப் (*Records*) பதிவு செய்யப்பட்டுள்ளன.

**Format of P.L. Record**

| ஆசிரியர் பெயர் | தலைப்பு | உரை யாசிரியர் | செய்யுள் அல்லது உரைநடை | Sub பொருள் எண் Code | மொத்த ஓலைகள் | முழுமை , or குறை | Acc No. | நூலக எண் |
|---|---|---|---|---|---|---|---|---|
| –40– | –40– | –30– | –5– | –5– | –5– | –5– | –25– | –5– |

**Characters**

எடுத்துக்காட்டுப் பதிப்பு

| | |
|---|---|
| ஆசிரியர் | : தலைமலைகண்ட தேவர் |
| தலைப்பு | : மருதூரந்தாதி மூலமும் உரையும் |
| உரையாசிரியர் | : ஆறுமுக நாவலர் |
| பாடல்/உரை | : பாடலும் உரையும் |
| பொருள் தலைப்பு எண் | : 359 (அந்தாதி) |
| மொத்த ஓலைகள் | : 80 |
| முழுமை/முழுமை அடையாதது | : முழுமையடைந்தது |
| Acc No | : 142 |
| நூலக எண் | : 27 |

ஒவ்வொரு பதிப்பிலும் ஓலைச்சுவடி பற்றிய தலைப்பு, ஆசிரியரின் பெயர், உரையாசிரியர் பெயர், பொருள் தலைப்பு, *Accession No,* ஓலைச்சுவடி கிடைக்கும் நூலக எண் முதலியன பதிவு செய்யப்பட்டுள்ளன. இவ்வாறு பதிவு செய்யப்பட்டுள்ள ஓலைச் சுவடிகளின் நூலடைவுச் செய்திகள் அனைத்தும் கணிப்பொறியால் ஆய்வு செய்யப்படுகிறது. இந்த ஆய்வில் ஒவ்வொரு பொருள் தலைப்பிலும் அமைந்துள்ள ஓலைச் சுவடிகளின் நூலடைவுச் செய்திகள் முழுவதும் பகுத்தறியப்பட்டுப் பின்னர் குறிப்பிட்ட பொருள் தலைப்பின்கீழ் அமைந்த பதிப்புகள் ஆசிரியர் பெயரின் அடிப்படையில் அகரநிரலாக்கம் செய்யப்படுகின்றன. அதேபோன்று மொத்தமுள்ள 21,973 பதிப்புகளும் ஆய்வு செய்யப்பட்டு சுமார் 365 வெவ்வேறு பொருள் தலைப்புகளில் பகுக்கப்படுகின்றன. அவை அகரநிரலாக்கம் செய்யப்பட்டுச் செய்திகள் பயன் படுத்துவதற்கேற்ற அட்டவணையாக மீண்டும் நினைவகத்தில் பதிவு செய்யப்படுகின்றன- இவ்வாறு பகுத்து ஆய்வு செய்யப்பட்டு அகரநிரலாக்கம் செய்யப்பட்ட அட்டவணைகளைப் பயன் படுத்துவதற்கேற்ப ஆசிரியர், தலைப்பு, உரையாசிரியர், பொருள் தலைப்பு முதலியன படித்துணரப்பட்டுத் தனித் தனியாக அகரவரிசைப்படி அட்டவணைப்படுத்தப்பட்டு உள்ளன. இந்த அட்டவணையைக் கொண்டு குறிப்பிட்ட தலைப்பில் ஒரு குறிப்பிட்ட ஓலைச்சுவடியைப்பற்றிய விவரங்களை அறிதல் இயலும். இவ்வாறு கணிப்பொறி வழித் தயாரிக்கப்பட்ட அனைத்துலகத் தமிழ் ஓலைச் சுவடிகளுக்கான அட்டவணைகள் ஐந்து பெரும் தொகுதிகளாகப் கணிப்பொறி மூலம் ரோமன் எழுத்துக்களில் அச்சிடப்பட்டுள்ளன. இதனைக்| கணிப்பு மையத்தில் உருவாக்கப்பட்டுள்ள வரி வடிவ மாற்ற அமைப்பினைக் கொண்டு தமிழில் அச்சாக்கிப் பெறுதற்கான முயற்சி தற்பொழுது முடியும் தருவாயில் உள்ளது.

## 1.5.2 கணிப்பொறி வழி ஓலைச்சுவடிகளுக்கு அட்டவணை தயாரித்தல் உள்ள நன்மைகள்

* இவ்வமைப்பில் ஓலைச்சுவடிகள் பற்றிய எண்ணிறந்த செய்திகள் எளிதாகவும் குறுகிய காலத்திலும் மின்காந்தப் பதிவின் மூலம் பாதுகாக்கப்படுகின்றன.

* இச்செய்திகள் மின்காந்தப் பதிவாக அமைவதால் வேண்டிய செய்தியை வேண்டிய நேரத்தில் பெறுவது மட்டுமின்றித் தேவைக்கேற்ப மாற்றம் செய்தல் எளிதாகிறது.

* ஓலைச்சுவடிகள் பற்றிய நூலடைவுச் செய்திகளைப் பதிவு செய்து குறுகிய காலத்திலும் குறைந்த பொருட் செலவிலும் கணிப்பொறி மூலம் எளிதாக அட்டவணை செய்தல் இயலும். இதுவே மானிட முயற்சியாயின் பெரும்பொருட்செலவையும் பல ஆண்டுக் காலத்தையும் எடுத்துக்கொள்ளும்.

* கணிப்பொறி வழி இந்த அட்டவணை அமைந்துள்ளதால் தேவையான பொழுது குறிப்பிட்ட பகுதியை மட்டும் அச்சாக்கிப் பெறுதல் இயலும்.

* கணிப்பொறியில் அனைத்து ஓலைச்சுவடிகளின் நூலடைவுச் செய்திகளும் அமைந்துள்ளதால் அதனை ஆய்வு செய்தற்கும் அரிய செய்திகளையும் பல புதிய உண்மைகளையும் கண்டறிவதற்கும் வாய்ப்பேற்படுகிறது.

* கணிப்பொறி வழி இப்பணி செய்யப்பெறுவதால் குறிப்பிட்ட பாடத் தலைப்புகளில் அமைந்த அரிய ஓலைச்சுவடிகளைக் கண்டறிந்து பாதுகாக்கவும் ஆவணப்படுத்தவும் இயலும்.

* கணிப்பொறி மூலம் ஓலைச்சுவடிகளைப் படப்பகுப்பாய்வு செய்யவும் **Computer Output Microfilm - com** முறையில் நுண்படமாக்கவும் இயலும்.

## 1.5.3 கணிப்பொறி வழி அனைத்துலகத் தமிழ் ஓலைச்சுவடி அட்டவணைத் திட்டத்திலிருந்து பெறப்பட்ட செய்திகள்

கணிப்பொறி மூலமாக அனைத்துலகத் தமிழ் ஓலைச்சுவடிகளுக்கு அட்டவணை தயாரிக்கப்பட்டன பொழுது நூலடைவுப்பகுப்பாய்வு (*Bibliometric Analysis*) செய்யப்பட்டது. அதன் மூலம் பல அரிய செய்திகள் கண்டறியப்பட்டன. இதில் மிகவும் அரிதாக உள்ள ஓலைச்சுவடிகள், பாதுகாக்கப்பட வேண்டிய நிலையிலுள்ள அருஞ்சுவடிகள், குறிப்பிட்ட துறை சார்ந்த அரிய ஓலைச்சுவடிகள், ஆசிரியர் மற்றும் தலைப்புப்பற்றிய விவரமில்லாத ஓலைச்சுவடிகள் உரைநடை

மற்றும் பாடல் இவற்றினடிப்படையில் அமைந்த ஓலைச்சுவடிகள் பணி முழுமைபெற்ற மற்றும் முழுமை பெறுத ஓலைச்சுவடிகள் முதலியன பற்றிய செய்திகள் கண்டறியப்பட்டுள்ளன. சுமார் 365 தலைப்புக்களில் அமைந்த 21,973 ஓலைச்சுவடிகளிலிருந்து கணிப்பொறி மூலமாகக் கண்டறியப்பட்ட பல அரிய செய்திகள் கீழ்க்கண்ட பட்டியலில் வழங்கப்பட்டுள்ளன.

ஓலைச்சுவடிகளின் நூலடைவுப் பகுப்பாய்வுச் செய்திகள்

| | |
|---|---|
| ஆசிரியர் பெயர் தெரிந்த சுவடிகளின் எண்ணிக்கை | 12,001 |
| ஆசிரியர் பெயர் தெரியாத சுவடிகளின் எண்ணிக்கை | 9,972 |
| தலைப்புத் தெரிந்த சுவடிகளின் எண்ணிக்கை | 21,513 |
| தலைப்புத் தெரியாத சுவடிகளின் எண்ணிக்கை | 460 |
| உரையாசிரியர்களுடைய சுவடிகளின் எண்ணிக்கை | 674 |
| உரைவடிவில் அமைந்த சுவடிகள் | 1,145 |
| பாடல் வடிவில் அமைந்த சுவடிகள் | 8,689 |
| பாடல் மற்றும் உரை வடிவில் அமைந்த சுவடிகள் | 1,389 |
| பாடல் அல்லது உரை பற்றிய விவரம் தெரியாத சுவடிகள் | 10,750 |
| பணி முழுமை பெற்றுள்ள சுவடிகளின் எண்ணிக்கை | 9,728 |
| பணி முழுமை பெறாத சுவடிகளின் எண்ணிக்கை | 5,665 |
| மொத்த ஓலைச்சுவடிகளின் ஓலைகள் | 8,71,049 |
| ஓலைகளின் எண்ணிக்கை தெரியாத சுவடிகளின் எண்ணிக்கை | 6,996 |
| சுவடிகள் உள்ள மொத்த நிறுவனங்கள் | 39 |
| மொத்த பொருள் தலைப்புகள் | 365 |
| அதிகமான சுவடியையுடைய பாடத் தலைப்பு: சித்த மருத்துவம் | 2,469 |

## 1.6 முடிவுரை

கணிப்பொறிகள் பல துறைகளிலும் பெரும் புரட்சியை ஏற்படுத்தியுள்ளது போன்றே மொழியாய்விலும் பெரிதும் பயனுடைய கருவியாக விளங்குகிறது. ஓலைச்சுவடி பற்றிய ஆய்வில் கணிப்பொறியைப் பயன்படுத்தும் பல பணிநிலைகள் பற்றிய செய்திகளை இக்கட்டுரையில் கண்டோம். தொகுத்தல், பேணிப்பாதுகாத்தல், அவற்றிற்கான சொல் அடைவு மற்றும் பொருளடைவு தயாரித்தல், ஓலைச்சுவடிகளிலுள்ள உரையை ஆய்தல், ஓலைச்சுவடிகளின் காலம், ஆசிரியர் யார் என்ற விவரங்களைக் கணித்தல் முதலிய செய்திகள் கட்டுரையின் முன் பகுதியில் ஆய்ந்தறியப்பட்டன. கட்டுரையின் பின்பகுதி

கணிப்பொறி வழி உருவாக்கப்பட்ட அனைத்துலகத் தமிழ் ஓலைச்சுவடிகளுக்கான அட்டவணை தயாரிக்கும் திட்டம் சார்ந்த பல செய்திகளை எடுத்து இயம்பியது. இந்நிலையில் ஓலைச்சுவடிகளைப் பேணிப்பாதுகாத்தல் மட்டுமன்றி நுணுகி ஆய்வதற்கும் பல அரிய செய்திகளைக் குறுகிய காலத்தில் எளிதில் வெளிக் கொணருவதற்கும் மிகவும் பயனுள்ள கருவியாக அமைவது கணிப்பொறி என்பதில் ஐயமில்லை எனலாம்.

# பல்கலைக்கழகப் பாடநூல்களும் பதிப்பு முறைகளும்

க.ப. அறவாணன்

தமிழில் அச்சு வரவு ஒரு பெரும் திருப்பு முனையாகும். ஒரு சில ஓலைச்சுவடிகளில் ஒடுங்கிக் கிடந்த தமிழ் இலக்கிய, இலக்கணக் கருத்துக் கருவூலங்கள் வெளியே வருவதற்கும், பலருடைய கைகளில் பெறுதற்கும் வழி செய்தது அச்சுக்கலை தான். ஓலைச்சுவடியில் இடம் பெற்று இருந்த இலக்கியங்களும், இலக்கணங்களும் சி. வை. தாமோதரம் பிள்ளை ஆகியோரால் தொடக்கத்தில் அச்சிடப் பெற்றன. ஆனால் அவை அனைத்தும் பதிப்புச் சீர்மையை முழுமையாகப் பெற்றிருக்கவில்லை. கிட்டதட்ட ஓலைச்சுவடியில் உள்ள வாறே அவை அச்சிடப் பெற்றன. ஆனால் காலப்போக்கில் உ. வே. சாமிநாத ஐயர், எசு. வையாபுரிப்பிள்ளை முதலிய அறிஞர்களால் பதிப்பிக்கப்பெற்ற ஓலைச்சுவடிகள் பதிப்புக்கலையின் சிறப்புக்கூறுகள் பலவற்றைப் பெற்று இருந்தன. மூலச் செய்யுள் பகுதி, உரைப்பகுதி, அடிக்குறிப்புப் பகுதி, தலைப்பு என வகைப்படுத்தப்பெற்று முறையான நிறுத்தக் குறியீடுகளும் இடப்பெற்று, பல்வேறு அளவு எழுத்துக்கள் *(Various type of letters)* கருத்திற்கு ஏற்ப வேறுவேறாக நல்கப் பெற்று, முறையாக்ப் பத்திப் பிரிக்கப் பெற்றுப் பதிப்பிக்கப்பெற்றன. ஓலைச்சுவடிகள் பிற்கால அறிஞர்களால் முறையாகப் பதிப்பிக்கப் பெற்றபோதுதான் பதிப்பு ஒரு கலையாக உருவம் கொண்டது. இந்தக் கலையின் செல்வாக்கு பின்வரும் அச்சு நூல்கள் அனைத்தின் மேலும் படிந்தது. இச்செல்வாக்கு இடம் பெற்ற துறைகளுள் பல்கலைக்கழகப் பாடநூல்களும் குறிப்படத்தக்கவை. பல்கலைக்கழகப் பாடநூல்கள், முன்னைய ஓலைச்சுவடிகள் பதிப்பிக்கலாற் பெற்றிருந்த பதிப்பியல் பயில் அறிவை எந்த அளவு பின்பற்றியுள்ளன என்பது ஆய்வுக்குரியது.

நம்பகமான *(authentic)* தரமான பதிப்புகளைத் தமிழ்மொழிக்கு அறிமுகப்படுத்திய முன்னோடிகளில் ஒருவராகத் தமிழ்த் தாத்தா உ. வே. சாமிநாத ஐயர் அவர்களை முதலாவதாகக் குறிப்பிடுதல் வேண்டும். தொடக்கக் காலங்களில் தமிழ்ப் பாடநூல்களாக மூல நூல்களையும் உரை நூல்களையும் அவற்றின் பகுதிகளையும் மேற்கொள்ளுதல் இடம்பெற்றது. அத்தகு சமயங்களில் மூலப்பதிப்புகளாக அமைத்த பாடநூல்களில் பதிப்புச் சீர்மையை நன்கு பார்க்க முடிந்தது. காலப்போக்கில் பல்கலைக் கழகப் பட்ட வகுப்பு அளவிலும் எஸ்.எஸ்.எல்.சி. வகுப்பு

அளவிலும் தனித்தனியாகப் பாடநூல்கள் உருவாகத் தொடங்கின. செய்யுள் நூல்கள் தனியாகவும், உரைநடை நூல்கள் தனியாகவும் பல்கலைக் கழகத்தாரால் உருவாக்கப்பெற்றன. 1987 - 88 ஆம் கல்வி ஆண்டில், சென்னை, மதுரை, கோவை பாரதியார், திருச்சி பாரதிதாசன் ஆகிய பல்கலைக் கழகங்களில் பாடங்களாக நடத்தப் பெறும் செய்யுள் நூல்களைத் திறனாய்வு முறையில் நோக்குதல் வேண்டும்.

மேற்கண்ட பதிப்புகள் பின்வரும் சீரின்மைகளை உடையனவாக அமைந்து உள்ளன.

1. செய்யுள்களுக்கு தொடர் எண் இருப்பது இல்லை.

1. 1.செய்யுள்களுக்கு தொடர் எண் இன்மையால் ஒரு செய்யுளை உடன் தேடிக் கண்டறிவது துன்பம் ஆகிறது. செய்யுள் முதல் குறிப்பு அமைப்பதும் இயலாதது ஆகிறது.

௨.செய்யுள் முதற்குறிப்பு நூலின் இறுதியில் இணைப்பாக இடம் பெறுவது இல்லை.

2.1.தொடர் எண் இன்மையால், செய்யுள் முதற்குறிப்பும் ஆயத்தம் ஆகி இடம் பெறுவதில்லை. எனவே வாசகர் முதல் குறிப்பைப் பார்த்துச் செய்யுளைக் கண்டறிவது இயலாமல் போய்விடுகிறது. ஒரு செய்யுளைக் கண்டறிவது இயலாமல் போய்விடுகிறது. ஒரு செய்யுள் நூலில் தலைமையான உறுப்புகளில் ஒன்று முதல் குறிப்பு. அது இல்லாதது பதிப்பிற்கு ஊனக்குறைவை உண்டாக்குகிறது.

3.செய்யுளில் இடம் பெற்றுள்ள அருஞ்சொற்களுக்குப் பொருள் அடிக்குறிப்பாகவோ, பின் இணைப்பாகவோ தரப்பெறுவதில்லை.

3.1.செய்யுளில் இடம் பெற்றுள்ள அருஞ்சொற்களுக்கு விளக்கம் தரப்படாமையால் மாணாக்கர் செய்யுள் விளங்காமல் துன்பமுறுகிறார். ஆசிரியர் சொல்லும் குறிப்பை நூல் முழுவதும் எழுதி நூலை அலங்கோலப்படுத்திவிடுகிறார். மறைமுகமாக உரைக்குறிப்பு நூலைக் காணத் தூண்டப்படுகிறார். மாணாக்கர் முடிவில் துணை நூலை *(Notes)* வாங்க வற்புறுத்தப்படுகிறார். துணை நூலை வாங்கிப் படித்துப் பொருள் விளங்கிக் கொள்ளும் மாணாக்கர் முடிவில் ஆசிரியர் வகுப்பில் பாடத்தின் பொருளை விளக்கும்போது துணைநூலைப்பார்த்துக் கொள்ளலாம் என்ற நம்பிக்கை ஏற்பட்டு ஆசிரியர் விளக்கத்தைக் கேட்கத் தவறுகிறார். வகுப்பில் இருந்து கவனம் திசைத்திருப் பப்படுகிறது.

பக்கத்தில் உள்ளவர்களோடு பேசுகிறார் அல்லது வகுப்புக்கு மாறான வேறு செயல்களில் ஈடுபடுகிறார்.

4.பொருத்தமான தலைப்புகள் பொருத்தமான இடங்களில் அமைவது குறைவு.

4.1.பதிப்பாசிரியர், பாடத்திற்குரிய செய்யுளைக் கற்று அதன்கீழ் உள்ள பொருளை மனத்தகத்துத் தாங்கி அதற்கேற்பத் தலைப்புகளை நல்குவது இல்லை. அதனால் மாணாக்கர் இடர்ப்படுகிறார். தலைப்புகள் அலுவலக வாயிலில் இடம்பெற்று இருக்கும் துறைப்பெயர் தாங்கிய பெயர்ப்பலகை போன்றவையாகும். தலைப்புகள் இல்லாதபோதும், தவறாக இடம்பெறும் போதும் வாசகர் குழம்பிவிடுவது தவிர்க்க முடியாதது ஆகிறது.

5.பாடங்கள் சந்தி பிரிக்கப்பெற்று அச்சிடப் பெறுவது இல்லை அல்லது அடிக்குறிப்பில் சந்தி பிரிக்கும் முறையும் காட்டப்படுவது இல்லை.

5.1. பாடல்களைச் சந்தி பிரித்துப் பதிப்பிடுதல் வேண்டும் என்பது ஒரு முறை; சந்தி பிரித்தல் ஆகாது என்பது ஒருமுறை. தற்காலப் பள்ளி, கல்லூரி மாணாக்கர் தமிழ் அறிவை மனத்தகத்துக் கொள்ளும் பதிப்பாசிரியர் சந்தி பிரிந்து பதிப்பிப்பதானது மிகத் தேவை என்று எண்ண வேண்டியவராகிறார். எனவே, கூடியவரை சந்தி பிரித்துப் பதிப்பிப்பது மாணாக்கர் குறிப்பு நூல் நோக்கித் தாவுகிறதைத் தவிர்க்கும். சந்தி பிரித்துப் பதிப்பிப்பதைப் பதிப்பாசிரியர் விரும்பவில்லை எனில் அந்தந்தப் பகுதியில் அடிக்குறிப்பில் சந்தி பிரித்து நல்குதலே இன்றைய பார்வையில் நல்லது ஆகும்.

6.நூலைப் பற்றிய குறிப்பு, நூல் ஆசிரியரைப் பற்றிய குறிப்பும் இடம் பெற்று இருப்பினும் அவை போதுமானவையாக இருப்பது இல்லை.

6.1.செய்யுளை இயற்றிய நூலாசிரியர் நூல் ஆகியவற்றைப் பற்றிய சுருக்கமான, நம்பகமான தகவல்களை அகர வரிசையில் பாட நூலின் பின் இணைப்பாக நல்குதல் மிக மிகத் தேவையான ஒன்றாகும். அவற்றுடன் கூட சிலப்பதிகாரம், பெரிய புராணம், கம்பராமாயணம் முதலான காப்பிய நூல்களில் இருந்து தொடர் நிலைச் செய்யுளைப் பாடமாக அமைக்க நேரிடின் உரிய காப்பியக் கதையைப் பாடப்பகுதிக்கு ஏற்ப நல்குதல் வேண்டும். இவை வகுப்பை நடத்தும் ஆசிரியருக்குப்

பயனை நல்குவதுடன் மாணாக்கருக்கு மிகவும் பயனை நல்குவன ஆகும்.

7.மூல நூலில் இடம்பெற்று இருக்கும் எண் வரிசை கொடுக்கப்படுவது இல்லை.

7.1.உரிய பாடல் உரிய நூலில் இடம்பெற்று இருக்கும் வரிசை எண் பதிப்பின் பெயரோடு கொடுக்கப்படுதலே ஆசிரியருக்கும் மாணாக்கர்களுக்கும் மிகவும் பயன் தரக்கூடியது ஆகும். ஏனெனில், ஆசிரியர்கள் பாடம் நடத்துவதற்காக மூலப் பதிப்புகளையும், உரையையும் கட்டாயம் பயிலுதல் வேண்டும். ஆர்வம் உள்ள மாணாக்கர்களும், வசதி உள்ள மாணாக்கர்களும் பாடநூல் மட்டும் அன்றி மூலப் பதிப்பு நூலையும் பார்க்க விரும்பலாம். அத்தகு சமயங்களில் பாடநூல் பதிப்பின் எண் வரிசை கொடுக்கப்பட்டிருந்தால்தான் ஆசிரியரும் மாணாக்கரும் உரிய பதிப்பையும் உரிய உரையையும் படித்து உரிய விளக்கங்களைப் பெற்றுத் கொள்ளுதல் இயலும்.

8.மாணாக்கர்களுக்கு உதவும் வண்ணம் வினா அமைப்பு முறையோ பாட்ப் பகுப்பு முறையோ பாட நூல்களில் இடம்பெறுவது இல்லை.

8.1.மேற்கண்ட இரண்டும் இல்லாமையால் தேர்வுப் பார்வையில் விளக்கமுடியாமல் ஆசிரியர் துன்பமுறுவதும், மாணாக்கர் படிக்க முடியாமல் துன்பமுறுவதும் நேருகின்றன. பல சமயங்களில் இருவரும் குறிப்பு நூலை நாட வேண்டியவர்களாகிறார்கள். இவ்விரண்டையும் சேர்த்து வெளியிடுவதில் பல்கலைக்கழகத்திற்கு என்ன இரகசியம் இருக்க முடியும்? எனவே, மேற்கண்ட விவரங்களும் பாடநூல்களில் இடம் பெறுவது கட்டாயம் ஆகின்றது.

9.அச்சுப் பிழைகள் இடம்பெறுவதை மிகு கவனத்தோடு தவிர்ப்பது இல்லை.

9.1.பாடநூல்களில் அச்சுப் பிழை இடம் பெறுவது மிகக் கொடுமையான ஒன்று ஆகும். ஏனெனில் அது செய்யுளின் கருத்தையே மாற்றிவிடும். அன்றியும் பிழையின்றி எழுதுதல் வேண்டும் என்று மாணாக்கருக்குப் பயிற்சி அளிக்கும் ஆசிரியர் கையில் அச்சுப் பிழைகள் நிறைந்த பாடநூல் இருக்குமானால் மாணவர்களை எந்தமுகம் கொண்டு அவரால் பார்க்க இயலும்? எனவே பல்கலைக்கழகப் பாடநூல்களில் அச்சுப்பிழைகள் ஒன்று கூட இடம்பெறாமல் காத்துக் கொள்ளுதலே அனைவருக்கும் சிறப்பை நல்குவது ஆகும்.

10.படிப்பிற்கு அழகு தரும் எழுத்து வடிவங்களை தலைப்பிற்கு ஏற்பவும், பாடல் பகுதிக்கு ஏற்பவும், நூல் அல்லது நூலாசிரியர் பெயருக்கு ஏற்பவும், அடிக்குறிப்புகளுக்கு ஏற்பவும் அமைப்பது இல்லை.

10.1.பதிப்பு அழகு பெறுவதற்காகவும், பயிலும் வாசகருக்கு ஈடுபாடு உண்டாக்குவதற்காகவும் வேறு வேறு வடிவ எழுத்துகளில் பதிப்பை அமைத்தல் பதிப்பிற்கு மதிப்பைப் பெருக்குகிறது. இருபதாம் நூற்றாண்டில் வளர்ந்த அச்சு அறிவியல் நல்கிய வரப்பிரசாதம் ஆகும் இஃது. எனவே, ஒவ்வொன்றிற்கும் தக அச்சு வடிவ எழுத்துக்களின் அளவை மாற்றியும், இயல்பு எழுத்தை மாற்றி தடித்த எழுத்தை அமைப்பதும் சிறப்பு ஆகும்.

மேலே கண்ட பத்து சீரின்மைகளை மனத்தில் கொண்டு பல்கலைக்கழகப் பட்ட வகுப்புகள் தமிழ்ப் பாடங்கள் உருவாக்கப் பெற்றால் ஆசிரியருக்கும் மாணவருக்கும் மிகு பயன் உண்டு. பதிப்புகள் மட்டுமன்றி நூலில் இடம்பெறும் கருத்தும் மாணவருக்குப் பயன்தரும் வகையில் தமிழ் இலக்கியங்களில் இருந்து தொகுக்கப் பெற்றால் மாணவருக்கு மிகவும் நன்மை கிடைக்கும். கையால் எழுதப் பெறுவது தட்டச்சுப் பெறுவது, வெள்ளைத் தாளில் கருப்பு மையால் அச்சிடப் பெறுவது என்ற நோக்கில் பாடநூல்கள் அமையாமல் படிப்பு அறிவும், பொருள் அறிவும், பொறுப்புணர்வும், அமைய நூல்கள் பதிப்பிக்கப் பெறின் அனைவருக்கும் நன்மை விளையும்.

# PUBLICATIONS OF HISTORICAL PALM-LEAF RECORDS

P. Cinnian

## I. Indian palm-Leaf Records

The Palm-Leaf was the earliest material used for writing and painting before the introduction of papers. The palm-leaves were used mainly in South-East Asian Countries including India, Nepal, Burma, Thailand, Indonesia, Cambodia, and Sri Lanka. It remained as the most important writing support in these countries for centuries. It is impossible to say exactly when the Palm-leaf was first began to be introduced as the writing support. There are thousands of Palm-leaf records collected and preserved in the Museums and libraries in Asian and European Countries. The evidence shows that the earliest palm-leaf record was discovered in India which was a fragment of the text of an Indian drama of the Second Century A.D. It was discovered in Central Asia and there are no records available in India before the Second Century. The earliest writing, support was the palm-leaves but certainly they were completely destroyed owing to the tropical climate of the South and South-East Asian Countries. The visual representations seen in sculptures and paintings are the evidences to show that the palm-leaf was the important material used for writing records. It is interesting to note that both paper and palm-leaf were in use simultaneously for certain period, probably until paper became available in abundance. Palm-leaf was mainly used for religious writing and the preparation of horoscopes even today.

An analysis shows that there are many varieties of palm-trees from which the writing supports were collected. There were three important varieties viz-. the palmyra palm, fan palm and Coryapha taliera Roxh. The third variety are thick and not flexible. They are also prone to insect attack but they are dedicate and smooth. The fresh leaves, collected from the trees, are rough and coarse and so they had to be processed in a special manner to use, as the writing support. The 'Talipot' leaves are strong and do not damage easily. In India all the above three varieties were used for writing.

There were several methods used for processing the leaves which differed from area to area. In Tamilnadu the fresh leaves collected from the trees were dried in the shade and gingili oil was applied on the surface to make them smooth. A crude method practiced in Tamilnadu was that the leaves were hung for several days in a kitchen where the smoke was emitted. After a few days they were cleaned and used for writing. Sometimes after cleaning, the turmeric paste was applied over the surface of the leaves which gave strength to the yellow colour turned leaves.

## II. Method of writing and painting

There were two different methods of writing on palm-leaves. The first was the incising with a pointed stylus and second was by writing with a pen or brush as is done on paper. The first method was the more common method of writing in India. The pointed stylus is held in the right hand at a fixed place on the leaf and the leaf, held in the left hand, was moved backwards or forwards to make the incision. The writer generally sat on the ground and placed the leaf on the right knee, using it as a desk. The incision thus made were not easily legible and so a paste, the charcoal powder mixed with mustard oil or gingili oil, is applied, when the excess was wiped off with a cloth the letters were clearly seen.

The illustration palm-leaf manuscripts were also prepared by using the pointed stylus. The illustrations were incised with a pointed

stylus in the same manner as for writing. The red or black colour was used to fill the illustrations. The method of written palm-leaf records was uniform in all the countries. Generally they were stored between two wooden panels that were made slightly longer than the size of the leaves used. These wooden panels were generally pointed or decorated with ivory and pearl inlay work. The holes were punched in the centre or at either end of it to keep the leaves together. A corn was passed through the holes and tied. The wooden panels protected the edges of the leaves from damage.

The preservation of the palm-leaf records was the important point to save them from destruction. Before use the collected records are to be preserved. Generally no scientific method was applied to preserve them and as a result thousands of valuable records were destroyed. Generally the records were wrapped in cloth to keep it free from dust. The records were destroyed due to various factors such as stains, discoloration, damage by insects, fungal effect, splitting and cleawage, fading of writing, and weakening of the leaf due to climatic condition. Although fresh palm-leaf is flexible it gradually lost its suppleness and became fragile and brittle in due course of time. After a certain period of time it becomes so weak that even slight bending will break the leaf into several pieces. Particularly the edges of the palm-leaf are affected so that they break easily whenever touched. The palm-leaf records in Museums and libraries should be wrapped in cloth during storage. In temples they are stored in cupboards or boxes. Whenever the manuscripts were required for public display a special rack was used. It is important to note that the manuscripts themselves were treated as objects of worship and as religious texts.

## III. Preparations for publication of Historical Records

In general all written documents of the past have historical value. There are manuscripts available to reveal the history of the people or region. These records are to be identified and classified before determining their historical value. The records should be examined thoroughly and an examination report is to be prepared for

evaluation. Such reports should reveal a brief description of the object, the owner's name, the title of the documents, the place of accession and such other details. A pro-forma may be prepared for details and for easy understanding. The important details required are as follows:- (a) Nature of leaf used, (2) Technique of writing (c) Script used and (d) date of the document (e) nature of ink used (in painting and other illustrations) (f) the theme of the record and (g) Original or copy. The historical records available now,were written only during the British rule.

## IV. Scientific Analysis

The important aspect of the palm-leaf records is that the details were written in the ordinary spoken form. Most of the records were copied and rewritten. So there were every possibility of committing errors while copying the documents. In such a condition scientific analysis is necessary to know the genuineness of the document as well as the truth it reveals. Before finalising a document for publication one has to establish the authenticity of the documents. All documents cannot be studied en-mass. Each and every document must be scrutinised throughly before accepting the informations from them. There are two methods for the above job. One is the 'External Criticism' and the other is 'Internal Criticism'. The 'External Criticism' is known as "Herustics" and the 'Internal Criticism' is known as "Hermenautics". Both these methods will be helpful to know whether the document is genuine or not and also whether the given facts are acceptable or not.

The 'External Criticism' is used to find out the authenticity of the document. There were instances in which the records were tampered with for material advantage, and other reasons such as pride or sympathy, rivalry, religious disputes, patriotic reason, for antipathy or even to provide link in a sequence of events. Paleography will be helpful to understand the above facts. Under this method the examiner should study the alphabets, style of writing, spelling used, ink and other material used, diction and style, and general information presented.

The main tasks are:- (a) Establishment of time and date of the documents, authorship, classifications and verifications, and accuracy of the authors. If the author of the document is not trustworthy the informations given cannot be believed. Another difficulty concerning the palm-leaf records is that the authorship cannot be established. Under such circumstances the examiner should concentrate on the language and style of writing. These facts will be helpful to make a judgement about the documents.

The Internal Critism is the second stage in which the process of examination goes deeper into the subject. Infact the external criticism leads to internal criticism. This method is applied mainly to find out the truth in the informations which is the main basis for historical writing. So a careful examination and mental alertness are necessary in this stage. There are three important steps in this method. The first is close and minute study of each idea, the second is critical examination of each idea or each statement and the third is analysis and evaluation. A close and minute study of the document is done to know the different ideas expressed in the document. The analysis of the content of the document is to know what the author really means by making the particular statement. This is called as 'Positive Interpretative Criticism'. Under the third stage the analysis of the condition under which the document was written is to verify whether the information given by the author confirms to what really happened. This is called 'Negative Interpretative Criticism'. The positive interpretation is helpful to know the real meaning of the author's statement and the negative interpretation is helpful to eliminate the errors of the statement. This method is helpful to eliminate the errors of the statement. This method is helpful to establish the value of a document, to give confidence in the minds of the publisher, to discover the truth of the events, to find out the errors and eliminate them and to proceed further in the historical publications. The following important steps are to be followed under the 'Internal Criticism':- (a) Study of general idea (b) isolation of ideas (c) Scrutiny of the language (d) close examinations of words (e) Period of the language (f) discover meaning of the age (g) testing every word and every phrase and find

out the meaning and (h) verify the information such as name of individuals, name of the institutions, usages and feelings, common objects, dress and habits and culture and behaviour. The important examinations are, determining the real meaning because it may differ from literal meaning of the word and reading 'in between the lines' to understand what really the author wanted to express. The examiner should go from step to step and after completing one statement or idea he should proceed to the next. Thus there should not be any hurry in this method. In history there is a general belief that what the author believed was true and what he wrote was also true. It is important to note here that with what the author believed might not be true.

## V. Classification of Records

There are many Palm-leaf records of historical value. There are many yet to be collected. The present study analysed 119 records presently available for publication. They reveal political history, history of independent kings and Poligars, history of regions and also community. Some of the records reveal the genealogical accounts of the Vijayanagar rulers, Udayar Kings of Mysore, Nayak rulers in Tamil Country, Chera Kings and local Chieftains. Three important documents which reveal the history of Belur in Karnataka, Bommi nayakan Palayan and the history of Delhi Kings are very rare and worthy for immediate publication. These records will reveal many new facts on the subject which are hitherto unknown to humanity. The records which reveal the names of Kongu cities, and other geographical details of the regions also have historical value. Some of the interesting points found out in the classification are worth mentioning here. There are records to give details on 'Thondai Nadu', 'Kongu Nadu', 'Kangeya Nadu' which reveal both political and social history of the respective regions. The records which speak on the Temples, Maths, Palayams etc. are also very rare and important historical documents. The record on "Thasildar Seenaiyyangar Kummi" is a very rare document and another record on "Kattabomman Kummi" is popular among the people in Tamilnadu. This record require immediate attention both for preservation and for publication.

## V. Conclusion

The list of some of the palm-leaf records available is presented here for study. It is not exhaustive. Many thousands of records are yet to be discovered and collected from Temples and private persons. It is said that the only copy available on "Arthasasthra" written by 'Koutilya' was collected from Kancheepuram. There are every possibilities for getting another copy of the above record in Tamilnadu. Both the collection of the records and publishing them cannot be done by one individual or an institution. It is advisable that the particular group may concentrate on the collection of the documents and another group undertake the publication work. It is because of the fact that the above are two different skills. One may be good in collection and another may be efficient in publication. The present study further reveals that the publication of the available records is very important because ,they are prone to destruction. The value of the palm-leaf records cannot be underestimated because they were preserved for generations and handed over to posterity. The important activity is preserving them. The modern scientific equipments may be used for the above purpose. The microfilming can be used for taking copies of the documents. The effective step taken in the right direction will enrich the historical knowledge and also give new dimentions for human history.

## SELECT BIBLIOGRAPHY


1. Agarwal, O.P. — Problems of Preservation of Palm-leaf Manuscripts.
Committee for conservation, Ottawa.
1981-Palm-leaf manuscripts, Museum, 1975.

2. Balfour, Edward, — Encyclopaedia Ariatica,
Cosmo Publications, New Delhi, 1976.

3. Bedekar, V.H. — Stylistic Approach to Indian Miniatures
M.S.University, Baroda, 1979.

4. Bubler, J.G. — Indian Palaeography, Bombay Education
Society's Press, Byculla, Bombay.

5. Guy John, — Palm-leaf and paper Illuminated Manuscripts of India and South East Asia,
Nationallery, Victoria, Melbourne 1982.

6. Penderleith, — H.J. and Warnes, A.E.A., The Conservation of Antiquities and works of Arts,
OUP, London 1974.

7. Pees-Jones, — Stephen G., Library and Archival Materials
and Graphic Arts, University of London.

8. Russell, Joyce R.(Ed.,) — Preservation of Library
Materials, Special Libraries Association,
New York, 1980.

9. Thomson, Garry (Ed.,) — Recent Advances in Conservation,
Butter worths, London, 1963.

10. Journal of Indian Museums, National Museum, New Delhi.

11. Conservation of Cultural Property in India, National New Delhi.

12. Journal of the Indian Society of Oriental Arts, Calcutta - 16.

13. Arts Oriantalis, Smithsonian Institution, Washington D.C.,

14. Marg, Marg Publications, Bombay.

15. Ancient India, Archaeological Survey of India, New Delhi.

| SL.No. | Title of the Document | Prose/ Poetry | Number of Leaves |
|---|---|---|---|
| 1. | Sethupathi Varalaru (History of Sethupathy) | Prose | 2 |
| 2. | Thotta Devarayar Charithiram (History of Thotta Devarayar) | Prose | 40 |
| 3. | Srirangapattinam Rajakkal Varalaru (History of Srirangapattinam Kings) | Prose | 25 |
| 4. | Vishnu Varadhanarayana Vamsavali (Genealogy of Vishnu Vardhanarayan) | Prose | 3 |
| 5. | Kaliyugavarasargal Peyar (Names of the Kaliyuga Kings) | Prose | 8 |
| 6. | Mysore Raja Vamsavalzhi (Genealogy of Mysore King) | Prose | 15 |
| 7. | Mum Mandala Pandaya Mannar Varalaru (History of Mum Mandala Pandaya King) | Prose | 30 |
| 8. | Raja Santhathi Varalaru (History of the Raja Santhathi) | Prose | 2 |
| 9. | Jainamarka Virothi Mannargal Varalaru (History of the Enemy Kings to Jainism) | Prose | 4 |
| 10. | Kaliyuga Mannar Charithiram (History of the Kaliyuga King) | Prose | 10 |
| 11. | Keralavurpathi (Chera Kings) | Prose | 68 |
| 12. | Cholan Poorva Pattayam (Chola Kings) | Prose | 219 |
| 13. | Madurai Pandiya Mannar Charithiram (History of the Madurai Pandya Kings) | Prose | 10 |

| Complete/ Incomplete | Sl.No. | Identification |
|---|---|---|
| Incomplete | 3081 | OML, Madras. |
| Incomplete | 2753 | OML, Madras. |
| Incomplete | 2763 | OML, Madras. |
| Complete | 2785 | OML, Madras. |
| Complete | 2749 | OML, Madras. |
| Complete | 2754 | OML, Madras. |
| Complete | 2765 | OML, Madras. |
| Complete | 2972 | OML, Madras. |
| Complete | 2973 | OML, Madras. |
| Complete | 1435 | OML, Madras. |
| Complete | 392 | OML, Madras. |
| Complete | 2981 | OML, Madras. |
| Complete | 2739 | OML, Madras. |

| | | | |
|---|---|---|---|
| 14. | Nayakar Vamsa Vilakkam (Genealogy of Nayaks) | | |
| 15. | Hyder Sobanam(Nawab) | Poetry | 13 |
| 16. | Kongu Desa Raja Charithiram (History of the Kongu Kings) | Prose | 67 |
| 17. | Kongu Desa Raja Charithiram (History of the Kongu Kings) | Prose | 101 |
| 18. | Bommi Nayakan Palaya Patinapur... | Prose | 13 |
| 19. | Vanangamudi Thevamar Vamsavalzhi (Genealogy of V.T.) | Prose | 16 |
| 20. | Karnataka Rajakkal Charithiram (History of the Karnataka Kings) | Prose | 247 |
| 21. | Thirukkalukundra Kurukkal Mannarkalin... | Prose | 12 |
| 22. | Delhi Rajakkal Charithiram (History of the Delhi Kings) | Prose | 8 |
| 23. | Madurai Thala Varalaru (Madurai through the Ages) | Prose | 33 |
| 24. | Madurai Thala Varalaru | | |
| 25. | Thirukkoil Thiruppani Malai | Poetry | |
| 26. | Thiruchengodu Thiruppani Malai | Poetry | |
| 27. | Chera Mannar Vamsavalzhi (Genealogy of a Chera King) | Prose | 23 |
| 28. | Delhi Rajakkal Charithiram (History of the Delhi Kings) | Prose | 19 |
| 29. | Aniyabarana Nallur Meenakshipattiyu... | Prose | |
| 30. | Alwar Koil Cheithi Attavanai | Prose | 15 |
| 31. | Thondai Nattu Chaithigal (News on Thondan Nadu) | Prose | |
| 32. | Kadayam Thiruppani Malai | Poetry | |
| 33. | Kottam Nattu Natham Thogaadi | Prose | |

| | | |
|---|---|---|
| | 31419 | French Institute, Pondicherry. |
| Complete | 2577 | OML, Madras. |
| Complete | 2726 | OML, Madras. |
| Incomplete | 2741 | OML, Madras. |
| Complete | 2750 | OMl, Madras. |
| Complete | 90996 | Regional History. |
| Complete | 2767 | OML, Madras. |
| Complete | 2772 | OML, Madras. |
| Complete | 2776 | OML, Madras. |
| Complete | 2051 | |
| | 152 | Tamil Changam, Madurai. |
| | 44597 | Annamalai University, Chidambaram. |
| | 88 | Tamil College, Coimbatore. |
| Incomplete | 9219(a) | Trandurm Library |
| Complete | 2791 | OML, Madras. |
| | 8142 | Trandrum Library. |
| Complete | 9011 | Trandrum Library. |
| | 237 | Tamil College, Coimbatore. |
| | 11545(a) | Thiruvananthapuram Library |
| | 1160 | Thiruvananthapuram Library |

| | | | |
|---|---|---|---|
| 34. | Palayakottai Pattakarar varalaru (History of Palayakottai Pattakarar) | | |
| 35. | Kongu Nattu Voorpeyargal | | |
| 36. | Thiruvalavayadaiyar Koil Varalaru (History of T.V.K.) | | |
| 37. | Karnataka Rasakkal Charithiram (History of the Karnatak) | Prose | 159 |
| 38. | Elavar Varalaru Kurippu | Prose | 5 |
| 39. | Sriranga Koilolugu | Prose | 90 |
| 40. | Narasinga Rayar Vamsavalzhi Kurippu | Prose | 29 |
| 41. | Nakkeerar Varalaru (History of Nakkeerar) | Prose | 2 |
| 42. | Paramananadayogi Charithiram (History of Paramanandayogi) | Prose | 34 |
| 43. | Narasarachiyam | | |
| 44. | Mysore Thodda Thevarayar Charithiram (History of Mysore Thodda Thevarayar) | Prose | 16 |
| 45. | Thasildar Seenaiyyangar Kummi | Poetry | 52 |
| 46. | Veeraboga Vasantharayar Pathirikai | Prose | 44 |
| 47. | Katta bomman Kummi | Poetry | 150 |
| 48. | Thirukkovalur Madam Gnaniyar Varalaru (History of Thirukkovalur Madam Gnaniar | Prose | 10 |
| 49. | Veeraboga Vasantharayar Magathuvapp.. | | 24 |
| 50. | Veeraboga Vasantharayar Pathirikai | | 16 |
| 51. | Veeraboga Vasantharayar Pathirikai | | 33 |
| 52. | Veeraboga Vasantharayar Pathirikai | | 22 |
| 53. | Veeraboga Vasantharayar Pathirikai | | 57 |
| 54. | Kaveendrar Shivaji Charithiram | Prose | 180 |

| | | |
|---|---|---|
| | 7 | Kalaimaghal Kalvi Nilayam, Erode. |
| | 18 | Kalaimaghal Kalvi Nilayam, Erode. |
| | 273 | Kowmara Madalayam, Villupuram. |
| | 22 | Indian Office Library London. |
| | 6 | The Royal Asiatic Society, London. |
| | 31 | The Royal Asiatic Society, London. |
| Complete | 2993 | OML, Madras. |
| Complete | 1408(b) | V.V.S.Library. |
| Complete | 540 | Saraswathimaghal Library. |
| | 132 | Tamil Sangam |
| Incomplete | R1490 | OML, Madras. |
| Complete | R1881 | OML, Madras. |
| Incomplete | R1963 | OML, Madras. |
| Incomplete | R3459 | OML, Madras. |
| Complete | 302 | |
| Complete | R3702 | OML, Madras. |
| Complete | R4305 | OMl, Madras. |
| Complete | R4314 | OML, Madras. |
| Complete | R4336 | OML, Madras. |
| Incomplete | R4738 | OML, Madras. |
| Incomplete | 214 | Saraswathi Maghal Library. |

| | | | |
|---|---|---|---|
| 55. | Shivaji Charithiram (History of Shivaji) | Prose | |
| 56. | Sivaganagai Samasthana Valzhakupatriya Varalaru (History of Sivagangai Samasthana Valzhakupatriya) | Prose | |
| 57. | Thirupathur Palayappattu Vengalayya Nayakar Aranmanai (Palace of T.P.V.Nayaka) | | |
| 58. | Thirupathur Palayappattu Vengalayya Nayakar Aranmanai | Prose | |
| 59. | Sundaraperumal Koil Sila Sasanam | Prose | 4 |
| 60. | Tharasurameeswaran Koil Silasasanam | Pross | 13 |
| 61. | Patteeswaran Koil Silasasanam | Prose | 4 |
| 62. | Thirukkathi Muttram Eeswaran Koil Silasasanam | Prose | 12 |
| 63. | Gopinathaperumal Silasasanam | Prose | 18 |
| 64. | Keelai Palayarai Eeswaran Koil Silasasanam | Prose | 1 |
| 65. | Thanjavur Jilla Silasasanangal | Prose | 60 |
| 66. | Thirukkattupalli Eeswaran Koil Silasasanam | Prose | 60 |
| 67. | Thiruppayanam Thiruchottruthurai Silasasanam | Prose | 9 |
| 68. | Thiruvedikudi Eeswaran Koil Silasasanam | Prose | 9 |
| 69. | Chalukkai Koil Silasasanam | Prose | 20 |
| 70. | Thirukarugavur Eeswaran Koil Silasasanam | Prose | 31 |
| 71. | Thirukandiyur Eeswaran Koil Silasasanam | Prose | 43 |
| 72. | Thiruvaiyattru Panjanatheeswarar Koil Silasasanam | Prose | 24 |

| | | |
|---|---|---|
| | 215 | Saraswathi Maghal Library, Thanjavur. |
| | 1447 | Saraswathi Maghal Library. Thanjavur. |
| | 1448 | Saraswathi Maghal Library, Thanjavur. |
| | 1449 | Saraswathi Maghal Library, Thanjavur. |
| Complete | 2727 | OML, Madras. |
| Complete | 2728 | OML, Madras. |
| Complete | 2729 | OML, Madras. |
| Complete | 2730 | OML, Madras. |
| Complete | 2731 | OML, Madras. |
| Complete | 2732 | OML, Madras. |
| Complete | 2733 | OML, Madras. |
| Complete | 2734 | OML, Madras. |
| Complete | 2735 | OML, Madras. |
| Complete | 2736 | OML, Madras. |
| Complete | 2737 | OML, Madras. |
| Complete | 2742 | OML, Madras. |
| Complete | 2744 | OML, Madras. |
| Complete | 2475 | OML, Madras. |

| | | | |
|---|---|---|---|
| 73. | Elamaiyanar Kovil Silasasanam | Prose | 2 |
| 74. | Anantheeswaran Koil Silasasanam | Prose | 2 |
| 75. | Thiruvannamalai Devesthana Silasasanam | Prose | 23 |
| 76. | Valugur Thevasthana Silasasanam | Prose | 3 |
| 77. | Pagularanya Madavilaga Eeswaran Koil Silasasanam | Prose | 4 |
| 78. | Viridachalam Viluppuram Taluka Silasasanam | Prose | 50 |
| 79. | Singapurinatha Swami Koil Silasasanam | Prose | 8 |
| 80. | Thirukkalukundra Silasasanangal | Prose | 9 |
| 81. | Thirupati Silasasanam | Prose | 12 |
| 82. | Devarayar Maharayar Sasanam | Prose | 8 |
| 83. | Penukonda Silasasanam | Prose | 1 |
| 84. | Kadalur Harihararasapuram Sasanam | Prose | 5 |
| 85. | Chennaraya Swami Silasasanam | Prose | 5 |
| 86. | Virupaktsh Swami Koil Sasanam | Prose | 2 |
| 87. | Harihararayan Kala Sasanam | Prose | 1 |
| 88. | Muthu Veerappan Pattayam | Prose | 6 |
| 89. | Punthurainattan KoduthaMelolai | Prose | 2 |
| 90. | Venkatapathy Thana Sasanam | Prose | |

| | | |
|---|---|---|
| Complete | 2756 | OML, Madras. |
| Complete | 2757 | OML, Madras. |
| Complete | 2760 | OML, Madras. |
| Complete | 2761 | OML, Madras. |
| Complete | 2762 | OML, Madras. |
| Complete | 2767 | OML, Madras. |
| Complete | 2770 | OML, Madras. |
| Complete | 2771 | OML, Madras. |
| Complete | 2774 | OML, Madras. |
| Complete | 2779 | OML, Madras. |
| Complete | 2780 | OML, Madras. |
| Complete | 2781 | OML, Madras. |
| Complete | 2782 | OML, Madras. |
| Complete | 2783 | OML, Madras. |
| Complete | 2784 | OML, Madras. |
| Incomplete | 2048 | U.V.S. Library, Madras. |
| Complete | 2050 | U.V.S. Library, Madras. French Institute, Pondicherry. |

